ஸ்ரீ

சுபமஸ்து.

திருப்பேரருளாளப் பெருமாள்தம் திருவடிகட்கு வணக்கம்.

# திவ்யப் பிரபந்தமும் திவ்யார்த்த தீபிகை உரையும்.

(இஃது ஓர் ஆய்வு உரை நூல்)

எழுதியவர், வே. மு. [illegible]வாச முதலியார்.





திரு ஆழ்வார்கள் அருளிய திவ்யப் பிரபந்தங்களைப் பண்டு ஏட்டில் எழுதியவர்களாலும், அவற்றின் பண்டைய உரைகாரர் பலராலும், அவற்றின் "திவ்யார்த்த தீபிகை" என்னும் இன்றைய உரைகாரராலும் (காஞ்சீபுரம், பிரதிவாதி பயங்கரம், ஸ்ரீ அண்ணங்கராசாரியார் என்பவராலும்) அத் திவ்யப் பிரபந்தங்களுள் செறிக்கப்பட்ட பிழைப் பாடங்கள் பலவற்றுள் சிலவற்றுக்கு நேரிய பாடங்களும், போலிப் பொருள்கள் பலவற்றுள் சிலவற்றுக்கு உண்மைப் பொருள்களும், செந்தமிழ் மொழிக்கண் தம்மை வித்துவானக நினைத்திருப்பவர் பலரால் கூறப் [illegible]கள் பலவற்றுள் சிலவற்றுக்கு உண் [illegible] இவை இந்நூலகத்து உள்ளன.



[illegible]யையும், அகலாத அன்பினது இயல்பையும் மதித்து என்னால் விலையின்றிச் செலுத்தப்பட்ட புத்தகத்தைப் பெற்ற அன்பர், தாம் பெற்ற செய்தியை உடனே அறிவிப்பாராக.

ஸ்ரீ

சுபமஸ்து.

திருப்பேரருளாளப் பெருமாள்நம் திருவடிகட்கு வணக்கம்.

திருஆழ்வார்கள் திருமொழிகள் திகழ்க.



# திவ்யப் பிரபந்தமும் திவ்யார்த்த தீபிகை உரையும்

(இஃது ஓர் ஆய்வு உரை நூல்)

வே. மு. ஸ்ரீநிவாச முதலியா ரால்
எழுதப்பட்டது.







காஞ்சி முத்தமிழ் அச்சகத்தினரால்,
பதிப்பிக்கப்பட்டது.

முதற்பதிப்பு 1949 விலை ரூ. 4—0—0

தம் உரிமையால் இந் நூலை வெளியிடற்கு அருளியவர்கள்

சென்னை முத்தமிழ் நிலையம், தலைவர்,

திருவளர், மே. சக்கரவர்த்தி நாயனார் அவர்கள்.

C. I. P. House, Madras.

4-1

ஸ்ரீ

சுபமஸ்து

செந்தமிழை அறிந்த பேரறிஞர்கள் அன்புவைத்து அருளிய

## சிறப்பு உரைகள்

சென்னைப் பச்சையப்ப முதலியார் கல்லூரிச்
செந்தமிழ் மொழிப் பேராசிரியர்
வித்துவான், திருவளர், வெ. சு. சுப்பிரமணியாசாரியார் அவர்கள்
அன்பு வைத்து அருளிய

## சிறப்புரை:

உ

திரு. தமிழ்ப்பேரறிஞர் வே. மு. ஸ்ரீநிவாச முதலியார் அவர்கள், பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியார் அவர்கள் திவ்யப்பிரபந்தத்திற்கு எழுதிய திவ்வியார்த்த தீபிகை என்ற உரை நூலை நன்கு ஆராய்ந்து எழுதியுள்ள "திவ்யப் பிரபந்தமும் திவ்யார்த்த தீபிகை உரையும்" என்ற ஆய்வு நூல் ஒன்று என் பார்வைக்கு வந்தது,

இந்நூல் 12 ஆய்வுகளாக 51 கிளைகளைக் கொண்ட மிகச் சிறந்த ஓராய்வு நூலாகும். எனவே, இதில் பிழைப் பாடங்கள், போலிப்பொருள், இலக்கணப்பிழை, புராணத்துக்கு முரணான வரலாறுகள் என இன்னோரன்ன பல செய்திகள் நன்கு திறம் பட ஆராய்ந்து நிலை நாட்டப்பட்டுள்ளன. நமது செந்தமிழ்க் கலை வளர்ச்சிக்கு இத்தகைய நூற்கள் மிகமிக வேண்டற் பாலனவே.

"யாவ ராயினும் நால்வரைப் பின்னிடில்
தேவ ரேன்பது தேறுமிவ் வையகம்"

என்ற தேவர் வாக்கிற்கிணங்கத் தங்களை நால்வர் சூழ நேர்ந்த வுடன் தங்களுக்கும் செல்வாக்கு ஒன்றிருப்பதாக நினைத்துத் தங்கள் மனம் போனவாறு எழுதித் தமிழன்னையின் அழகையே குலைத்து வருகின்றார்கள். அவர்களுடைய அடாத செயலைக் கண்டிக்கவே இந்நூல் தோன்றியதென்பது எனது உள்ளக் கிடை. இந்நூலில் பல அரிய கருத்துக்கள் காணப்படுகின்றன. அவற்றுள் பின் வருவன மிகமிகச் சிறந்தனவாகும்.

"முருக்கிலங்கு கனித்துவர்வாய்" (1 ஆய்வு. கிளே. 5) என்ற செய்யுளுக்கு ஸ்ரீ முதலியார் அவர்கள் கூறியிருக்கும் உரை மிகச்சிறந்ததாகும். ஸ்ரீ முதலியார் அவர்கள் சைவராயிருந்தும் "என்தோள் ஈசற்கு" என்ற தொடருக்குத் திரு ஐயங்கார். 'சிவன்' என்று பொருள் கூறியிருப்பதை மறுத்து அத்தொடர் திருமாலேயே குறித்து நின்றது என்று ஒரு வைணவரைப் போன்று வாதித்து நிருபித்திருப்பது மிகமிக அழகிய உண்மைக் கருத்தாகும்.

"கரைசேய் மாக்கடல்" (4 ஆய்வு. கிளே. 2)

"இருக்கோடு நீர்சங்கு" (4 ஆய்வு. கிளே. 3)

இவைகளுக்கும் திரு. முதலியார் தனித்தனி ஆய்ந்துகூறி இருக்கும் பொருள்கள் மிக மிகப் பொருத்தம் உடையனவாகும்.

"வட்டு நடுவே வளர்கின்ற மாணிக்க" (10 ஆய்வு. கிளே.1) என்ற செய்யுளுக்குத் தீபிகை உரைகாரரால் கூறப்பட்ட இடக்கர்ப் பொருளை மறுத்துக்கூறிய நேரிய பொருளும் "சொட்டுச் சொட்டு" என்ற தொடருக்கு நகைச்சுவை ததும்புமாறு எழுதிய குறிப்பும் பெரிதும் பாராட்டற்குரியன.

"எஞ்சலில் இலங்கைக்கு இறை எங்கோன் தன்னை"
(11 ஆய்வு கிளே. 1)

என்ற செய்யுளிலுள்ள "அஞ்சலோதி" என்ற தொடர் "அஞ்சிலோதி" என்றிருத்தல் வேண்டும் என்று திருத்திச் சுமார் 27 பக்கங்களால் அத்தொடருக்குப் பலவகையாலும் காரணங்கள் பல காட்டித் தாம் கண்ட நேரியபொருளைக் கூறியிருப்பதை நோக்கின் தமிழைத் தக்க ஆசிரியர் மாட்டுக் கற்றுணர்ந்த அறிஞர்கள் ஸ்ரீ முதலியார் அவர்களுடைய கல்வித்திறனைப் போற்றுமலிரார்கள்.

12-ஆம் ஆய்வு 6-ஆம் கிளே உரையில் "ஜீயர்" என்ற சொல்லுக்குத் திரு. முதலியார் கூறும் உரை பொன்னே போலப் போற்றத்தகுந்த உரையாகும் என்பதில் தடையுமுண்டோ? அவைபோன்றன சிலவற்றைக்காண என்மனம் மகிழ்கிறது.

12-ஆம் ஆய்வு. கிளே. 8. உரையில் எடுத்துக்காட்டப்பட்டுள்ள குறுந்தொகை 399-ஆம் செய்யுளுக்குத் திரு. முதலியார்

கூறும் கருத்து மிக அழகுடையதும் ஆழமுடையதுமாகும். இது போன்ற அரிய செய்திகள் பல உண்டு.

கனகசுந்தர நிலையம்,
சென்னை,
16—5—49.

இங்ஙனம்,
வெ. சு. சுப்பிரமணியாச்சாரியார்.

---

சென்னை மயிலைப் பென்னுத்தூர் 'சுப்பிரமணியஐயர்' ஹைஸ்கூல்
செந்தமிழ்மொழித் தலைமைப் பேராசிரியர்
திருவளர் வே. துரைசாமி ஐயர் அவர்கள்
அன்பு வைத்து அருளிய

## சிறப்புரை:

உ
கணபதி துணை

திருவளர் வே. மு. ஸ்ரீநிவாச முதலியாரவர்களைப்பற்றிப் பல ஆண்டுகளாக அன்பர் பலர் மூலம் கேள்விப்பட்டிருக்கி றேன். அவர்கள் பொருள் நிச்சயம் செய்வதில் சங்க நூல் முதலியவற்றுள் ஆராய்ச்சி செய்து தெளிவுற்றவர்.

"திவ்யப் பிரபந்தமும் திவ்யார்த்த தீபிகையுரையும்" என் னும் ஆய்வு நூலில் முதல் பதினொரு ஆய்வு உரைகளுள் ஸ்ரீமத் பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியார்தம் கருத்தொடு அவருடைய முன்னோர்தம் கருத்தையும் மறுத்திருக்கிறார். 12-வது ஆய்வு உரையுள் ஸ்ரீ அண்ணங்கராசாரியார்தம் தனிக்கருத்தை 12 வகையாக மறுத்திருப்பது கவனத்திற் கொள்ளத்தக்கது.

முன்னோர்கள் செய்த சில பொருள்கள் பொருத்தமற்றவை என்பதைத் தக்க நூலாதாரத்தோடு இரு வகை வழக்குக்கும் பொருந்த ஸ்ரீமாந் முதலியார் தெளிவுபடுத்தியிருப்பது தமிழுல கத்துக்கு நல்ல ஆக்கமாகும். 12-வது ஆய்வு உரை நல்லறிஞர் படித்து இன்புற்று மகிழ்தற்கு ஏற்ற கருத்துக்களைக் கொண்ட தாகும்.

ஸ்ரீமான் முதலியாரவர்கள் ஆராய்ச்சித் திறன் சிலபல எதிர்ப்புக்கு இடமளிக்கக் கூடியதாகும். காய்தலுவத்த லகற்றி யாராய்வார்க்கு உண்மை புலனுகாமற்போகாது.

முதலாய்வு உரை கிளை 5ல் (பெரிய திருமொழி 6-6-8) 'முருக்கிலங்கு' என்று தொடங்கும் பாசுரத்தில் "இருக்கிலங்கு திருமொழிவாய் எண்டோ ளீசன்" என்ற தொடருக்கு வைணவ உரையாசிரியர் பலரும் சிவபெருமான் எனப் பொருள் செய் திருக்க, ஸ்ரீமான் முதலியாரவர்கள் சைவராயிருந்தும், நடு நிலைமையிலிருந்து பிறழாதவராய்த் திரு. ஆழ்வார்தம் கருத் துக்கு ஏற்ப அத்தொடர் திருமாலையே குறிக்கும் என விளக்கி யிருப்பதும், 10-வது ஆய்வு உரை 4 கிளைகளிலும் (முற்றும்) வைணவ சமயாசாரியர்கள் இடக்கர்ப் பொருளாகக் கொண்ட கருத்தை மறுத்து நூலாதாரத்தோடு நேர்மைப் பொருள் கூறியிருப்பதும் நல்லறிஞர்களுக்கு மகிழ்ச்சியளிக்கும் பகுதிக ளெனச் சொல்லத் தேவையில்லை மற்றும் பல ஆய்வு உரைப் பகுதிகளாலும் ஸ்ரீமான் முதலியாரவர்கள் நடுநிலையிற் பிறழ வில்லை என்பதைப் படிப்பார் யாவரும் உணர்வர்.

இங்ஙனம்,

மயிலாப்பூர்,
2—6—49.

**வே. துரைசாமி,**
தலைமைத் தமிழாசிரியன்,
P. S. High School.

---

சென்னை 'அமிஞ்சிகரை என்னும் ஊரில் வாழ்பவரும்'
பண்டு ஆங்கில மொழியின் கெஜட்டியர்-ஆசிரியரும்
திருச்சமண சமயத்தவரும் ஆகிய பலவகை மொழி பயின்ற
பேரறிஞர் திருவளர் ஸி. எஸ். மல்லிநாத நாயனுர் அவர்கள்
அன்பு வைத்து அருளிய

## சிறப்புரை:

ஸ்ரீ

'திவ்யப் பிரபந்தமும் திவ்யார்த்த தீபிகை உரையும்' என ஸ்ரீமான் வே. மு. ஸ்ரீநிவாஸ முதலியார் அவர்கள் எழுதிய ஆய்வு உரையைப்பற்றிய என்னுடைய அபிப்பிராயம்:

முற்காலத்திருந்த புலவர்கள் தமிழில் சிறந்த நூல்களையும் இலக்கணத்தையும் முற்றும் கற்றுத் தேர்ச்சியடைந்த பின்னரே தமிழில் நூலை எழுதத் துணிவர். தொல்காப்பியத்தேவர், திருவள்ளுவர், இளங்கோவடிகள், திருத்தக்க தேவர், பவணந்தி முனிவர், நச்சினார்க்கினியர், அடியார்க்கு நல்லார் ஆகியவர்களும், அவர்களைப்போன்ற வேறு சில புலவர்களும் தமிழ் மொழிக்கும், தமிழ் மக்களுக்கும் தொண்டு செய்வதையே பெருநோக்கமாகக்கொண்டு நல்ல நூற்களையும் உரைகளையும் இயற்றிப் போந்தனர். ஆனால், தற்காலத்துள்ள நூலாசிரியர்கள் பலர் விரைவில் புகழையோ பொருளையோ அடைவதற்கே தங்கள் மனம் போனபடியே நூல்களை எழுதி நிரப்பி விடுகின்றனர். ஒரு பாஷையை முறையாகக் கற்றுத் தெளியு முன் அப்பாஷையில் ஒருவர் ஒரு நூலை இயற்ற முற்படுவது பெருந்தவறாகும். 'திவ்யப் பிரபந்தம்' என்பது வைணவ சமயத்தாருக்கு மிகவும் சிறந்த நூலாகும். அதற்குப் பார்ப்பனருள் தென்கலைஞர் ஆகிய ஆசிரியர்களால் வடமொழியும் தென்மொழியும் கலந்த ஒரு பாஷையில் இயற்றப்பெற்ற உரை நூற்கள் பல உள. ஆனால், அவைகள் தமிழ் மொழியை மட்டும் கற்றவர்களுக்கு விளங்கக்கூடாத நிலைமையிலிருத்தலால், காஞ்சிபுரம், பிரதிவாதி பயங்கரம் ஸ்ரீ அண்ணங்கராசாரிய சுவாமிகள் செந்தமிழ் மொழியைச் சிறுகக் கற்றவர்களும் எளிதாகத் தெரிந்துகொள்ளும்படி 'திவ்யார்த்த தீபிகை' என ஒரு பேருரை எழுதியுள்ளார்கள். ஆனால், அப்பேருரை நூலும் வடமொழி தென்மொழி கலந்த பாஷையிலே எழுதப்பெற்றுள்ளது. அஃதன்றியும் முன்னோர் எழுதிய உரை நூற்கள் பலவற்றுள்ளும் கவிக் கருத்துக்கு மாறாகிய போலிப் பொருள்களே உண்மைப் பொருள்கள் என எழுதி இருத்தல் போலவே திவ்யார்த்த தீபிகையுள்ளும் மிகுந்துள்ளன. அப்போலிப் பொருள்கள் பலவற்றுள் சிலவற்றை எடுத்துச் சொல்லி விளங்கவைத்தற்கே இவ்வாய்வு உரை எழுதப்பெற்றுள்ளது.

இவ்வாய்வு உரையின் ஆசிரியராகிய ஸ்ரீமான் வே. மு. ஸ்ரீநிவாஸ முதலியாரவர்கள் செந்தமிழ் மொழியை நன்றாகக் கற்றுணர்ந்த பேரறிஞர். பல ஆண்டுகளாகத் தமிழ் நூற்களையும் அவற்றின் உரைகளையும் ஆராய்ச்சி செய்து உண்மைப் பொருளைக் கண்டறிய முயல்பவர். "உள்பொருள் இதுவென

உணர்தல் ஞானமாம்" என்னும் விதியையே நூலாராய்ச்சியின் நோக்கமாகக்கொண்டவர். பழைய பிழையுற்ற பாடங்களுக்கு நேரிய பாடம்கொள்ள நேரிடினும், பழைய பிழையுற்ற உரைகளுக்கு நேரிய பொருள்கொள்ள நேரிடினும் அவற்றைத் தர்க்க முறையில் ஆராய்ந்து வேண்டிய சமாதானங்களுடனும் அநேக மேற்கோள்களுடனும் யாவர்மாட்டும் விருப்பு வெறுப்பின்றி வெளியிடுபவர். இந்த ஆய்வு உரையே அதற்குப் போதுமான சான்று. இந்த நூலுள் அவர் காட்டியுள்ள பாட பேதங்களும் பொருள் வேறுபாடுகளும், பொருத்தமான எடுத்துக் காட்டுகளும் அவருடைய நுண்மையான ஆராய்ச்சியைப் புலப் படுத்துகின்றன. 'அஞ்சிலோதி'யைப்பற்றி அவர் எழுதியிருக்கும் விரிவுரை மிகவும் அருமையானது. தொல்காப்பியம், திருக்குறள், சிலப்பதிகாரம், மணிமேகலை, பெரிய புராணம் ஆகியவற்றைப்பற்றி அவர் எழுதியிருக்கும் சில அபிப்பிராயங் கள் ஆராய்ந்து கொள்ளத்தக்கன.

திவ்யார்த்த தீபிகை உரையின் ஆசிரியரான ஸ்ரீமான் அண்ணங்கராசாரிய சுவாமிகள் செந்தமிழ் மொழியை உரை எழுதுவதற்குத் தேவையான அளவு கற்றறிந்தாரில்லை என்பது நன்கு புலனுகின்றது. அவர் உரையை வாசிக்கும் தமிழறி வுடைய ஒவ்வொருவரும், அவர் பண்டைய புராண வரலாறு களை உள்ளபடி உணர்ந்தவரல்லர் என்பதையும், சரியான பாடங்களைக் கண்டறியும் ஆற்றல் இல்லாததனுல் பிழைபட்ட பாடங்களுக்கு வலிந்து உரை எழுதுகின்றார் என்பதையும், திசைச்சொற்களையும் திரிசொற்களையும் உணராதவர் என் பதையும், வடமொழிகள் தற்பவதற்சம பாத்திகளாய்த் திரி புற்றுச் செந்தமிழ் மொழியிற் கலப்புற்றிருத்தலை உணர்ந்திலர் என்பதையும், உரிச்சொல்லை உணர்ந்து பொருளை உரைக்கும் வகையை அறியாதவர் என்பதையும், இரு பெயர் ஒட்டுப் பண்புத்தொகைத் தொடர்களை அறிந்திலர் என்பதையும், இன எதுகை என்னும் விதியை உள்ளபடி உணராமல் திரிபாக உணர்ந்தவர் என்பதையும், உவமைகளை உள்ளபடி உணர்ந்திலர் என்பதையும், இடக்கர்ப்பொருள்களையே நேரிய பொருள்களாகக் கொள்கின்றார் என்பதையும், உண்மைப் பொருளை உணரும் உணர்வு இல்லாதவர் என்பதையும் நன்கு அறிவார், அவர் பிறரை வைதலையே ஒரு சிறந்த தர்க்க

முறையாகக் கொண்டு தமிழ்ப் பேராசிரியர்களைக் கள்ளன் பள்ளன், புலையன் என்றும், செந்தமிழ் மொழியைக் கள்ளன் தமிழ், பள்ளன் தமிழ் என்றும் இழித்துக் கூறுகின்றார். தன் கொள்கையைச் சாதிக்கவேண்டி பிறரைத்திட்டுதலை 'ஆர்குமென்டம் ஆட் ஹோமினம்' (Argumentum ad Hominem) என்பர் ஆங்கிலத் தர்க்க நூலோர். மக்களுடைய அறியாமையை ஆதரவாகக்கொண்டு ஒருவன் தன்னுடைய கொள்கையை நிலைநாட்ட முயல்வது 'ஆர்குமென்டம் ஆட் இக்னோரான்டியம்' (Argumetam ad Ignorantium) எனப்படும். முன்னோர் கருத்திற்கு முரணாகக் கூறக்கூடாது என்பது 'ஆர்குமெண்டம் ஆட் வெரிகண்டியம்' (Argumentum ad Verecundium) எனப் பெயர் பெறும். இம்மூன்று முறைகளும் ஆங்கிலத்தில் தர்க்க ஆபாஸங்கள் எனப்படும். ஆனால், இவற்றையே ஸ்ரீமான் அண்ணங்கராசாரிய சுவாமிகள் சிறந்த முறைகளாகக் கொண்டுள்ளார்கள். திவ்யப் பிரபந்தம் என்பது வைணவ சமயத்தாருக்கு மிகவும் சிறந்த நூல்என்று முன்பே கூறினும். அதற்குத் 'திவ்யார்த்த தீபிகை' என்னும் உரையை எழுதியருளிய ஸ்ரீமான் அண்ணங்கராசாரிய சுவாமிகள் செந்தமிழை நன்றாகக் கற்று, உண்மைப்பொருளை ஆராய்ந்து, கீழ்மக்கள் பயிலும் 'தினவடங்கச் சொல்லுகிறேன்; தினவடங்கக் கேட்க' என்பது போன்ற பாஷையை ஒழித்து, நேரிய செம்மையான தமிழ் நடையில் உரை எழுதப் பயில்வாராக.

44, வேளாளத் தெரு,
அமிஞ்சிகரை, சென்னை. 10.
5—6—49.

இப்படி,
**கா. சா. மல்லிநாதன்.**

---

கோயமுத்தூர்ப் பல மொழிபயின்ற பேரறிஞர்
திருமந்திரமணி, துடிசை கிழார்,
திருவளர் அ. சிதம்பரனார் அவர்கள் அன்புவைத்து அருளிய

## சிறப்புரை :

1. சின்னக் காஞ்சிபுரம் பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியார் என்பவர் திரு. ஆழ்வார்கள் அருளிய திவ்யப் பிரபந்தத்திற்குத் "திவ்யார்த்த தீபிகை" என்ற உரையை வகுத்துள்ளார். அதில் பல சொற்களுக்கும், சொற்

றெடர்களுக்கும் செந்தமிழ்க் கலாசாரப்படி சரியான பொருள் எழுதப்படாமையாலும், சில இடங்களில் இலக்கண வழக்கு, உலக வழக்கு முதலியவைகளுக்கு மாருக உரை எழுதப்பட்டிருப்பதாலும், திவ்யப்பிரபந்தமானது பன்னிரண்டு ஆழ்வார்களால் வடமொழி வேததாத்பரியத்தின்படி சீரிய செந்தமிழ் மொழியில் தமிழர் வழக்கின்படி பாடப்பட்டு உள்ளதாலும், அதற்கு இதுவரை பல உரைகள் வகுக்கப்பட்டு இருந்தும் அவைகள் எல்லாம் வடமொழிச் சொற்களையும், சொற்றொடர்களையும் மிகுதியாகக் கொண்டு, தென்மொழியும், வடமொழியும் கலந்த மணிப்பிரவாள நடையில் எழுதப்பட்டிருப்பதாலும், திவ்யார்த்த தீபிகை உரையானது செந்தமிழ் மொழியைச் சிறுகக் கற்றவர்களுக்கும் எளிதாகப் பயன்படும்படி எழுதப்பட்டு உள்ளதென உரைகாரர் கூறிய போதிலும், பழைய மணிப்பிரவாள நடையையே பெரும்பாலும் கொண்டிருப்பதாலும், திவ்யப் பிரபந்தத்தில் உள்ள சீரிய செந்தமிழ்ச் சொற்களை வடமொழிப் பகுதி அடியாகப் பிறந்ததாகக் கொண்டும், வடமொழிகளைத் திரிபு உணராமல் தமிழ் மொழிகளாகக் கொண்டும் கவிக் கருத்துக்கு மாருகப் பொருள் கொள்ளப்பட்டிருப்பதாலும், காஞ்சீபுரம் அன்பர் வே. மு. ஸ்ரீநிவாச முதலியார் என்பவர் அவ்வுரையைப் பன்முறை படித்து, கவிக்கருத்தின்படி உண்மைப் பொருளைத் தமிழ் நாட்டார் அறிந்துகொள்ளவும், தமிழ்மொழிக் கலாச்சாரமும் வழக்கும், வடமொழிக் கலாசாரமும் வழக்கும் வேறுபட்டன எனக்காட்டவும், பன்னிரண்டு வகைகளாகப் பிரித்துக் கொண்டு, உண்மைக் கருத்துக்களை வெளியிட்டிருப்பது நனி போற்றத் தகுந்தது.

2. இப்பன்னிரண்டு ஆய்வுரைகளும் அசூயையினுல் எழுதப்பட்டனவல்ல; உண்மையைப் புலப்படுத்தும்பொருட்டே எழுதப்பட்டன. நாவலர், பாவலர், இலக்கணம் வல்லுநர்; ஆராய்ச்சியாளர் எல்லோரும் ஒப்புக்கொள்ளும் முறையில் எழுதப்பட்டுள்ளன; பொதுவாகத் தமிழ் நாட்டாரும், சிறப்பாகத் திருமால் அடியவரும் மகிழ்ந்து ஏற்கக்கூடியன.

3. செந்தமிழ்வேதமாகிய திவ்யப் பிரபந்தத்துக்குச் சீரிய செந்தமிழ் நடையில், செந்தமிழ்க் கலாசாரப்படி ஓர் உரை வேண்டுவதே. அதனைத் தொடங்குதற்கு இவ்வாய்வுரை ஒரு வழி காட்டியாகும்.

4. திவ்யப் பிரபந்தத்தை இனிப் பதிப்பிக்கும் அன்பர்கள் உளங்கொள வேண்டுபவை.

| (a) இப்போது இருக்கும் பிழையான பாடம் | | இனிமேற்கொள்ள வேண்டிய திருந்திய பாடம் |
|---|---|---|
| 1. | நூக்க | தூக்கி |
| 2. | சீமாலிகனவனேடு | கோமாறியவனேடு |
| 3. | பண்டைக்குலம் | பண்டக்குலம் |
| 4. | கண்ட கடல் | கண்டல் கடல் |
| 5. | மஞ்சளும் | மஞ்சமும் |
| 6. | நீறணிந்த புன்சடை | நீர் அணிந்த புன்சடை |
| 7. | மஞ்சளும் மேனியும் | மஞ்சன மேனியும் |
| 8. | நாழும் | தாழும் |
| 9. | கறந்து செற்ருர் | கரந்து செற்ருர் |
| 10. | சலத்த துண்டு | கழித்த துண்டு |
| 11. | எண்ணெய் | வண்ணம் |
| 12. | வாக்கும் | நாக்கும் |
| 13. | கன்றினுருவாகி | கன்று மரமாகி |
| 14. | பண்டு பண்டாக்க | பண்டு பெண்டாக்க |
| 15. | எல்வில் | அல்லில் |
| 16. | மசுமையிலீ | மகிமையிலீ |

(b) கருத்துப் பிழை

1. சலமிலா வணிலம் போலேன்

இதில் சலம் + இலா + வள் + நிலம் + போலேன் என்று பிரித்துப் பொருள் கொண்டால், புதுவதாக அணில் கதையை நுழைக்க வேண்டுவதில்லை என்றும்;

2. சீமாலிகனவனேடு என்பதனைக் கோமாறியவனேடு என்று கொண்டால், புதுவதாக, எப்புராணத்திலும் இல்லாத சீமாலிகன் கதையை நுழைக்க வேண்டுவதில்லை என்றும்;

3. எண்டோள் ஈசன் சிவனல்லன் என்றும்; அட்டபுயப் பெருமாள் என்றும்;

4. புட்டி, வயிறு அன்று. களபம் ஆகிய ஒரு வகைக் குழம்பை வண்ணத்தை வைத்தற்காம்கருவி கிண்ணம் என்றும்;

5. பட்டி, காளை என்றும்;

6. நம்பி—விரும்பப்படும் அழகுள்ளவன் என்றும்;

7. கரைசெய்மாக்கடல்—ஒலிசெய்மாக்கடல் என்றும்;

8. ஐவாய்—நஞ்சுள்ள வாய் என்றும்;

8. செய்ந்நலே—வயலிடத்தில், என்றும்; எடுத்துக்காட்டியுள்ள உண்மைப்பொருள்கள் போற்றத்தகுந்தன.

(C) இலக்கண வழக்கு

1. அளியத்தேன் என்பதனை அளியற்றேன் என்றும்,
2. இண்டைக்குலம் என்பதனை இந்திரகுலம் என்றும்,
3. இண்டைச்சடைமுடி என்பதனை இந்தைச்சடைமுடி என்றும்,
4. கலேயற என்பதனைக் களையற என்றும்,
5. விலங்கு என்பதனை விளங்கு என்றும்,
6. நீலக்கடல் என்பதனை நீளக்கடல் என்றும்,

கொள்ளவேண்டும் என்று பல எடுத்துக்காட்டுக்களால் விளங்க வைத்துள்ள விளக்கம் எவரும் ஒப்பக்கூடியதே.

5. இவ்வாய்வுரை நூலை எழுதியவர் சைவ சமயத்தவர்; வைணவ சமயத்தவர் அல்லர். ஆயினும், அவர், திவ்யப் பிரபந்தத்துக்குப் பண்டு உரை எழுதிவைத்த ஆசிரியர்கள் யாவரும் (பெரிய திருமொழி-6–6–8ல்) "எண்டோள் ஈசன்" என்ற தொடருக்குச் "சிவபிரான்" என்றே பொருள் எழுதி வைத்துள்ளார்கள். அப்பொருள் சைவ சமயத்தவர்க்கு மிக்க புகழையே ஆக்குவதாகும். அப்புகழை விரும்பாமல் அத்தொடர்க்குத் "திருமால்" எனப் பொருள் கூறி இருக்கும் நேர்மைச் செயல் பிற மதத்திடத்து வெறுப்பில்லாதவர் என்பதனையும், அவர் நடுநிலை பிறழாதவர் என்பதனையும் விளக்குகின்றது.

6. பன்னிரண்டாவது ஆய்வுரையில் கூறப்பட்ட வெண்பாவின் இலக்கணம் கற்கவேண்டுவனவற்றைக் கற்காமலே கற்றவுராக நினைத்திருப்பவர்க்கும், கற்கவேண்டுவனவற்றைக் கற்பார்க்கும் பயன் அளிப்பதாகும்.

7. சிறிதும் கைம்மாறு கருதாது, உண்மையை உலகர்க்கு உணர்த்த வேண்டி, அன்பர் வே. மு. ஸ்ரீ. எடுத்துக்கொண்ட முயற்சியானது இறைவன் அருளால் யாவர்க்கும் பயன் தருவதாக!

கோயமுத்தூர், 14–6–'49. } இப்படி,
துடிசைகிழார் அ. சிதம்பரனார்.

---

சிறப்புரைகள் முற்றுப்பெற்றன.

திரு:

நலம் உண்டு.

திரு ஆழ்வார்கள் திரு மொழி திகழ்க.

திருப்பேரருளாளப் பெருமாள் தம் திருவடிகள் காப்பு.

# திவ்யப் பிரபந்தமும் திவ்யார்த்த தீபிகை உரையும்.

## வே. மு. ஸ்ரீநிவாஸ முதலியார் எழுதிய ஆய்வு உரை.

(இருக்கை: தெ-1. எண்ணெய்க்காரத் தெரு. காஞ்சிபுரம்)

அத்திக்கு முத்தமரு ளத்திகிரி யத்தர்தாள்
சித்தத்தர்க் குண்டாஞ் சிறப்பு.

திருமால் தம், திருத்தொண்டர்களாகிய திரு ஆழ்வார்கள் பன்னிருவர்களும் அருளிய "திவ்யப் பிரபந்தம" என்னும் திரு நூலிற்குள் திருவாய் மொழி என்னும் ஒரு பகுதிக்கு "ஆறுயிரப்படி,ஒன்பதாயிரப்படி, பன்னீராயிரப் படி, இருபத்து நாலாயிரப்படி, முப்பத் தாறுயிரப்படி-ஈடு" எனவும்,பிற பகுதிக்குப் பிறவகை யாகவும், பார்ப்ப னருள் தென்கலேஞர் ஆகிய ஆசிரியர்களால் எழுதப் பட்ட பண்டைய பேருரை நூற்கள் பல உள. அப் பேருரை நூற்கள் பலவற்றுள்ளும் வடமொழிகளும், வடமொழித் தொடர்களும் பலவாகக் கலக்கப்பெற்றுச் செந்தமிழ் மொழி ஒன்றனே மட்டும் பெருகக் கற்றவர்களும், எளி தாகக் கற்றற்கு இயலாதபடி இருக்கின்றன. அப்படி இருத்தலால், திருக் காஞ்சிபுரம் "பிரதிவாதி ப்யங்கரம்-ஸ்ரீமான் அண்ணங்கராசாரியர்'' என்பவர், செந்தமிழ் மொழியைச் சிறுகக் கற்றவர்களும் எளிதாகக் கற்றற்கு இயலும்படி இருத்தல் வேண்டும் என்ற நல்ல எண் ணத்தால் அத் "திவ்யப் பிரபந்தம்'' என்னும் நூலிற்குத் "திவ்யார்த்த தீபிகை'' என, ஒருபேருரை எழுதி வழங்கி ஞர். 'அப்பேருரை நூலும், அவரின் முன்னேரின் பேர் உரை நூற்களின் படித்ததே. (வட மொழிகளும் வட மொழித் தொடர்களும் பலவாகக் கலந்து கிடத்தலால்.) அவரின் பேருரை நூலுள்ளும், அவரின் முன்னோர் தம் பேருரை நூற்கள் பலவற்றுள்ளும் கவிக்கருத்துக்கு மாறுகிய "போலிப்'' பொருள்களே, கவிக்கருத்தாகிய "உண்மைப்'' பொருள்கள் எனப், பல வாக எழுதப் பட்டுள. அப் போலிப் பொருள்கள் பலவற்றுள் சில வற்றை எடுத்துச் சொல்லி விளங்கவைத்தலே இவ் வாய்வு உரை நூலின் கருத்து.

இவ்வாய்வு உரை நூலால் ஆம் பயன் என்னை? இந்நூல், திவ்யப்பிரபந்தத்தின் உரைகாரர்களின் அறியாமைப் பண்புகளைப் பன்னிரண்டு வகையாக வகுத்தும், அவர்களால் எழுதப்பட்ட உரை நூற்களுள் செறிந்து கிடக்கும் போலிப்பொருள்கள் பலவற்றுள் சிலவற்றைத் தொகுத்தும் எழுதப்பட்டது ஆதலால்,

"எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்பது அறிவு"
"குணம் நாடிக் குற்றமும் நாடி அவற்றுள்
மிகை நாடி மிக்க கொளல்"
"வாரம் பட்டுழித் தீயவும் நல்லவாம்
தீரக் காய்ந்துழி நல்லவும் தீயவாம்" என்று அருளிய சான்றோர்தம்

திருமொழிகளை மறவாதவராய்—வாரஓரங்களின் நீங்கியவராய்—நடுநின்று, இவ்வாய்வு உரை நூலை எஞ்சாமல்-முற்றும் கற்பவர், திரு ஆழ்வார்கள் தம், திருக்கருத்துக்களையும்—திவ்யப்பிரபந்த "திவ்யார்த்த தீபிகை" என்னும் உரை நூலுள் செறிந்து கிடக்கும் பலவகைக் குற்றங்களையும் எளிதாக அறிகுவர் என்பது.

## முதல் ஆய்வு உரை: கிளை—1.

திருஆழ்வார்கள், தம், திவ்யப்பிரபந்தத்துள் அருளிவைத்த பண்டைய புராண வரலாறுகளைத் திவ்யப்பிரபந்த "திவ்யார்த்த தீபிகை" உரைகாரர், உண்மைபடி (உள்ளபடி) உணர்ந்திலர்—திரிபாக உணர்ந்துளர்—என்பதனை, இம் முதல் ஆய்வு உரை, ஐந்துவகைப் புராண வரலாறுகளைக் காட்டி விளக்குதலை மேலே அறிக

"குரங்குகள் மலையை 1 'நூக்கக் குளித்துத் தாம்' புரண்டிட்டோடித்
தரங்கநீர் அடைக்கலுற்ற. சலமிலா அணிலம் போலேன்
மரங்கள்போல் வலிய நெஞ்சன் வஞ்சனேன் நெஞ்சுதன்னால்
அரங்கனார்க் காட்செய்யாதே 2 'அளியத்தேன்' அயர்க்கின்றேனே"
(திருமாலை—27.)

இத்திருப்பாவிற்குத் திவ்யார்த்த தீபிகை உரை:—"வாநர வீரர்கள் (கிஞ்சித்கரித்து-ஸ்வரூபம் நிறம் பெறுதற்கு)-மலைகளை-தள்ளிக்கொண்டுவர-தாங்கள்-(அணில்கள்)நீரிலே மூழ்கி (கரையிலுள்ள உலர்ந்த மணலிலே,) புரண்டு-ஓடி-அலைக்கிளர்ச்சியை உடைய-கடலைதூர்க்கையிலே ஒருப்பட்ட-கபடமற்ற—அணில்களையும் ஒத்திருக்கின்றேனில்லை;—மரங்களைப்போலே-கடினமானநெஞ்சை உடையனாய்—வஞ்சனையையே தொழிலாக உடையனாய்-அருமந்தமனுஷ்யனான நான்-அழகியமணவாளனுக்கு-பாவனா வ்ருத்தியாலுங் கூட-அடிமைசெய்யாமல்-அநர்த்தப்படாநின்றேன்"என்பது.

இப்பாடமும் பொருளும், "திவ்யப்பிரபந்த திவ்யார்த்த தீபிகை" என்னும் உரை நூலுள் கிடக்கின்றன. இப்பாடப்பொருள்களின் சிறப்பையும் இறப்பையும் உய்த்துணர்க. உய்த்துணருங்கால் மேல்வருவதுக்களையும் எண்ணித் தெளிக. தெளியுங்கால் 'போலேன்' என்னும் தொடர்க்கு 'ஒத்திருக்கின்றேன் இல்லை' என எதிர்மறைப் பொருளை எழுதிவைத்த செயலையும் நினைக்க. 'வணிலம் போலேன்' என்பது பழைய புத்தகங்களில் உள்ள பாடம். 'வணிலும்போலேன்' என்பது திவ்யார்த்த தீபிகை உரை நூலுள் உள்ள பாடம்.

இத்திருப்பாவில் அமைந்துள்ள 1"நாக்கக்குளித்துத்தாம்" என்ற தொடர் "தூக்கிக்குனித்துத்தாம்" என இருத்தற்பாலது. "நாக்கக்குளித்துத்தாம்" என்ற முன் பாடம், பிழைப்பாடம். அப்பாடம், கவிக்கருத்தை அறியமாட்டாமையால் முன் உரைகாரர், தம் கருத்தைத் தம் உரை நூலுள் புகுத்துவான் செறித்த பிழைப்பாடம் என்க. 'ற்'கரத்தைத் 'த்'கரமாக வழங்குதல் அவ்வுரைகாரரைச் சார்ந்த கூட்டத்தர் வழக்கு. அவ்வழக்குப்படியே 2"அளியற்றேன்" என்பதனை "அளியத்தேன்" எனப் பிழைபடுத்தினர். "அளியற்றேன்" என்பதே நேரிய பாடம் என்பதனைத் தெளிக.

இத்திருப்பாவுள் ஆளப்பட்ட சில மொழிகளின் பொருள்கள்:—தூக்கி: தூக்கிக் கொண்டு, எடுத்துக் கொண்டு. குனித்து: கூத்தாடி. தாம், அசை. புரண்டிட்டு: (ஒரு சொல்) புரண்டு. புரண்டு: உருண்டு, (ஒன்றை ஒன்று தாக்கித் தள்ளிக் கொண்டு) "உருட்டி" என்பதற்குத் "தள்ளி" என்றார், ஆசிரியர் நச்சினார்க்கு இனியர். (திருமுருகா-297.) ஓடி: சென்று, விரைந்துசென்று. அடைக்கலுற்ற: (ஒரு சொல்) அடைத்தன. 'உற்ற' என்பதன ஈற்று அகரம், (இவண், பெயரெச்ச விகுதிப் பொருட்டு அன்று) அஃறிணைப் பலவின்பால் படர்க்கை வினைமுற்று விகுதிப் பொருட்டு. சலம்: புனல், நீர். "சலம்" என்பது இவண் "ஜலம்" என்னும் வடமொழியின் திரிபு மொழியே. அம்மொழி, இவண் 'ஃமுூம்-சலம்'- என்னும் வடமொழியின் திரிபுமொழி அன்று. (ஆதலால் அச் "சலம் ஃமுூம்'-என்னும் வடமொழிக்கு உரிய வஞ்சனை-கபடம்-என்பது இவண் பொருந்திய பொருள் அன்று.

வணிலம்: (வள்+நிலம், வண்ணிலம் என்பதன் விகார மொழி.) வள்: பெரிய, பரவிய. (சிறுபாணு-136. பெரும் பாணு-5, மதுரைக்கா. 251.) நிலம்: தரை, பார், பூமி. 'சலம் (ஜலம்) இலா வணிலம் போலேன்'' என்ற தொடரின் கருத்து: 'புனல்—நீர்—செறிந்து இல்லாமையால் நெகிழ்ச்சி யற்று வலிதாய பெரிய நிலமபோல;(என் நெஞ்சில் அன்பு செறிந்து இல்லாமையால்) நெகிழ்ச்சியற்று வலிதாய நெஞ்சை உடையனாகியிருக்கின்றேன் யான்' என்பது. "நீர் ஊருத பார்போலேன்—வலியநிலம் போலேன்'' என்றார் எனலும்ஆம் போலேன்,உடன்பாட்டுஉவமைப்பொருட்டு. எதிர்மறைப் பொருட்டன்று. பார்: வன்னிலம். 'பார் து கள்பட' என்ற தொடர்க்கு(பரிபாடல்—5-1ல்)அதன் உரை ஆசிரியர் எழுதிவைத்த கருத்தை நினைக்க. ஆட்செய் யாதே: ஏ, அசை. தேற்றப்பொருட்டு என்னலும் ஆம். அளி: அருள். அளி அற்றேன், அருளைப்பெறுதற்கு உரியன் அல்லன் ஆயினேன். அயர்க்கின்றேன்: வாடு கின்றேன், துன்பத்தை உடையன் ஆயினேன். வள்: பெரிய. 'பெரியநிலம்' என்பதனை இனஞ்சுட்டா அடை, பெற்ற பெயர் என்க. இயற்கை அடை என்க.

நிலம், தன்னில் நீர் செறியப்பெற்றிருப்பின் அது' தன்னின் வலிய பண்பின் மாறி நெகிழ்ச்சியை உடைய தாய்—மெல்லியதாய்— தண்ணியதாய்-இருக்கும். தன்னில் நீர் கலவாத நிலம், நெகிழ்ச்சியற்று வற்கென-வலியதாய்- இருக்கும் என்பன இவண் நினைத்தற் பாலவாம்.

இத் திருப்பாவின் கருத்து: திரு இராமபிரானர், இரா வணனை அழிப்பான் இலங்கைக்குச் செல்லும்பொருட்டுக் கடலிடையே கரையை எழுப்பி வழியை ஆக்கிய அக் காலத்தில், முற்றறிவைப் பெருதனவாகிய குரங்குகளும் திருஇராமபிரானர்மாட்டுஅன்பைஉடையவாய் மலைகளைத் தூக்கி எடுத்துக்கொண்டு திருச்சக்கரவர்த்தியின் திரு மகனராகிய திரு இராமபிரானர்க்குத் திருத்தொண்டு செய்யும் பெருமையைப் பெற்றோம் என்னும் எண்ணத் தால் ஆய மகிழ்ச்சி மிகுதியால், கூத்தாடிக்கொண்டு, வெள்ளம் கரையைக்கடந்து புரண்டு விரைந்து செல்லு தல்போல, யான் முன் யான் முன் என ஒன்றை ஒன்று தாக்கித் தள்ளிக்கொண்டு விரைந்துசென்று கடலிடையே கரையை எழுப்பி வழியை ஆக்கிய திருத்தொண்டினைச்

செய்தன. யான், முற்றறிவைப்பெறும் உயர்திணைப் பிறப்பினை உடைய மக்கள் இனத்தனாய்ப் பிறந்துள்ளேன் ஆயினும், திரு அரங்கநாதனார்தம், திருத்தாட்களில் அன்பை உடையனாய்ப் பூவையேனும் சுமந்து செல்லும் திருத்தொண்டினைச் செய்தற்கு நெஞ்சில் எண்ணமும் கொள்ளாதவனாய் இருக்கின்றேன். இருத்தலால், தன்னில் நீர்செறிந்து இல்லாமையால் வலியதாய நிலம் போல (என் நெஞ்சில் அன்புசெறிந்திலாமையால்) வலிதாய நெஞ்சை உடையனாய்வாழ்கின்றேன். திருஅரங்கநாதனார் திருத்தாட்களில் அன்பை வைத்து மகிழாமல் யான், வாழ்கின்றேன். ஆதலால் அவர்தம் திரு அருளைப் பெறுதற்கு யான், உரியன் அல்லன் ஆயினேன். அதனால், யான், துன்பத்தை உடையன் ஆயினேன். என்னே! என் இயல்பு!! எனத், திரு ஆழ்வார், தம்மியல்பினைத்திருவில் இயல்பெனத்தாமே இழித்துக் கூறிக்கொண்ட குறிப்பினை உடையது என்க.

துன்பத்தை உடையன் ஆயினேன் என்றது, தம்மை மறுமையில் செறியும் துன்பத்தை இம்மையில் வைத்துக் கூறினார் திரு ஆழ்வார். இக்கூற்று விரைவு பொருட்டுத் துணிபிற்று என்க.

மலையைத் தூக்கும் ஆற்றலையும் அமையத்தையும் பெற்றிலேன் ஆயினும், எச்சமயத்தும் பூவைத் தூக்கிச் செல்லும் செயலை எளிதாகச் செய்யலாம் அன்றோ? செய்யலாம் ஆயினும் யான், அதனையும் செய்திலேன். என்னே என் இயல்பு! என்பது, குறிப்பு எச்சம்.

இப்பொருளால், இத்திருப்பா, திரு இராமபிரானாரின் வரலாற்றுள் ஒரு பகுதியைச் சுட்டிற்று ஆயினும், இத் திருப்பாவுள், "அணில்" கதையைப் புகுத்தி அக்கதையை இத்திருப்பாவின் பொருள்எனக் கோடற்கு இத் திருப்பாவுள் இடமே இல்லை என்பதனை அறிஞராயினர் ஆழ்ந்து சூழ்ந்து தெளிகுவர் என, யான் நமபுகின்றேன்.

'வள்நிலம், மரங்கள், வலியநெஞ்சன், வஞ்சன்' என இத்தனை இழிவுச்சுட்டு உவமைகள் வேண்டுமோ எனின், வேண்டியவே. என்னை? தம், அன்பிலாப் பண்பின் திண்மையைத் தெளிவு படுத்தல் பொருட்டு. இப்படி அடுக்கிக் கூறுதல் கவிமரபு. இத்திரு ஆழ்வாரே முன்னர் (திருமாலை 17-ல்) அருளிவைத்த "இரும்புபோல் வலிய நெஞ்சம்" என்ற தொடரின் பொருளையும் நினைக்க. மற்றும்,

"வன்பராய் முருடு ஒக்கும் என் சிந்தை,
மரம் கண், என்செவி இரும்பினும் வலிது" (திருவாச-செத்தி-4)
"மரக் கண்ணேனையும் வந்திடப் பணியாய்" (திருவாச-செத்தி-9)
நெஞ்சம் கல்லாம் கண் இணையும் மரமாம்" (திருவாச-சதகம்-21)
'இனையன் * பாவனை இரும்பு; கன்மரம்
செவி இன்ன தென்றறியேன்" (திருவாச-சதகம்-37)

என அருளிய திருச் சைவசமைய செந்தமிழ்த் திருமறை ஆசிரியர்தம் திருக்கருத்தையும்,

---

* 'பாவனை' என்பது 'மனம்' என்பதற்கு ஆகு பெயர். இடப்பொருளை இட்டு நிகழும் பொருளால் கூறிவைத்தார். பாவனை என்பது மனத்தின் தொழிலாகிய 'நினைப்பு' ஆதலால், மனம் என வேறு ஒன்று இவண் வேண்டா. இவ்வேது வினால் இத்தொடரில் (திருவாசகம்-செத்திலாப்பத்து-37 ல்) 'மனம் கல்' என்னும் முன்பாடம், பிழைப்பாடம் எனவும், அது 'மரம் கண்' என இருத்தற்பாலது எனவும் கொள்க. மேலே காட்டப்பட்ட திருவாசகத்துள் சதகம்-21; செத்திலாப்பத்து-4, 9-பாக்களில் 'கண்ணை மரம்' என இழித்துரைத்துள்ள திருவாதவூர் அடிகளின் கருத்தையும் நினைக்க 'பாவனை' என்பது 'மனம்' என்பதற்கு ஆகுபெயர் என்பதனை மறந்தபடியால் 'கண்' என்பதனைக் 'கல்' எனவும், 'மரம்' என்பதனை 'மனம்' எனவும் திருத்தி அத் தொடருள் பிழையைச் செறித்து விட்டனர்போலும், திருவாசகத்தை முதல்முறை அச்சிட்டவர்.

பாவனை, இரும்பு, 'மனம் கல்' என்ற முன்பாடம் பிழைப்பாடம் அப் பிழைப்பாடத்தையே நேரிய பாடமாகக்கொண்டு திருவாசகத்துள் திருச்சதகத்துக்கு மட்டும உரை எழுதிய ஆசிரியர், பண்டிதமணி, திருவாளர் மு. கதிரேசஞ் செட்டியார் என்பவர், தம் உரை நூலுள் அத்தொடர்க்கு, "இனையன்பாவனை இரும்பு: இத்தகைய எனது நினைவு இரும்பாகும். மனம் கல்: நெஞ்சம்கல்லாகும். செவி இன்னது என அறியேன்: செவியை இன்னபொருள் என்றுசொல்ல அறிந்திலேன், எனப் பதவுரை எழுதிவைத்து, அப்பதவுரையைத் தாங்குதற்கு ஒரு மதலையாக "அடிகள் இறைவன் திருவுருவைப் பாவித்தற்கு உள்ளக் குழைவு இன்மையால் 'இனையன்பாவனை இரும்பு' எனவும், 'பாவித்தற்குரிய குழைவு இல்லாதமனம் கல்லைப் போன்றிருத்தலின், 'கல் மனம்' எனவும் கூறினார். இரும்பு, நெருப்பு முதலிய சாதனங்களால் உருகும் இயல்பினது. அதுபோலத் தவ ஆற்றலால் பாவனைக்குரிய குழைவைப் பெறக்கூடுமாயினும், அதற்கு மூலமாகவுள்ள மனம் எதற்கும் உருகாத கல்லாயிற்று. மனம் கல்லாகிய நிலையில் அதற்குமாக இறைவனைப் பாவித்தல் இல்லாமையோடு, பொறிகளின் வழியே சென்று, புலனுகர்விலும் இறைவனை அனுபவித்தற்கு இயலாததாகும் என்னும் குறிப்பை 'பாவனை இரும்பு கல் மனம்' எனவும், 'செவி இன்னதென்றறியேன்' எனவும் கூறியவாற்றால் அறிக. பொறிகளுக்கு உபலக்கணமாக கண்டுச் செவி கூறப்பட்டது காட்சி ஒழிவில் கேள்வி அளவிலாவது இறைவன் திருப்புகழ் அமிர்தத்தைப் பருகற்கும் இயலவில்லையே என்பது குறிப்பு,, எனச் சிறப்புரையும் எழுதி வைத்தார். அவர் கொண்ட பாடமும் பொருளும் கவிக்கருத்தன்று. என்னை? மேலே சொல்லபட்டவையே ஏதுக்களாம். நினைத்தலாகிய தொழிலுக்கு மனமே கர்த்தா ஆதலால், அத்தொழிலுக் கர்த்தாவாகக் கோடல் வழுவாம் என்பதனையும் நினைக்க.

"உலர்ந்தவன் கண் உலோபர்" (ராமா - பள்ளி-26)
என அருளிய திருமால் சமயத்தராய செந்தமிழ் ஆசிரியர்: திருக் கம்பர்தம் திருக்கருத்தையும் நினைக்க.

திரு ஆழ்வார்கள் அருளிய திவ்யப் பிரபந்தத்தின் உரைகாரர் யாவரும், செந்தமிழாலாய கவிகளின்கருத்துக் களை அறிவிக்கும் செந்தமிழ் அறிவைப் பெறாதவரே. பெருமையால்தான், இத் திருப்பாவில் அமைந்துள்ள 'அடைக்கலுற்ற' என்ற தொடரின் ஈற்றில் உள்ள அகரத்தை இவண் பெயரெச்ச விகுதிப் பொருட்டு எனத் திரிபாக உணர்ந்தார்கள். (அந்த அகரம், அஃறிணைப் பலவின்பால் படர்க்கை வினைமுற்று விகுதிப்பொருட்டு என்பதனை அவ்வுரைகாரர் உணராதவராயினர்.) அத்திரிபு உணர்ச்சியால் 'குனித்து' என்பதனைக் 'குளித்து' எனவும்,(வள் + நிலம், வண்ணிலம் என்பதன்விகாரமாகிய) 'வனிலம்' என்பதனை 'அனிலம்' எனவும் பிரித்துக் கவியால் கருதப்படாத 'அனில்' கதையைப் புகுத்திக் திரிபுப் பொருளைப் – போலிப் பொருளைப் - பொருளென எழுதிவைத்தனர். அப்போலிப் பொருளால் அவ்வுரை காரர் யாவரும், தம்மால் கூறப்பட்ட 'அனில்' என்னும் பொருளுக்கு 'அம்' ஈற்று - 'அனிலம்' என்பது பெயர் அன்று என்பதனையும், 'லகர' மெய்யீற்று 'அனில்' என்பதே பெயர் என்பதனையும், உணராதவராயினர். (அணில்கள் தாவ-பெரிய திரு-3-4-8) இஃதன்றி "சலம இலா" என்பதற்கு இவண் புனல்-நீர்-இல்லாத என்பதே கவியால் கருதப்பட்ட பொருள் என்பதனை யும், 'வஞ்சனை' கபடம் என்பது, இவண், கவியால் கருதப்பட்ட பொருள் அன்று என்பதனையும், அறியாதவ ராயினர் என்பது, முன்னர்க் கூறப்பட்ட ஏதுக்களால் வெள்ளிடை நின்ற மலைபோல் விளங்குதலை அறிக.

அவ்வுரைகாரரால் எழுதப்பட்ட "அனில்" வரலாறு வடமொழிகளால் ஆய இராமாயணங்களுள்ளும் இல்லா தது. அன்றித், திரு இராமபிரானுக்குப் பகவான் திரு வால்மீகி முனிவரால் கூறப்படாதனவாகிய பல வகைப் பெருமைகளைத், தம்மால் செந்தமிழ் மொழியால் அருளப்பட்ட இராமாயணத்துள், தாமாக அமைத்துக் கூறி வைத்த திருமால் சமயத்தவரும், செந்தமிழரும் ஆய பெரும் பேராசிரியர் திருக்கம்பர், தம்மால் அருளப் பட்ட அச் செந்தமிழ் மொழியாலாய இராமாயணத்துள்

'அணில்' வரலாற்றினைக் குறித்து வைத்திலர். 'அணில்' வரலாறு நடவாத வரலாறு. ஆதலால், அவர், தம்மால் அருளப்பட்ட இராமாயணத்துள் அவ்வணில் வரலாற்றினைக் குறித்திலர் என்க.

திருக்கம்பரால் தம் இராமாயணத்துள் 'அணில்' வரலாறு குறிக்கப்படாமையால், அவர் காலம் வரையில் இத் திருப்பாவில் அமைந்துள்ள (திருமாலை - 27-ல்) "வணிலம்" என்ற பாடத்திற்கு உரிய பொருளாக (நடவாத வரலாறாகிய) 'அணில்' வரலாறு என ஒன்று, நம் செந்தமிழ்த்தேஎத்தில்-உலகில்-எவராலும்-எவ்விடத்தும் வழங்கப்படவில்லை எனவும், அவரின் பிற்காலத்தேதான், திவ்யப் பிரபந்தத்தின் உரைகாரர் காலம் முதல்தான் 'வணிலம' என்னும் இப்பாடத்திற்கு உரிய பொருளாக, (நடவாத வரலாறுகிய) 'அணில்' வரலாறு என ஒரு வரலாறு நம் செந்தமிழ்த் தேஎத்தில் வழங்கலாயிற்று எனவும கொள்க.

இவ்வேதுக்களால் 'வணிலம்' என்பதனை 'வள் + நிலம்' எனப் பிரித்துப் பொருள் கோடலே கவிக்கருத்தாகும் என்பதனைத் தெளிக. 'வள்' என்பது பெருமையைச் சுட்டுவதாகிய உரிச்சொல். அது, இவண் குறிப்பு வினைச்சுட்டி நின்றது எனக் கொள்க. 'வணிலம்' என்னும் மொழியை 'அணிலம்' எனப் பிரித்து 'அணில்' வரலாற்றினைப் புகுத்தி, அவ்வரலாற்றினை, இத் திருப்பாவின் பொருளெனக் கூறுதல் கவிக்கருத்துஅன்று என்பதனை ஆழ்ந்து சூழ்ந்து தெளிக. (வல்+ நிலம்) வன்னிலம் என்பதன் விகார மொழியாகிய வனிலம்' என்பதனை 'அணில்' வரலாற்றினைப் புகுத்தற்பொருட்டு உரைகாரர், 'வணிலம்' எனத் திரித்திருப்பர் என்பதும் என் நம்பிக்கை.

திரு ஆழ்வார்கள், தம் திருப்பாக்களில், திரு இராமபிரானுர் தம், பலவகைத் திருச்செயல்களைப் பல பாக்களில் எடுத்துச் சொல்லி வைத்திருப்பது போல அவ்வுரைகாரர்கொண்ட 'அணில்' வரலாற்றினை எத் திரு ஆழ்வாரும் தம் திருப்பாக்களில் அமைத்து அருளிலர். பிற ஆசிரியருள்ளும் எவரும், எம்மொழியாலாய எந் நூலகத்தும் எடுத்துச் சொல்லி வைத்திலர் என்பதும் நினைவில் இருத்தற் பாலதே.

அவ்வுரைகாரரால் கூறப்பட்ட அஃறிணைப் பிறப்பினது ஆகிய—முற்றறிவைப்பெறுத—அணில், தாமபாட்டு அன்பை உடையவாய்த் தமக்குச் செய்த திருத்தொண்டினுக்கு மகிழ்ந்தவராய், அத் திரு இராமபிரானர், அவ்வணிலுக்கு இன்னதொரு பெருமையைச்—சிறப்பைத்-தந்தருளினர் என, எத் திரு ஆழ்வாரும் தம திருப்பாக்களில் இயம்பிவைத்திலர். திருஆழ்வாருள் எவரும் இயம்பாமையின் ஏது என்னை? திவ்யப் பிரபந்தத்தின் உரைகாரரால் எழுதிவைக்கப்பட்ட "அணில்" வரலாறு. எக்காலத்திலும் நடந்திலாத வரலாறு ஆதலால் எத்திரு ஆழ்வாரும், அந்த "அணில்" வரலாற்றினைத் தம திருப்பாக்களில் இயம்பி வைத்திலர் என்க.

திரு இராமபிரானர், தாம், திருமுடியைச் சூட்டிக்கொண்ட திருவிழாக்காலத்தில் வநவேடராகிய திருக்குகப்பெருமானர்க்கும், திரு வாநரவீரர்க்கும் சிறப்புக்களை அருளினற்போல (அவ்வுரைகாரரால் எழுதிவைக்கப்பட்ட)அவ் அணில், தமமாட்டு அன்பை உடையவாய்த் தமக்குச் செய்த திருத்தொண்டின் நன்றியை மறவாதவராய் ஒரு அணிலுக்கும் ஒரு சிறப்பையும் அளித்திலர் என்பது நினைத்தற்பாலது. என்னை? திரு இராமபிரானர், இராவணனை அழித்துச் சீதாதேவியை மீட்டற்பொருட்டு இலங்கைக்குச் செல்வான், கடலிடையே கரையை எழுப்பி வழியை ஆக்கிய அக்காலத்தில், எந்த "அணிலும்" அவர்க்கு ஒரு திருத்தொண்டினைச் செய்திலது. கடலிடையே கரையை எழுப்பிய திருத்தொண்டினைத் திரு வானரவீரரே செய்தனர். ஆதலால், அவ்வாநரவீரர்கள் செய்த திருத்தொண்டினைத் திருஆழ்வார்கள், தம் திருப்பாக்கள் பலவற்றுள் குறித்தருளினர்கள் அவர்கள் அருளிய குறிப்புக்களுள் சில மேல்வருமாறு:—

"கலங்கமாக்கடல் அரிகுலம் பணி செய்ய
அருவரை அணைகட்டி" (பெரிய திரு-1-2-2)

"குடைத்திறல் மன்னவனாய் ஒருகால் குரங்கைப் படையா
மலையால், கடலை அடைத்தவன் எந்தபிரான்" (பெரிய திரு-2-9-8)

"வரிசிலை வளைய அடுசரம் துரந்து மறிகடல் நெறிபட மலையால்
அரிகுலம் பணிகொண்டு அலைகடல் அடைத்தான்" (பெரிய திரு-5-7-7)

"கான எண்கும் குரங்கும் முசுவும் படையா அடலரக்கர்
மானமழித்து நின்ற வென்றி அம்மான்" (பெரிய திரு-6-10-6)

"மிடைத்திட்டெ ழுந்த குரங்கைப் படையா
விலங்கல் புகப் பாய்ச்சி விம்ம கடலை
அடைத்திட்டவன் காண்மின்" (பெரிய திரு-10-6-7)
"தலையால் குரக்கினம் தாங்கிச் சென்று
தடவரை கொண்டு அடைப்ப" (பெரியாழ்-4-1-3)

என்பனவாகிய திருப்பாக்களின் கருத்துக்களை நினைக்க. இவையே அன்றிக், குரங்குகளின் திருத்தொண்டினை விதந்து அருளப்பட்ட திருப்பாக்கள் திவ்யப்பிரபந்தத்துள் பலவாக இருத்தலை நினைக்க. குரங்குகள் செய்த திருத்தொண்டினைப் பலவாகப் பாராட்டி அருளிய திரு ஆழ்வார்கள், அணில் வரலாறு நடந்ததொரு வரலாருக இருப்பின், அவ்வரலாற்றினைத் தம் திருப்பாக்களில் விதந்து பாராட்டி அருளாமல் விடுவரோ? திரு ஆழ்வாருள் எவரும் அணில் தொண்டினை விதந்து அருளிலர்

திரு அறநெறியை வளர்ப்பான், திருப்பிறப்பினைக் கொண்டருளிய திருமூர்த்தி ஆகிய திரு இராமபிரானுர், முற்றறிவைப்பெற்றிலாத, 'அணில்' தமக்கு ஒரு நலத்தைச் செய்திருப்பின், அந்நலத்தை மறந்து, தமக்கு நன்றி செய்த 'அணிலுக்குச்' சிறப்பு ஒன்றனையும் அருளாமல், திரு அறநெறியைத் தேய்த்திரார்.

"எந்நன்றி கொன்ருர்க்கும் உய்வு உண்டாம்; உய்வு இல்லை
செய்ந்நன்றி கொன்றமகற்கு" என்னும்

திரு அறநெறியைத், திரு அற உருவினராகிய அத் திரு இராமபிரானுர், அறியாதவரல்லர் என்பதனையும் நினைக்க.

இவ்வாய்வு உரையுள் கூறப்பட்ட ஏதுக்களால் 'அணில்' வரலாறு நடவாத வரலாறு—உரைகாரரால் கற்பனையாகக் கூறப்பட்ட பொய்வரலாறு-என்பதனையும், செந்தமிழ் மொழியுள் உரிச்சொல் என ஒருவகைச் சொல் உண்டு என்பதனைத் 'திவ்யப்பிரபந்த திவ்யார்த்த தீபிகை' உரைகாரர்உணர்ந்திலர்என்பதனையும்அறிக. (க)

## முதல் ஆய்வு உரை: கிளை–2.

"சீமாலிக னவனெடு தோழமைக் கொள்ளவும் வல்லாய்
சாமா றவனை நீ எண்ணிச் சக்கரத்தால் தலை.கொண்டாய்
ஆமாறறியும் பிரானே அணியரங்கத்தே கிடந்தாய்
ஏமாற்றமென்னைத் தவிர்த்தாய் இருவாட்சிப்பூச் சூட்டவாராய்"
(பெரியா-2-7-8)

இத்திருப்பாவிற்குத் திவ்யார்த்த தீபிகை உரை:—'மாலிகன் என்ற பெயரை உடையவனோடு-ஸ்நேகம் செய்துகொள்ளுதற்கும்-வல்லவனாய்-அந்த மாலிகனை-நீ-செத்துப்போம் வழியையும் ஆலோசித்து—சக்கராயுதத்தினால்—தலையையும்அறுத்தாய் நடத்தவேண்டியவைகளை-அறியவல்ல-ப்ரபுவே! அழகிய-கோயிலிலே—பள்ளிகொண்டிருப்பவனே!—எனக்கு—துன்பத்தைப்போக்கினவனே! இருவாட்சிப் பூ சூட்டவாராய்" என்பதே.

இப்பொருள். திரு அண்ணங்கராசாரியர் என்பவரால் எழுதப்பட்ட 'திவ்யப்ரபந்த திவ்யார்த்த தீபிகை' என்னும் உரை நூலுள் உள்ளது. இவ்வுரைப்பொருளின் சிறப்பையும்-இறப்பையும்-ஆய்ந்துபார்க்க. இப்பொருள், பொருந்தாப்பொருள்-போலிப்பொருள்-என்பதனை மேல்வருமாற்றால் அறிக.

இத்திருப்பாவின் முதலில் நின்ற 'சீமாலிகனவனோடு' என்னும் தொடர் பிழைபட்டது. அது, 'கோமாறியவனோடு' என இருத்தற்பாலது. இஃதே கவிக்கருத்து ஆகும் ஆதலால். என்னை? மோனைத் தொடை முரணை நினைக்க அன்றியும், 'சீமாலிகன்' என்பான் வரலாறு, எந்நூலகத்தும இல்லாதது. அது, நடவாத வரலாறு. உரைகாரரால் கற்பனையாகக் கூறப்பட்ட பொய்வரலாறு. 'கோமாறியவனோடு' என்னுந் தொடரின் மொழிப்பொருள்:—கோமாறியவன், கோ: பூமி(மாறுதல்.மறைத்தல்) மாறியவன்: மறைத்தவன். பொருள், பூமியைக் களவால் கவர்ந்தவன் என்பது. கோமாறி, பெயர். ஆதலால் 'கோமாறியவன்' என்னுந்தொடர், இருபெயர் ஒட்டுப் பண்புத்தொகைத்தொடர் என்னலும் ஆம. அத்தொடர் ஆகுபெயரால் அன்மொழித்தொகைப்பெயராகி இவண் 'இரண்ணியாக்கன்' என்பான் அசுரன் ஒருவனைச் சுட்டி நின்றது என்க. அவ்வசுரன் பண்டு ஒரு காலத்தில் நிலத்தைக் கவர்ந்துசென்று கடலிடையே மறைந்திருந்தான் என்பதும், அக்காலததில் திருமால் வெளளிய பன்றி உருவினராய்ச் சென்று அவ்வசுரனை வதைத்து அவனால் கவரப்பட்ட நிலத்தைப்பெற்றார் என்பதும் பண்டைய புராண வரலாறு. அவ்வரலாற்றினையே இத்திருப்பாவில் அமைத்தருளினார் திரு ஆழ்வார் என்க.

திருமால்; வெண்ணிறப்பன்றிபோலும் திரு உருவினராகி இரண்ணியாக்கனோடு போர்செய்தகாலத்தில், அவ்வசுரனால், தம்மீது எறியப்பட்ட கதையாகிய படையைத் திருமால் பற்றிக்கொண்டார். தன்னால் எறியப்பட்ட கதையைத் திருமால் பற்றிக்கொண்டதனால்; அவ்வசுரன், தனக்கு வெற்றியின்மையால் செறுக்கற்றவனாகி நின்றான்

என்பதும், அவன் நின்ற தோல்விநிலைமையைப் பார்த்த திருமால், தாம் பற்றிக்கொண்ட அக்கதையாகிய படையை மீண்டும் அவ்வசுரனுக்குத் தந்தருளினர் என்பதும் பண்டைய புராண வரலாறு. அவ்வரலாற்றினைச் சுட்டியே; (திருமால். தம் பகைஞனுக்குப் போரிடையே படையைத்தந்து நட்பைக்காட்டியதால்) 'கோமாறி அவனொடு-(பூமியைக் கவர்ந்துசென்ற அவனொடு)-இரண்ணியாக்கனொடு தோழமை கொள்ளவும்வல்லாய்' என்றார் திரு ஆழ்வார் என்க. மற்று, போரிடையே தனக்குப படையைத் தந்தருளிய திருமால்தம் திரு அருளைச் சிறிதும் உணராமல் அவ்வசுரன், திருமால், தனககுத் தந்தருளிய தன் கதையாகிய படையைப் பெற்றுக்கொள்ளாமல், பின்னரும் திருமாலொடு தன்னின் சூலப்படையைக்கொண்டு போர் செய்யமுயன்றான் என்பதும் அவ்வசுரனது முயற்சியைக்கண்ட திருமால், தம்மின் திருஆழிப்படையைச் செலுத்தி அவ்வசுரனது தலையைக்கொய்தார் என்பதும் பண்டைய புராண வரலாறு. அவ்வரலாற்றினைச் சுட்டியே இத் திருப்பாவில் இரண்டாவது அடியில் 'சாமாறு அவனை நீ எண்ணிச் சக்கரத்தால் தலை கொண்டாய்' என்றார் திரு ஆழ்வார் என்க. திருமால் போரிடையே தம் பகைவனுக்குப்படையைத் தந்தருளியதும், அவனின் தலையைக் கொய்ததும் ஆகிய அவ்விருவகைச் செயல்களும், திருமால்தம், காக்கவும் அழிக்கவும் வல்ல பேரருளையும் பேராற்றலையும் விளக்குதலை அறிக.

இப் புராண வரலாறு தம் நினைவில் விளையாமையால் உரைகாரர் யாவரும், கவிக்கருத்தை அறிய மாட்டாதவராய் மோனைத்தொடை முரணுதலையும் எண்ணுமல் 'கோமாறி அவனொடு' என்ற தொடரைச் 'சிமாலிகன் அவனொடு' எனப் பிழைபடத் திருத்தி, எப்புராணத்தும் கூறப்படாதது ஆகிய—என்றும் நிகழாதது ஆகிய-'சிமாலிகன்' என்பான் ஒருவனது வரலாற்றினைப் புதிதாகப் புகுத்திப்பொருத்தமற்றதாகிய போலிப்பொருளைப் பொருளென எழுதிவைத்தனர் உரைகாரர். உரைகாரரால் உரைத்துவைக்கப்பட்ட இச் சிமாலிகன் வரலாறு, எப்புராணத்தும் புகலப்படாதது அல்லாமல், அஃது, எத்திரு ஆழ்வாராலும் தம் திருப்பாக்களில் அமைத்து அருளப்படாததுஒன்று என்பது நினைவில் இருத்தற்பாலது.

இவண் கூறப்பட்ட ஏதுவினால் 'சிமாலிகனவனொடு' என்ற பாடம் பிழைப்பாடம் எனவும், அத்தொடர்க்கு உரைகாரரால் எழுதப்பட்ட பொருள் பொருத்தமற்ற பொருள் எனவும் ஆழ்ந்து சூழ்ந்து தேறுக.

இவ்வகை அன்றிக் 'கோமாறியவன்' என்ற தொடர்க்கு 'அரசநீதியின் நீங்கினவன்,—'துரியோதனன்' எனப் பொருள்கொள்ளலும் ஆம். கோமாறி: அரசநீதியின் நீங்கினவன். கோமாறி, பெயர். கோமாறி அவன், இருபெயர் ஒட்டு. பங்கைப்பெறுதற்கு உரிமையுடைய பாண்டவர்க்குப் பங்கைக்கொடாமல் மறுத்தவன். அதாவது, அப்பாண்டவரின் நின்று தான் கவருடலால் கவர்ந்த பொருளை அவர்கட்குத் திருப்பிக்கொடுப்பதாகச் சொல்லியபடி கொடுத்தற்கு மறுத்தவன்—துரியோதனன். ஆதலால், 'கோமாறியவன்' எனபதற்கு, இருபெயர் ஒட்டு, ஆகுபெயரால் அன்மொழித் தொகைப்பெயராகக்கொண்டு துரியோதனன் எனப்பொருள் கோடல் ஆம். கோமாறி, பெயர். கோ, அரசு. மாறி-திரிந்தவன். அரசநீதியின் திரிந்தவன் என்க.

அத் துரியோதனன், திருக்கண்ணபிரானிடம் சென்று அவரைத் தனக்குப் போரிடையே படைத் துணைவராக வரும்படி வேண்டிய காலத்தில் (அவன் அறத்தாற்றின் அகன்றவன் என்ற எண்ணத்தால்.) அத் துரியோதனனுக்குத் துணையாகச் செல்லுதற்குத் தமக்கு விருப்பம் இல்லை ஆயினும், தமக்கு விருப்பம் இருத்தல் போல நடித்து 'யாம் முன்னரே பாண்டவர்க்குப் படைத் துணைவராக இருத்தற்கு ஒப்புக்கொண்டேம். ஆதலால், நீ, எம் முன்னவரையும், கிருதவன்மாவையும், எம்மைச் சார்ந்த ஏனைய சுற்றத்தினரையும் அச்சுற்றத்தினர் படைகளை எல்லாமும் நினக்குப் படைத்துணைவராகக் கூட்டிக்கொண்டுசெல்க' எனக் கூறித் 'தாமும் போரிடையே படையைத் தாங்கி அத்துரியோதனனை- அவன் படைகளை—எதிர்த்துப் போர்செய்வதில்லை என உறுதி கூறி நட்பைக் காட்டி அத்துரியோதனனைத் திருப்பிவிட்டார் திருக்கண்ணபிரானார்' என்பது பண்டைய புராண வரலாறு.

அவ் வரலாற்றினைச் சுட்டியே 'கோமாறி அவனொடு' அரச நீதியின் நீங்கிய துரியோதனனொடு—'தோழமை கொள்ளவும் வல்லாய்' என்றார் எனவும், 'பாரதப்போரிடையே

சயித்திரதனை அர்ச்சுனன் கொல்லும்பொருட்டுத் தம் திருஆழிப்படையை ஏவி ஞாயிற்றினை மறைத்துப் பகலை, முன் இரவாக்கிவைத்தார் (அந்திக்காலம் ஆக்கிவைத்தார்) திருக்கண்ணபிரானர்'' என்பதும் பண்டைய புராண வரலாறு. அவ்வரலாற்றினைச்சுட்டியே இத் திருப்பாவின் இரண்டாவது அடியில் "சாமாறு அவனை நீ எண்ணி" அத்துரியோதனன் சாதற்கு உரிய ஏதுவை நீ ஆய்ந்து "சக்கரத்தால் தலைகொண்டாய்'' (மேகத்தை தஞாயிற்றை—மறைத்தாய்) என்றார் எனவும் பொருள் கொள்ளலாம்.

இப்பொருளுக்குத் தலை: உச்சி, மேகம், ஆகுபெயர்-ஞாயிறு. 'தலை கொண்டாய்-ஞாயிற்றினை மறைத்தாய்' என்பது கருத்து. ஏவலர்—துணைவர்—பெற்ற வெற்றியைத் தலைவரைச் சார்த்திச் சொல்லுதல் போலத் துரியோதனனுடைய ஏவலாளனாகிய—துணைவனாகிய— சயித்திரதன் தலையைக் கொய்தற்கே திருக்கண்ணபிரானரால் ஞாயிறு'' மறைக்கப்பட்டதாயினும், அச்செயல், தலைவனாகிய அத் துரியோதனனின் தோல்வியை எண்ணியே செய்யப்பட்டது எனக் கொள்க. இக் குறிப்பால், அறத்தை வளர்த்தலும், மறத்தைத் தேய்த்தலும் ஆகிய திருக் கண்ணபிரானர்தம், பேரருளையும் பேராற்றலையும் விளக்கிவைத்தார் திரு ஆழ்வார் என்க.

திருக்கண்ணபிரானர், துரியோதனனோடு நட்பைக் காட்டியதில் வன்மை என்பது யாண்டு உளது எனின் அத்துரியோதனன், போரிடையே தனக்குத் துணைவராக வரும்படித் திருக்கண்ணபிரானரை வேண்டிய காலத்தில், அத் துரியோதனனால்பாண்டவர்க்குச் செய்யப்பட்ட வஞ்சனைகளாகிய தீயச்செயல்களையெல்லாம் அவனிடம் எடுத்துச்சொல்லிக் கொடுங்கோலற்குத் துணையாகுதல் மனு வழக்கன்று—சனாதன தருமம் அன்று—என்று கூறித் திருக்கண்ணபிரானர் அத்துரியோதனனைச் சீருமல் அவனை அழித்தற்குத் தக்கதொரு காலததை எதிர்பார்த்துப் பொறுமையுடன் அவனொடுநட்பைஉடையவர்போல ஒழுகிய—நடித்த—நற்செயலே வலிய செயலாம் என்க.

"அலமன்னுமடல் சூரிசங்கம் எடுத்து
அடலாழியினால் அணியா ருருவில்
புலமன்னு வடம்புனை கொங்கையினாள்
பொறைதீர முனாள் அடுவாள் அமரில்

பலமன்னர் படச் சுடர் ஆழியினைப் பகலோன்
மறைப்பப்பணிகொண்டு அணிசேர்
நிலமன்னனுமாய் உலகாண்டவனுக்கிடம்
மாமலையாவது நீர்மலையே" (பெரியதிரு-1-4-3.)
"தாங்காததோர் ஆளரியாய் அவுணன் தனைவீட
முனிந்தவனும் அமரும்
பூங்கோதையர் பொங்கெரி மூழ்க விளைத்தது
அன்றியும் வென்றி கொள்வாள் அமரில்
பாங்காக முனைவரொடு அன்பளவிப்பதிற்றைந்து
இரட்டிப் படைவேந்தர்பட
நீங்காச் செருவில் நிறைகாத்தவனுக்கிடம்
மாமலையாவது நீர்மலையே' (பெரியதிரு-1-4-4.)

இத்திருப்பாக்களின் பொருள்களை நோக்க.

தம் போரிடையே திருமால், தம்மின் திருஆழிப்படையால் தாமே—நேமீ—இரணியாக்கனை அழித்ததும், பாரதப்போரிடையே திருமால் தம்மின், திருஆழிப்படையால் ஞாயிற்றினை மறைத்துத் துரியோதனனைச்-சயித்திரதனை-அழித்ததும் ஆகிய இவ்விருவகை வரலாறுகளுள் எவ்வரலாற்றினைத் திரு ஆழ்வார், இத் திருப்பாவில் அமைத்தருளினர் எனின், இவ்வரலாற்றினைத்தான் என ஒரு வரலாற்றினைச் சுட்டி இன்று துணிந்து சொல்லல் எவர்க்கும் இயலாததொரு செயல், இவ்விருவகை வரலாறுகளும் இத் திருப்பாவின் பொருள்களாகப் பொருந்தும் ஆதலால். இவ்விருவகை வரலாறுகளும் பொருள்களாகப் பொருந்தும் ஆயினும், துரியோதனனின்—சயித்திரதனின்—தோல்வியாய வரலாற்றினைத்தான் திரு ஆழ்வார், இத் திருப்பாவில் அருளி இருப்பர் என்பது என் நம்பிக்கை. என்னை? போரிடையே பொருதானைக் கொல்வான் ஒரு படையைச் செலுத்தற்குப் பலவாக எண்ணி ஆய்ந்து துணிதல் வேண்டா. ஆய்ந்துபாராமலே தக்கதொரு படையைப் பகைவன்மேல் செலுத்தல் கூடும். திரு ஆழிப்படை, திருமாலின் சிறப்புப்படை. ஆதலால், தம் படையைச்செலுத்தற்குத் திருக்கண்ணபிரானார், பலவாக ஆய்ந்து இருப்பர் என்னல் வேண்டா என்பதனை நினைக்க.

'எண்ணிச் சக்கரத்தால் தலைகொண்டாய்' என்ற தொடரில் 'எண்ணி' என்ற சொல் அமைந்து இருத்தலால், எப்பிறப்பில், எதன் பொருட்டு, எதனை எண்ணினார் திருமால்

என்பதே இவண் ஆய்ந்து அறிந்து துணிதற்பாலது. திருக்கண்ணபிரானுர், பாரதப்போரிடையே துரியோதனனுக்கு எதிரிகளாகிய பாண்டவர்க்குத் தாம் துணையாகவரினும், படையைத் தாங்கித் தாம் போர் செய்வதில்லை எனத் துரியோதனனுக்குத் தாம், முன்னர்ச் சொல்லியுள்ள சொல்லையும், இன்று சயித்திரதனை அர்ச்சுனன் கொல்லாவிடில், அவ்வர்ச்சுனன் தீயில் குளித்து இறப்பன். அவன் இறப்பின், அவனுடைய அண்ணன்மார் இருவரும் தம்பிமார் இருவரும் ஆகிய நால்வரும் இறப்பர். அந்நால்வரும் இறந்துபடின், பாஞ்சாலியின் சூளுரை—வஞ்சின உரை—எஞ்சி ஒழிதல் அன்றிப் பழிச்செயலை மேற்கொண்ட துரியோதனனுக்கே இப்பார் முற்றும் உரித்தாகும். உரித்தானல், அத்துரியோதனன், மேலும் பலவகையான இன்னல்களை இப்பாரில் உள்ளார்க்கு இழைப்பன். அதனுல், சனதன தருமம்—மக்கள் நல் ஒழுக்கம்—முற்றும் அழியும். நல்ல ஒழுக்கம் அழியுமானல், புண்ணியத்தின்நெறி—நல்லற நெறி—கெடும். பாபத்தின் நெறி—அல்லற நெறி—வளரும். வேத நெறியும்—நால் வழக்கும்—மறையும் என்பனவாகிய இவற்றை எண்ணித் துணிந்து திருக்கண்ணபிரானுர், தம்மின் சக்கரத்தால்—திருஆழிப்படையால்—தலைகொண்டார்—(மேகத்தை-ஞாயிற்றை—மறைத்தார்) என்க.

பாரதப்போரிடையே, தாம், படையை எடுப்பதில்லை எனத் துரியோதனனிடம் சொல்லியவரைத் திரு ஆழிப் படையை ஏவினர் என்னலாமோ எனின்; அவர், தம்மின் திரு ஆழிப்படையைத் தொட்டு எடுத்திலர். அதனை ஏவி எவரையும் வதைத்திலர் என்பனவற்றையும், துரியோதனன், திருக்கண்ணபிரானுரிடம் சென்று அவரைப் பாரதப்போரிடையே தனக்குத் துணைவராக வரும்படி வேண்டிய காலத்தில், அவர், அத்துரியோதனனிடம், தாம், முன்னரே பாண்டவர்க்குத் துணைவராக வருவதாக ஒப்புக்கொண்டேம் எனச் சொல்லி இருத்தலையும் நினைக்க.

திருமால், (வெள்ளிய பன்றி உருவினராய்த்) தாமே, தம்மின் திருஆழிப்படையால் இரணியாக்கனை அழித்ததும், திருக்கண்ணபிரானுர் ஆகிய திருப்பிறப்பில் பாரதப்போரிடையே தம்மின் திருஆழிப்படையால்

மேகத்தை - ஞாயிற்றை—மறைத்து அர்ச்சுனனால் சயத்திரதனை த்-துரியோதனனை-அழித்ததும் ஆகிய அவ்விரு வகை வரலாறுகளுள், பாரதப்போரிடையே திருக் கண்ணபிரானார், தம்மின் திரு ஆழிப் படையால் ஞாயிற்றை மறைத்த வரலாற்றினைத்தான் திருஆழ்வார், இத் திருப்பாவில் அமைத்தருளினர் என்பதற்குத் திவ்யப் பிரபந்தத்துள் வேறு உட்சான்று ஒன்று உண்டோ எனின், உண்டு· பலவும் உண்டு. என்னை? இத் திருப்பாவை அருளிய திரு ஆழ்வாரும, ஏனைய திருஆழ்வார் களும் தம்தம் திவ்யப்பிரபந்தத்துள் திருப்பாக்கள் பல வற்றுள் திருக்கண்ணபிரானாரின் திருப்பிறப்பின்—திரு அவதாரத்தின்—வரலாற்றினையே பெரிதும் பலவாகப் பாராட்டி அருளி இருத்தலே தக்க சான்றாகும்.அன்றி,

'பற்றலர் வீயக் கோல்கொண்டு பார்த்தன்தன்
தேர்முன் நின்றானை' (பெரிய திரு-2-3-1.)

'சந்தமல்கு குழலாள் அலக்கண் நூற்றுவர்தம்
பெண்டிரும் எய்தி நூலிழப்ப
இந்திரன் சிறுவன் தேர்முன் நின்றானை' (பெரிய திரு-2-3-6)

'ஐவர்க்கா அமரிலுய்த்த தேராளன்' (பெரிய திரு-5-5-7)

'பந்தார் விரலாள் பாஞ்சாலி கூந்தல் முடிக்கப் பாரதத்து
கந்தார் களிற்றுக் கழல் மன்னா கலங்கச்
சங்கம் வாய்வைத்தான்' (பெரிய திரு-6-7-8.)

'பன்னியபாரம் பார்மகட்கு ஒழிய பாரத மாபெரும் போரில்
மன்னர்கள் மடிய மணி நெடுந் திண்டேர்
மைத்துனர்க்கு உய்த்த மாயோன்' (பெரிய திரு-9-1-9)

'பார்த்தனுக்கு அன்று அருளிப் பாரதத்து ஒரு
தேர் முன் நின்று காத்தவன் தன்னை' (பெரிய திரு-9-9-8)

'ஐவர்கட்காக வெஞ்சமத்து அன்று தேர்கடவியபெருமான்' (திருவாய்-3-6-10)

எனத், திவ்யப் பிரபந்தத்துள், திருக்கண்ணபிரானார், பாரதப்போரிடையே பார்த்தனுக்குத் தேரை உய்த்த வரலாறு பலவாகப் பாராட்டப்பட்டிருத்தலும் தக்க சான்றாகும். அன்றியும்,

"நாழிகைக் கூறிட்டுக் காத்து நின்ற அரசர்கள் தம் முகப்பே
நாழிகை போகப் படைபொருதவன் தேவகிதன் சிறுவன்
ஆழி கொண்டு அன்று இரவி மறைப்பச் சயத்திரதன் தலையைப்
பாழிலுருளப் படை பொருதவன் பக்கமே கண்டாருளர்" (பெரியாழ்-4-1-8)

'அலமன்னு மடல் சுரிசங்கம் எடுத்து அடலாழியினால்
அணியா ருருவில்

புல மன்னு வடம்புனை கொங்கையினாள்
பொறை நீரமுனாள் அடுவாளமரில்

பலமன்னர்படச் சுடராழியினைப்
பகலோன் மறையப் பணி கொண்டு அணிசேர்

நிலமன்னனுமாய் உலகாண்டவ னுக்கிடம்
மாமலையாவது நீர்மலையே' (பெரிய திரு-2-4-3.)

'வெள்ளைப் புரவித் தேர் விசையற்காய் விறல் வியூகம்
விள்ள சிந்துக்கோன் விழ வூர்ந்தவிமலனூர்' (பெரியதிரு. 6-5-8)

'பாழியால் மிக்க பார்த்தனுக் கருளிப் பகலவன் ஒளிகெடப் பகலே
ஆழியாலன்று அங்கு ஆழியை மறைத்தான்
அரங்கமாநகர் அமர்ந்தானே' (பெரியதிரு. 5-7-8.)

என்று திருமங்கை மன்னர் ஆகிய திரு ஆழ்வாரும்,

'மயங்க வலம்புரி வாய் வைத்து வானத்து
இயங்கும் எறிகதிரோன் தன்னை—முயங்கு அமருள்
தேர் ஆழியால் மறைத்தது என் நீ திருமாலே
போராழிக் கையாய் பொருது.' (முதல் திரு அந்தாதி. 8.)

எனத் திருப்பொய்கை ஆழ்வாரும், பாரதப் போரிடையே திருக்கண்ணபிரானார் தம்திரு ஆழிப் படையால் ஞாயிற்றினை மறைத்த வரலாற்றினையேவிளக்கமாக அமைத்தருளி இருத்தலும் சான்றாகும்.

'தலைகொண்டாய்' என்பதில் தலை, மேகத்தை—ஞாயிற்றைச்-சுட்டிற்று என்னாமல் சிரசையே—மனிதன் உறுப்பாகிய தலையையே-சுட்டிற்று எனக் கொண்டால், இரணியாக்கன்வரலாறும், இத்திருப்பாவிற்குப் பொருளாகப் பொருந்தும்-ஆதலால், இத்திருப்பாவிற்குப் பொருளென இவ்வாய்வு உரையுள்கூறப்பட்ட இரண்ணியாக்கனதூஉம் சயத்திரதனதூஉம் ஆகியவரலாறுகளாகிய அவ்விருவகை வரலாறுகளை அன்றிப் பண்டைய புராணங்களுள் கூறப்பட்டதாக இவண் பொருந்தியதொரு வரலாற்றினை—வேறுஒரு வரலாற்றினை-எவரேனும் கூறினும் கொள்ளலாம். இவ்வகை அன்றிப் பண்டைய புராணங்களுள் கூறப்படாத வரலாறு ஒன்றனை ஒருவர், தாமாகக் கற்பித்துக் கழறின், அவ் வரலாறு கொள்ளற்பாலது ஒன்று அன்று. அது, புறக்கணித்துத் தள்ளற்பாலது ஒன்றே. அதுபோலவே இத் திருப்பாவிற்குத் திவ்யப் பிரபந்த உரைகாரரால் பொருளெனச் சொல்லப்பட்ட **'சிமாலிகன்'** வரலாறும் புறக்கணித்துத் தள்ளற்பாலது ஒன்றே. அது, பண்டைய புராணங்களுள் கூறப்படாதது ஆதலால். அவ்வுரைகாரரால் கற்பித்துச் சொல்லப்பட்டது ஆதலால்.

இவ்வாய்வு உரையிடையே கூறப்பட்ட ஏதுக்களால் இத்திருப்பாவில் செறிந்த மோனைத்தொடை முரணுகிய பிழையை அறியாதவராய்ப் பண்டைய புராண வரலாற்றினை உணராதவராய்ச் **'சிமாலிகன்'** வரலாறுஎன என்றும் நிகழாதது ஆகிய-எப்புராணத்தும் புகலப் படாதது ஆகிய—புதிய வரலாறு ஒன்றனை உரைகாரர், தாமாகக் கற்பித்துக் கழறி, இவ் வரலாறுதான், இத் திருப்பாவிற்

குப் பொருளென உரை எழுதி வைத்தனர். ஆதலால், அவ்வுரைகாசர் யாவரும், (திவ்யார்த்த தீபிகை உரைகாரரும்) திரு ஆழ்வார், தம் திருப்பாவில் அமைத்தருளிய பண்டைய புராண வரலாற்றினை உள்ளபடி உணராதவராயினர் என்பதனை அறிக. இது கிடக்க, (உ)

## முதல் ஆய்வு உரை: கிளை–3.

"அண்டக் குலத்துக்கு அதிபதியாகி அசுர ரிராக்கதரை
இண்டக் குலத்தை எடுத்துக் களைந்த இருடிகேசன் தனக்குத்
தொண்டக் குலத்தில் உள்ளீர் வந்து அடிதொழுது
ஆயிரம் நாமம் சொல்லிப்
பண்டைக் குலத்தைத் தவிர்ந்து பல்லாண்டு
பல்லாயிரத்தாண்டு என்மினே."[1] (திருப்பல்லா-செய். 5.)

இத்திருப்பாவிற்குத் திவ்யார்த்த தீபிகை உரை:—"அண்டங்களின்' திரளுக்கு-நியந்தாவாய்-அசுரர்களும்-இராக்ஷஸர்களுமாகிற-சண்டாளர்களின் கூட்டத்தை-சேரத்திரட்டி-நிர்மூலமாகப் போக்கின—ஹ்ருஷிகேசனுக்கு (எம்பெருமானுக்கு)-அடிமை செய்யப் பிறந்தவர்களின் வம்சத்திலே-பிறந்துள்ள நீங்கள்—(எங்கள் திரளிலே) வந்து—எம்பெருமான் திருவடிகளை—ஸேவித்து—(அவனது) ஸஹஸ்ர நாமங்களை-அநுஸந்தித்து-பகவத் வைமுக்ய மாகிற பூர்வ ஜன்மத்தினின்றும்-ஒழிந்து-பலகாலும் மங்களாசாஸநம் பண்ணுங்கோள்" என்பது.

இப்பொருள், திவ்யார்த்த தீபிகை உரை நூலுள் உள்ளது. இப்பொருள், கவிக்கருத்தன்று என்பதனையும், போலிப் பொருள் என்பதனையும் மேல்வரு மாற்றால் அறிக.

இத்திருப்பாவின் உண்மைப்பொருள்: 'அண்டக்குலத்துக்கு—ஆயர் குலத்துக்கு- அதிபதியாகியவரும்; அசுரர்குலத்தையும் இராக்கதர்குலத்தையும்; இண்டக்குலத்தையும்—மன்னர்குடியையும்-எடுத்துக்களைந்த சாதுக்களாகியதேவ மனுஷ்யரின்னின்றுபிரித்து அழித்தருளிய இருடிகேசராகிய திருக்கண்ணபிரானுர்க்குத் தொண்டர் குலத்தில் உள்ளீர் வந்து—திருத்தொண்டராகிய திருக்கூட்டத்தாரைச் சார்ந்திருப்பீர்! யாவிரும் திரண்டு வந்து; அவரின் திருத்தாள்களைத் தொழுது; அவருடைய திருப்பெயர்கள் பலவற்றையும் சொல்லிப் புகழ்ந்து; பல்லாண்டு வாழ்க! பல்லாயிரத்தாண்டு வாழ்க! என்று வாழ்த்துமின்

வாழ்த்துவீராயின், நுங்களைப் பற்றியுள்ள; பண்டக்குலத்தை (மாடு மனைவி மக்கள் சுற்றம் என்னும்)பந்தம்ஆகிய-பற்ருகிய கூட்டத்தைத் தவிர்ந்து—நீங்கித் திருமாலின் திருத்தாள களைப் பெறுதலாகிய நற்பயனைப் பெறுவீர்' என்பது.

குறிப்புரை:—அண்டக்குலம: ஆயர்குலம். இண்டக் குலம்: இந்த்ரகுலம்—மன்னர்குடி. 'பண்டைக்குலம்' என்பது பிழைப்பாடம். அது, 'பண்டக்குலம்' என இருத்தற்பாலது. பண்டக்குலம்: பந்தக்குலம என்பதன் திரிபு. பந்தக் குலம்: பற்ருகிய கூட்டம். 'பூர்வ ஜன்மம்' என்பது கவிக் கருத்தன்று. அது, திவ்யார்த்ததீபிகை உரைகாரரின் கருத்து.

வாழ்க என்பதும், நற்பயனைப் பெறுவீர் என்பதும் சொல் எச்சத்தின் பாத்தியாய்க் கொள்ளப்பட்டன. ஆரிஷப்பாக்களில் சொல் எச்சங்கள் பலவாகக் கிடத்தல் வழக்கே. திருச்சைவ சமயத்தவர்தம், திருமந்திரம என்னும் திருநூலே சாலச்சான்ரும். (யாப்பிலக்கண நூலாராலும் ஒப்புக்கொள்ளப்பட்ட விதியாம், அதிபதி ஆகிய இருடிகேசன் என ஒரு வினை முடிபும், களைந்த இருடிகேசன் என மற்றும் ஒரு வினை முடியும கொளக. 'ஆயிரம்' நாமம் சொல்லிப் பல்லாயிரத்தாண்டு என்மின்' என்றது; கேசவன் பல்லாயிரத்தாண்டு வாழ்க! மாதவன் பல்லாயிரத்தாண்டு வாழ்க! கோவிந்தன் பல்லாயிரத் தாண்டு வாழ்க! பாண்டவர் தூதன் பல்லாயிரத்தாண்டு வாழ்க! படியை உண்டு உமிழ்ந்த பச்சைவண்ணன் பல்லாயிரத்தாண்டு வாழ்க! என்பனபோலத் திருக்கண்ணபிரானின்—திருமாலின்—ஆயிரம் திருப்பெயர்களையும சொல்லுங்கால்—சொல்லுந்தோறும—ஒவ்வொரு பெயரின் ஈற்றிலும். 'பல்லாலாயிரத்தாண்டு'வாழ்க! பல்லாயிரத்தாண்டு வாழ்க!' எனக் கூட்டிச் சொல்லவேண்டும் என்பது குறிப்பு. அக் குறிப்பை விதியாகக் கொள்ளுக. அக் குறிப்பை—அவ் விதியை—உணர்ந்திலர் உரைகாரர் என்பதனை, அவர் உரையால் அறிக. அவர் உணராமைக் குரிய ஏது என்னை எனின், செந்தமிழ் ஆசிரியர் விதித்த சொல் எச்சம் என்னும் விதியை உணராமையே ஆகும்.

இவ்வாய்வு உரையுள் மேலே கூறப்பட்ட பொருளை ஏதுவாகக் கொண்டு திரு ஆழ்வார், இத் திருப்பாவில் அமைத்தருளிய பண்டைய புராண வரலாற்றினைத் திவ்

யார்த்த தீபிகை உரைகாரர் உள்ளபடி உணராதவர் ஆயினர். திரிபாக உணர்ந்தவராயினர் என்பதனை ஆழ்ந்து சூழ்ந்து தெளிக. பொருள் வேற்றுமையையும் உணர்க.

இத் திருப்பாவில் அமைந்துள்ள 'இண்டக்குலம்' என்ற தொடர்க்குச் 'சண்டாளர்களின் கூட்டம்' எனப் பொருள் எழுதி வைத்தார், திவ்யார்த்த தீபிகை உரைகாரர். அவர், எழுதி வைத்த அப்பொருள் கவிக் கருத்து அன்று ஆதலால், அப்பொருள், போலிப் பொருள் எனப் புறக்கணித்தற் பாலதே. மற்றென்னை? 'இண்டக்குலம்' என்பதற்கு 'இந்த்ரகுலம்-மன்னர்குலம்' என்பதே கவியால் கருதப்பட்ட பொருள். என்னை? 'இந்த்ர குலம்' என்னும் வடமொழித் தொடரே 'இண்டக்குலம்' எனத் தற்பவத்தின் பாத்தியாய்த் தமிழ் மொழியால் திரிபுற்றுளது ஆதலால், 'இந்த்ர குலம்-இண்டகுலம்' என்பதன் பொருள்: 'அரசர்குலம்-மன்னர்குடி-என்பதே கவியால் கருதப்பட்ட பொருள். சண்டாளர் குலம் என்பது கவியால் கருதப்பட்ட பொருளன்று. ஆதலால், ஆயிரம் நாமம் சொல்லிப் 'பல்லாண்டு பல்லாயிரத்தாண்டு என்மின்' என்ற கவியின் கருத்தை உணர்ந்திலர் என்பதனையும் உய்த்துணர்க. என்னால் எழுதப்பட்ட பொருளைப் பார்க்க. திருமால், பரசுராமரான திருப்பிறப்பில்-திரு அவதாரத்தில் - கார்த்தவீரிய ஆர்ச்சுனன் பொருட்டுக் கொண்ட செற்றத்தால் 'அரசர்குலத்தை-மன்னர்குடியை-இருபத்தொரு முறை அழித்தார் என்பது பண்டைய புராண வரலாறு. அவ்வரலாற்றினையே இத்திருப்பாவில் அமைத்து 'இண்டக்குலத்தைஎடுத்துக் களைந்த இருடிகேசன்' என அருளினர் திரு ஆழ்வார் என்பதனைத் திவ்யப் பிரபந்தத்தின் உரைகாரருள் ஒருவரும் உணர்ந்திலர் போலும். ஆதலால், திவ்யார்த்த தீபிகை உரைகாரரும் உணர்ந்திலர். என்னை? இத்திருப்பாவிற்கு அவ்வுரைகாரர் எழுதிவைத்த பொருளைக் கண்டு தெளிக. தெளியுங்கால்,

''மின்றிலங்கு முடியினாய் இருபத்தோர்கால் அரசுகளை கட்ட
வென்றி நீள் மழுவா'' (திருவாய் —6-2-10)

'மன் அடங்க மழு வலங்கைக் கொண்ட இராம நம்பி' (பெரியாழ்—5-4-6),

வென்றிமா மழுவேந்தி முன் மண்மிசை
மன்னரை மூவெழுகால் கொன்ற தேவ' (பெரிய திரு—5-3-1),

வாழ்த்துவீராயின், நுங்களைப் பற்றியுள்ள; பண்டக்குலத்தை (மாடு மனைவி மக்கள் சுற்றம் என்னும்)பந்தம்ஆகிய-பற்றுகிய கூட்டத்தைத் தவிர்ந்து—நீங்கித் திருமாலின் திருத்தாள களைப் பெறுதலாகிய நற்பயனைப் பெறுவீர்' என்பது.

குறிப்புரை:—அண்டக்குலம: ஆயர்குலம். இண்டக் குலம்: இந்த்ரகுலம்—மன்னர்குடி. 'பண்டைக்குலம்' என்பது பிழைப்பாடம். அது, 'பண்டக்குலம்' என இருத்தற்பாலது. பண்டக்குலம்: பந்தக்குலம என்பதன் திரிபு. பந்தக் குலம்: பற்றுகிய கூட்டம். 'பூர்வ ஜன்மம்' என்பது கவிக் கருத்தன்று. அது, திவ்யார்த்ததீபிகை உரைகாரரின் கருத்து.

வாழ்க என்பதும், நற்பயனைப் பெறுவீர் என்பதும் சொல் எச்சத்தின் பாத்தியாய்க் கொள்ளப்பட்டன. ஆரி ஷப்பாக்களில் சொல் எச்சங்கள் பலவாகக் கிடத்தல் வழக்கே. திருச்சைவ சமயத்தவர்தம, திருமந்திரம என்னும் திருநூலே சாலச்சான்றும். (யாப்பிலக்கண நூலாராலும் ஒப்புக்கொள்ளப்பட்ட விதியாம், அதிபதி ஆகிய இருடிகேசன் என ஒரு வினை முடிபும், களைந்த இருடிகேசன் என மற்றும் ஒரு வினை முடியும கொளக. 'ஆயிரம்' நாமம் சொல்லிப் பல்லாயிரத்தாண்டு என்மின்' என்றது; கேசவன் பல்லாயிரத்தாண்டு வாழ்க! மாதவன் பல்லாயிரத்தாண்டு வாழ்க! கோவிந்தன் பல்லாயிரத் தாண்டு வாழ்க! பாண்டவர் தூதன் பல்லாயிரத்தாண்டு வாழ்க! படியை உண்டு உமிழ்ந்த பச்சைவண்ணன் பல்லாயிரத்தாண்டு வாழ்க! என்பனபோலத் திருக்கண்ணபிரானின்—திருமாலின்—ஆயிரம் திருப்பெயர்களையும் சொல்லுங்கால்—சொல்லுந்தோறும்—ஒவ்வொரு பெயரின் ஈற்றிலும். 'பல்லாலாயிரத்தாண்டு'வாழ்க! பல்லாயிரத்தாண்டு வாழ்க!' எனக் கூட்டிச் சொல்லவேண்டும் என்பது குறிப்பு. அக் குறிப்பை விதியாகக் கொள்ளுக. அக் குறிப்பை—அவ் விதியை—உணர்ந்திலர் உரைகாரர் என்பதனை, அவர் உரையால் அறிக. அவர் உணராமைக் குரிய ஏது என்னை எனின், செந்தமிழ் ஆசிரியர் விதித்த சொல் எச்சம் என்னும் விதியை உணராமையே ஆகும்.

இவ்வாய்வு உரையுள் மேலே கூறப்பட்ட பொருளை ஏதுவாகக் கொண்டு திரு ஆழ்வார், இத் திருப்பாவில் அமைத்தருளிய பண்டைய புராண வரலாற்றினைத் திவ்

யார்த்த தீபிகை உரைகாரர் உள்ளபடி உணராதவர் ஆயினர். திரிபாக உணர்ந்தவராயினர் என்பதனை ஆழ்ந்து சூழ்ந்து தெளிக. பொருள் வேற்றுமையையும் உணர்க.

இத் திருப்பாவில் அமைந்துள்ள 'இண்டக்குலம்' என்ற தொடர்க்குச் 'சண்டாளர்களின் கூட்டம்' எனப் பொருள் எழுதி வைத்தார், திவ்யார்த்த தீபிகை உரைகாரர். அவர், எழுதி வைத்த அப்பொருள் கவிக் கருத்து அன்று ஆதலால், அப்பொருள், போலிப் பொருள் எனப் புறக்கணித்தற் பாலதே. மற்றென்னை? 'இண்டக்குலம்' என்பதற்கு 'இந்த்ரகுலம்-மன்னர்குலம்' என்பதே கவியால் கருதப்பட்ட பொருள். என்னை? 'இந்த்ர குலம்' என்னும் வடமொழித் தொடரே 'இண்டக்குலம்' எனத் தற்பவத்தின் பாத்தியாய்த் தமிழ் மொழியால் திரிபுற்றுளது. ஆதலால், 'இந்த்ர குலம்-இண்டகுலம்' என்பதன் பொருள்: 'அரசர்குலம்-மன்னர்குடி-என்பதே கவியால் கருதப்பட்ட பொருள். சண்டாளர் குலம் என்பது கவியால் கருதப்பட்ட பொருளன்று. ஆதலால், ஆயிரம் நாமம் சொல்லிப் 'பல்லாண்டு பல்லாயிரத்தாண்டு என்மின' என்ற கவியின் கருத்தை உணர்ந்திலர் என்பதனையும் உய்த்துணர்க. என்னால் எழுதப்பட்ட பொருளைப் பார்க்க. திருமால், பரசுராமரான திருப்பிறப்பில்-திரு அவதாரத்தில் - கார்த்தவீரிய ஆர்ச்சுனன் பொருட்டுக் கொண்ட செற்றத்தால் 'அரசர்குலத்தை-மன்னர்குடியை-இருபத்தொரு முறை அழித்தார் என்பது பண்டைய புராண வரலாறு. அவ்வரலாற்றினையே இத்திருப்பாவில் அமைத்து 'இண்டக்குலத்தைஎடுத்துக் களைந்த இருடிகேசன்' என அருளினர் திரு ஆழ்வார் என்பதனைத் திவ்யப் பிரபந்தத்தின் உரைகாரருள் ஒருவரும் உணர்ந்திலர் போலும். ஆதலால், திவ்யார்த்த தீபிகை உரைகாரரும் உணர்ந்திலர். என்னை? இத்திருப்பாவிற்கு அவ்வுரைகாரர் எழுதிவைத்த பொருளைக் கண்டு தெளிக. தெளியுங்கால்,

''மின்றிலங்கு முடியினய் இருபத்தோர்கால்அரசுகளை கட்ட
வென்றி நீள் மழுவா'' (திருவாய் —6-2-10)

'மன் அடங்க மழு வலங்கைக் கொண்ட இராம நம்பி' (பெரியாழ்—5-4-6),

வென்றிமா மழுவேந்தி முன் மண்மிசை
மன்னரை மூவேழுகால் கொன்ற தேவ' (பெரிய திரு—5-3-1),

'முனியாய் வந்து மூவெழுகால் முடிசேர் மன்னர் உடல் துணிய
தனியாய் மழுவின் படைஆண்ட தாரார்தோளான்' (பெரியதிரு—6-7-2)
மன் அஞ்ச ஆயிரந் தோள் மழுவினுல் துணித்தமைந்தா' ,, (—7-2-7)
கோவானுர் மடியக் கொலையார் மழுகொண்டருளும்
மூவா வானவனே' (பெரியதிரு—7-6-2)
'மழுவினுல் மன்னர் ஆருயிர் வௌவிய மைந்தன், (பெரியதிரு—8-5-8)
'மழுவினுல் அவனி அரசை மூவெழுகால்
மணிமுடி பொடி படுத்து' (பெரியதிரு—9-1-6)
'ஆழியம் திண் தேர் அரசர் வந்து இரைஞ்ச
அலைகடல் உலகம் முன் ஆண்ட
பாழியந்தோள் ஓர் ஆயிரம் விழப்
படைமழு பற்றிய வலியோய் (பெரியதிரு—10-9-7)
'இருநில மனனர் தம்மை இருநாலும் எட்டும்
ஒரு நாலும் ஒன்றும் உடனே
செருநுதலோடு போகி அவராவி மங்க
மழுவாளில் வென்ற திறலோன்' (பெரியதிரு—11—4—6)
என்று அருளிய ஆழ்வார்கள் தம், திருக்கருத்துக்களையும் நினைக்க.

"இந்திரன் பிரமன் என்றிவர்கள் எண்ணில்
பல் குணங்களே இயற்ற
தந்தையும் தாயும் மக்களும் மிக்க சுற்றமும்
சுற்றிநின்று அகலாப்
பந்தமும், பந்தம் அறுப்பதோர் மருந்தும்
பான்மையும், பல்லுயிர்களெல்லாம்
அந்தமும் வாழ்வு மாய எம்பெருமான்
அரங்கமா நகரமர்ந்தானே" (பெரிய திரு-5-7-2)
இத்திருப்பாவின் பொருளையும் நினைக்க.

இத்திருபாவில் 'இந்திரகுலம்' என்னும் வடமொழித் தொடரே தற்பவத்தின் பாத்தியாய்த் தமிழ் மொழியால் 'இண்டக்குலம்' எனத் திரிபுற்றுளது என்பதற்கு அத் தொடரை அடுத்து 'அசுரர் இராக்கதரை' என்ற தொடரைச் சேர்த்துவைத்துள்ள அமைப்பே சாலச் சான்ருகும. இவண் காட்டப்பட்ட இவ் வேதுக்களால் இண்டக்குலம் என்பதற்கு மன்னர் குடி—அரசர் குலம்—என்பதே கவிக் கருத்தாகும் எனவும், 'சண்டாளர் கூட்டம்' என்பது கவிக்கருத்து அன்று எனவும் தெளிக. 'அசுரர் குலத்தையே' 'சண்டாளர் குலம்' என்னலாம். அவரின் கொடுஞ்செயலின் பொருட்டு. 'சண்டாளர் கூட்டம் எனக் கொடுஞ்செயலாளரை அன்றித் தனியாக ஒருவகையார்-வேறு ஒரு கூட்டத்தார்—இல்லை ஆதலால். 'இண்டக்

குலம்' என்பதற்குச் 'சண்டாளர் கூட்டம்' என்ற இக் கருத்துச் செந்தமிழின் செந்நெறியைச் செவ்வியின் அறியாத 'திவ்யபிரபந்த திவ்யார்த்த தீபிகை' உரைகாரருடைய கருத்தாம். அவ்வுரைகாரர், செந்தமிழின் செந்நெறியை செவ்விதின் அறிந்திருப்பின், 'இண்டக்குலம்' என்பதற்குக் கவியின் கருத்தாகிய இந்த்ரர்குலம்—அரசர்குலம், மன்னர்குடி—என்பதே பொருளென எழுதிவைத்திருப்பர்.

'இந்த்ர' என்பது வடமொழியுள் தலைமைச்சிறப்பைச் சுட்டும் ஒரு பெயர். அச்சிறப்பைத் 'தேவ இந்த்ரன், அசுர இந்த்ரன், தானவ இந்த்ரன், நர இந்த்ரன், யதி இந்த்ரன், முனி இந்த்ரன், வானர இந்த்ரன், நாக இந்த்ரன், பவண இந்த்ரன், தரண இந்த்ரன், கஜ இந்த்ரன், மிருக இந்த்ரன்' என்னும் வழக்கால் அறிக. மற்றும் 'இந்த்ரன்' என்பதற்கு 'அரசன்—மன்னன்' என்னும் பொருள் சுட்டி;

'அந்தணன் உலகமூன்றும் ஆதியின் அறத்தின் ஆற்றல்
தந்தவன் புக்கான் தவநெறி உணர்ந்து தக்கோய்
இந்திரன் கருமம் ஆற்றும் இறைவன் நீ இயம்பு தூது'
வந்தனென் என்றபின்புங் கொல்லியோ மறைகள் வல்லாய்
(ராமா-பிணிவீ-112.)

என்ற திருமால் சமயத்தவரும், செந்தமிழரும் ஆகிய பெரும்பேராசிரியர் திருக்கம்பர்தம் கருத்தாலும் அறிக. 'இந்த்ரா' என்னும் வடமொழி, பெரும்பாலும் அரசரையே-மன்னரையே—சுட்டுவதாகும். ஆதலால், 'இந்த்ரகுலம்' என்னும் வடமொழித்தொடரே இத்திருப்பாவில் 'இண்டக்குலம்' எனத் தற்பவத்தின் பாத்தியாய்த் தமிழ்மொழியால் திரிபுற்று 'அரசர் குலம்—மன்னர் குடி' என்னும் பொருள் சுட்டிற்று எனக் கோடலே கவிக்கருத்தாகும். இப்பொருள், பண்டைய புராண வரலாற்றுக்கும் முரணின்றிப் பொருந்தி இருத்தலை அறிக.(இண்டக்குலம் என்பதற்குப் பொருளெனத் 'திவ்யப் பிரபந்த திவ்யார்த்த தீபிகை உரைகாரரால் எழுதிவைக்கப்பட்ட 'சண்டாளர் கூட்டம் என்பது எவ்வாசிரியராலும் எந் நூலகத்தும் ஆளப்படாத பொருள் என்பதனையும் நினைக்க.)

'இந்த்ர' என்னும் வடமொழி 'இண்ட' எனத் தமிழ் மொழியால் திரிபுறுமோ எனின், திரிபுறும். திரிபுறுதல் ஒழுக்கே. என்னை? சமணர்தம் கடவுள்ராகிய திரு அருக தீர்த்தகரர்தம் பெயர்களுள் ஒன்றாகிய 'பற்றில்லாதவன்'

என்னும் பொருள் சுட்டும். '**நிர்க்ரந்தன்**' என்னும் வட மொழியாலாய பெயர் '**நிக்கந்தன்**' என்னும்பெயராகி உடையில்லாதவன் 'என்னும் பொருள் சுட்டி' **நிகண்டன்**' எனத் திரிபுற்றிருத்தலை நினைக்க. (மணிமேகலை 27–167.) இப் பெயரில் 'ந்த' 'ண்ட' ஆகி இருத்தலை நினைக்க.

மாந்தர்தம் **கழுத்து** என்னும் பொருள் சுட்டும் '**கந்**ரா என்னும் வடமொழியின் திரிபு மொழியாகிய '**கந்தரம்**' என்னும் பெயர், '**கண்டம்**' எனத் திரிபுற்றிருத்தலை மேல்வரு மாற்றால் அறிக.

'நீலகண்டனும' (பெரியாழ்–4–1–5.)
'**கண்டம்** அடைப்ப' (பெரியாழ்–4–4–5.)
'நீலார் **கண்டத்** தம்மானும்' (திருவாய்–6–10–8.)

மற்று, கீதம்–பண்ணொலி–என்னும் பொருள்சுட்டும் '**சந்தம்**' என்னும் வடமொழியின் திரிபுப்பெயர், '**சண்டம்**'எனத் திரிபுற்றிருத்தலும் சான்றாம்.

'**சந்த**மாமறைதந்தவன்' (சம்பந்தர் புராணம்–372.)
'**சண்ட** மறை' (திருவிளை–புரா–நரிபரி–76)

மற்று, திருமாலின் திருப்பதியின் பெயராகிய 'வைகுண்டம்' என்னும் வடமொழிப் பெயரில் ('ண்ட' 'ந்த' வாகி) 'வைகுந்தம்' எனத் திரிபுற்றிருத்தலையும் நினைக்க.

'வைகுந்தக் குட்டன்' (பெரியாழ்–3–6–3.)
'வைகுந்தநாதன்' (திருவாய்–7–9–7,)

மற்று, செந்தமிழ் மொழியுள்ளும் 'முகந்து' என்னும் பெயரில் 'ந்து'–'ண்டு' வாகி 'மொண்டு' எனத் திரிபுற்றிருத்தலை மேல் வரு மாற்றால் அறிக.

'நின்ற செந்தீ '**மோண்டு**' (பெரியதிரு-1-7-5.)
'துள்ளு நீர்'**மோண்டு**' கொண்டு'(பெரியதிரு-9-10-3)
'புனல் '**மோண்டு**' இடும்' (ராமா-நகர் நீங்கு–83.)

மற்று, 'மொண்டேன், மொண்டனை, மொண்டான்' என்னும் முகத்தல் தொழிலைச்சுட்டும், வினைமுற்றுச் சொற்களில் 'ந்த' 'ண்ட' என மரூஉவின் பாத்தியாய்த் திரிபுற்றிருத்தலை உலக வழக்கிலும் அறிக. 'முகந்திடும், முகந்தேன், முகந்தனை முகந்தான, என்பன, இயற்சொற்கள்.

மற்று, வடமொழியுள் 'இந்த்ரன், என்னும் பெயர்' அரசன் என்னும் பொருளைச் சுட்டுவதுபோலப் பிராக்ருத

மொழியின் 'இந்த' என்னும் பெயர், 'இண்ட' எனத் திரிபுற்று அரசர் என்னும் பொருள் சுட்டிற்று என்னலும். ஆம் என்னை?

*"இந்த சதவந்தியாணம் திஹிவண
ஹித மதுர விஸத வக்காணம்
அந்தா தித குணாணம் ணமோ ஜிணாணம்
ஜிதஜவாணம்"

இச்சுலோகம், ஜைனசமயத்தவர்தம் பிராக்ருத மொழியாலாய 'ப்ராப்ருத திரயம்' என்னும் நூலுள் 'பஞ்சாஸ்தி காயம்' என்னும் பகுதியின் மங்கள சுலோகம். இந்த சுலோகத்திற்கு நேர் சம்ஸ்கிருத சுலோகம்:

"இந்த்ர சதவந்தி தேப்யஹ திரிபுவந
ஹித மதுர விஸத வாக்யாநாம்
அந்தாதித குணேப்யாஹ நமோ
ஜிநேப்யஹ ஜிதஜவேப் யஹ.' என்பது.

இதன் பொருள்: 'நூறு இந்திரர்களால் வணங்கப் பட்டவனும், மூன்று உலகங்கட்கும் நன்மையையும், இனிமையையும்முன்னொடுபின் முரண் இல்லாமல் விளக்கமான சொற்களால் சொல்லியவனும், குற்றங்கட்கு அப்பாற் பட்ட குணங்களை உடையவனும், பிறப்பாகிய பகையை வென்றவனும் ஆகிய ஸ்ரீ ஜிநபகவனை நமஸ்கரிக்கின் றேன்' **என்பது.

இவண் மேலே காட்டப்பட்ட ப்ராக்ருத சுலோகத்தில் வடமொழியுள் 'அரசர்' என்னும் பொருள் சுட்டும் 'இந்த்ர' என்பது 'இந்த' எனவே இருத்தலை நினைக்க. இவ்வேதுவினால் அரசர் என்னும் பொருள் சுட்டும் 'இந்த' என்னும் பிராக்ருத மொழியே செந்தமிழ் மொழியுள் 'இண்ட' எனத் திரிபுற்றுளது என்னலும் ஆம். 'எல்லா நாட்டிலும் இயல்வது பாகதம்' என்ற 'பேரகத் தியத் திரட்டு'ப்பாவின் கருத்தை நினைக்க. (சூத்.—144.)

வடமொழியுள் 1. பறவை என்னும் பொருள் சுட்டும் 'பக்ஷி' என்பதும், 2. எட்டு என்னும் தொகைப் பொருள்

---

*இச்சுலோகம்முதல் 'ஸ்ரீ ஜிநபகவனை நமஸ்கரிக்கின்றேன்' **என்பது வரையில் தந்தருளியவர்கள், பண்டு ஆங்கில மொழியின் 'ஜைன கெஜட்டியர்' ஆசிரியரும், ஜைன சமயத்தவரும் ஆய அன்பர் சென்னை ஸ்ரீமான், ஸி. எஸ். மல்லிநாத நாயனார் அவர்கள். அவர்தம் தற்கால இருக்கை, சென்னையை அடுத்த அமிஞ்சிகரை.

சுட்டும் 'அஷ்டம்' என்பதும், 3. சேர்க்கை என்னும் பொருள் சுட்டும் 'ஸ்கந்தம்' என்பதும், ப்ராக்ருத மொழியுள் 1. 'பக்கி' எனவும், 2. 'அட்டம்' எனவும், 3. 'கந்தம்' எனவும் இருத்தலையும், அப் பிராக்ருத மொழிகள் செந்தமிழ் மொழியுள் திரிபுறாமல் இருத்தலையும் நினைக்க.

இவ்வேதுக்களால் 'இந்த்ரகுலம்' என்னும் வட மொழியே 'இண்டக்குலம்' எனத் திரிபுற்றுளது எனத் தேறுக. அல்லது, 'இந்த'குலம் என்னும் பிராக்ருத மொழியே 'இண்ட'குலம் எனச் செந்தமிழ் மொழியுள் திரிபுற்றுளது எனத் தேறுக.

திருமால், திருப்பரசுராமரான தம் திருப்பிறப்பில் கார்த்தவிரியஅர்ச்சுனன்பொருட்டுக் கொண்ட சிற்றத்தால் 'மன்னர்குடியை—அரசர்குலத்தை'—இருபத்தொரு முறைஅழித்தார் என்னும் பண்டைய புராண வாலாறு தம்மின்நினைவில்விளையாமையாலும், செந்தமிழ்மொழியுள், வடமொழிகள், தற்சம தற்பவங்களின் பாத்திக்களாய்த் திரிபுற்றுக் கலந்திருத்தலைச் செந்தமிழின் செந்நெறியைக் கற்றும் கேட்டும் அறியாமையாலும், தம் மனத்தில் விளைந்த கற்பனையின்படி கவியின் கருத்துக்கு மாறுக 'இண்டக்குலம்' என்பதற்குச் 'சண்டாளர் கூட்டம்' எனவும், 'பண்டக் குலம்' என்பதற்குப் 'பூர்வ ஜன்மம்' எனவும் பொருள் எழுதிவைத்தார் திவ்யப் பிரபந்தத்தின் திவ்யார்த்த தீபிகை உரைகாரர். அவர், தம்மின் முன்னோர் செயலைப் போற்றினர் போலும். என்னை? பொருந்தாப் பொருளைப் பொருத்திப் புகல்வதே புராணிகர்தம் இயல்பு. தீபிகை உரைகாரரின் முன்னோராகிய திவ்யப் பிரபந்தத்தின் உரைகாரர் யாவரும், செந்தமிழாலாய எழுத்தொடு புணர்ந்த சொல்லகத்தமைந்த பொற்புறு பொருளைப் போற்றிக் கற்றறியாத புராணிகர் இனத்தைச் சார்ந்த சாத்தரே ஆவர். ஆதலால், அவர்கள், இருந்தமிழ்ப் புலவர்களாகிய திரு ஆழ்வார்கள் அருளிய திவ்யப் பிரபந்தத்திற்குப் பொருத்தம் அற்றனவாகிய போலிப் பொருள்களைப் பொருத்தி எழுதிவைத்தார்கள். அப் பண்டைய உரைகாரரின் செயலையே பாதுகாத்தார் போலும் தீபிகை உரைகாரர். இனம் இனத்தைக் காக்கும் என்பதும் ஆன்றோர்தம் மொழிதானே? அம் மொழியின் பொருளைப் புதுப்பித்து வைத்தார் தீபிகை உரை

காரர். அவரும் ஒரு புராணிகரே ஆவர் ஆதலால். செந் தமிழின் செநநெறியை அறிந்தாருள், அவரின் செயலைக் கண்டு வியப்புறுவார் எவரும் இரார் என்பதில் என் கண் ஐயம் இல்லை. மற்றும்,

'வந்து இதனைக் கொள்வதே ஒக்கும் இவ் வாள் அரவின்
சிந்தை அது தெரிந்து காண்மினே-வந்து ஓர்
'இரா நீர் இருண்டனைய கண்டத்தீர்' எங்கள்
பிரானீர் உம் சென்னிப்பிறை' (என்ற) (திருக்காரைக்-அற்புத-22.)

இத் திருப்பாவில், 'இருந்தனைய' என்பது 'இருண்டனைய' என 'ந்த-ண்ட' வாகத் திரிந்திருத்தலையும் நினைக்க.

இத்திருப்பாவின் இடைநின்ற அடிகளின் பொருள் (வந்து ஓர் இரா: வந்து, சென்று. ஓர், அசை. இரா, இரவு; நீர்:(நீர்மை விகாரம்)பண்பு, கரிய நிறம். 'இருண்டு அனைய என்பது, 'இருந்து அனைய' என்பதன் திரிபு. 'கண்டத்தீர்' என்பது 'கந்தரத்தீர்' என்பதன் திரிபு.) இராத்திரி காலத்தில் தோன்றும் இருள்-(கரிய நிறம்) என்னும் பொருள் சென்று ஆட்சி கொண்டு, இருண்டால்-(இருந்தால்)-அன்ன கறுத்தகண்டத்தை உடையிர்' என்பது. இத் திரிபினாலும் 'ந்த' 'ண்ட' எனத் திரியும் வழக்கை அறிக.

இத்திருவந்தாதிப் பாவில் 'இருந்தனைய' என்பதே 'இருண்டனைய' எனத் திரிபுற்றுளது என்பதனை அறியாமையால்; (நீர் இரா இருண்டனைய என்க. நீர்-மேகம்-வந்து இராப்போல இருண்டனைய கண்டம்என்க. இருண்டால் அனைய என்றது இருண்டனைய என நின்றது. வந்து பிறை இதனை என்று கூட்டுக. நீர்-இருளுதல்-மேகமாய் உருவாதல் கருமை மிகுதியை உணர்த்திக் கருணை மிகுதி காட்டிற்று. 13-ம பாட்டின் கருத்தும் காண்க.) என உரை எழுதிவைத்தார் ஒருவர்.* அவர், இராப்போல என்ற தொடரில் போல என்னும் உவம உருபை விரித்துவைத்த பின்னர் 'இருண்டனைய' என்ற தொடரில் 'அனைய' என்னும் உவம உருபுக்குஉபமேயம் இன்மையால் அது, மிகை என்ப

---

*ஒருவர் உரைத்து வைத்த பொருள்: (கோயம்புத்தூர் 'திருச்சிவகவி மணியார் ஆகிய திருவளர் சி. கே சுப்பிரமணிய முதலியார் B. A. அவர்களால் உரை எழுதப்பட்டுப்-,பெரியபுராணம் தொகுப்புரை' எனப் பதிப்பிக்கப்பட்டு வரும் திருத்தொண்டர் புராண உரை நூலுள், திருக்காரைக்கால் அம்மையார் புராணத்தின் இடையில் சேர்க்கப்பட்ட திருக்காரைக்கால் அம்மையார் அருளிய அற்புதத் திரு வந்தாதியின் உரையிடையே உள்ளது.)

தனை அறிய மறந்தனர் போலும். அன்றி, 'உம் சென்னியின் பிறையின் அருகில் வந்து-சென்று-அதனைக் கொள்வதே ஒக்கும் இவ்வாள் அரவின் சிந்தை' என்பதே கவிக்கருத்து என்பதனை யும் அறிந்திலர்போலும். அவர் உரைத்து வைத்த பொருளின் சிறப்பையும் இறப்பையும் உய்த்துணர்க. என்னால் சொல்லப்பட்ட இப்பொருள்:

"அடுங்கண்டாய் வெண்மதி என்று அஞ்சி இருள் போந்து
இடங்கொண்டு இருக்கின்றது ஒக்கும்—படம் கொள்
அணிமிடற்ற பேழ்வாய் அரவு அசைத்தான் சோல
மணிமிடற்றில் உள்ள மறு" என்று திருஅம்மையார் அருளிய மூப்பத் தைந்தாவது பாவின் பொருளொடு ஒன்றி இருத்தலையும் உணர்க.

இவ்வாய்வு உரையுள் கூறப்பட்ட ஏதுக்களால் திரு ஆழ்வார் இத் திருப்பாவுள் அமைத்தருளிய 'திருப்பரசு ராமர்' வரலாற்றினை உணராமல் தீபிகை உரைகாரர் வேறு ஒரு போலிப் பொருளை உரைத்ததனால் அவர் திவ்யப் பிரபந்தத்துள் திரு ஆழ்வார் அமைத்தருளிய பண்டைய புராண வரலாற்றினை உள்ளபடி உணராதவ ராயினர் என்பதும், இத் திருப்பாவுள் அமைந்துள்ள 'இண்ட' 'பண்ட' என்னும் சொற்கள் வடமொழியினின் றும் போந்த திரிசொற்கள் என்பதனை அறியாதவர் ஆயினர் என்பதும், அத்திரி சொற்களின் உண்மைப் பொருள்களை உணராதவர் ஆயினர் என்பதும், வெள் ளிடைநின்ற மலைபோல் விளங்குதலை அறிக. (௩)

## முதல் ஆய்வு உரை: கிளை-4.

'கண்ட கடலும் மலையும் உலகு ஏழும்
முண்டத்துக்கு ஆற்ரு முகில் வண்ணு ஓ ஒ வென்று
இண்டைச் சடைமுடி ஈசன் இரக்கொள்ள
மண்டை நிறைத்தானே அச்சோ! அச்சோ!!
மார்வில் மறுவனே அச்சோ ! அச்சோ' !! (பெரியாழ்-1-8-9)

இத்திருப்பாவிற்குத் திவ்யார்த்த தீபிகை உரை:—"கண்ணுற்கண்ட ஸமுத்ரங்களும் மலைகளும்-கீழ் ஏழ் மேல் ஏழ் என்ற பதினுன்கு லோகங்களும் (ஆகிய எல்லாவற்றையுமிட்டு நிறைக்கப் பார்த்தாலும்) (என் கையிலிருக்கிற ப்ரஹ்ம) கபாலத்துக்கு-போதாவாம்;—மேகவண்ணனே!—ஓ ஒ! (ஹா ஹா!) என்று கூப்பிட்டு நெருங்கின-ஜடாபந்தத்தை உடைய-சிவன்-பிச்சை எடுக்க, (அவன் கையில் இருந்த) பிரஹ்மகபாலத்தை-(மார்பிலிருந்து உண்டான ரக் தத்தால்) நிறையச் செய்தவனே!-அச்சோ அச்சோ-"என்பது.

இப் பாட்டும் பொருளும் 'திவ்யப் பிரபந்த திவ்யார்த்த தீபிகை' என் னும் உரை நூலுள் உள்ளன.

இப்பொருளின் சிறப்பையும் இறப்பையும் உய்த்து ணர்க. உய்த்துணருங்கால் அவரால் எழுதப்பட்ட வினை முடிபுகளையும், சொற்களின் பொருள் விளக்கத்தையும் வாக்கிய அமைப்பையும் இதன் அடியில் உள்ள(என்னால் எழுதப்பட்ட) பொருளினோடு ஒப்பிட்டுணர்க.

இத் திருப்பாவிற்குக்(கவியால்கருதப்பட்ட)உண்மைப் பொருள்: **'கண்டல் என்னும் மரவகைகள்—தாழை முதலிய முள்ளை உடைய புதல்கள்—செறிந்துள்ள கடல்களையும்,** மலைகளையும், தன்னிடத்தே கொண்டுள்ள எல்லா உலகங்களையும் உண்டும் அத்துக்கு—அதனால், ஆற்று (வயிறு) நிறையப்பெறாத கரிய திருமேனியை உடைய திருமாலோய்! என்று' தம் திருச்சடையில் இண்டை-இந்துவை-பிறையை—முடித்து வைத்திருக்கின்ற ஈசன் (திருச்சிவ பெருமானார் தம் குறையைச் சொல்லி) இரக்கொள்ள (இரத்தலைச் செய்ய—யாசிக்க) இரந்த அவரின் கையில் இருந்த மண்டை(பிரமம கபாலத்தை) நிறையும்படி நின்னின் மார்பினின்று செந்நீரை—இரத்தத்தைச்—சொரிந்து அவரின் துன்பத்தைப் போக்கிய புண்ணியனே! அச்சோ! அச்சோ!! திருமார்பில் திருமகளை வைத்துள்ள திருமாலே அச்சோ! அச்சோ!!' என்பது.

இத்திருப்பாவில் **'கண்டகடலும்'** என்பது **'கண்டல் கடலும்'** என இருத்தற்பாலது. (கண்டல், நெய்தல் நிலப் பொருள். அது கடற்கறையில் செறிந்து கிடப்பது. நிலம் கடலால் சூழப்பட்டது அதலால், அக்கடலைச் சார்ந்த நிலப்பொருளைக் கூறுதல் கவி மரபு.

''வங்கமார் கடல்களேழும் மலையும் 'வானகமும்' மற்றும்
அங்கண்மா ஞாலமெல்லாம் அமுது செய்து உமிழ்ந்த எந்தை''(பெ-திரு-5-9-2)

இத் திருப்பாவின் பொருளை நினைக்க. (இத்திருப்பாவில் அமைந்துள்ள 'வானகமும்' என்ற தொடர்க்கு 'ஆகாசமும்' எனப்பொருள் எழுதிவைத்தார் 'திவ்யார்த்த தீபிகை' உரைகாரர். அப்பொருள் கவிக்கருத்தன்று. இவண் 'வானகம்' என்பதன் பொருள்: 'காடுகளாகிய இடங்கள்' என்பதே கவியால் கருதப்பட்ட பொருள். (வானகம்: வநம்-அகம் என்பனமருவியமொழி.) ஆகாசம் உருவிலாப்பொருள். அதனை உண்டார் எனல் பொருந்தாச்சொல் என்பதனை அவ்வுரைகாரர் உணர்ந்திலர்.

இப்பாவில் ஆனப்பட்ட 'ஏழும்' என்பதின் பொருள்: 'எல்லாமும்' என்பதே. 'பதினாலும்' என்பது பொருளன்று.)

'முண்டத்துக்கு' என்பது 'உண்டத்துக்கு' எனவும், 'முகில்வண்ணா ஓ ஒ' என்பது 'முகில்வண்ணாவோஒ' என ஓகாரம் ஈற்றில் பிரியாமல்–சேர்ந்து அளபெடையாகியும் இருத்தற்பாலன. 'முகில்வண்ணா' என்ற இவ்விளி, திருச்சிவபிரானாரால் திருமாலை விளிக்கப்பட்டதென்க. விளிக்கப்பட்டபோது, திருமால் படியை மடியில் இட்டு–உலகங்களை உண்டு–உமிழ்ந்த வரலாற்றைச்சொல்லி அவரின் பேராற்றலை விளக்கினார் திருச்சிவபெருமானார் என்னும்குறிப்பை இத்திருப்பாவில் அமைத்தருளினார் திரு ஆழவார் என்க. திருஆழ்வார், 'முண்டத்துக்கு ஆற்ரு–கபாலத்துக்குப் போதா' என்று கபாலத்தின் ஆற்றலை விளக்கி அருளினரல்லர் என்க. 'முண்டத்துக்கு' என்பது 'உண்டத்துக்கு' என இருத்தற்பாலது. உண்டத்துக்கு என்பது, 'உண்டற்கு' என்பதன் திரிபு என்னலும் ஆம். விளிக்குங்கால் ஹாஹா என்று விளிக்கும்வழக்குச் செந்தமிழ்த்தேஎத்தில் இல்லை. அவ்வழக்குக் கருவேப்பிலை நொடையும் குறத்திமொழியாளராகிய திவ்யப்பிரபந்தத்தின் உரைகாரரைச் சார்ந்தவரின் வழக்குப்போலும். அவ்வழக்கு இருந்தமிழ்ப்புலவராகிய திருஆழ்வார் அருளிய இத்திருப்பாவிற்கு வேண்டாஎனப் புறக்கணித்தற்பாலதே.

'முகில் வண்ணா' என்பது 'ஊழியண்ணா' என இருப்பின் சிறப்பாம். மற்றும், 'இண்டைச்சடைமுடி ஈசன்' என்பதற்கு 'நெருங்கின ஜடாபந்தத்தைஉடைய சிவன்' என்பது கவியால் கருதப்பட்டபொருள் அன்று 'பிறையைச் சடையில் முடித்துள்ள சிவன்' என்பதே கவியால் கருதப்பட்ட பொருள். என்னை?

திருச்சிவபெருமானார் 'இந்துவைப்–பிறையைத்' தம், திருச்சடையில் முடித்து வைத்திருப்பவர் என்பது பண்டைய புராண வரலாறு. அவ்வரலாறு திருமால் சமயத்தவராலும் ஒப்புக்கொள்ளப்பட்டதே. 'இந்துவார் சடையீசனை' (பெரிய திரு-4-2-9) 'பிறை ஏறு சடையானும்' திருவாய்-3-2-10.)என்றருளிய திரு ஆழ்வார்கள் திருக்கருத்துக்களை நினைக்க. அப்புராணவரலாற்றினைச்சுட்டியே திரு ஆழ்வார், இத் திருப்பாவில் 'இண்டைச் சடைமுடியீசன்' என்று அருளினார் ஆதலால்.

பிறை என்னும் பொருளின் பெயராகிய 'இந்து' என்னும் வடமொழி, தற்சமத்தின் பாத்தியாய் 'இந்தை' என ஈறு திரிபுற்றுப் பின்னர் மரூஉவின் பாத்தியாய்'இண்டை' என இடையும் திரிபுற்றது என்பதனைத் திபிகை உரைகாரர், உணர்ந்திலர். இத்திரிபுக்குரிய ஏதுக்கள் என்னை? இந்த்ரகுலம் என்பது இண்டகுலம் எனத் திரிபுற்றதற்குக் காட்டப்பட்ட காட்டுக்களையே ஏதுக்களாகக் கொள்க. அவ்வேதுக்களால், திவ்யப் பிரபந்தத்துள் பிற திருப்பாக்களிலும் அமைந்து உள்ள 'இண்டைச் சடைமுடியீசன்' என்னும் தொடர்க்கும் 'இந்துவைப்—பிறையைத்—தம் திருச்சடையில் முடித்துவைத்துள்ள திருச்சிவபெருமானர்' எனவே பொருள்கொள்க.

இவ்வாய்வு உரையுள் காட்டப்பட்ட ஏதுக்களால் திரு ஆழ்வார், இத்திருப்பாவில் அமைத்தருளிய 'திருச்சிவபெருமானர், தம், திருச்சடையில் இந்துவைப்—பிறையை-முடித்து வைத்திருப்பவர்' என்னும், பண்டைய புராண வரலாற்றினை நினையாமல் கவியால் கருதப்படாத வேறு பொருளைத் தம் உரை நூலுள் எழுதிவைத்ததனுல், திவ்யபிரபந்தத்தின் திவ்யார்த்ததீபிகை உரைகாரர், இத்திருப்பாவில் அமைந்துள்ள பண்டைய புராண வரலாற்றினை உள்ளபடி உணராதவராயினர் அல்லாமல், 'இண்டை' என்பது 'பிறை' என்னும் பொருள் சுட்டிய 'இந்து'என்னும் வடமொழியின் திரிசொல் என்பதனையும் அறியாதவர் ஆயினர் என்பதனை அறிக. (௪)

## முதல் ஆய்வு உரை: கிளை–5.

"முருக்கிலங்கு கனித்துவர்வாய்ப் பின்னை கேள்வன்
மன்னெல்லாம் முன்னவியச் சென்று வென்றிச்
செருக்களத்துத் திறலழியச் செற்ற வேந்தன்
சிரம் துணித்தான் திருவடி நும் சென்னி வைப்பீர்
இருக்கிலங்கு திருமொழிவாய் 'எண்தோள் ஈசற்கு'
எழில்மாடம் எழுபது செய்து உலகமாண்ட
திருக்குலத்து வளச்சோழன் சேர்ந்த கோயில்
திருநறையூர் மணிமாடம் சேர்மின்களே"(பெரியதிரு-6-6-8)

இத்திருப்பாவிற்குத் திவ்யார்த்ததீபிகைஉரை:-"முருக்கம்பூப்போலவும் விளங்குகின்ற கோவைப்பழம்போலவும் சிவந்திருக்கின்ற, அதரத்தை உடையவளான, நப்பின்னைபிராட்டிக்கு நாயகனும்,முன்பொருகாலத்தில்,க்ஷத்திரியர்க

ளெல்லாரும் ஒழியும்படியாக, வெற்றிதரவல்ல போர்க்களத்தில், போய், மாற்றரசனான கார்த்தவீர்யார்ஜ்ஜுனனுடைய, மிடுக்கு அழியும்படியாக [அவனது] தலையைத் துணித்தவனுமான ஸர்வேச்வரனுடைய திருவடிகளை, உங்கள் தலைகளிலே அணிந்துகொள்ள விருப்பமுடையவர்களே!, வேதத்தில், சிறந்தவையான புருஷ சூக்தம் முதலிய பாகங்களை, வாயிலே உடையவனை, எட்டுப் புஜங்களை உடையவனான சிவபிரானுக்கு, அழகிய எழுபது ஆலயங்களை, நிருமாணம் செய்வித்து, உலகத்தைப் பரிபாலனம் பண்ணிய, உயர்ந்த குலத்தில் பிறந்தவனாய், செல்வம் மிக்கவனான, சோழன். சேர்ந்த கோயில் திருநறையூர் மணிமாடம்சேர்மின்களே" என்பது.

இத்திருப்பாவில் அமைந்துள்ள 'எண்தோள் ஈசற்கு' என்ற தொடர்க்கு 'எட்டுக்கைகளை உடைய சிவன்' எனத் திருச்சிவபெருமானாரைச்சுட்டிப் பொருள் எழுதிவைத்தார், திவ்யப் பிரபந்தத்தின் திவ்யார்த்த தீபிகை உரைகாரர். அப்பொருள், போலிப்பொருளே. அப்பொருளின் சிறப்பையும் இறப்பையும் இவ்வாய்வு வுரையுள் மேலே காட்டப்படும் ஏதுக்களை ஆய்ந்து அறிக.

இத்திருப்பாவின் பின் இரண்டடிகளின் பொருள்: 'கேட்டற்கு இனிய பண்ணின் ஒலியை உடையவாய வடமொழியாலாய இருக்காதி வேதங்களை விளம்பிய திருவாக்கையும், (ஒருகாலத்தில் ஒரு காரணத்தால்) எட்டுத் திருக்கைகளையும் உடையராய் விளங்கிய திருமாலுக்குத் (திருநறையூர் என்னும் திருப்பதியில்) அழகு பொருந்திய திருக்கோவிலை வானுறும்படி எழுச்சியை—உயர்ச்சியை— உடையவாய்க் கட்டுவித்தவனும், இச் செந்தமிழ்த் தேஎத்தைக் காத்து ஆண்ட பெருமையை உடைய சோழர்தம்குடியில் பிறந்தவனும் ஆகிய வளச்சோழன்—கோச்செங்கண்ணான்—வணங்கிய திருமாலது திருக்கோவிலையும் அழகிய மாடங்களையும் உடைய திருநறையூர் என்னும் திருப்பதியைச்சென்று அடைமின்' என்பது [அடைந்து பணிமின் என்பது சொல்லெச்சம். அத்திருப்பதியை அடைந்து அத்திருப்பதியில் விற்றிருக்கும் திருமாலை வணங்குவீராயின்,அத்திருப்பதியின் சிறப்பால்-பெருமையால்--அத்திருப்பதியில் வீற்று இருக்கும், திருமால் தம திருவருளை எளிதாகப்பெறுவீர் என்பது குறிப்பு எச்சம்.] திருநறையூர், திருமாலுக்கு ஆகுபெயர் என்னலும் ஆம. பெரியதிருமொழி-3-2-1, 2. திருப்பாக்களின் பொருள்களை இவண் நினைக்க.

குறிப்புரை:—இருக்கு: பண். திரு மொழி: வடமொழியாலாய இருக்காதி வேதங்கள். எண்தோள் ஈசன், திருக்காஞ்சித்திருப்பதியில் வீற்றிருக்கும் அஷ்டபுஜப்பெருமாள். இப்பெயர், ஒரு புராண வரலாற்றால்திருமாலுக்குஉண்டாயது. ஆதலால் 'எண்தோள் ஈசன்' என்பதற்கு இலக்கணையால் திருமால் என்பதே பொருள். திருமங்கை மன்னர் ஆகிய திரு ஆழ்வார் அருளிய இரண்டாம்பத்து எட்டாந்திருமொழி முற்றும் 'அஷ்டபுஜப் பெருமாள்' விஷயமாக இருத்தலும், அத்திருமொழியின் திருக்கடைக் காப்பாகிய திருப்பாவில் 'புகழ்சூழ்ந்த கச்சி அட்ட புயகரத்தாதிதன்னை' என்று திருக்காஞ்சித் திருப்பதியும் திருமாலும் விதந்து அருளப்பட்டிருத்தலும் சான்றும். திருமாலின் எட்டுத்திருக்கைகளின் சிறப்பை;

'செம்பொன் இலங்கு வலங்கை வாளி திண்சிலை
தண்டொடு சங்கம் ஒள் வாள்
உம்பர் இருசுடர் ஆழியோடு
கேடகம் ஒண்மலர் பற்றியேற்றே' (பெரிய-திரு. 2-8-3.)

இத்திருப்பாவின் பொருளால் அறிக. இவ்யார்த்ததீபிகை உரைகாரரால் எழுதிவைக்கப்பட்ட 'எட்டுக்கைகளை உடைய சிவன்' என்பது உண்மைப்பொருள் அன்று. கவிக்கருத்து அன்று. எழுபது: எழுபு, உயர்ச்சி—எழுச்சி. அது, பகுதிப்பொருள் விகுதி. அலகிட்டு எண்ணுதலாகிய (பல எண்கள்கூடிய—எழுபத்துக் கூடிய) தொகைப்பொருளாகிய—எழுபது—எழுபத்து—என்பது இவண் பொருந்திய பொருள் அன்று. இத்திருப்பாவை அருளிய திருஆழ்வார், பிற விடத்தும் 'வானுந்து கோயில் மேய எம்பெருமான்' (பெரியதிரு-7-4-2.) என்று அருளி இருத்தலை நினைக்க. வளச்சோழன்: (வளவன் சோழன்—வளவனாகிய சோழன்) இருபெயரொட்டு மருஉ. சேர்ந்த: வணங்கிய. 'சேர்தல், இடைவிடாது நினைத்தல்' என்றார் திருக்குறளின் உரையாசிரியர், திருப்பரிமேலழகர்.

திருச் சைவ சமயத்தவர்தம் இறையவராகிய திருச்சிவபெருமானுர்க்குக் கோச்செங்கண்ணன் என்னும சோழ அரசராகிய திருத்தொண்டர் ஒருவர், நூற்றுஎட்டுத் திருக்கோவில்களைக் கட்டுவித்தார் எனத் திருச்சைவ உலகத்தவர்சொல்லுதலால், அச்சோழஅரசராகிய கோச்செங்கண்ணன் என்பவரே திருமாலுக்கும் எழுபது திருப்

பதிகளில் எழுபது திருக்கோவில்களைக் கட்டுவித்திருப்பர் என்பதும நம்புதற்பாலதே. இவ் வரலாறு ஆய்ந்து அறிந்து தெளிதற்பாலதே. என்னை? கோச் செங்கண்ணன் என்பவர் 'நுண்மாண் நுழைபுலமையரும் செங்கோலரும் ஆவர் என்பர் அறிஞர். ஆதலால், அக் கோச் செங்கண்ணன் என்பவர் ஓரம் கொண்டு ஒழுகாமல், திருச் சைவம் திருவைணவம் என்னும் இருவகை மதங்களையும் வாரங் கொண்டு நடுநின்று காத்திருப்பர் என்னலும் ஆம்.

'மன்னர் மறுக மைத்துனன் மார்க்கொரு தேரின் மேல்
முன்னங்கு நின்று மோழை எழுவித்தவன்மலை
கொன்னவில் கூர்வேல் கொண்டு நெடுமாறன் தென்கூடற்கோன்
தென்னன் கொண்டாடும் தென் திருமாலிருஞ் சோலைமலையே'(பெ-திரு-4-2-7.)

இத்திருப்பாவில் திரு ஆழ்வாரால் அருளப்பட்ட 'நெடுமாறன்' என்னும் பாண்டியகுல அரசர், திருவைணவம், திருச்சைவம் ஆகிய இருவகை மதங்களையும் பாது காத்தவர் என்பது நினைவில் இருத்தற்பாலது. என்னை? இத்திருப்பாவுள் அருளப்பட்ட நெடுமாறன் என்னும் அரசரே திருச்சைவர்தம் பெரிய புராணம் என்னும் திருமுறையுள். 'நின்றசீர்நெடுமாறன்'எனப் புகழப்பட்டவர். திருச் சைவர் திருவைணவர் ஆகிய இருவகை சமயத்தவராலும் நெடுமாறன் என்னும் அரசர் புகழப்படுதலால் அவ்விரு வகை சமயங்களையும்ஓரமின்றிப்பாதுகாத்தவர்'அந்நெடுமாறன்' என்னும் அரசர் என்பதில் ஐயம் என்னை? அந் 'நெடுமாறன்' என்னும் பாண்டியகுல அரசர்போலவே 'கோச் செங்கண்ணன்' என்னும் சோழர்குல அரசரும் திருச் சைவம் திருவைணவம் ஆகிய இருவகை மதங்களையும் ஓரமின்றி-நடுநின்று பாதுகாத்திருப்பர் என்பதில் ஐயம் என்னை? இவ்வேதுவினல், 'கோச் செங்கண்ணன்' என்னும் சோழர்குல அரசர், திருநறையூர் என்னும் திருப்பதியில் திருமாலுக்கே வானுறும்படி உயர்ச்சியை உடைய திருக்கோவிலைக் கட்டுவித்தார்எனப் பொருள் கோடலே கவிக்கருத்தாகும் என்க. இத்திருப்பாவில் இப் பெற்றியபொருளை அன்றித் திருச்சிவபெருமானார்க்கு எழுபது திருக்கோவில்களைக் கட்டுவித்த சோழன்-கோச்செங் கண்ணன்-எனப் பொருள் கோடல் கவிக்கருத்தன்று என்பதனை ஆழ்ந்து சூழ்ந்து தெளிக.

திருமால் எட்டுத் திருக்கைகளை உடையராய்த் திருக்காஞ்சித் திருப்பதியில் வீற்றிருக்கின்றார் என்னும் பண்டைய புராண வரலாற்றுப் பொருளை அறிவிக்கும் செந்தமிழைப் பழகிய செவ்விய அறிவைப் பெருமையால், திவ்யப் பிரபந்தத்தின் உரைகாரர் யாவரும், ஒருமுகமாக இத் திருப்பாவில் அமைந்துள்ள 'எண் தோள் ஈசன்' என்ற தொடர்க்கு 'எட்டுப் புஜங்களை உடையனான 'ஈசன்' சிவபிரான் எனப் பொருள் எழுதிவைத்தனர். அவ்வுரைகாரரால். எழுதி வைக்கப்பட்ட பொருள் போலிப்பொருளே. என்னை? அப்பொருள், தர்க்க நெறியை அறிந்தாரால் சொல்லப்படும் தமக்குத் தாமே இழிவைச் சொல்லிக் கொள்ளுதலாகிய 'இஷ்ட விரோதம்' என்னும் குற்றத்தை உடைத்து ஆதலால்.

திரு ஆழ்வார், தம்மால் சிறப்பித்துச் சொல்லப்படும்—வணங்கப்படும்—திருமாலுக்கு அல்லாமல், தம்மால் தாழ்த்தி—இழித்துச்—சொல்லப்படும்—வெறுக்கப்படும் திருச்சிவபிரானார்க்கு 'எழுபது திருக்கோவில்களைக்' கட்டுவித்தவளச்சோழன் சேர்ந்தகோயில், என்றார்என்பதனால் அத்திருமாலுக்காவது. அத் திருமாலை வழிபட்டு ஒழுகும் திருத் தொண்டர்கட்காவது, திரு இராமாநுஜதாசர்கட்காவது திரு ஆழ்வார்கட்காவது யாதேனும் ஒரு பெருமை உண்டாகுமோ? திருமாலுக்கும் திருமாலைவழிபட்டு ஒழுகுவார் யாவர்க்கும் யாதொரு பெருமையும் உண்டாகாது. யாவர்க்கும் சிறுமையே உண்டாகும்

அக்கோச்செங்கண்ணன் ஆகிய அரசன், திருமால் இடத்தில் அன்பை இல்லாதவனாய்த் திருநறையூர் என்னும் திருப்பதியில் .திருமாலுக்கு ஒருவித திருப்பணியும் செய்யாதவனாய்த் திருச் சிவபெருமானார்க்கே அன்பை உடையனாய் அவர்க்கே பலவகைத் திருப்பணிகளைச் செய்பவனாய் வாழ்ந்திருந்த நாட்களுள் ஒருநாள், அத்'திருநறையூர்' வழியாகச் சென்றதொரு காலத்தில், அவ்வூரில் அமைந்துள்ள திருமாலின் திருக்கோவிலைக் கண்டவனாய்ச் சென்றான் என்பதனால், திருமாலுக்காவது திருமாலை வழிபட்டு ஒழுகும் திருத் தொண்டர்கட்காவது யாதேனும் ஒரு பெருமை உண்டாகுமோ? எவர்க்கும் யாதொரு பெருமையும் உண்டாகாது திருமால் சமயத்தவர்க்குப் பெரும் சிறுமையே—இழிவே—உண்டாகும். :

தம் பெருமைக்கு இழிவைத் தரும்படியான 'இஷ்ட விரோதம்' என்று சொல்லப்படும் (தம் வழக்கிற்குத் தாமே இழிவைக் கூறுதலாகிய) குற்றத்துக்கு ஏதுவாகிய 'எட்டுப் புஜங்களை உடைய (ஈசன்) சிவபெருமான்' என்னும் பொருளை அமைத்து 'எண் தோள் ஈசன்' என்ற தொடரை இத்திருப்பாவில் இத் திருஆழ்வார் ஆண்டிருப்பரோ? ஆண்டிருப்பின், இத்திரு ஆழ்வார், பிற தேவரைத் தேவரெனக் கொள்ளாதவராய்த் திருமாலையே முழுமுதல் இறையவரென வழிபட்டு ஒழுகும் இயல்பினராகிய இருந்தமிழ்ப் புலமையை உடைய திருத்தொண்டராகிய திருஆழ்வார் இனத்தர் ஆவரோ? ஆகார். என்னை?

'நாராயணனை நான் முகன் படைத்தான் நான்முகனும்
நான்முகமாய்ச் சங்கரனைத் தான் படைத்தான்' (நான்முகன் அந்-1)

'ஆல நிழற்கீழ் அறநெறியை நால்வர்க்கும்
மேலை யுகத்து உரைத்தான் மெய்த்தவத் தோன்-ஞாலம்
அளந்தானை ஆழிக்கிடந்தானை ஆல்மேல்
வளர்ந்தானைத் தான் வணங்குமாறு' (நான்முகன்-17)

'ஓர் ஆலிலைச் சேர்ந்த எம் பெருமாயனை அல்லது,
ஒருமா தெய்வம் மற்றுடையமோ யாமே' (நம்மா-ஆசிரி-7)

'மோடியோடு லச்சையாய சாபம் எய்தி முக்கணான்
கூடுசேனை மக்களோடு கொண்டு மண்டி வெஞ்சமர்த்து
ஓட வாணன் ஆயிரம் கரம் கழித்த ஆதி மால்
பீடுகோயில் கூடும்நீர் அரங்கம் என்ற பேரதை' (சந்தவிருத்-53)

'திருமால் இருஞ் சோலையானே ஆதிச் செழு மூவுலகும் தன்
ஒருமாவயிற்றினுள்ளே வைத்து ஊழி ஊழிதலை அளிக்கும்
திருமால் என்னை ஆளுமால் சிவனும் பிரமனும் காணாது
அருமால் எய்தி அடிபரவ அருளை ஈந்த அம்மானே' (திருவாய்-10-7-6)

'நீள் நகரமதுவே மலர்ச் சோலைகள் சூழ்திருவாறன் விளை
நீள் நகரத்து உறைகின்ற பிரான் நெடுமால் கண்ணன் விண்ணவர்கோன்
வாணபுரம்புக்கு முக்கண் பிரானைத் துலைய வெம்போர்கள் செய்து
வாணனை ஆயிரம் தோள் துணித்தான் சரணன்றி மற்றொன்றிலமே" என்று (திருவாய்-7-10-7.)

அருளப்பட்ட திருப்பாக்களின் கருத்துக்களை ஏதுவாகக்கொண்டு திரு ஆழ்வார்கள், திருமாலை அல்லாமல் பிறரை முழுமுதல் இறையவராகக் கொள்ளாத இயல்பினர் என்பதனை அறிக.

இத்திருப்பாவை (பெரியதிரு-6-6-8-ஐ) அருளிய திரு ஆள்வாரும், திருமாலை அன்றிப் பிற தேவரை முழுமுதல் தேவர் எனக் கொள்ளாத பெரும் நம்பிக்கையை-பெருங்

கொள்கையை—உடைய இருந்தமிழ்ப்புலவர். திவ்யப் பிரபந்தத்தின் உரைகாரர் யாவரும், இருந்தமிழ்ப் புலமையைப் பெருத புராணிகர் இனத்தைச் சார்ந்தவர்போலும். அவ்வுரைகாரர், இருந்தமிழ்ப் புலமையைப் பெற்றிருப்பின் செந்தமிழ் மொழியாலாய திவ்யப்பிரபந்தத்துக்குச் செந்தமிழ் மொழியாலே உரை எழுதிவைத்திருப்பர். அவர், செந்தமிழ் மொழியாலாய நூலிற்கு வேறுமொழியால்—கலப்பு மொழியால் உரை எழுதிவைத்த அவரின் செயலே, அவரின் தமிழறியா இயல்பை விளக்குதலை அறிக.

திவ்யப் பிரபந்தத்தின் பண்டைய உரைகாரர் யாவரும், கலப்பு மொழியால் உரைநூல் எழுதிவைத்ததன் ஏது என்னை? தம்மால் முறையாகவும் முற்ருகவும் கற்கப்படாத செந்தமிழ் மொழியால், செந்தமிழ் மொழியாலாய திவ்யப்பிரபந்தத்திற்கு உரை எழுதி வைப்பின், செந்தமிழ் மொழியை முறையாகவும் முற்ருகவும் செவ்வினின் கற்றுள்ள செந்தமிழராய ஆசிரியன் மார், தம்மின் அறியாமைப் பண்பை அறிந்து எள்ளி நகைப்பரே என்ற எண்ணத்தால் தம் கருத்தைச் செந்தமிழர் முற்ருக அறியாதபடி—செந்தமிழ் மொழியை மட்டும் தனிமையாகக் கற்றவர்கட்குப் பொருள் விளங்காதபடி—கலப்பு மொழியால்—கருவேப்பிலை நொடையும் குறத்தி மொழியும் தமிழால்—உரை எழுதிவைத்துக்கொண்டனர்.

வடமொழியைக் கல்லாத செந்தமிழர்க்கு அக்கலப்பு மொழி உரையால் பயனில்லை. செந்தமிழ் மொழியைக் கல்லாத வடவர்க்கும் அக்கலப்புமொழி உரையால்பயனில்லை. வடமொழி தென்மொழிகளாகிய இரு மொழிகளுள் யாதேனும் ஒரு மொழியால் முற்ருக உரை எழுதப்பட்டிருப்பின், அவ்வுரை, வடமொழி தென்மொழிகளாகிய இரு மொழிகளுள் ஒரு மொழியைக்கற்ற எவரேனும் ஒருவர்க்குப் பயனுடையதாக இருக்கும். கலப்பு மொழியால் உரை எழுதி வைத்ததனுல் அவ்வுரைகாரர்கள் தம் உரை நூலின் பயனைக் கருதாதவராயினுர்கள். அவர்கள், தம் உரை நூலின் பயனைக் கருதாமையின் ஏது என்னை? செந்தமிழ் மொழியுள் 'மணிப்பிரவாளம்' எனக் கலப்பு மொழியாலாய ஒருவகை உரை நடையைப் புதிதாக உண்டாக்கிய திருச் சமணசிரியர்தம் செயலைப்பார்த்துத் தமக்கும் அச்செயலை

மேற்கொண்டு நடக்க இயலும் என்பதனை விளக்குதல் பொருட்டு மணிப்பிரவாளம் என ஒரு உரை நடையைச் செந்தமிழ் மொழியுள் புதிதாகப் புகுத்தித் தென்மொழி வடமொழிகளாகிய இரு மொழிகளுள் ஒரு மொழியை மட்டும கற்றவருள் ஒருவர்க்கும் விளங்காதபடி திவ்யப் பிரபந்தத்திற்கு அந் நூலாசிரியர்கள் கருத்துக்கட்கு மாருகப் போலிப் பொருள்களைப் புகுத்தி – ஒருவகை உரையை எழுதி வைத்துக் கொண்டனர், பார்ப்பனருள் ஸ்ரீ வைணவராகிய தென்கலைஞர் என்னும் ஆசிரியன்மார்.

திருச். சமணுசிரியன்மார் 'மணிப்பிரவாளம்' எனப் புதியதொரு உரைநடையைச் செந்தமிழ் மொழியுள் புதிதாகப் புகுத்தி உரைநடை நூற்களை எழுதிவைத்ததற்கு ஏதுஒன்றுஉண்டு.அவ்வேதுஎன்னைஎனின்,திருச்சமணர் தம் மதநூற்கள் 'பாகத, பைசாச, வட'மொழிகளாலே முதலில் ஆக்கப்பட்டன. அம்மொழிகளுக்குள்ள ஒலியை உடைய எழுத்துக்கள் செந்தமிழ் மொழியுள் முற்ருக இல்லை. ஆதலால் அம்மதக் கருத்துக்களைச் செந்தமிழர்க்கு முற்ருக விளங்கும்படி உரைத்தர்க்கு அவர்களால் இயலவில்லை. ஆதலால், செந்தமிழ் மொழியுடன் வடமொழிக்குரிய எழுத்துக்களையும், வடமொழிகளையும் மிகுதியாகக்கலந்து உரைநடை நூலை எழுதினர். திருச்சமணுசிரியன்மார் அக்கலப்பு மொழிக்கு மணிப்பிர வாளம்'எனப் புதியதொரு பெயரையும் வைத்து வழங்கினர். அவ்வளவில் நிற்காமல் 'ஸம்ஸ்கிருதம்' எனும் வடமொழிக்கு ஏற்றபடி 'கிரந்த' மொழி என ஒரு பெயரை வைத்துத தெனமொழித் தேளத்தில புதியதொரு மொழியையும உண்டாக்கினர். இவ்வேதுவினுல் அச்செயல்கள் அவர்கட்குப் பொருத்தமுடையனவேயாகும். ஸ்ரீ வைஷ்ணவராய ஆசிரியன்மார், செந்தமிழ் மொழியாலாய திவ்யப் பிரபந்தம் என்னும் நூலிற்கு 'மணிப்பிரவாளம் எனப் புதியதொரு கலப்பு மொழியாலாய உரைநடையால் உரை நூல் எழுதுதற்கு ஏதுஒன்றும் இல்லை. திவ்யப்பிரபந்தம் என்னும் நூலே செந்தமிழ் மொழியாலாய முதல் நூல். அதனுல், அந்நூலிற்குக் கலப்புமொழியாலாய உரை நூல் வேண்டா என்பர் அறிஞர். இவ்வேதுவினுல் அவ் வைஷ்ணவ ஆசிரியன்மார்செயல் செப்பம் இல்லதாயிற்று — பொருத்தமற்ற தாயிற்று.

அவ்வுரைகாரர்' செந்தமிழின் செந்நெறியை அறியாமையால் தான், தம் பக்கம் சாரும் இழிவைக்—குற்றத்தைக்—கருதாதவராய் 'எண்தோள் ஈசன்' (பெரியதிரு-6-6-8-ல்) என்ற தொடர்க்கு 'எட்டுப் புஜங்களை உடைய சிவபிரான்' எனக் கவியால் கருதப்படாத போலிப்பொருளைப் பொருளென எழுதிவைத்தனர் என்க. கவியால் கருதப்பட்ட 'எட்டுப்புஜங்களை உடைய திருமால்' என்னும் உண்மைப்பொருளைப் புறக்கணித்துவிட்டனர் என்க. என்னை?

"பிறைதங்கு சடையானை வலத்தேவைத்துப்
பிரமனைத்தன் உந்தியிலே தோற்றுவித்து
கறைதங்கு வேல் தடங்கண் திருவை மார்பில்
கலந்தவன் தாள் அணைகிற்பீர்" (பெரிய்திரு-3-4-9)

"மையொண் கருங்கடலும் நிலனும் மணிவரையும்
செய்ய சுடர் இரண்டும் இவையாய நின்னை நெஞ்சில்
உய்யும் வகை உணர்ந்தேன் உண்மையால் இனியாதும் மற்றோர்
தெய்வம் பிறிது அறியேன் திருவிண் நகரானே" (பெரியதிரு-6-3-6.)

"கூறேன் நெஞ்சு தன்னால் குணங்கொண்டு மற்றோர் தெய்வம்
தேறேன் உன்னை அல்லால் திருவிண் நகரானே" (பெரியதிரு-6-3-7.)

"பிறையாரும் சடையானும் பிரமனும் முன்தொழுது ஏத்த
இறையாகி நின்றான் தன் இணை அடியே அடைநெஞ்சே" (பெரியதிரு-6-10-9)

"பொங்குபுணரிக் கடல் சூழ் ஆடைநிலம் மாமகள், மலர்மா
மங்கை, பிரமன் சிவன் இந்திரன் வானவர் நாயகராய
எங்கள் அடிகள் இமையோர்தலைவர் உடைய திருநாமம்
நங்கள் வினைகள் தவிர உரைமின நமோ நாராயணமே" (பெரியதிரு-6-10-9)

"பெருநீரும் விண்ணும் மலையும் உலகு ஏழும்
ஒருதாரா நின்னுள் ஒடுக்கிய நின்னை அல்லால்
வருதேவர் மற்றுள்ர் என்று என்மனத்து இறையும்
கருதேன் தான் கண்ணபுரத்துறை அம்மானே" (பெரிய்திரு-8-10-2.)

"மற்றுமோர் தெய்வம் உளது என்று இருப்பாரோடு
உற்றிலேன் உற்றதும் உன்அடியார்க்கு அடிமை" (பெரியதிரு-8-10-3.)

எனத் திருமாலைப் புகழ்ந்தும்,

"தண்சேறை எம்பெருமான் தாள் தொழுவார்
காண்மின் என் தலைமேலாரே" (பெரியதிரு-7-4-1)

'வம்பலரும் தண்சோலை வண்சேறை வானுந்து கோயில்மேய
எம்பெருமான் தாள் தொழுவார் எப்பொழுதும்
என்மனத்தே இருக்கின்றாரே" எனத் (பெரியதிரு-7-4-2)

திருமாலின் திருத்தொண்டரைப் புகழ்ந்தும் அருளிய இத் திருஆழ்வார்,
'வெந்தார் என்பும் சுடுநீறும் மெய்யில்பூசிக் கையகத்து ஓர்

சந்தார் தலை கொண்டு உலகு ஏழும் திரியும் பெரியோன் தான்சென்று என்
எந்தாய் சாபம் தீர் என்ன இலங்கு அமுது நீர் திருமார்பில்
தந்தான் சந்தார் பொழில் சூழ்ந்த சாளக்கிராமம்' (பெரிய திரு-1-5-8)

'திங்கள் அப்பு வான்எரிகால் ஆகி திசை முகனார்
தங்கள் அப்பன் சாமி அப்பன் பாகத்து இருந்த வண்டுஉண்
தொங்கல் அப்பு நீள் முடியான் சூழ்கடல் சூழ நின்ற
எங்கள் அப்பன் எம்பெருமான் எவ்வுள் கிடந்தானே' (பெரிய திரு-2-2-7)

நக்கன், ஊன்முகமார் தலை ஓட்டு ஊண் ஒழித்த எந்தை'' (பெரிய திரு-3-4-2)

'வாளையார் தடங்கண் உமைபங்கன் வன்சாபம் அற்று அதுநீங்க
மூளையார் சிரத்து ஐயம் முன் அளித்த எம்முகில்வண்ணன்'(பெரிய திரு-4-2-8)

'இந்துவார் சடைச்சனைப் பயந்த நான் முகனைத் தன் எழிலாரும்
உந்திமாமலர் மீமிசைப் படைத்தவன்' (பெரிய திரு-4-2-9)

'ஊனமர் தலையொன்றேந்தி உலகெல்லாம் திரியுமீசன்
ஈனமர் சாபம் நீக்காயென்ன வொண்புனலை ஈந்தவன்' (பெரிய திரு-5-9-4)

'பிறையாரும் சடையானும் பிரமனும் முன்தொழுது ஏத்த
இறையாகி நின்றான் இணை அடியே அடை நெஞ்சே' (பெரிய திரு-6-9-9)

'நெற்றிமேல் கண்ணானும் நிறைமொழிவாய் நான்முகனும்
நீண்ட நால்வாய்
ஒற்றைக்கை ஒண்பகட்டில் ஒருவனையும் உள்ளிட்ட அமரரோடும்
வெற்றிப்போர் கடலரையன் விழுங்காமல் தான் விழுங்கி உய்யக்கொண்ட
கொற்றப்போர் ஆழியான் குணம்பரவாச் சிறுதொண்டர்கொடியராவரே'
(பெரிய திரு-11-6-3)

எனத், தம்மால் இகழ்ந்து அருளப்பட்ட திருச்சிவபெருமானார்க்கு எழுபது திருக்கோயில்களைக் கட்டுவித்து, அச்சிவபெருமானாரைத் தன் முழுமுதல் இறையவராகக் கொண்டு வணங்கினவன் ஆகிய கோச்செங்கணான் சேர்ந்த கோயில் என அச் செங்கணானைப் புகழ்ந்து பாடுவரோ? புகழ்ந்துபாடார். திருமாலை அன்றிப் பிறரை முழுமுதல் இறையவர் எனக்கொள்ளாத இயல்பினர் ஆதலால். திருமாலின் திருத்தொண்டர் அல்லரைப்பிற தேவரின் தொண்டரை மக்கள் இனத்தராக வைத்தும் மதியாத இயல்பினர் ஆதலால். இவ்வேதுவினால்; கோச்செங்கணான் திருமாலுக்குத் திருப்பணியைச் செய்திலனாயின் அவனைத் திரு ஆழ்வார் புகழ்ந்து பாடினார் என்பார் உரை, போலி உரையேமற்று என்னை?

'செம்பொன் முத்தும் மணியும் கொணர்ந்து
படைமன்னவன் பல்லவர் கோன் பணிந்த
செம்பொன் மாடங்கள் சூழ்ந்த தில்லைத்

திருச்சித்ர கூடம் சென்று சேர்மின்களே' எனவும், (பெரியதிரு-3-2-3)
'செங்கோல் வளவன்தான் பணிந்து ஏத்தித் திகழும் ஊர்
எங்கோன் நறையூர் நாம் தொழுதும் எழு நெஞ்சமே'எனவும்.(பெரியதிரு-6-4-3)

இத்திருப்பாவை (பெரியதிரு–6–6–8ஐ) அருளிய திரு ஆழ்வாரே அருளிய குறிப்பால் (ஒருகாலத்தில் ஒரு காரணத்தால் திருக்காஞ்சித் திருப்பதியில் எட்டுத் திருக்கைகளை உடையராய் விளங்கிய)திருமாலுக்கே, திருநறையூர் என்னும் திருப்பதியுள் வானுறும்படி எழுச்சியை–உயர்ச்சியை–உடையதாகிய திருக்கோவிலைக் கட்டுவித்த வளச்சோழன்–கோச் செங்கணான்–எனவே பொருள் கோடல் வேண்டும் இப்பெற்றிய பொருள்தான் கவிக் கருத்து ஆகும். அன்றி, எழுபது திருப்பதிகளில் எழுபது திருக்கோவில்களை (ஒருகாலத்தில் திருக்காஞ்சித் திருப்பதியில்) எட்டுத் திருக்கைகளை உடையராய் விளங்கிய திருமாலுக்குக் கட்டுவித்த வளச்சோழன்–கோச்செங்கணான்–என்னலும் ஆம். மற்று,

திருநறையூர் என்னும் திருப்பதியில் வானுறும்படி எழுச்சியை – உயர்ச்சியை–உடைய திருக்கோவிலைத், திருமாலுக்குக் கட்டுவித்தவரும் செந்தமிழ்த் தேசத்தை அரசாண்ட பெருமையை உடையவரும் ஆகிய சோழர்தம் குடியில் பிறந்த வளச்சோழன்–கோச்செங்கணான்-என்றுவது, எழுபது திருப்பதிகளில் எழுபது–எழுபத்துத் திருக்கோவில்களைத் திருமாலுக்குக் கட்டுவித்தவரும் செந்தமிழ்த் தேசத்தை அரசாண்ட பெருமையை உடையவரும் ஆகிய சோழர்தம் குடியில் பிறந்த வளச்சோழன்–கோச்செங்கணான்- என்றுவது பொருள் கொண்டு திருக்கோவிலைத்—திருக் கோவில்களைத்—திருமாலுக்குக் கட்டுவித்த செயலை, வளச்சோழன்தன்–கோச்செங்கணான்தன்–முன்னோர் செயலாகக் கோடலும் ஆம். என்னை? 'உலகம் ஆண்ட திருக்குலம்' என்ற தொடரில் 'ஆண்ட'என்பதாகிய பெயரெச்சம் இறந்தகாலத்தை விளக்கித் திருக்குலம் என்னும் பெயரை அவாவி நிற்கின்ற சிறப்பால்.

இவ்வாய்வு உரையில் கூறப்பட்ட ஏதுக்களால், இத் திருப்பாவில் அமைந்துள்ள (பெரியதிரு–6–6–8ல்) **'எண்தோள் ஈசன்'** என்ற தொடர்க்கு **'எட்டுக் கைகளை உடைய சிவபிரான்'** எனப் பொருள்கொள்ளின், அப்பொருள் கவிக்

கருத்தாகாது. 'எட்டுக்கைகளை உடைய திருமால்' எனப் பொருள் கொள்ளின், அப்பொருளை கவிக்கருத்தாகும் எனக. இத் திருப்பாவில் கூறப்பட்ட (பெரியதிரு-6-6-8ல்) 'வளச் சோழன்' என்பானும், பெரியதிருமொழி 6-4-3ல் கூறப்பட்ட 'செங்கோல் வளவன்' என்பானும் ஒருவனே ஆவன. அவ்விருவகைப் பத்தினும் கூறப்பட்ட "திருநறையூர், திருநறையூர்' என்பன ஒரு திருப்பதியேயாகும். அக் குறிப்பால் (பெரியதிருமொழி-6 4-3ல்) செங்கோல்வளவன் தான் பணிந்து ஏத்தித்திகழும் ஊர் நங்கோன நறையூர்'' என்று அருளிய திருஆழ்வார், இத்திருப்பாவில் (பெரிய திரு-6-6-8ல்) 'எண்தோள் ஈசன்' என்ற தொடரை 'எட்டுக் கைகளை உடைய சிவபெருமான்' என்னும் பொருள்கொண்டு அருளி இரார் என்பதனை ஆழ்ந்து சூழ்ந்து தெளிக.

ஈசன் என்னும் பெயர், திருச் சிவபெருமானுக்கே உரிய சிறப்புப்பெயர் அன்று; அப்பெயர், பகவன்-பகவான்-என்னும் பெயர்போலத் திருமாலுக்கும் - பிறர்க்கும் ஆம் பொதுப்பெயர். என்னை?

ஈசன் என் கருமாணிக்கம் என் செங்கோலக் கண்ணன் விண்ணோர்
நாச(ய)கன் எம்பிரான் எம்மான் நாராயணனாலே' (திருவாய்-2-7-1)
'கார்த்தண்கமலக் கண் என்னும் நெடுங்கயிறுபடுத்தி என்னை
ஈர்த்துக் கொண்டுவிளையாடும் ஈசன் தன்னைக் கண்டீரே' (நாய்ச்சி-14-4)
'மாதவன் என்மணியினை வலையில் பிழைத்த பன்றிபோல
ஏதும் ஒன்றும் கொளத்தாரா ஈசன் தன்னைக் கண்டீரே' (நாய்ச்சி-14-5)
'எம்பெருமான் ஈசன் எழில் வேங்கடமலைமேல்
தம்பகமாய் நிற்கும் தவமுடையேன் ஆவேனே' (பெருமாள் திரு-4-5)
'ஞானத்து உருவாகிய ஈசன் எந்தை' (பெரியாழ்-3-5-5)
'கொம்பராவும் நுண்மருங்குல் ஆயர் மாதர் பிள்ளையாய்
எம்பிரானும் ஆயவண்ணம் என்கொலோ எம் ஈசன்' எனத் (திருச்சந்த-35)
திருஆழ்வார்கள் அருளிவைத்த திருப்பாக்களின் பொருள்களை நினைக்க. மற்று,
'கொடுங்கயலாய் நெடும் வெள்ளம் கொண்டகாலம்
குலவரையின் மீது ஓடி அண்டத்து அப்பால்
எழுந்து இனிது விளையாடும் ஈசன் எந்தை' (பெரியதிரு-6-6-2)
மஞ்சுஆடு வரைஏழும் கடல்கள் ஏழும்
வானகமும் மண்ணகமும் மற்றும் எல்லாம்
எஞ்சாமல் வயிற்று அடக்கி ஆலின்மேல் ஓர்
இளந்தளிரில் கண்வளர்ந்த ஈசன் தன்னை' (பெரியதிரு-2-10-1)
'வங்கமலி தடங்கடலுள் வானவர்களோடு
மாமுனிவர் பலர்கூடி மாமலர்கள் தூவி
'எங்கள் தனி நாயகனே எமக்கு அருளாய் என்னும்
ஈசன் அவன் மகிழ்ந்து இனிது மருவிஉறை கோயில்' (பெரியதிரு-3-9-9)

'எங்களுக்கு அருள் செய்கின்ற ஈசனை' (பெரிய திரு-7-10-3)
'விளங்காய் விழக் கன்று வீசிய ஈசனை' (பெரிய திரு-7-10-8)
'என்னை ஆளுடை ஈசனை எம்பிரான் தன்னை' என (பெரிய திரு-10-1-2)

இத்திருப்பாவை (பெரிய திரு-6-6-8ஐ) அருளிய திரு ஆழ்வாரே, திருமாலை ஈசன் எனும் பொதுப்பெயரால் புகழ்ந்தருளி இருத்தலையும் நோக்க.

ஈசன் எனும் பொதுப்பெயர், திருமாலுக்கும் உரித்து ஆதலானும், பெரிய திருமொழி இரண்டாம்பத்து எட்டாந் திருமொழி முற்றும்—பத்துப் பாக்களிலும்—"அட்டபுய கரத்தேன் என்றார், அட்டபுயகரத்தேன் என்றார்" எனவும், பெரிய திருமொழி-8-1-6ல் "எண்தோளன் என்கின்றாளால்" எனவும், பெரிய திருமடலுள் நூற்று இருபத்து எட்டாவது கண்ணியில் "அட்டபுயகரத்து எம்மான் ஏற்றை" எனவும், (பண்டு ஒரு காலத்தில் திருக்காஞ்சித் திருப்பதியில் திருமால், எட்டுத் திருக்கைகளை உடையராய் விளங்கிய திரு உருவைச் சுட்டியே) அத் திருமாலை "எட்டுத் திருக்கைகளை உடைய பெருமாள்" என்னும் பொருளை அமைத்து இத் திருப்பாவை (பெரிய திரு-6-6-8ஐ) அருளிய திரு ஆழ்வாரே அருளி இருத்தலாலும், இத் திருப்பாவில் (பெரிய திரு-6-6-8ல்) அத் திரு ஆழ்வாரே அருளிய "எண் தோள் ஈசன்" என்ற தொடர்க்கு "எட்டுத் திருக் கைகளைஉடைய திருமால் எனப் பொருள்கோடற்கு ஐயம் என்னை? அப்பொருளைக் கோடலால் இழுக்கு என்னை? ஐயமின்றி "எட்டுத் திருக்கைகளை உடைய ஈசன்—திருமால்"-எனவே பொருள் கொள்ளலாம். இப் பொருளைக் கோடலால் இழுக்கு ஒன்றும் இன்று. இப் பொருளே கவிக்கருத்து ஆதலால். அத்தொடர்க்கு "எட்டுத் திருக்கைகளை உடைய ஈசன்—சிவபிரான்" எனப் பொருள் கோடலே இழுக்கு ஆகும். 'ஈசன்' என்னும் பொதுப் பெயர்க்குச் 'சிவபிரான்' என்னும் பொருள் இவண் கவிக் கருத்து அன்று ஆதலால்.

திவ்யப் பிரபந்தத்தின் முன் உரைகாரர், தம்மால் எழுதப்பட்ட போலிப்பொருளைத் தாங்குதற்குரிய மதலை ஆம் என எண்ணிக் "கோச்செங்கண்ணான், முன்னர்ச் சைவசமயத்தை மேற்கொண்டு ஒழுகினான் அக்காலத்தில் அவன், திருச் சிவபெருமானார்க்கு எழுபது—எழுபத்துத் திருக்கோவில்களைக் கட்டுவித்தான். அவன் பின்னர்ச், சைவசமயம் சிறப்பு இலது என்பதனை

உணர்ந்து திருமால் சமயத்தை மேற்கொண்டு ஒழுகினன் என ஒரு வரலாற்றுக் குறிப்பை எழுதிவைத்தனர் தம் உரை நூலுள். அவ்வுரைகாரர் எழுதிவைத்த அவ்வரலாறு போலிவரலாறே. என்னை? திரு ஆழ்வார்கள் அருளிய திருப்பாக்களில் அவ்வரலாற்றுக் குறிப்பு இல்லாமையாலும், அப்பொருள் கோடற்கு உரிய ஏது ஒன்று எந்நூலகத்தும் அறிதற்கு இன்மையாலும் என்க. கோச்செங்கண்ணன், தான் மேற்கொண்டு ஒழுகிய சைவ சமயத்தை வெறுத்துப் பின்னர்த், திருமால் சமயத்தை மேற்கொண்டு ஒழுகினன் என்று சொல்லிவைத்தால், தாம் வழிபடும் திருமால் சமயத்துக்கு ஒரு சிறப்பு உண்டாம் என எண்ணிய தம் பேதைமைப்புத்தியால் உண்மையில் பொருந்திக்கிடந்த திருமால் சமயத்தின் செவ்விய சிறப்பைச் சிதைத்துத் திருமால் சமயத்துக்கு ஒரு இழிவைப் புகுத்தி ஈசன் என்னும் பொதுப் பெயர்க்குச் சிவபிரான் எனச் சிறப்புப் பொருளை எழுதிவைத்தனர் என்பதனை அறிக.

பேதைமை என்பது ஒன்று இயாதெனின் ஏதங்கொண்டு ஊதியம் போக விடல்'' என்ற முதுமொழியை அவ்வுரைகாரர் புதுப்பித்துப் பாதுகாத்தார் போலும். மற்று,

திருமங்கை மன்னராகிய இத் திரு ஆழ்வார் அருளிய பெரியதிருமடலுள் (கண்ணி-128-ல்) அமைந்துள்ள (மேலே குறிப்பிடப்பட்ட) "அட்டபுயகரத்து எம்மான் ஏற்றை'' என்ற தொடர்க்குத் தங்கள் இனத்தாரால் வழங்கப்படும் கருவேப்பிலை நொடையும் குறத்திமொழியும் தமிழால் "அட்டபுயகரத்தில் உள்ள அஸ்மதஸ்வாமி சிகாமணி'' எனப் பொருள் எழுதிவைத்தார் 'திவ்யப்பிரபந்த திவ்யார்த்த தீபிகை'' என்னும் உரை நூல்காரர். அவர் எழுதிவைத்த அப்பொருள் கவிக்கருத்து அன்று. அப்பொருள் அவரின் கருத்தே. ஆதலால், அப்பொருள் போலிப்பொருளெனப் புறக்கணித்தற்பாலதே. என்னை? (அட்டபுயகரம்) என்பதில் "கரம்'' என்பதனைக் கோவில் என்னும் பொருளைச்சுட்டிய "க்ருஹம்'' என்னும் வடமொழியின் திரிந்த தமிழ்மொழி எனத் திரிபாக உணர்ந்தார்போலும் அக் "கரம்,' என்பது அவரால் கருதப்பட்ட வடமொழியில் உள்ள க்ருஹம் என்பதன் திரிபுமொழி அன்று. "புயகரம்'' என்பது இருமொழிப்பெயர்—இருமொழியும் வடமொழியின் திரிபாலாய இரு பெயர் ஒட்டுப்

பண்புத் தொகைத்தொடர் எனக்கொள்க. "புயகரம்'' என்னும் அத்தொடரின் பொருள், கை என்பதே-தோள் என்பதே-ஆதலால் (புயம்: கை. கரம்: கை.) இத்திரிபுப் பொருளை உரைத்த செயலால் அவர் செந்தமிழ் ஆசிரியர் செந்தமிழ் மொழியுள் பெயர்களை ஒருமொழிப் பெயர், இருமொழிப்பெயர், பன்மொழிப்பெயர் என வகைபடுத்தி வழங்கியுள்ள வழக்கை அறிந்திலர் என்பதனை அறிக. அத்திருமடல் கண்ணியுள் அமைந்துள்ள "அட்டபுய கரத்து எம்மான் ஏற்றை'' என்ற தொடரின் உண்மைப் பொருள் என்னை எனின், புயகரம் என்பதனை இருபெயர் ஒட்டுத் தொடராகக்கொண்டும், "எம்மான் ஏற்றை'' என்ற தொடரை "எம் ஆன் ஏற்றை'' எனப் பிரித்தும் "எம்முடைய ஆன் இனத்துக்காளை போல்வான் ஆகிய திருமாலை'' என, உவமைத் தொகைப் புறத்து அன்மொழிப்பெயராகக் கொண்டும் 'எட்டுத்திருக்கைகளைஉடைய எம்முடைய ஆன் இனத்துக் காளைபோல்வானாகிய திருமால்' என்பதே பொருள் எனத்தெளிக இவ்வுண்மைப்பொருளை உணர்ந்திலர் திவ்யார்த்ததீபிகைஉரைகாரர்என்பதனை அவரால் எழுதப்பட்ட உரை நூலைக்கண்டு தேறுக. இவ்வாய்வு உரையுள் காட்டப்பட்ட ஐந்துவகைப் புராண வரலாறு களால் ஆய ஏதுக்களால் திரு ஆழ்வார்கள் அருளிய திவ்யப் பிரபந்தத்தின் திவ்யார்த்த தீபிகை உரைகாரரும், அவரின் முன்னோராகிய உரைகாரரும், திரு ஆழ்வார்கள், தம் தம் திருப்பாக்களில் அமைத்தருளிய பண்டைய புராண வரலாறுகளின் உண்மைகளை உள்ளபடி உணராதவராயினர் என்பதனை அறிக. அவ்வுரைகாரரால் அறியப்படாதனவாகிய பிற வரலாற்றுக் குற்றங்களையும் அவ்வுரைகாரரின் உரை நூற்களைக் கற்று அறிக.

எம். முன் ஆசிரியர் எழுதிவைத்த உரை நூற்களுள் உள்ள வரலாறுகளைத்தான் (இவ்வாய்வு உரையுள் முன்னர்ப் பிழை எனக் காட்டப்பட வரலாறுகளைத்தான்) யாம் கொளவேம் எனவும், (பெரியதிரு-6-6-8ல் உள்ள) "என் தோள் ஈசன்'' என்ற தொடர்க்கு 'எட்டுப் புஜங்களை உடைய ஈசன்-சிவபிரான்''-எனத் திருச்சிவபிரானையே'' பொருளென எழுதிவைத்திருப்பதால், அப்பொருள், கவிக்கருத்து அன்றாயினும், "இஷ்டவிரோதம்'' என்னும் குற்றம் உடைத்து ஆயினும், திருமால் சமயத்துக்கும்

திரு ஆழ்வார்தம் பெருமைக்கும் பெரும் இழிவைத் தருவது ஆயினும், அப்பொருளைத்தான் யாம் கொள்வேம் எனவும், எட்டுப்புஜங்களை உடைய ஈசன்—திருமால்—என, பிறரால் உரைக்கப்பட்ட பொருள் கவிக்கருத்தே ஆயினும், சிறப்பு உடைத்தே ஆயினும் திருமால் சமயத்துக்கும், திரு ஆழ்வார்தம் பெருமைக்கும் பெரும் பெருமையைத் தருவதே ஆயினும், அப்பொருளை—எம் முன் ஆசிரியர், தம் உரை நூலுள் எழுதி வைத்திலாமையால் அப்பொருளை யாம் கொள்ள கில்லேம் எனவும், திவ்யப் பிரபந்த திவ்யார்த்த தீபிகை உரைகாரர் கூசாது கூறிவிடுவர் என்பதனை யான் அறிகுவென். அறிந்தேதான் இவ்வாய்வு உரையை யான் எழுதினேன். என்னை?

"நம்மாழ்வாரோ மதுரகவிகளோ தம் கைபட எழுதி வைத்த புத்தகம் என்று ஒன்று கிடைத்தாலும் நம் பூருவாசாரியர்கள் கொண்ட பாடத்திற்கு மாருக ஒரு ரேகை இருந்தாலும் கொள்வோமல்லோம்" என எழுதிவைத்தார் 'அஞ்சல்ஓதி' என்னும் மாதர் மயிரைப்பற்றிய ஆராய்ச்சிப்பொருட்டுஎழுதப்பட்டுச் "செந்தமிழ் ஆராய்ச்சி" எனப் பெயர்வைக்கப்பட்டுத் தம்மால் வெளியிடப்பட்ட புத்தகத்தில் ஆதலால். அச்செந்தமிழ் ஆராய்ச்சி என்னும் நூலுள் செந்தமிழைப்பற்றிய ஆராய் சி ஒன்றும் இல்லை. அந்நூலுள் செந்தமிழ் மொழியையும் செந்தமிழ் ஆசிரியன்மாரையும் இழித்துஉரைத்த வசைமொழிகளே மிகுதியாகக் கிடக்கின்றன. ஆதலால் அந்நூலுள் அவரால் எழுதப்பட்ட அஞ்சல்ஓதி என்னும் மாதர்மயிரைப் பற்றிய ஆராய்ச்சியைச் சுட்டிச் சொல்லிவைத்தேன் என்க.

திவ்யப்பிரபந்த திவ்யார்த்த தீபிகை உரைகாரரைத் தெருட்டும்பொருட்டு இவ்வாய்வுஉரையுள் காட்டப்பட்ட ஐவகைப் பிழைகளையும்—திருத்தங்களையும் யான் எழுதவில்லை. இத்திருத்தங்களால் திரு ஆழ்வார்கள் அருளிய திவ்யப் பிரபந்தத்தின் பிற வுரைகாரர்தம் செந்தமிழின் செந்நெறியைச் சேராமல் அகன்ற அறிவுகளையும் செந்தமிழின் செந்நெறியைச் சேர்ந்து நுணுகிய அறிவை உடையார் கண்டு களிப்பானும், இத் திருத்தங்களின் இறப்பை ஆய்ந்து அறிந்து கழிபபானும் இத் திருத்தங்களை யான் எழுதினேன் என்க. மற்று,

திவ்யப்பிரபந்த திவ்யார்த்ததீபிகை என்னும் உரைகாராகிய திரு அண்ணங்கராசாரியர் என்பவர், "எம், பூருவாசாரியர்களகொண்ட பாடத்திற்குப்-பொருளுக்கு-மாறுக வேறு ஒரு பாடத்தை-வேறு ஒரு பொருளை யாம் கொள்ளேம்" என எழுதிவைத்தார் அல்லாமல், அக்கொள்கை அவரின் செயலில் இல்லை என்பது நினைத்தற்பாலது மற்றொன்று. என்னை? அவர் தம்மால் எழுதப்பட்ட "திவ்யப் பிரபந்த திவ்யார்த்த தீபிகை" என்னும் உரை நூலுள் (பெரியதிருமொழி-10-2-4ல்) அமைந்துள்ள "அஞ்சல் ஓதி" என்ற தொடர்க்குத் தம் முன் ஆசிரியர் எழுதிவைத்த "இருட்சி, சுருட்சி, நீட்சி. குளிர்ச்சி, அழகு என்னும் ஐவகைப் பொருள்களையும்மறுத்து அவற்றுக்கு மாறுக் "சுருட்சி, நீட்சி. குளிர்ச்சி, அழகு பரிமளம்-என்று ஐந்துவகைப்பட்ட குணங்களை உடைத்தாய் ராத்திரிபோலக் கறுத்திருக்கின்ற கூந்தலை உடையாளான பிராட்டி" என வேறு ஐவகைப் பொருள்களையும் எழுதிவைத்தார் ஆதலால். மற்று, முன்னர் 'இருட்சி'ப் பொருளைக்கூறிய அவர், பின்னர்க் கறுத்திருக்கின்ற கூந்தல் எனக் கருமைப்பொருளைக் கூறிவைத்ததனால் அவர், 'கூறியது கூறல்' எனும் குற்றத்தையும் உணராதவர் ஆயினர் என்பதனையும் நினைக்க மற்று.

பெரிய திருமொழி-7-5-3ல் 'வண்டினங்கள் அம்பு அராவும் கண்மடவார் ஐம்பால் அணையும்" என்ற தொடரில் அமைந்துள்ள 'ஐம்பால்" என்பதற்குக் "கந்தம், மந்து, மார்த்தவம் ஸ்நிக்தை, குளிர்ச்சி, இருட்சி" எனத் தம் முன்னாசிரியர் எழுதிவைத்த ஐவகைப் பொருள்களையும் மறுத்துச் "சுருண்டிருத்தல், நீண்டிருத்தல், அடர்ந்திருத்தல், கறுத்திருத்தல், நறுமணங்கொண்டிருத்தல்" எனத் தம் கருத்தாகிய ஐவகைப் பொருள்களையும் எழுதிவைத்தார். அன்றித் திரு எழுகூற்று இருக்கையுள் அமைந்துள்ள "ஐம்பால் ஓதியை" என்றதொடர்க்கு "மென்மை, குளிர்ச்சி, நறுமணம், கருமை, நெடுமை" என்னும் ஐந்து லட்சணங்கள் அமைந்த கூந்தலை உடையளான பிராட்டியை" எனப் பொருள் எழுதிவைத்தார். அப் பொருளால் (பெரிய திருமொழி-7-5-3-லும்; 10-2-4-லும்) தம் முன்னாசிரியர் கொண்ட பொருள்களை மறுத்ததன்றி அவற்றிற்குத் தம்மால் எழுதப்பட்ட

பொருள்களையும் தாமே மறுத்துக்கொண்டவராயினர் என்பதனை அவர் உணர்ந்திலர்போலும்.

பெரிய திருமொழி-7-5-3-லும் 10-2-4லும் தம் முன்னுசிரியர்கொண்ட பொருள்களை மறுத்ததால், தம்மின் முன்னுசிரியர் கருத்தைப் பாதுகாப்பவர் எனத் தம்மைச் சொல்லிக்கொள்வது சொல் அளவே அல்லாமல் செயல் அளவில் தம் முன் ஆசிரியர் கருத்தைப் புறக்கணித்தவரே ஆயினர் என்பதனை அவர் உணர்ந்திலர்போலும். என் முன்னுசிரியன்மார் கொண்ட கருத்துக்கு மாருக யான் திவ்யப்பிரபந்தத்துள் ஒரு இரேகை மாத்திரமும் கொள்ள கில்லேன்-கொண்டிலேன்—எனத் திவ்யார்த்த தீபிகை உரைகாரர் கூறுதல் எற்றுக்கு எனின், தம் பிழையை எடுத்துக்காட்டி விஞவினர்க்கு நேரிய நெறியைக்காட்டி விடை இறுத்தற்கு இயலாமையால் (தாம் பிழை செய்யவில்லை எனத்) தம் பிழையை எடுத்துக்காட்டினுரை வஞ்சித்தல்பொருட்டே என் முன்னுசிரியன்மார் கொண்ட கருத்துக்கு மாருக யான் திவ்யப்பிரபந்தத்துள் ஒரு இரேகைமாத்திரமும் கொண்டிலேன் எனக் கூறித் தப் பிழையை தம்மின் முன்னுசிரியர் மாட்டுச் சார்த்திச் சொல்லி விடுதல் அவரின் வழக்கு என்க.

சொல்லொடு பொருந்தாச் செயலாளராகத் தம்மைச் செய்விக்கும்செவ்வைஅற்ற அறிவை வைத்துக்கொண்டு "கள்ளன் தமிழ், பள்ளன் தமிழ்" எனச் செந்தமிழ் மொழியையும் "கள்ளன், பள்ளன், புலையன்," எனச் செந்தமிழ்மொழி ஆசிரியன்மாரையும் பழித்து எழுதிய அவரின் சிறுசெயலைச் செந்தமிழ் உலகு கண்டுவைத்துளது. கண்டு வைத்தும் செந்தமிழின் செந்நெறியை அறியார் சிற்றினத்தாரின் சிறுசெயலைப் பொறுத்துக்கோடலே செவ்வைசேர்ந்த புலமைக்கு அழகுஎன்பதனை நினைத்துச் செந்தமிழ் உலகு அவரின் சிறு செயலைப் பொருளெனப் போற்றுமல் புறக்கணித்துளது என்பதனைத் திவ்யப் பிரபந்த திவ்யார்த்த தீபிகை உரைகாரரை அவரின் ஆகூழ் உணர்த்துவதாக என வாழ்த்தி இம்முதல் ஆய்வு உரையை இவ்வளவில் முடித்துவைத்தேன் என்க. (ரு)

**முதல் ஆய்வு உரை முற்றிற்று.**

**திரு ஆழ்வார்கள் திரு மொழி திகழ்க.**

## இரண்டாவது ஆய்வு உரை: கிளை—1.

திருப் பேரருளாளப் பெருமாள் தம் திருஅடிகட்கு வணக்கம்.

திவ்யப்பிரபந்த திவ்யார்த்த தீபிகை உரைகாரரின் திசைச்சொல் உணராச்செயலை இவ்விரண்டாவது ஆய்வு உரை விளக்குதலை அறிக.

"புட்டியில் சேறும் புழுதியும் கொண்டுவந்து
அட்டி அமுக்கி அகம்புக்கு அறியாமே
சட்டித் தயிரும் தடாவினில் வெண்ணெயு முண்
பட்டிக் கன்றே கொட்டாய் சப்பாணி
பற்பநாபா கொட்டாய் சப்பாணி"(பெரியாழ்-1-6-5)

இத்திருப்பாவிற்குத் திவ்யார்த்த தீபிகை உரை: "திருவரையில் படிந்த-சேற்றையும்-புழுதி மண்ணையும்-கொணர்ந்து வந்து-(என்மேல்) இட்டு உறைக்கப்பூசி- வீட்டினுள் புகுந்து-(எனக்குத்) தெரியாதபடி- சட்டியில் வைத்திருக்கும் தயிரையும்- மிடாக்களிலே இருக்கிற- வெண்ணெயையும்- உண்ணுகின்ற- பட்டி மேய்ந்து திரியுங் கன்றுபோன்றவனே!- சப்பாணி கொட்டாய்-; (ப்ரஜாபதி பிறப்பதற்குக் காரணமான) தாமரைப் பூவைக் கொண்ட நாபியை உடையவனே!- சப்பாணி கொட்டாய்-; என்பது.

இப்பொருத்தமற்ற பொருளைப் பொருத்திவைப்பான் "பட்டிக்கன்றே- பட்டி தின்று திரியும் கன்று போலே நெய் பால் தயிர்களைக் களவினால் தின்று திரிவதையே பொழுதுபோக்காக உடையவனே! என்றவாறும்;" என ஒரு குறிப்பும் எழுதிவைத்தார் தீபிகை உரைகாரர். இப்பொருளும் குறிப்பும் திவ்யார்த்த தீபிகை உரை நூலுள் உள்ளன. இவற்றின் சிறப்பையும் இழிபையும் ஆய்ந்து அறிக. அப்பொருள் போலிப் பொருளே. என்னை?

'புட்டி' என்பதற்குத் 'திருஅரை'—இடை—எனவும், 'புழுதி' என்பதற்குப் 'புழுதிமண்'—வண்டல்பொடி—எனவும, 'அமுக்கி' என்பதற்கு 'உறைக்கப்பூசி' எனவும் 'பட்டிக்கன்று' என்பதற்குப் 'பட்டிதின்று திரியும் கன்று' எனவும், பொருள்களை எழுதிவைத்தார் ஆதலால்.

'புட்டி' என்பது ஒருவகை வட்டில்- கிண்ணம். அது, சந்தனம் முதலிய வற்றாலாய சேற்றையும், கத்தூரி முதலியவற்றாலாய சுண்ணத்தையும் பெய்து வைத்தற் காம்கருவிப்பொருள். 'திருஅரை' அல்லது இடைஅன்று. 'சேறு' என்பது பசியகற்பூரம் கலந்த குங்குமப்பூவொடு சந்தனத்தையும் அகிலையும் தேய்த்துக் கரைத்ததனா லாய ஒருவகைக் குழம்பாயபொருள். தண்ணிய நீரொடு மண்கலந்து கரைந்த சேறு அன்று. 'புழுதி' என்பது புழுகுநெய்—நானம்-கத்தூரி-முதலிய மணங்கலந்து இடித்

துப் பொடியாக்கப்பட்ட துகள்- சுண்ணம். வண்டல் மண்ணாகிய நுண்ணிய பொடியன்று. 'பட்டி' என்பதன் பொருள்: காளை, ஏறு, விடை என்பது அப்பட்டி எனும் பெயர், திசைச்சொல்லால் ஆய பெயர். 'அமுக்கி' என்பதன் பொருள் 'கட்டித்தழுவி', என்பது.

"பட்டிக்கன்று" என்பதனை இருபெயர்ஒட்டுப்பண்புத் தொகைத்தொடராகக்கொண்டு "காளையாகியகன்றுபோல் பவனே" என்னல்தான் கவிக்கருத்து. இப்பொருளே கவிக்கருத்து என்பது நினைவில் இருத்தற்பாலது. என்னை? ஆவினத்துக் காளையைச் சுட்டும் பெற்றம் என்னும் திசைச் சொல் பெயர்போலப் "பட்டி" என்பது ஆவு இனத்துக் காளைக்குத் திசைச்சொல்லால் ஒரு பெயர் ஆதலால். பட்டி, திசைச்சொல். பொருள்: காளை, விடை.

"பட்டி ஏறு உகந்து ஏறி" (அப்பர் தேவா. அண்ணாமலை)
"பட்டி வெள் ஏறு ஏறி" (அப்பர் தேவா. வெண்காடு)
"பட்டி ஏறு உகந்து ஏறரோ" (சுந்தரர் தேவா. நமக்கடி)
"பட்டி வெள் ஏறு உகந்து ஏறுவீர்,' (சுந்தரர் தேவா. முதுகுன்று)
"பட்டிப் பெருமான்" எனத் (சுந்தரர் தேவா. ஊர்த்தொகை)

திருச் சைவசமய ஆசிரியன்மார் திருச்சிவபெருமானார் ஊர்தியாகிய திருக்காளையைப் "பட்டி" என அருளி இருத்தலை நினைக்க. "பட்டிப் பெருமான்" என்ற தொடரில் "பட்டி" என்ற பெயரைக் "காளை—விடை" என்னும் பொருள்சுட்டித் தனிமையாக ஆண்டிருத்தலையும்நினைக்க.

கவிக்கருத்தை அறியாமையால் "புட்டி" என்பதற்குத் "திருஅரை" எனவும், "சேறு" என்பதற்குச் சேற்று மண் எனவும் "புழுதி" என்பதற்குப் "புழுதிமண்" எனவும் பொருள்களை எழுதிவைத்தார் திவ்யபிரபந்த திவ்யார்த்த தீபிகைஉரைகாரர். அவர் இத்திருப்பாவில் அமைந்துள்ள "கொண்டு வந்து" என்ற சொற்றொடரின் பொருளைச் சிந்தித்திலர். திருக்கண்ணபிரானார், தம் திருமேனியில் படிந்த சேற்றுமண்ணைத் தம் தாயாரின்மீது படிய தழுவினார் என்பது கவிக்கருத்து அன்று. திவ்யார்த்த தீபிகை உரைகாரர், "உறைக்கப்பூசி" என்றதன் கருத்து யாதோ? அதனை, அவர்தான் அறிகுவர்போலும். "அமுக்கி" என்பதற்கும் அவர் உரைத்த பொருள் கவிக்கருத்தன்று. என்னை? புட்டியில்--ஒருவட்டிலில்--கொண்டுவந்த சேற்றைச்—சந்தனக்குழம்பை - முன் கையில் பூசி, முகத்

திலும் மார்பிலும் மற்றொரு புட்டியில் கொண்டுவந்த சுண்ணத்தைத் தூவித் தழுவித் தம தாயாரை மகிழச் செய்து அம் மகிழ்ச்சியால் தம் செயலைத் தம் தாயார் சிந்தித்திருந்த காலத்தில் அவர் அறியாதபடி உள்ளே சென்று தயிரையும் வெண் நெய்யையும் உண்டார் திருக்கண்ணபிரானுர் என்பதே கவிக்கருத்து.

"பட்டி" என்பது மாடுகளால் மேயப்படும்—தின்னப் படும்—பொருள்களுள் ஒன்று அன்று. மாடுகளைப் பாது காத்தற் பொருட்டுச் செறித்து வைத்தற்குரிய இடப் பொருள்களுள் ஒன்று. இம்மாட்டைப்பட்டியில் அடைத்து வைக்க என்னும் உலகவழக்கை நினைக்க. இப்பொருள், இவண் கவிக்கருத்து அன்று. இத்திருப்பாவில் உள்ள "பட்டி" என்பதனைப் "பட்டிறு" என்பதன் திரிபுமொழி எனின்,பொருள்:மாயம்-வஞ்சனை என்பது. 'பட்டிக்கன்றே' என்ற தொடரின் பொருள்: மாயங்கள்—வஞ்சனைகள்— பல வற்றைச் செய்துகொண்டு திரிகின்ற காளையாகிய கன்று போல்பவனே! என்பது. "உண்பட்டிக்கன்றே" என்ற தொடரை வினைத்தொகைத் தொடராகக்கொண்டு இறந்தகாலத்தை விரித்துக் "கள்ளத்தால் தயிரையும் வெண் நெய்யையும் உண்ட" வஞ்சகனுகிய கன்றுபோல் பவனே என்னலாம்.

திருக்கண்ண பிரானுர் ஆய்ச்சியரிடையே பலவகை மாயங்களைச் செய்து விளையாடியவர் என்பது புராண வரலாறு. அவ்வரலாற்றினை இவண் நினைக்க. அன்றிக், காவலில் நில்லாமல், தன்னுல் திரியும் கன்று போல் பவனே! திருக்கோவிலுக்கு விடப்பட்ட காளைபோல் பவனே! என்னலும் ஆம். என்னை? (குறிஞ்சிக்கலி 15-ல்) "சிறுபட்டி" என்ற தொடர்க்குச் "சிறியனுகிய காவ லில்லாதவன்" எனப் பொருள் உரைத்து வைத்தார் உரை ஆசியர் ஆதலால். திருக்கோவிலுக்கு விலை இன்றி விடப்படும் காளைமாடு, ஒருவர் காவலில் நிற்பதில்லை. அது தன்னுல் திரிந்து வளரும் வழக்கை நினைக்க. இப்பொருள பொருந்தும் ஆயினும் இவண் கவிக்கருத்தன்று. என்னை? பட்டிக்கன்று என்ற தொடர் திசைச்சொல் கூடிய இருபெயர் ஒட்டு ஆதலால்.

திவ்யப்பிரபந்த திவ்யார்த்த தீபிகை உரைகாரர்க்கு அரைப்பொருளிலேதான் மிக விருப்பம்போலும். "புட்டி"

என்பதற்குத் "திருவரை" எனப் பொருள் எழுதினர் ஆதலால். சேறு, மார்பிலும் கை கால்கள் முதலிய எவ் வுறுப்புகளிலும் படாமல் அரையில் மட்டும் பட்டது என்ற அவரின் கருத்தை நினைக்க. "உறைக்கப்பூசி" என்ற தன் குறிப்பு என்னையோ? இடக்கர் அறியார் எதனையும் இயம்பு வர்போலும், "தினவடங்கச் சொல்லுகிறேன்" தினவடங் கக் கேட்க" என்று அவரால் எழுதப்படும் கருத்துப் பொருளோ? அதனை அவரே அறிகுவர்.

அஃது என்னை? திரு நாச்சியார் திருமொழியுள் "தெள்ளியார் பக்கல் தினவடங்கக் கேட்டறிக" எனவும் அவரால் எழுதப்பட்ட மாதர்மயிர் ஆராய்ச்சி நூலாகிய "செந்தமிழ் ஆராய்ச்சி" என்னும் நூலுள்ளே, "தினவடங் கச் சொல்லுகிறேன்" எனவும், அவர் எழுதி வைத்து இருத்தலைப்பார்த்து அவரின் சிற்றினச்செயலைத்தெளிக.

இவ் வுண்மைப்பொருளைத் திவ்யப் பிரபந்தத்தின் உரைகாரருள் ஒருவரும் உணர்ந்திலாமையால், அவ்வுரை காரர்யாவரும். செந்தமிழ் மொழியுள் வழங்கப்படும்திசைச் சொல்லை அறியாதவராயினர் என்பதனை அறிக. (௧)

இரண்டாவது ஆய்வு உரை முற்றிற்று.

திரு ஆழ்வார்கள் திருமொழி திகழ்க.

---

## மூன்றாவது ஆய்வு உரை: கிளை—1.

திருப் பேரருளாளப் பெருமாள் நம் திரு அடிகட்கு வணக்கம்.

வடமொழிகள் தற்பவதற்சமங்களின்பாத்திக்களாய்த் திரிபுற்றுச் செந்தமிழ் மொழியுள் கலப்புற்று இருத்தலை யும் திவ்யப்பிரபந்த திவ்யார்த்த திபிகைஉரைகாரர் உணர்ந்திலர் என்பதனை இம்மூன்றாவது ஆய்வு உரை விளக்கிக் காட்டுதலை அறிக.

"கஞ்சன் புணர்ப்பினில் வந்த கடிய சகட முதைந்து
வஞ்சகப்பேய் மகள்துஞ்ச வாய் முலை வைத்த பிரானே
'மஞ்சளுஞ்' செங்கழுநீரின் வாசிகையும் நாறுசாந்தும்
அஞ்சனமுங் கொண்டுவைத்தே னழகனே நீராடவாராய்"

(பெரியாழ்-2-4-4)

இத் திருப்பாவிற்குத் திவ்யார்த்த தீபிகை உரை: "கம்ஸனுடைய கபடமான ஆலோசனையினாலே—(நலிவதாக) வந்த—அசுராவேசத்தாலே) க்ரூரமான—சகடத்தை—(திருவடிகளால்) உடைத்து (முறித்துவிட்டு)—வஞ்சனையுள்ள—பூதனையானவள்—முடியும்படி—(அவளுடைய முலையிலே—வாயை வைத்த—உபகாரனே! (உன்மேனி நிறம்பெறும்படி சாத்துவதற்கு உரிய) மஞ்சளும்—மஞ்சனையும்—நீராடிய பிறகு சாத்திக்கொள்ளவேண்டிய) செங்கழுநீர் மாலையையும்—பரிமளிதமான சந்தனத்தையும்—(கண்களிலிடும்) மையையும் கொண்டுவைத்தேன்—;—அழகனே! நீராடவாராய்"—என்பது.

இப்பாடமும் பொருளும் "திவ்யபிரபந்த திவ்யார்த்த தீபிகை உரை" என்னும் நூலுள் உள்ளன. இவற்றின் சிறப்பையும் இறப்பையும உய்த்துணர்க. இப்பொருள் போலிப்பொருளே. கவிக்கருத்தன்று ஆதலால்.

இத்திருப்பாவில் அமைந்துள்ள "மஞ்சளும்" என்ற பாடம். பிழை. அப்பாடம், "மஞ்ச(ம)மும்" என இருத்தற்பாலது. பொருள்: மஞ்சம், பீடம். வீற்றிருத்தற்கு ஆம் முக்காலி—நாற்காலி போலும் ஒருவகைக் கட்டில். இலக்கணையால் மணை என்னலும் ஆம். ஆண்மக்களை மஞ்சளைத் தேய்த்து நீராட்டுதல் வழக்கில்லை என்பதனை நினைக்க. நீராடற்கு வாசிகையும், சாந்தும், அஞ்சனமும் வேண்டா. ஆதலால், "நீராடவாராய்" என்பது நோராடவாராய்" என இருத்தற்பாலது. என்னை? நோராடல்: ஒப்பனை செய்தல். தலைமயிரைப் படியச்செய்து முடித்து வாசிகையைச் சூட்டி, நெற்றியில் நாறும் சாந்தைத்தடவி, கண்கட்கு மையைத் தீட்டி முகத்தை நேர்மை செய்ய வருவாயாக என்பது கவிக்கருத்து ஆதலால். நீராட்டியபின்னர் அழகு செய்தற்கு 'மஞ்சம' முதலிய கொண்டு வைத்தார் எனலும் ஆம். ஆயினும், (நீராட்டலைக் குறிப்பிடாமல்) "நோராடவாராய்" என்பதே-அழகு செய்தற்கு வாராய் என்பதே-கவிக்கருத்தாகும் என்பது என் நம்பிக்கை. 'மஞ்சம' என்பது 'மஞ்சம்' என்னும் வடமொழியின் திரிபுமொழி என்பது நினைவில் இருத்தற்பாலது. மற்றும்,

திருப்பல்லாண்டு செய்யுள் 5.ல் 'இந்த்ர குலம்' என்னும் வடமொழித் தொடர் 'இண்டக்குலம்' எனத் திரிபுற்றிருத்தலையும் 'பந்தக்குலம்' என்னும் வடமொழித்தொடர் 'பண்டக்குலம' எனத் திரிபுற்றிருத்தலையும் திவ்யப்பிரபந்த திவ்யார்த்த தீபிகை உரைகாரர் உணர்ந்திலர் என்பதனை இந்நூலுள் முதல் ஆய்வு உரையுள், மூன்றுவது கிளையைக் கற்று அறிக. மற்று,

பெரிய ஆழ்வார் திருமொழி 1-8-9ல் 'இண்டைச் சடைமுடியீசன்' என்ற தொடரில் 'இந்து' என்னும் வடமொழி தற்சமத்தின் பாத்தியாய் 'இண்டை' எனத் திருபுற்றிருத்தலையும் திவ்யப்பிரபந்த திவ்யார்த்த தீபிகை உரைகாரர் உணர்ந்திலர் என்பதனை இந்நாலின் முதல் ஆய்வுஉரையில் நான்காவது கிளையுள் அறிக.

இவ்வாய்வு உரையுள் காட்டப்பட்ட ஏதுக்களினால் திவ்யப்பிரபந்த திவயார்த்த தீபிகை உரைகாரர் வடமொழியின் நின்று தென்மொழியுள் போந்துள்ள திரிசொற்களையும் உணர்ந்திலர் என்பதனை அறிக. (௬)

மூன்றாவது ஆய்வு உரை முற்றிற்று.

திரு ஆழ்வார்கள் திருமொழி திகழ்க.

---

## நான்காவது ஆய்வு உரை: கிளை-1.

### திருப்பேரருளாளப் பெருமாள் தம் திரு அடிகட்கு வணக்கம்.

திவ்யப் பிரபந்த திவ்யார்த்த தீபிகை உரைகாரர் உரிச்சொல்லை உணர்ந்து பொருளை உரைக்கும் வகையை அறியாதவர் என்பதனை இந்நான்காவது ஆய்வு உரை விளக்குதலை அறிக.

"வேறிசைந்த செக்கர்மேனி நீறணிந்த புன்சடை
கீறுதிங்கள் வைத்தவன் கைவைத்தவன் கபால்மிசை
ஊறுசெங்குருதியால் நிறைத்த காரணந்தன்னை
ஏறு சென்றடர்த்தவீச! பேசு கூச மின்றியே" (சந்தவிரு-42)

இத் திருப்பாவிற்கு முன் உரை:—"விலக்ஷணமாக ஸம்ஹார்த்த்ருவத்துக்குச் சேர்ந்த-சிவந்த கிருத்தமான வென்றபடி;-ஸரீரத்தையுடைய-பஸ்மத்தாலே தூளிதமான-(புன்) புன்மையை-பொல்லாமையை உடைய-ஜடையையுடைய-ரேகாமாத்ரமான-சந்த்ரனை-அந்த ஜடையிலே தரித்த ருத்ரனுடைய-கையிலே-லக்நமான-துர்மோசமானவென்றபடி; கபாலத்திலே-திருமேனியிலே ஊறுகின்றுள்ள—சிவந்த—ரக்தஜலத்தாலே—பூரித்த-ஹேதுவை—கூசமில்லாமலே-மேலவிழுந்து-எருதுகளை-கொன்ற-நிருபாதிக யெமன சீலனே! அருளிச்செய்யவேணும். "கூசமின்றியே பேசு" என்னவுமாம். அவதார கோபத்தைப் பாராதே அருளிச்செய்யவேணும்" என்பது.

இப் பொருளும் குறிப்பும் பெரிய ஆச்சான் பிள்ளை உரை என்னும் உரை நூலுள் பதவுரைப் பகுதியில் உள்ளன. மற்று,

"செக்கர்-சிவத்தல்-கோபித்தல் நீறணிந்த புன்சடை, பஸ்மோத்தூளித ஸர்வாங்கனாய் க்ருபணமான ஜடையையுடையவனாய் புன்மை-பொல்லாமை—' என்பது பெரிய ஆச்சான் பிள்ளை உரைநூலுள் வ்யாக்யானப் பகுதியில் உள்ள பொருள்.

இப்பொருளின் சிறப்பையும் இறப்பையும் உய்த்துணர்க. 'நீறணிந்த புன்சடை" என்னும் தொடர் பிழையுற்றது. அது "நீரணிந்த புன்சடை" என இருத்தற்பாலது. பண்டு எட்டில் எழுதியவர், இடையின "ர" கரத்துக்கு வல்லின "ற" கரத்தை எழுதி இப்பிழையை ஆக்கினர்போலும் திருச்சிவபெருமானார் தம் திருச்சடையில் "நீரைக்—கங்கையை" அணிந்திருப்பவர் என்பது புராண வரலாறு ஆதலால். அப்புராண வரலாற்றையும் நினைத்திலர் உரைகாரர். "நீறணிந்த" என்ற தொடரின் ஈற்றுப் பெயர் எச்சத்தினைக்கொண்டு வினைமுடிதற்கு ஏற்றதொரு பெயர் இல்லாமையையும நினைத்திலர். "நீரணிந்த புன்சடை" என்ற தொடரில் 'அணிந்த' எனும் பெயர் எச்சம் புன்சடை என்னும் பெயரை அடுத்துப் பொருள் ஆற்றொழுக்கில் அமைந்து இருத்தலையும்நினைத்திலர். 'வேறிசைந்த செக்கர்மேனி நீறணிந்த' என்ற தொடரை 'வேறிசைந்த நீறணிந்த செக்கர் மேனி' எனக் கொண்டு கூட்டி வினைமுடிபு கொண்டிருப்பின் சிறிது பொருத்தமாக இருக்கும். இவ்வகை வினைமுடிபையும உணர்ந்திலர் பண்டைய உரைகாரர். என்னை? அவரால் எழுதிவைக்கப்பட்ட உரையைப் பார்க்க.

'புன்சடை' என்பதற்குப் (புன்மை—பொல்லாமை) 'பொல்லாமையை உடைய சடை' எனல் கவிக்கருத்தன்று மற்று என்னை? (புன், உரிச்சொல். அதன் பொருள், செம்மை நிறம்.) புன்சடை: சிவந்த நிறமுடைய சடை என்பது. (பட்டினப்பாலை—91ல்) 'புன்தலை இரும்பரதவர்' என்ற தொடர்க்குச் "சிவந்த தலையினை உடைய பெரிய பரதவர்" எனவும் (மலைபடுகடாம்—217ல்) "துருவினன்ன புன்தலை மகாரோடு' என்ற தொடர்க்குச் 'செம்மறியாட்டினை ஒத்த புற்கென்ற (சிவந்த) தலையினை உடைய பிள்ளைகளோடே' எனவும், (மலைபடுகடாம்—253ல்) 'புட்கை போகிய புன்தலை மகாரோடு' என்ற தொடர்க்கு 'வளைகையினின்றும் போதற்குக் காரணமான சிவந்ததலையினை உடைய பிள்ளைகளோடே' எனவும் எழுதப்பட்ட பொருள்களை நினைக்க.

(க)

## நான்காவது ஆய்வு உரை: கிளை-2.

'கரைசெய் மாக்கடல் கிடந்தவன் கனைகழ லமரர்கள் தொழுதேத்த
அரைசெய் மேகலை யவர் மகளவளோடும் அமர்ந்த நல்லிமயத்து
வரைசெய்மாக்களிறிளவெதிர் வளர்முளை களை *மிகு தேன்தோய்த்து
பிரசவாரி தன்னிளம்பிடிக் கருள்செயும் பிரிதி சென்றடை நெஞ்சே'

*'முளையுளை' என்றபாடம், பிழைப்பாடம்(பெ.திரு-1-2-5.)

இத்திருப்பாவிற்கு முன் உரைகாரர் எழுதிவைத்த பொருள் 'ஆபரணங்கள் சப்தியா நின்றுள்ள-திருவடிகளை-ப்ரஹ்மாதிகள்-சேவித்து-ஏத்த-ஸ்தோத்திரம்பண்ணி ஆச்ரயிக்கும்படியாக-(கரைசெய்)தானே தனக்குக் கரை செய்துகொண்டிருக்கிற-பெரிய-திருப்பாற்கடலிலே-ஆச்ரிதரை ரக்ஷிக்கைக்காகச் சாய்ந்தருளின ஸர்வேச்வரன் திருவரையிலே-சாத்தப்பட்ட-மேகலாபரணத்தையுடையளாம்-தாமரைப்பூவிற் பிறந்த பெரிய பிராட்டியாரோடே-பொருந்தி வர்த்திக்கிற விலக்ஷணமான-ஹிமவானில்;-மலைபோலே யிருக்கிற-பெரிய வடிவையுடைய யானைகளானவை-இளையதான-மூங்கிலின்-ஓங்கிவளரா நின்றுள்ள-முளைகளைப் பிடுங்கி—முழுஞ்சுகளில்—நிறைந்திருக்கிற—தேனிலே-தோய்த்து-தேன் கூண்டோடே-தேனை-தன்னுடைய—சிறு குட்டிகளுக்கு—கொடுக்கிற-திருப்பிரிதியிலே-போய்-நெஞ்சே; கிட்டப்பாராய் என்று-க்ஷிராப்தியின்கண் வளர்ந்தருளின படியை அநுசந்திக்கிறார்,, என்பது பதஉரை.

(கரை செய் இத்யாதி) தானே தனக்குக் கரைசெய்துகொண்டு நிற்கிற கடலென்னுதல்; அதாகிறது-கரையை அதிக்ரமிக்க மாட்டாதிறே; ஈச்வராஜ்ஞையாலே; அன்றிக்கே ஒரு காலத்தில் கரை(க)கட்டப்பட்ட கடல் என்னுதல். ஸாம்யத்தைப் பற்றறச் சொல்லலாமிறே. கரை செய்கைக்காக-கரையற்றுகைக்காக, மாக்கடல் கிடந்தவன்' என்பது வியாக்யான உரை.

இவ் விருவகை உரைகளும்-பொருள்களும்பெரிய ஆச்சான்பிள்ளை உரை என்னும் நூலுள் உள்ளன.

இப்பொருள்களின் சிறப்பையும் இறப்பையும் உய்த்துணர்க. உணருங்கால், 'கரைசெய்மாக்கடல்' என்பதற்குத்'தானே தனக்குக்கரைசெய்துகொண்டு இருக்கிற-நிற்கிற எனவும், ஈச்வராஜ்ஞையாலே அன்றிக்கே ஒருகாலத்தில் 'கரை கட்டப்பட்டகடல்' எனவும் எழுதப்பட்ட போலிப்பொருளின் சிறப்பையும் இறப்பையும் உய்த்துணர்க. உண்மைப் பொருள் மற்றென்னை? கரை: (உரிச்சொல்) பொருள், ஒலி. கரை செய் மாக்கடல்: ஒலித்தலைச் செய்யும்-ஒலிக்கும்-இயல்பினை உடைய பெரியகடல் என்பதே. கரை: ஒலி, இயற்கைஅடை. 'ஒலிக்கடல்' என்னும் வழக்கை நினைக்க. கவியால் கருதப்பட்ட இவ்வுண்மைப்பொருளை உணராமல் தம் மனத்தில் விளைந்த போலிப்பொருளை எழுதிவைத்தபடியால், முன் உரைகாரர், உரிச்சொல் அறியாதவராயினர் என்பதனை அறிக. இத்திருப்பாவிற்கு அவ்வுரைகாரரால் எழுதப்பட்ட ஏனைய பிழைகளையும் உய்த்துணர்க. (உ)

## நான்காவது ஆய்வு உரை: கிளை-3.

'இருக்கொடுநீர் சங்கிற்கொண்டிட்டு-'எழில்மறையோர் வந்துநின்றார்
தருக்கேல்நம்பி சந்திநின்று தாய்சொல்லுக்கொள்ளாய் சிலநாள்
திருக்காப்பு நானுன்னைச்சாத்தத் தேசுடைவெள்ளறை நின்றாய்
உருக்காட்டு மந்தி விளக்கின்று ஒளிகொள்ள ஏற்றுகேன்வாராய்"
(பெரியாழ்-2-8-9)

இத்திருப்பாவில் இரண்டாவது அடியில் அமைந்துள்ள'நம்பி' என்ற பெயர்க்குத்'தீம்புநிறைந்தவனே' எனத் தீய இயல்பினைப் பொருளென எழுதிவைத்தார் திவ்யப் பிரபந்த திவ்யார்த்த தீபிகை உரைகாரர். அப்பொருள், போலிப்பொருளே. என்னை? 'நம்பு' என்பதன் பொருள் எல்லாராலும் விரும்பப்படும் கட்டழகும், நுண்மாண்புலமையும், பேராண்மையும் ஆகிய இவை. அப்பெயர், நல்லியல்பினைச் சுட்டும் சிறப்புப்பெயர். அப்பெயர், தீய இயல்பினைச் சுட்டாது. அப்பெயர் புருஷோத்தமன் என்னும் வடமொழிப் பெயர்க்கு ஒப்பான தமிழ்மொழிப் பெயர். அப்பெயர், 'நம்பு' என்னும் உரிச்சொல் அடியாகப் பிறந்தது ஆதலால்.

'நம்பும் மேவும் நசையாகும்மே' (தொல்-உரிச்-34) என்ற பாவின் பொருளை நினைக்க. இப்பெற்றிய உண்மைப் பொருளை இப்பாவிற்கு உரையாமல் போலிப் பொருளை உரைத்தமையால் திவ்யப் பிரபந்தத்தின் திவ்யார்த்த தீபிகை உரைகாரர் உரிச்சொல் உணரும் உணர்விலர் ஆயினர் என்க. (௩)

நான்காவது ஆய்வு உரை முற்றிற்று.

திரு ஆழ்வார்கள் திரு மொழி திகழ்க.

---

## ஐந்தாவது ஆய்வு உரை: கிளை-1.

திருப்பேரருளாளப் பெருமாள்தம் திரு அடிகட்கு வணக்கம்.

திவ்யப்பிரபந்த திவ்யார்த்த தீபிகை உரைகாரர், திருப்பாக்களில் அமைந்துள்ள இருபெயர் ஒட்டுப் பண்புத்தொகைத் தொடர்களை அறிந்திலர் என்பதனை இவ்வைந்தாவது ஆய்வுஉரை விளக்குதலை அறிக.

"பிண்டத்திரளையும் பேய்க்கிட்ட நீர்ச் சோறும்
உண்டற்கு வேண்டிநீ ஓடித்திரியாதே
அண்டத்து அமரர் பெருமான் அழகு அமர்
வண்டு ஒத்து இருண்டகுழல் வாராய் அக்கக்காய்
மாயவன்தன் குழல்வாராய் அக்கக்காய்" (பெரியாழ்-2-5-7)

இத்திருப்பாவிற்குத் திவ்யார்த்த தீபிகை உரை:—'அக்கக்காய்-;—(பிதுருக்களை உத்தேசித்து இடும், பிண்டத்தின் உண்டையையும்-பிசாசங்களுக்குப் போகட்ட நீரை உடைய சோற்றையும்-உண்ணுதற்கு-விரும்பி-நீ பறந்தோடித்திரியவேண்டா;-மேலுலகத்திலுள்ள-தேவர்களுக்கு-தலைவனுகிய இக்கண்ணபிரானுடைய—அழகுபொருந்திய-வண்டைப்போல் கருநிறமான—குழல் வாராய்-.' என்பது.

இத்திருப்பாவில் அமைந்துள்ள 'பிண்டத்திரளையும்' என்ற தொடரைப் 'பிண்டம் - திரளை' எனப் பிரித்துப் "பிதுருக்களை உத்தேசித்து இடும் பிண்டத்தின் உருண்டையையும்," எனச் சிறப்புரையும் எழுதிவைத்தார் அத் திவ்யார்த்ததீபிகை உரைகாரர். அப்பொருள போலிப் பொருளே. என்னே? அப்பொருளால் அவர் பிண்டம் என்பதனை முதற்பொருளாகவும், திரளை என்பதனை அதன் சினைப்பொருளாகவும் கொண்டாராயினர் ஆதலால்.

'பிண்டத்திரளை' என்ற தொடர், இருபெயர் ஒட்டுப் பண்புத் தொகைத்தொடர். 'பிண்டம்' வடசொல்லின் திரிபு மொழி. 'திரளை' திரள் என்னும் தமிழ் மொழியின் திரிபு மொழி பொருள்: கவளம், உருண்டை என்பதே. 'பிண்டம்' எனினும் 'திரளை' எனினும் பொருள் ஒன்றே. இருபெயர் ஒட்டுத்தொடர் என இலக்கணவிதி ஒன்று தமிழ் மொழியார்க்கு உள்ளது என்பதனை அறிந்திலாமையால் அத்தொடர்க்கு அப்போலிப் பொருளை எழுதி வைத்தார் திவ்யார்த்த தீபிகை உரைகாரர் என்க. (ரு)

## ஐந்தாவது ஆய்வு உரை: கிளை-2.

"வையத்துள் வாழ்வீர்காள் நாமும் நம் பாவைக்குச்
செய்யுங் கிரிசைகள் கேளீரோ பாற்கடலுள்
பையத் துயின்ற பரமனடி பாடி
நெய்யுண்ணேம் பாலுண்ணேம் நாட்காலே நீராடி
மையிட்டெழுதோம் மலரிட்டு முடியோம்
செய்யாதன செய்யோம் தீக்குறளை சென்றேதோம்
ஐயமும் பிச்சையும் ஆந்தனையும் கைகாட்டி
உய்யுமாறு எண்ணி உகந்தேலோ ரெம்பாவாய்"(திருப்பாவை-2)

**இந் திருப்பாவிற்குத் திவ்யார்த்த தீபிகை உரை:** "இப் பூமண்டலத்தில் வாழ்ந்திரா நின்றுள்ளவர்களே! ('எம்பெருமானாலேயே பேறு' என்ற அத்யாவஸாயமுடைய) நாமும்-உஜ்ஜீவிக்கும் வழியை ஆராய்ந்து,-திருப்பாற்கடலில் அவதாநத்துடன் கண் வளர்ந்தருளா நின்ற பரம புருஷனுடைய திருவடிகட்கு மங்களாசாஸனம்பண்ணி (ஆசார்யாதிகளுக்கு இடுகையாகிற) ஐயத்தையும், (ஆர்த்தர்கட்கு இடுகையாகிற) பிக்ஷையையும்சத்தியுள்ளவளவும் இட்டு-நமது நோன்புக்கு (அங்கமாகச்) செய்யவேண்டும்-க்ரியைகளை--காது கொடுத்துக் கேளுங்கள்; (நோன்பு நோற்கத் தொடங்கின) நாம்-நெய் உண்ணக் கடவோமல்லோம்; விடியற்காலத்திலேயே ஸ்நானம் செய்துவிட்டு-(கண்ணில்) மையிட்டு அலங்காரம்பண்ணக் கடவோமல்லோம்;- (குழலிற்) பூவைத்து முடிக்கக்கடவோமல்லோம்;-(மேலைத்தலைவர்கள்) செய்யாதவற்றை செய்யக்கடவோமல்லோம்;-கொடிய கோட்சொற்களை-(எம்பெருமானிடத்துச் சென்று கூறக்கடவோமல்லோம்;-ஏல் ஓர் எம்பாவாய்-." என்பது.

இப்பொருள், திவ்யார்த்த தீபிகை என்னும் உரை நூலுள் உள்ளது. இப்பொருளின் சிறப்பையும் இறப்பையும் ஆய்ந்துபார்க்க. ஆயுங்கால் 'எம்பெருமானாலேயே' என்ற தொடரிலும் 'விடியற்காலத்திலேயே' என்ற தொடரிலும் ஈற்றில் உள்ள ஏகாரங்கள் இரட்டித்திருத்தலையும் நினைக்க. தேற்றப்பொருட்டு ஏகாரத்தை இரட்டித்து எழுதல் நேரிய அறிவை உடைய செந்தமிழ் ஆசிரியர் வழக்கு அன்று. தீபிகை உரைகாரர் போலும் திரிபு உணர்ச்சிகாரர்கள் வழக்கே. அன்றிக் 'கோள் சொற்களை எம்பெருமானிடத்துச் சென்று கூறக் கடவோம் அல்லோம்' என்பது கவிக்கருத்தாமா என்பதனையும் எண்ணித் தேறுக. என்னை? எம்பெருமான் அல்லராய பிறரிடத்தில் கோள் சொற்களைச் சொல்லலாம் என்பது அத் தீபிகை உரைகாரரின் கருத்துப்போலும். அக்கருத்துத்தான், நோற்பார்க்குப் பாலுண்ணாமலும் நெய்யுண்ணாமலும் இருத்தலாகிய உறுப்புக்கள்போல (அங்கம்போல) பிறரிடத்தில் கோட்சொல்லுதலும் எம்பெருமானிடத்தில் கோள் சொல்லாதிருத்தலும் ஒரு உறுப்புப்போலும்—அங்கம்போலும்—எனத் தீபிகை உரைகாரர் எண்ணியிருக்கும் செயலை விளக்குதலை அறிக.

இத் திருப்பாவில் அமைந்துள்ள 'ஐயமும் பிச்சையும்' என்ற தொடரில் உள்ள 'ஐயம்' என்பதற்கு 'ஆச்சார்யாதிகளுக்கு இடுகையாகிற ஐயத்தையும்' எனவும், 'பிச்சை' என்பதற்கு'ஆர்த்தர்கட்கு இடுகையாகிற பிக்ஷையையும்'

என்னும், இருவகைப் பொருள்களை எழுதி வைத்தார் அத்தீபிகை உரைகாரர். அவர் எழுதிவைத்த பொருள் கள் போலிப் பொருள்களே. என்னை? "ஐயமும் பிச்சையும்" என்ற தொடர், இருபெயர் ஒட்டுப் பண்புத் தொகைத் தொடர். உம்மைகள் அசைநிலைப் பொருட்டு. எண்ணுப் பொருட்டு அன்று. தீபிகை உரைகாரர், உம்மைகளை எண்ணும்மைப் பொருட்டாகக் கொண்டார் போலும். ஆதலால், அவர் எழுதிவைத்த பொருள்கள் போலிப் பொருள்கள் ஆயின என அறிக. 'ஐயம்' தமிழ்ச்சொல் 'பிச்சை' என்பது 'பிக்ஷா' என்னும் வடசொல்லின் திரி சொல். பொருள்: கூழே, சோறே, உண்டியே. செந்தமி ழரும திருவைணவரும் ஆயின பெரும்பேராசிரியர் திருக் கம்பரும்; 'ஐயமும் சங்கையும் நீங்குதி' என்ற தொடரில் (ரா-சூடா-73ல்) உம்மைகளை அசைநிலைகளாகச் சொற்க ளின்சுற்றில் சேர்த்து இருபெயர்ஒட்டுப்பண்புத்தொகைத் தொடர் அமைத்து இருத்தலைநினைக்க. "ஐயம்" எனினும் "சங்கை" எனினும் பொருள் ஒன்றே. அவை, இன்னதென ஒரு பொருளைத் துணிந்து தேறாமல் இப்பொருளோ, அப்பொருளோ என மயங்கிய நிலைமையைச் சுட்டுதற்கு உரிய பெயர்கள். ஐயம், தமிழ்மொழிப்பெயர். சங்கை, வட மொழியினின்று தமிழிற்போந்த திரிசொல் பெயர். மற்று,

"படவிடு பிச்சையோடு ஐயம் உண்டியென்று பலகூறி" (சம்பந் —வாழ்கொளி)
"அயலிடு பிச்சையோடு ஐயம் ஆர்தலையென்று அடிபோற்றி" " "

என்ற திருச் சைவ சமயத் தவர்தம் திருமுறைத் தொடர்களில் "ஓடு" என்னும் இடைச் சொல்லினைத் தொடரிடைப் பெய்து பண்புத்தொகைத் தொடர்அமைத் திருத்தலை ஆழ்ந்து சூழ்ந்து தேறுக.

இத்திருப்பாவில் அமைந்துள்ள "வையம்" என்பதற் குப பொருள்: பொருள்வைக்கப்படும் இடம் என்னும் காரணத்தால் "வையம்" என்பது பூமிக்குப் பெயரா யிற்று என்று எழுதிவைத்தார் திவ்யார்த்த தீபிகை உரைகாரர். அக்காரணம் போலிக் காரணமே. என்னை? பெரியது நீண்டது அகன்றது எனும்பொருள்களைச்சுட்டும் 'வியம்' என்னும்மொழி, மொழிமுதல்திரிந்து "வையம்" என நின்றது. அம்மொழியைத் திரிசொல் என்பர். அச் சொல், மிகவும் பெரியது மிகவும் அகலமானது என்னும்

காரணத்தால் பூமிக்குப் பெயராயிற்று. அப்பெயரை ஆகு பெயர் என்பர் அறிஞர்.

"விண்ணின்று பொய்ப்பின் விரிநீர் வியன் உலகத்து
உண்ணின்று உடற்றும் பசி" (திருக்குறள்-13.)

இம்முது மொழியுள் அமைந்துள்ள "வியன் உலகம்" என்ற தொடர்க்கு "அகன்ற உலகம்" என அதன் உரை ஆசிரியர் திருப் பரிமேல் அழகர் எழுதி வைத்துள்ள பொருளை இவண் நினைக்க. இவ்வேதுவினால் வையம் என்பதற்குத் திவ்யார்த்த தீபிகை உரைகாரர் எழுதிவைத்த பெயர்க்காரணம் போலிக்காரணம் ஆயிற்று என்க. அத் தீபிகை உரைகாரர், கள்ளன் உரைத்துவைத்த திருக்குறளையும், பள்ளன் எழுதிவைத்த அதன் உரையையும் யான் கொள்ளேன் எனக் கூசாமல் கூறினும் கூறிவிடுவர் அக்கூற்றை ஒருவகைக் குரைப்பெனக்கொள்வர் அறிஞர்.

வையத்து வாழ்வீர்காள்" என்பது "வையத்து வாழ்வார்கள்" எனவும் "கேளீர்" என்பது கேளாய்" எனவும் இருந்தற்பாலன. (ஒருத்தி மற்று ஒருத்திக்கு உரைத்தபடி) "எம்பாவாய், உய்யுமாறு எண்ணி உகந்து, வையத்து வாழ்வாரும் நாமும் நம் பாவைக்குச் செய்யும் கிரிசைகள் கேளாய்" என வினை முடித்துப் பொருளின்சிறப்பை அறிக. ஏலோரெம்பாவாய்: "ஏல-ஓர்-எம்-பாவாய்" மரூஉ. பொருள்: ஏல, கேட்பிக்கும் குறிப்பு மொழி. ஓர், ஓ என்னும் விளி உருபு ஈறுதிரிந்தது. அல்லது அசை நிலை என்னலும் ஆம். எம்பாவாய், எம்முடைய கண்மணிப்பாவை போலும் உழுவல் அன்புடைய தோழி. பாவை, தோழிக்கு உவம ஆகு பெயர். இத்திருவெம்பாவை முற்றும் கூற்று மகளிர் மாட்டது என்பது நினைவில் இருந்தற்பாலது. காட்டி, இகர ஈற்று வியங்கோள், "காட்டல் வேண்டும்" என்பது பொருள். "கேளாய் ஓதோம் கை காட்டி" என முற்றுவினை முடிக்க.

இவ்வேதுவினால்—இத் திருப்பாவிற்குப் போலிப் பொருள்களை எழுதி வைத்ததால்—"திவ்யப் பிரபந்த திவ்யார்த்த தீபிகை" உரைகாரர், இருபெயர் ஒட்டுத்தொடர்களை உணர்ந்து பொருள்களை உரைக்கும் மரபை உணர்ந்திலர் என்பதனைத் தெளிக. (உ)

## ஐந்தாவது ஆய்வு உரை: கிளை-3.

"நாளை வதுவை மணம் என்று நாளிட்டு
பாளை கமுகு பரிசு உடைப் பந்தற் கீழ்
கோளரி மாதவன் கோவிந்தன் என்பானோர்
காளை புகுதக் கனாக்கண்டேன் தோழி நான்" (திருநாச்சி-6-2-7)

**இத்திருப்பாவிற்குத்திவ்யார்த்த தீபிகை உரை:** "தோழி!-;-நாளைக்கு விவாஹமஹோத்ஸவமென்று முஹூர்த்தம் நிர்ணயித்து-பாளைகளோடு கூடின பாக்கு மரங்களாகிற அலங்காரங்களை யுடைத்தான மணப்பந்தலின் கீழே-நரஸிம்ஹனென்றும், மாதவனென்றும் கோவிந்தனென்றும் திருநாமங்கள் பூண்ட ஒரு யுவாவானவன்-ப்ரவேசிக்க-நான் கனாக்கண்டேன்—.என்பது.

இப்பொருளுக்கு மதலையாக "வதுவை-கலியாணம். மணம்-உத்ஸவம்" என, ஒரு குறிப்பும் எழுதிவைத்தார் திவ்யப்பிரபந்த திவ்யார்த்த தீபிகை உரைகாரர். அவர் எழுதிவைத்த அப் பொருளும் குறிப்பும் கவிக்கருத்தல்ல. ஆதலால், அவை புறக்கணித்தற்பாலன. என்னை?

இத்திருப்பாவில் "வதுவை மணம்" என்ற தொடரில் அமைந்துள்ள "வதுவை" என்பதற்குக் "கலியாணம்" எனவும் "மணம்" என்பதற்கு "உத்ஸவம்" எனவும் இருவகைப் பொருள்களை எழுதிவைத்தார் திவ்யார்த்த தீபிகை உரைகாரர் ஆதலால். மற்றென்னை? "வதுவைமணம்" என்ற தொடர் இரு பெயர் ஒட்டுப் பண்புத் தொகைத் தொடர். அத்தொடரின் பொருள், "கலியாணம்" என்பதே. "வதுவை" என்பது வடமொழியின் திரிபுமொழி. "மணம்" என்பது தமிழ் மொழி. இப் பெற்றிய பொருளை உணராமல் அத்தொடரை இரு பொருள்கள் சுட்டிய இரு மொழிகளாகக் கொண்டு இருவகைப் பொருள்களை எழுதிவைத்தார் ஆதலால், திவ்யப்பிரபந்த திவ்யார்த்த தீபிகை உரைகாரர் இரு பெயர் ஒட்டுப் பண்புத்தொகைத் தொடரை அறிந்திலர் என்பதனை அறிக. (௩)

## ஐந்தாவது ஆய்வு உரை: கிளை-4.

"எட்டுத் திசையும் எண்ணிறந்த பெருந்தேவிமார்
விட்டு விளக்க வீற்றிருந்த விமலன் மலை
பட்டிப் பிடிகள் பகடுறிஞ்சிச் சென்று மாலைவாய்த்
தெட்டித் திளைக்கும் தென்திருமா லிருஞ்சோலையே" (பெரியாழ்-4-2-10)

**இத்திருப்பாவிற்குத் திவ்யார்த்த தீபிகை உரை:** "கணக்கிட முடியாதவர்களும்-பெருமை பொருந்தியவர்களுமான—தேவிமாரானவர்கள்—எட்டுத் திக்குகளிலும்—மிகவும் ப்ரகாசிக்க (அவர்கள் நடுவே)—பெருமை தோற்ற எழுந்தருளியிருந்த—நிர்மலனான கண்ணபிரான் (எழுந்தருளி இருக்கிற மலையானது;—(பட்டி) வேண்டினபடி திரியுமவையான-(பிடிகள்) யானைப்பேடைகளானவை—இரவிலே—ஆண்யானையோடு—ஸம்ச்லேஷித்துப்போய்— (அந்த ஸம்ச்லேஷரஸம்) முற்றிக் களையாறிற்குமிடமான—தென் திருமாலிருஞ்சோலை—" என்பது.

இப்பொருள், "திவ்யப்பிரபந்த திவ்யார்த்த தீபிகை" என்னும் உரை நூலுள் உள்ளது. இதன் சிறப்பையும் இறப்பையும் உய்த்துணர்க. உய்த்துணருங்கால் "பட்டிப் பிடிகள்" எனப் பாடங்கொண்டு அத்தொடர்க்கு "**வேண்டினபடி திரியும் அவையான யானைப் பேடைகள்**" என எழுதப்பட்ட போலிப்பொருளால் பொலிவு இன்மையையும் உய்த்துணர்க. என்னை? "பட்டி" என்பது "பாட்டி" என்பதன் விகாரம். அவ்விகாரம் எதுகையின் பொருட்டாயது. பொருள், அஃறிணைப் பெண்மை சுட்டிய "பெட்டை" என்பதே. பிடி என்பதன் பொருளும் அஃறிணைப் பெண்மை சுட்டிய "பெட்டை" என்பதே. "பட்டிப் பிடி" இருமொழிப் பெயர். பொருள், பெண்யானை என்பதே.

> "பேடையும் பெடையும் பெட்டையும் பெண்ணும்
> மூடும் நாகும் கட்மையும் அளகும்
> மந்தியும் "**பாட்டியும்**" பிணையும் பிணாவும்
> அந்தம் சான்ற பிடியொடு பெண்ணே" (தொல்-மரபியல்-3)

இப்பாவின் பொருளை நினைக்க.

இத்திருப்பாவில் அமைந்துள்ள (எதுகையின் பொருட்டுத் திரிபுற்ற) திரிசொல்லை அறிந்து "பட்டிப்பிடி" என்பதனை இருமொழிப் பெயராகக்கொண்டு பெண் யானை என்னும் கவிக்கருத்தாகிய உண்மைப்பொருளைக் கொள்ளாமல் தம் மனத்தில் விளைந்த போலிப்பொருளைப் பொருளென எழுதிவைத்தபடியால் திவ்யப்பிரபந்தத்தின் திவ்யார்த்த தீபிகை உரைகாரர் இருபெயர் ஒட்டுத் தொடர் அறியாதவராயினர் என்பதனை அறிக. (ச)

## ஐந்தாவது ஆய்வு உரை: கிளை-5.

"குழலிருண்டு சுருண்டேறிய குஞ்சிக்
கோவிந்தனுடைய கோமள வாயில்
குழல் முழஞ்சுகளினூடு குமிழ்த்துக்
கொழித்து எழுந்த அமுதப்புனல் தன்னைக்
குழல் முழவம் விளம்பும் புதுவைக்கோன்
விட்டு சித்தன் விரித்த தமிழ்வல்லார்
குழலை வென்ற குளிர் வாயினராகிச் சாது
கோட்டியுள் கொள்ளப் படுவாரே" (பெரியாழ். 3-6-11

இத்திருப்பாவிற்குத் தீபிகை உரை: "கறுத்துச்சுருண்டு செடுகவளர்ந்த **அலகலகான மயிர்களை** யுடையவனை—கண்ணபிரானுடைய—அழகிய வாயில் (வைத்து, ஊதப்பெற்ற) வேய்ங் குழலினுடைய—துளைகளிலே—நீர்க்குமிழி வடிவாகக் கிளர்ந்து—(பிறகு அது உடையப்பெற்று)—கொழித்துக்கொண்டு மேற்கிளம்பின—அம்ருத ஜலத்தை—குழலோசைவோடொக்க [ப்பரமபோக்யமாக] அருளிச்செய்தவரும்—ஸ்ரீ வில்லிபுத்தூர்க்குத் தலைவருமான—பெரியாழ்வார்—விஸ்தாரமாகக் கூறிய—இத்தமிழ்ப் பாசுரங்களை—ஓதவல்லவர்கள்—நிருகுழலோசையின் குளிர்த்தியையுங் கீழ்ப்படுத்தித் தான்மேலாம்படி குளிர்ந்த வாய் மொழியை யுடையராய்—ஸ்ரீ வைஷ்ணவர் கோஷ்டியில்—பரிக்ரஹிக்கப் படுவார்கள்" என்பது.

இப்பாடமும் பொருளும் திவ்யார்த்த தீபிகை உரை நூலுள் உள்ளன. இப்பொருள் போலிப்பொருள் என்பதனை உய்த்துணர்க. உய்த்துணருங்கா

"குழல் குஞ்சி" எனக் கொண்டுகூட்டி அத் தொடர்க்கு "அலகலகான மயிர்கள்" எனப் பொருள் உரைத்து இருத்தலையும் "குழலைவென்ற குளிர்வாயினராகி" என்ற தொடர்க்குத் "திருக்குழலோசையின் குளித்தியையும் பிற்படுத்தித் தான்மேலாம்படி குளிர்ந்தவாய்மொழியை உடையராய்" என (ஆக்கத்தை இப்பத்தைக் கற்றுரைச்சேர்த்துப்) பொருள் எழுதி இருத்தலையும் ஆய்ந்து அப் பொருள்கள் போலிப் பொருள்கள் என்பதனைத் தெறுக.

இத்திருப்பாவில் அமைந்துள்ள "குழலிருண்டு" என்ற தொடர் பிழைப்பாடம். அப்பாடம். "குழன்றிருண்டு" என இருத்தற்பாலது என்பதனை அறிக, பொருள்: குழன்று, கடைகுவிந்து. குழன்றும் இருண்டும் சுருண்டும் (நெற்றிக்கு) மேலே எறியவும் என உம்மை விரித்தும், சொல்லெச்சத்தின் பாத்தியாய் "ஆகிய" என ஒரு சொல்லைத் தந்தும் அவ்வெச்சதினைக் குஞ்சி என்னும் பெயரொடு கூட்டி வினை முடிக்க. ஆண்மக்கட்குத் தலையின் மயிர் நெற்றிக்குமேலே நிற்றல்தான் சிறப்பு. இவ்வகை வினைமுடிபே கவிக்கருத்து என்பதனை அறியாமையால் திபிகை உரைகாரர் இத்திருப்பாவில் சேணிடைக் கிடந்த "குஞ்சி" என்னும் மொழியைக் "குழல்" என்னும் மொழியின் முன்னர்—அருகில்—வைத்துக் "குழல் குஞ்சி" எனக்கூட்டி அத்தொடர்க்கு "அலகலகான மயிர்கள்" என அமைவில்லாப்பொருளை எழுதிவைத்தார். அவர், அப்போலிப்பொருளை எவ்வாசிரியர் மாட்டு எம்மொழியுள் கற்றனரோ? என்னை? அப்பொருள் "குஞ்சி குழல்" என்னும் தமிழ்மொழிப்பெயர்கட்கு உரியது அன்று. அலகலகான மயிர் என்பது பொருள் அன்று. குழல் எனினும் குஞ்சி எனினும் மயிர் எனினும் பொருள் ஒன்றே. "அலகலகான" என்னும் பொருள் எவ்விடத்திருந்து இவ்விடத்துப்போந்ததோ? "குழல் குஞ்சி" எனக் கொண்டு கூட்டிய அவரின் செயலும் சிரியது அன்று ஆதலால். அப் பொருத்தமற்றபோலிப்பொருளைப்பொருத்திவைத்த தம்மின் மரபறியாச் செயலுக்கு ஒருமதலையாக;

"மைவண்ண நறுங்குஞ்சிக் குழல் பின்தாழ
மகரஞ் சேர்குழை இருபாடு இலங்கியாட
எய்வண்ண வெஞ்சிலையே துணையா இங்கே
இருவராய் வந்தார் என்முன்னே நின்றார்
கை வண்ணம் தாமரை வாய் கமலம் போலும்
கண் இணையும் அரவிந்தம் அடியும் அஃதே
அவ் வண்ணத்தவர் நிலைமை கண்டும் தோழி!
அவரை நாம் தேவரென்று அஞ்சினோமே" (திருநெடு-21).

ஒன்று முதலாக இப்பக்கம்வரை (அறுபத்துநான்கு பக்கங்களும்)
**காஞ்சிபுரம் பத்மா பிரஸினரால் அச்சிடப்பட்டன.**

இத்திருப்பாவில் அமைந்துள்ள "குஞ்சிகுழல்" என்னும் இருபெயர் ஒட்டுத் தொடரைக் காட்டாகக் கொண்டார் திவ்யப் பிரபந்த திவ்யார்த்த தீபிகை உரைகாரர். அத்தொடரைக் காட்டாகக்கொண்ட அவரது செயல், புதிதாகத் தெலுங்கு மொழியைக் கற்பான் ஒருவன், 'குர்ரம்' என்னும் பெயர் குதிரைக்கும் ஆம் எனக் கேட்ட போதே தன் நேரில் கத்திக் கொண்டு வந்த கழுதையைப் பார்த்து, 'இக் 'கர்ரம்' ஏன் கத்து கின்றது" எனத் தன் நண்பனைக் கேட்டான் எனப் புலம்பும் புராணிகர்தம் பொய்யுரைப் பொருளை ஒன்றியுள்ளது என்பதனை நினைக்க. என்னை?

இத்திருப்பாவில் (திருவாய். 10-10-7ல்) திரு ஆழ்வாரே "குஞ்சி-குழல்" என்னும் இருமொழிகளையும் கூட்டி இருபெயர் ஒட்டுத் தொடராக அமைத்து அருளினர். அத்தொடரைத் தாமாகக் கொண்டு கூட்டிய "குழல் குஞ்சி" என்னும் (பெரியாழ்-3-6-11) இருமொழிகளாலாய தொடர்க்குக் காட்டாகக் கொண்டார் தீபிகை உரைகாரர். அவர் தாமாகக் கொண்டு கூட்டிய இருமொழிகளால் ஆய தொடர் இருபெயர் ஒட்டுத் தொடர் ஆகாது. ஒரு பாவில் சேணிடத்துக் கிடந்த இரு மொழிகளைக் கொண்டு கூட்டிச் சேரவைத்து அம்மொழிகளை இருபெயர் ஒட்டுத்தொடர் என்னல் வழக்கின்று. ஆசிரியர் ஒருவர் தம் பாவில் ஒருபொருளைச் சுட்டும் இருபெயர்களை ஓரிடத்தில் சேரச் சேர்த்து வைத்து இருப்பர் ஆயின் அப்பெயர்களால் ஆய தொடர், இருபெயர் ஒட்டுத்தொடர் என்னப்படும்.

இவ்வேதுக்களால் திவ்யார்த்த தீபிகை உரைகாரர் இத் திருப்பாவில் செறிந்துள்ள சிறு பிழையையும் உணராத செயலொடு இருபெயர் ஒட்டுத் தொடர் இன்னது என்பதனையும் உணர்ந்திலர் என்பதனை அறிக. மற்று, அவ்வுரைகாரர் "குழலை வென்ற குளிர் வாயினராகி" என்ற தொடர்க்குத் "திருக்குழலோசையின் குளிர்த்தியையும் கீழ்ப்படுத்தித் தான்மேலாம்படி குளிர்ந்த வாய்மொழியை உடையராய் இருப்பர்" என எழுதிய பொருளும் போலிப் பொருளே. என்னை? இத்திருப்பத்தைக் கற்றவர் ஒருவர், மிகவும் மெல்லிய ஓசையாக மொழிந்து அடக்கமுடையராய் இருப்பர் என்றதனுல் அவர்க்கு யாது சிறப்பு? சிறப்பு ஒன்றும் இன்று ஆதலால். மற்று என்னை? குழலி னின்று எழும் தண்ணிய இனிய மெல்லிய ஓசையைப்போலத்

தண்ணிய மெல்லிய ஒலியாலாய மொழிகளை மொழிபவராகிய திருச்சாதுக்கள் கூட்டத்துள் ஒருவராக வைத்துப் பெருமக்களால் புகழப்படுவர் என்பதே கவிக் கருத்து. வாய், இவண் சொல்லுக்கு ஆகுபெயர். "வாயினராகி" என்பது பிழைப் பாடம். அது "வாயினராய" என இருத்தற்பாலது. வாயினர், சாதுக்கள். "புதுவைக்கோன்" என்ற தொடர்க்கு "ஸ்ரீவில்லிபுத்தூர்க்குத் தலைவர்" என எழுதப்பட்ட பொருளும் எழிலற்றதே. அத்தொடரின் உண்மைப் பொருள் ஸ்ரீவில்லி புத்தூரில் பிறந்தருளிய ஆசாரியர்" என்பதே. அவர் ஸ்ரீவில்லி புத்தூரில் வாழ்பவர்கட்குமட்டும் தலைவரல்லர், திருவைணவ உலகுக்கு எல்லாம் தலைவர் ஆதலால். இத்திருப்பாவில் 'கோன்' என்னும் சிறப்பு மொழி அமைந்திருத்தலால். இத் திருப்பா, திருப்பெரிய ஆழ்வாரால் அருளப்பட்டது அன்று. பிறரொருவரால் அருளப்பட்ட பல சுருதிப் பா—நூற்பயன் பகர்ந்த பா—எனக் கொள்க.

மற்று, திருவாய் மொழியின் ஒவ்வொரு பதிகத்தின் கடை இடத்தும் உள்ள திருக்கடைக் காப்பாகிய திருப்பாக்களும் திரு நம்மாழ்வாரால் அருளப்பட்டன அல்ல எனவும், அவை பிறர் ஒருவரால் அருளப்பட்ட பல சுருதிப் பாக்கள்—நூற்பயன் பகர்ந்த பாக்கள்—எனவும் கொள்ளலாம். அப்படிக் கொள்ளு தற்கு உரிய ஏதுக்கள் அப் 'பலசுருதி—நூற்பயன்' பகர்ந்த பாக்களிலே யுள்ளன.

திருச்சைவ சமயத்தவர்தம் திருமுறைகளாகிய திருத் தேவாரத் திருப்பதிகங்களின் கடையிடத்துள்ள திருக்கடைக் காப்பாகிய திருப்பாக்களும் அவ்வப்பதிகங்களை அருளிய திருச் சைவசமய ஆசிரியன்மாரால் அருளப்பட்டன அல்ல. பிறர் ஒரு வரால் அருளப்பட்டனவே ஆகும என்பதும் அத்திருக்கடைக் காப்புத் திருப்பாக்களும் பல சுருதி—நூற்பயன்—பகர்ந்த பாக் களே ஆகும் என்பதும் இவண் நினைத்தற்பாலன. என்னை? என்னால் எழுதப்பட்ட "திருவாதவூர் அடிகள் அருளிய திருவா சகத்துள் 'சிவபுராணம்' என்னும் முதற்பாவின் உரை" என் னும் நூலைப் பார்க்க.

மற்று, இத்திருப்பாவில் அமைந்துள்ள "கோவிந்தன்" என்பது "கோ இந்த்ரன்" என்னும் வடமொழித் தொடரின்

மரூஉ. அல்லது "கோஇந்தன்" என்னும் பாகத மொழித் தொடரின் மரூஉ என்னலும் ஆம். வடமொழி "இந்த்ரன்" என்பது பாகத மொழியில் "இந்தன்" எனவே உள்ளது. இந் நூலின் முதல் ஆய்வு உரையின் கிளை மூன்றினைப் பார்க்க. "கோவிந்தன்" என்பதன் பொருள்: கோக்களுக்கு—ஆக்க ளுக்கு—அரசன் என்பது. கோபாலன் என்பது அதன் பரி யாயப் பெயர்—விகற்பப் பெயர். திருமால் திருக்கண்ணபிரா னாகத் திருப்பிறப்பு அருளிய காலத்தில் தேவ இந்திரனின் ஏவலால் பொழியப்பட்ட பெருமழையை அத்திருக்கண்ண பிரானர் மலையைக் குடையாகக் கவிழ்த்துப் பிடித்து ஆயர்தம் ஆக்களைக் காத்தார் என்பது புராண வரலாறு. அவ்வர லாற்றை ஏதுவாகக் கொண்டு கோஇந்திரன்—கோவிந்தன்— என்னும் பெயரைத் திருக்கண்ணபிரானர்க்குத் தேவ இந்திரன் வழங்கினன். (பாகவ–கோவ–37) (ரு)

ஐந்தாவது ஆய்வு உரை முற்றிற்று.

திரு ஆழ்வார்கள் திருமொழி திகழ்க.

---

## ஆறுவது ஆய்வு உரை: கிளை-1.

### திருப்பேரருளாளப் பெருமாள்தம் திருஅடிகட்கு வணக்கம்.

திவ்பப் பிரபந்தத்துள் திரு ஆழ்வார்கள் அமைத்தருளிய "இன எதுகை" என்னும் விதியைத் திவ்யப் பிரபந்தத்தின் "திவ்யார்த்த தீபிகை" உரைகாரர் உள்ளபடி உணர்ந்திலர்–திரிபாக உணர்ந்துளர்–என்பதனை இவ்வாறுவது ஆய்வு உரை விளக்கிக் காட்டுதலை அறிக.

"புலையறமாகி நின்ற புத்தொடு சமண மெல்லாம்
கலையறக் கற்ற மாந்தர் காண்பரோ கேட்ப ரோதாம்
தலையறுப் புண்டும் சாவேன் சத்தியம் காண்மின் ஐயா!
சிலையினுல் இலங்கை செற்ற தேவனே தேவ னுவான்" (திருமாலை 7)

இந்திருப்பாவிற்குத் திவ்யார்த்த தீபிகை உரை: "சாஸ்தி ரங்களை–நன்றாக ஓதின மனிதர்–நீசதர்மமா யிராநின்ற–பௌத்த மதம் க்ஷபண மதம் முதலிய எல்லா மதங்களையும்–நெஞ்சாலே தான் ஆராய்வார்களோ?–காது கொடுத்துத்தான் கேட்பார்களோ?– (அது நிற்க)–எனது தலையானது அறுக்கப்பட்டாலும்–நான் சாக

மாட்டேன்; இது ஸத்தியம்; ஸ்வாமிகளே!—(ப்ரத்தியக்ஷமாகக் காட்டுகிறேன்)பாருங்கள்; வில்லாலே-இலங்கையை நாசஞ் செய்த எம்பெருமானே-ஸர்வேச்வரனெனப்படுவான்" என்பது.

இப்பொருள் திவ்யப் பிரபந்த திவ்யார்த்த தீபிகை என்னும் உரை நூலுள் உள்ளது. இதன் சிறப்பையும் இறப்பையும் ஆய்ந்து அறிக. ஆயுங்கால் "கலை" என்பதற்கு (ஐயமும் திரிபும் ஆகிய) "குற்றம்" என்னும் பொருளைக் கொள்ளாமல் "சாஸ்திரங்கள்" எனவும், "அற" என்பதற்கு "நீங்க" என்னும் (எதிர்மறைப் பொருளைக் கொள்ளாமல்) "நன்றாக" என உடன்பாட்டுப் பொருளைக் கொண்டிருத்தலையும் நினைவில் உடையராய்-மறவாதவராய்-ஆய்க.

இத்திருப்பாவின் இரண்டாவது அடியில் உள்ள "கலையற" என்ற தொடரில் "ல"கரம் "ள"கரத்திரிபு. அத்திரிபு எதுகையின்பப் பொருட்டு. "ள" கரத்தை இன எதுகையாகக் கொள்ளலும் ஆம். கொள்ளின் குற்றம் ஒன்றும் இன்று. யாப்பு இலக்கண விதிக்கு முரண் இன்று ஆதலால், களை: குற்றம். (பிங்கலம்-1866) களையப்படுவதனைக் களை என்னல் ஆகுபெயர் வழக்கு. இவண் குற்றமாவது ஐயமும் திரிபும். அற: நீங்க. "கலை(களை)யறக் கற்ற மாந்தர்" என்ற தொடரின் பொருள்: எப்பொருளையும் அறியும் நெறியில் ஐயமும் திரிபும் இலராய் ஆயவும், ஆயப்பட்ட அப்பொருளின் உண்மைப் பண்பை உள்ளபடி அறியவும், நல்ல நூற்களை நல்ல முறையில் நன்றாகக் கற்றதனால் நல்ல அறிவை உடையராய மக்கள் என்பது.

செந்தமிழராய ஆசிரியன்மார் செந்தமிழ் மொழியாலாய பாக்களுள் அமைத்தருளிய இன எதுகை எனும் விதியை உணராமையால் இத்திருப்பாவுள் அமைந்துள்ள "கலையறக் கற்ற மாந்தர்" என்ற தொடரில் அமைந்துள்ள "கலை" என்பதற்குச் "சாஸ்திரங்கள்" எனவும் "அற" என்பதற்கு "நன்றாக" எனவும் பொருள் கொண்டு "சாஸ்திரங்களை நன்றாக ஓதின மாந்தர்" எனவும் பொருள்களை எழுதி வைத்தார் திவ்யப் பிரபந்த திவ்யார்த்த தீபிகை உரைகாரர். அப்பொருள் போலிப் பொருளே. கவிக்கருத்தன்று ஆதலால். என்னை? இவண் குற்றம் என்னும் பொருள் சுட்டும் "களை" என்பதன்

திரிசொல்லாகிய "கலை" என்பதற்குச் சாஸ்திரம் எனவும், நீக்கப் பொருள் (இன்மைப் பொருள்) சுட்டும் "அறுதல்" என்பதன் முதல் நிலையாகிய (அறு என்பது) எச்சமொழி யாகிய) "அற" என்பதற்கு "நன்றாக" எனவும் ஆக்கப் பொருள் (சேர்க்கைப் பொருள்) அமைத்துப் பொருள் எழுதிவைத்தார் ஆதலால், அத்தீபிகை உரைகாரர் இன எதுகை அறியாதவர் ஆயினர் என்பதனை அறிக. (க)

## ஆறுவது ஆய்வு உரை: கிளை-2.

"இலங்கை மன்னன் ஐந்தொ டைந்து பைந்த லைநி லத்துக
கலங்க அன்று சென்று கொன்று வென்றி கொண்ட வீரனே!
'விலங்கு நூலர்' வேத நாவர் நீதி யான கேள்வியார்
வலங்கொ ளக்கு டந்தை யுள்கி டந்த மாலு மல்லையே"

(திருச்சந்த விரு. 56)

இத்திருப்பாவில் மூன்றுவது அடியில் அமைந்துள்ள "விலங்கு நூலர்" என்ற தொடர்க்குத் திவ்யப் பிரபந்த திவ் யார்த்த தீபிகை உரைகாரர் "உடம்பிலே யஜ்ஞோப வீதத்தை உடையர்" எனப்பொருள் எழுதி வைத்தார். (அவரின் முன் உரையாசிரியர்களுள் ஒருவரும் "விலங்கு" என்பதற்கு "உடம்பு" எனவே பொருள் எழுதி வைத்துள்ளார்.) அப் பொருள் போலிப்பொருளே; கவிக்கருத்தன்று ஆதலால். மற்று என்னை?

இத்திருப்பாவின் மூன்றுவது அடியில் அமைந்துள்ள "விலங்கு நூலர்" என்ற தொடரில் உள்ள 'ல'கரம் 'ள' கரத் திரிபு. அத்திரிபு எதுகையின்பொருட்டு. இன எதுகையாகக் கொண்டு "விளங்கு நூலர்" எனவே கொள்ளினும் குற்றம் ஒன் றும் இன்று. யாப்பு இலக்கண விதிக்கு முரண் இன்று. ஆத லால் "விலங்கு நூலர்" என்ற தொடர் "விளங்கு நூலர்" என இருத்தலே சிறப்பு. பொருள்: விளங்கும்-ஒளிறும், நூலர்-யஜ்ஞோப வீதம் ஆகிய முப்புரி நூலை உடையவர். முப்புரி நூல் கிடந்து ஒளிறுதற்கு இடம் உடம்பே-மார்பே-ஆதலால், உடம்பு என்பது சொல் எச்சத்தின் பாத்தியாய்த் தந்து உரைக் கப்பட்டது என்க. விளங்கும் என்பதன் ஈற்று மகரம் கெட்டது. கெடுதல் வழக்கே. விளங்கு நூலர், வினைத்தொகைத் தொடர் என்னலும் ஆம்.

செந்தமிழ் மொழியராய ஆசிரியன்மார் கொண்ட "இன எதுகை" என்னும் விதியை உணராமையால் "விலங்கு நூலர்" என்ற தொடர்க்கு (விலங்கு-உடம்பு) உடம்பிலே யஜ்ஞோப வீதத்தை உடையவர் எனப் போலிப் பொருளை எழுதி வைத்தனர். அப்போலிப் பொருளைப் பொருத்தி வைப்பான் "விலங்கு-உடம்பு" என முன் உரைகாரர் ஒருவர் குறிப்பும் எழுதி வைத்தார் "விலங்கு" என்பதற்கு மக்கள் உடம்பு என்பது பொருள் அன்று. மக்கள் அல்லாத பிறப்பு இனத்து உடம்பே பொருள். இவ்வுண்மைப் பொருளைத் திவ்யப் பிரபந்த திவ்யார்த்த தீபிகை உரைகாரர் உணராமையால் அவர் இன எதுகை என்னும் விதியை அறியாதவர் ஆயினர் என்பதில் ஐயம் என்னை? அவர் இன எதுகை என்னும் விதியை அறியாதவரே ஆவர். நிற்க. (உ)

## ஆறுவது ஆய்வு உரை: கிளை-3.

"ஆலத் திலையான் அரவின் அணைமேலான்
நீலக் கடலுள் நெடுங்காலம் கண்வளர்ந்தான்
பாலப் பிராயத்தே பார்த்தற் கருள்செய்த
கோலப் பிரானுக்கோர் கோல் கொண்டுவா
குடந்தைக் கிடந்தாற்கோர் கோல்கொண்டுவா"
(பெரியாழ். 2-6-6)

இந்திருப்பாவிற்குத் திவ்யார்த்த தீபிகை உரை: (ப்ரளய காலத்தில் உலகமெல்லாமுண்டு) ஆலிலையில் பள்ளிகொண்டிருப்பவனும்-(எப்போதும்) திருவனந்தாழ்வான்மீது பள்ளிகொள்பவனும்—கருநிறமான ஸமுத்ரத்தில்-வெகு காலமாக—யோக நித்ரை செய்பவனும்—குழந்தைப் பருவமே தொடங்கி—அர்ஜுநநுக்கு—க்ருபை செய்த—அழகிய வடிவத்தை உடைய—தலைவனுமான இவனுக்கு ஓர் கோல் கொண்டு வா—; குடந்தை கிடந்தாற்கு ஓர் கோல் கொண்டு வா—." என்பது.

இப்பொருளைப் பொருத்திவைப்பான் "எம்பெருமான் திருமேனியின் நிழலீட்டாலே (பாற்கடல்) கறுத்துத் தோன்றுமாதலால் (அக்கடல்) நீலக்கடல் எனப்பட்டது" எனவும், "உவர்க்குங் கருங்கடல் நீருள்ளான்" என்றபடி "லவண ஸமுத்ரத்தில்

பள்ளி கொண்டிருப்பதாகக் கூறுவதுமுண்டு'' என மற்று ஒரு குறிப்பும் எழுதி வைத்தார் திவ்யப் பிரபந்த திவ்யார்த்த தீபிகை உரைகாரர். அவர் எழுதிவைத்த பொருள் போலிப் பொருளே. அவரால் காட்டப்பட்ட காட்டும் போலிக் காட்டே. கவிக்கருத்தன்று ஆதலால். மற்று என்னை? திருமாலது திருமேனியின் கரிய வண்ணம் திருப்பாற்கடலின் வெள்ளிய நீரைமட்டுந்தான் கரியவண்ணம் ஆக்கியதா? உலகில் படர்ந்து செல்கின்ற சூரிய சந்திரர்களின் ஒளிகளையும் மழுக்கி உலகுகள் எல்லாவற்றையும் கரியவண்ணத்தை ஆக்கி இருட்டைப் பெருக்கியதா? என்பார்க்கு யாது விடையை விடுப்பார்? நேரிய விடையை விடுத்தற்கு எவர்க்கும் இயலாது ஆதலால்.

இத்திருப்பாவில் அமைந்துள்ள "நீலக்கடல்" என்பதில் 'ல'கரம் 'ள'கரத்திரிபு. அத்திரிபு எதுகையின்பொருட்டு. 'ள'கரத்தை இன எதுகையாகக் கொண்டு "நீளக் கடல்" எனவே கொள்ளினும் குற்றம் ஒன்றும் இன்று. யாப்பு இலக்கணவிதிக்கு முரண் இன்று ஆகலால். "நீளக் கடல்" என்பதன் பொருள்: ஆழத்தாலும் அகலத்தாலும் நீளமான கடல்-பெரிய கடல்-என்பது. திவ்யப் பிரபந்த திவ்யார்த்த தீபிகை உரைகாரர், தம்மால் எழுதப்பட்ட போலிப் பொருளைப் பொருத்தி வைப்பான் தம்மால் காட்டாகக் கொள்ளப்பட்ட "உவர்க்குங் கடல் நீர் உள்ளான்" (மூன்றாந்திருவந்தாதி, 37) என்ற தொடரின் பொருளையும் திரிபாக உணர்ந்துள்ளார்போலும்! என்னை? அத்தொடரில் அமைந்துள்ள "உள்ளான்" என்பதற்கு "இருப்பவன்" என்பது கவிக்கருத்தன்று. உடையான்-போன்றவன்-என்பதே கவிக்கருத்து. அத்தொடர் உவமைத் தொகைத்தொடர் ஆதலால். அவரால் காட்டாகக் கொள்ளப் பட்ட தொடரை உடைய பா முற்றும் மேல் வருமாறு:

"அவற்கடிமை பட்டேன் அகத்தான் புறத்தான்
உவர்க்குங் கருங்கடல்நீர் உள்ளான்—துவர்க்கும்
பவளவாய்ப் பூமகளும் பன்மணிப்பூ ணாரம்
திகழும் திருமார்வன் தான்." (மூன்றாந்திருவந். 37.)

இத்திருப்பாவின் இரண்டாவது அடியின் பொருள்: "உவர்க்கும் கரிய கடல் நீர் போலும் கரிய திருமேனியை உடையவன்" என்பது. உவர்க்கும் கரிய நீரை உடைய கடலில்

வீற்றிருப்பவன் அல்லது திருப்பள்ளி கொண்டிருப்பவன் என்பது பொருள் அன்று. திருமால் வீற்றிருத்தலும் திருப்பள்ளி கொண்டிருத்தலும் வெள்ளிய நிறமுடைய நீரையுடைய திருப்பாற்கடல் என்பது புராண வரலாறு ஆதலால். புராண வரலாற்றுக்கு முரணாக உரைப்பவர் உரை போலி உரையே எனப் புறக்கணித்தற்பாலது. மற்று,

"கோல மலர்ப்பாவைக் கன்பா கியவென் அன்பேயோ
நீல வரைஇரண்டு பிறைகவ்வி நிமிர்ந்த தொப்ப [வெந்தாய்
கோல வராக மொன்றாய் நிலங்கோட் டிடைக்கொண்ட
நீலக் கடல்கடைந் தாய்உன்னைப் பெற்று இனிப் போக்குவனே"
(திருவாய். 10-10-7)

இத்திருப்பாவின் கடை அடியின் தலைச்சீரில் அமைந்துள்ள "நீலக் கடல்" என்பதும் "நீளக்கடல்" எனவே கோடற்பாலது. இத்தொடரின் 'ல' கரமும் இன எதுகையின் பாலதே. அமிர்தத்தின்பொருட்டுத் திருமாலால் கடையப்பட்டது திருப்பாற்கடலே ஆதலால்.

"மன்றில் மலிந்து கூத்துவந்து ஆடி
மால்விடை ஏழும் அடர்த்து ஆயர்
அன்று நடுங்க ஆநிரை காத்த
ஆண்மை கொலோ அறி யேன்நான்
நின்ற பிரானே நீள்கடல் வண்ணா
நீஇவள் தன்னைநின் கோயில்
முன்றி லெழுந்த முருங்கையில் தேனும்
முன்கை வளைகவர்ந் தாயே" (பெரிய திரு. 10-9-2.)

இத்திருப்பாவில் அமைந்துள்ள "நீள்கடல் வண்ணா" என்ற தொடரின் பொருளை இவண் நினைக்க.

மற்று, இத்திருப்பாவில் அமைந்துள்ள "மன்றில் மலிந்து" என்பது "மன்றல் மகிழ்ந்து" என இருத்தற்பாலது. திருமணத்தின் பொருட்டே மகிழ்ச்சியை உடையராய் "மால் விடை ஏழையும்" அடர்த்தார் திருக்கண்ணபிரானார் என்பது புராணவரலாறு ஆதலால். "நின்ற பிரானே" என்பது "நின்றை பிரானே" என இருத்தற்பாலது. நின்றை: திருநின்றையூர் என்பதன் மரூஉ. அது திருஆழ்வார்களால் புகழப்பட்ட திருப்பதிகளுள் ஒன்று ஆதலால். மற்று,

"கோவினர் செய்யும் கொடுமையை மடித்தேன்
 குறுங்குடி நெடுங்கடல் வண்ணா (பெரியதிரு. 1-6-8)
தேனுடைக் கமலத் திருவினுக் கரசே
 திரைகொள்மா நெடுங்கடல் கிடந்தாய்" (பெரியதிரு. 1-6-9.)

இத்திருப்பாக்களுள் அமைந்துள்ள "நெடுங்கடல்" என்பது பெரியகடல் எனும் பொருள் சுட்டி நிற்றலை அறிக. அறியின், பெரிய திருமொழி-10-9-2 ஆகிய திருப்பாவில் அமைந்துள்ள "நீலக்கடல்" என்பதும், பெரியாழ்வார் திருமொழி 2-6-6-ல் அமைந்துள்ள "நீலக்கடலுள் நெடுங்காலம் கண்வளர்ந்தாய்" என்ற தொடரில் அமைந்துள்ள "நீலக்கடல்" என்பதும் "நீளக் கடல்" என்பதன் திரிபு மொழிகள் என்பதும், அவற்றின் பொருள் பெரிய கடல் என்பதே என்பதும் விளங்கும்.

இப்பெற்றிய உண்மைப் பொருளை உணராமல் திவ்யார்த்த தீபிகை உரைகாரர் தம் மனத்தில் விளைந்த போலிப் பொருளைப் பொருளென எழுதிவைத்தார் ஆதலால், அவர் செந்தமிழ் மொழியராய ஆசிரியன்மார் கொண்ட இன எதுகை என்னும் விதியை அறியாதவர் ஆயினர் என்பதனை அறிக. (ந-)

ஆறவது ஆய்வு உரை முற்றிற்று.

திரு ஆழ்வார்கள் திருமொழி திகழ்க.

---

## ஏழாவது ஆய்வு உரை: கிளை-1.

### திருப்பேரருளாளப் பெருமாள்தம் திரு அடிகட்கு வணக்கம்

திரு ஆழ்வார்கள் திவ்யப் பிரபந்தத்துள் அமைத்து அருளிய உவமைகளைத் திவ்யார்த்த தீபிகை உரைகாரர் உள்ளபடி உணர்ந்திலர்—திரிபாக உணர்ந்துளர்—என்பதனை இவ்வேழாவது ஆய்வு உரை விளக்குதலை அறிக.

"சுரிகையும் தெறிவில்லும் செண்டு கோலும்
 மேலாடையும் தோழன் மார்கொண்டு ஓட
ஒருகையால் ஒருவன்தன் தோளை யூன்றி ஆன்நிரை
 யினமீளக் குறித்த சங்கம்
வருகையில் வாடிய பிள்ளை கண்ணன்
 மஞ்சளும் மேனியும் வடிவுங் கண்டாள்
அருகேநின் றாள்என்பெண் நோக்கிக் கண்டாள்
 அதுகண்டுஇவ் வூர்ஒன்று புணர்க்கின்றதே." (பெரியாழ். 3-4-3.)

இத்திருப்பாவிற்குத் திவ்யார்த்த தீபிகை உரை: "தன்னேராயிரம் பிள்ளைகள்,-உடைவாளையும்-சுண்டு வில்லையும்-பூஞ்சேண்டு கோலையும்-உத்தரீயத்தையும்-(கண்ணபிரானுக்கு வேண்டியபோது கொடுக்கைக்காக) கையிற்கொண்டு-பின்னேஸேவித்து வர-ஒரு உயிர்த் தோழனுடைய-தோளை-ஒரு திருக்கையினுல்-அவலம்பித்துக்கொண்டு-மற்றெரு திருக்கையினுல்-(கையழியப்) போன) பசுக்களின் திரள் திரும்பி வருவதற்காக ஊதவேண்டிச் சங்கை-ஏந்திக்கொண்டு-மீண்டு வருமளவில் வாட்டத்தை அடைந்துள்ள-ஸ்ரீக்ருஷ்ணகி சோரனுடைய-பற்று மஞ்சள் மயமான திருமேனியையும்-அவயவ ஸமுதாய சோபையையும்-(அவனுக்குச் சமீபத்தில் நின்றுகொண்டிருந்த என் மகள்-(முதலில் எல்லாரும் பார்க்கிறப்போல்) பார்த்தாள்,-(பிறகு அபூர்வ வஸ்து தர்சநமாயிருந்தபடியால்) கொஞ்சம் குறிப்பாகப் பார்த்தாள்; அவ்வளவையே நிமித்தமாகக்கொண்டு-இச்சேரியிலுள்ளவர்கள்-(அவனுக்கும் இவளுக்கும் அடியோடில்லாத) ஒரு ஸம்பந்தத்தையேறிட்டுச் சொல்லுகின்றனர்-ஏ-இதற்கு என் செய்வது!" என்பது.

இத்திருப்பாவில் அமைந்துள்ள "மஞ்சளும்" என்பது பிழைப்பாடம். அப்பாடம் "மஞ்சு+அன-மஞ்சன" என இருத்தற்பாலது. மஞ்சு:மேகம், அன-(அன்ன விகாரம்) உவம உருபு. பொருள்: சூல்கொண்ட மேகம் போலும் கரிய என்பது. திருக்கண்ணபிரானுர்தம் திருமேனி கருமைநிறம் உடையது. ஆதலால், (சூல்கொண்ட) கரிய நிறமுடைய மேகம் போலும் திருமேனி என வினை முடித்து உவமை கொள்க. இத்திருப்பாவில் செறிந்துள்ள இச்சிறிய பிழையை அறிந்து அதனைக் களைந்து இப்பெரும்பொருளை உணர மாட்டாமையால் திவ்யார்த்த தீபிகை உரைகாரர், "மஞ்சளும் மேனியும்" என்ற பிழைப் பாடத்தையே கொண்டு "பற்றுமஞ்சள் மயமான திருமேனி" எனப் பொருத்தமற்றதாகிய போலிப் பொருளை எழுதி வைத்தார். அப்போலிப் பொருளை எழுதி வைத்த செயலால் அத்திவ்யார்த்த தீபிகை உரைகாரர் திரு ஆழ்வார் அமைத்தருளியது ஆகிய உண்மை உவமைப் பொருளை உணர்ந்திலர்-திரிபாக உணர்ந்துளர் என அறிக. இத்திருப்பாவின் உரையில் அவரால் எழுதப்பட்ட பிற வாக்கியங்களில் அமைந்துள்ள சொற்களின் சோர்வையும் சூழ்ந்து தெளிக. "புணர்க்கின்றதே" என்ற தொடரின் ஈற்று ஏகாரத்துக்கு "இதற்கு என் செய்

வது" என்று பொருள் எழுதிவைத்த புத்தியின் பொலிவையுங் கண்டு களித்து நகைக்க. (க)

## ஏழாவது ஆய்வு உரை: கிளை-2.

"என்நீர்மை கண்டுஇரங்கி இதுதகாது என்னாத
என்நீல முகில்வண்ணர்க்கு என்சொல்லியான் சொல்லுகேனோ
நன்னீர்மை யினிஅவர்கண் தங்காதென்று ஒருவாய்ச்சொல்
நன்னீல மகன்றில்காள் நல்குதிரோ நல்கீரோ" (திருவாய். 1-4-4.)

இத்திருப்பாவின் உரை இடையே, "புல்லிக் கிடந்தேன் புடைபெயர்ந்தேன் அவ்வளவில், அள்ளிக்கொண்டதே பயிர்ப்பு" என்ற ஒருபாவைக் காட்டாக நாட்டி அதனை "இது வள்ளுவன் குறள்" என அதற்கு ஒரு நூலின் பெயரை எழுதி வைத்தார், "அடையவளந்தான் அரும்பதம்" என்னும் உரை நூலின் ஆசிரியர். அவரே அவ்வுரை இடையே "பயிர்ப்பு-பசப்பு-வைவர்ணயம்" என ஒரு குறிப்பும் எழுதிவைத்தார். அக்குறிப்பையே எழுதிவைத்தார் தம் "அரும்பத விளக்கம்" என்னும் உரை நூலுள் ஸ்ரீ இராமாநுஜ ஜீயர் என்னும் ஆசிரியரும். வெண்பாவின் யாப்பு இலக்கணமும் அறியாதவரே போலும் அவ்விரு ஆசிரியன்மாரும். அவர்கள் அப்பாவில் வெண்பாவிற்கு உரிய தளைதட்டாமையை நினைத்திலர் ஆதலால். மற்று, அப்பாவின் உண்மைப் பொருளையும் உணராதவரும் ஆவர்போலும்! என்னை? தம் காதலரைப்பிரிந்த மாதரின் மேனியில் பாவி அவரின் அழகைஅழித்து உடம்பை உருகுவிக்கும் ஒரு வகைச் சிறு வெண்ணிறத்திற்கே பசலை என்பது பெயர். அந்நிறத்திற்குப் "பயிர்ப்பு" என்பது பெயர் அன்று ஆதலால். பயிர்ப்பு என்பதன் பொருள் வண்ணம்—நிறம்—என்பது அன்று. அதன் பொருள் "அருவருப்பு" என்பதே ஆதலால்.

அவ்விரு அரும்பத விளக்க உரை ஆசிரியர்களாலும் காட்டாக ஆளப்பட்ட (திருக்குறளின் 187 வது) செய்யுளில் இடை அடியில் "அள்ளிக்கொள் வற்றே பசப்பு" என்பதே பாடமாகக் கிடக்கின்றது. அவ்விரு அரும்பத உரை ஆசிரியன்மார் தம்மால் காட்டாகக் கொண்ட பாவில் செறிந்துள்ள பிழையை உணர்ந்திலர் என்பதனை நினைக்க. அவ்விரு உரையாசிரியன்

மாரும் "பயிர்ப்பு" எனும் பிழையாகிய பாடத்தைக் கொண்ட தால் அவ்விருவரும் உண்மை உவமைப்பொருளை உணராதவ ராயினர் என்பதனை நினைவில் நிறுத்துக.

மற்று, இத்திருவாய் மொழியின் திருப்பாவின் உரை இடையே;

"காதலர் தொடுவுழி தொடுவுழி நீங்கி
விடுவுழி விடுவுழி பயத்த லானேன்"

என்ற ஈரடிகளைக் காட்டாக நாட்டி "இது சங்கத்தார் குறள்" எனவும் எழுதி வைத்தார்கள் அவ்விரு அரும்பத ஆசிரி யர்களும். அவ்வாசிரியர்களால் "சங்கத்தார் குறள்" என்று சொல்லப்பட்டபா, குறள்வெண்பா அன்று. அது, அகவற் பாவே. அவ்விருஅடிகளும் குறுந்தொகை என்னும் நூலின் 399-வது செய்யுளின் இடை அடிகள் ஆதலால், அவ்விரு அரும் பதஉரை ஆசிரியன்மார் செந்தமிழ் மொழியாலாய பாக்களின் உண்மைப் பெயர்களையும் உணராதவர்கள்போலும்! செந் தமிழ்மொழி வழங்கும் தேஎத்தில் என்றும் சங்கத்தார் குறள் என ஒரு நூல் தோன்றி உலவியது இல்லை. செந்தமிழ் மொழி யாலாய பாக்களின் உண்மைப் பெயர்களையும் உணராதவர் கள் செந்தமிழ் மொழியாலாய செவ்விய நூல்கட்கு உரை எழுதி வைத்திருப்பின், அவ்வுரை இத்தனை இழிவை உடைத்தா யிருக்கும் என்று எடுத்துச்சொல்லலும் வேண்டுமோ? தம்மால் எழுதப்படும் தம் உரையின் இழிவைக்கண்டு செந்தமிழராய ஆசிரியன்மார் நகைப்பரே என்ற நாணத்தால்போலும் செந் தமிழ் மொழியாலாய செவ்விய நூற்குச் செந்தமிழ் மொழியின் செவ்விய நடையால் உரை எழுதிவையாமல், செந்தமிழின் அயல் மொழியால் (கருவேப்பிலையை நொடையும் குறத்தி மொழியும் மொழிபோலும் கலப்பு மொழியால்) உரைஎழுதி வைத்தார்கள் திவ்யப்பிரபந்தத்தின் பண்டைய உரையாசிரியர் கள் என்க.

மற்று, அவ்விரண்டு அரும்பத உரை ஆசிரியன்மாரும் அக் குறுந்தொகைப் பாவினின்று (399) காட்டாகக் கொண்ட ஈரடி களிலும் அமைந்துள்ள "தொடுவுழி தொடுவுழி" என்பதற்கு "தொட்ட தொட்ட இடம்" எனவும் "விடுவுழி விடுவுழி" என்ப தற்கு "விட்டவிட்ட இடம் எல்லாம்" எனவும்,பொருள் எழுதி வைத்தார்கள். அப்பொருள்களும் போலிப் பொருள்களே.

அக்குறுந்தொகைப் பாவின் ஆசிரியர் அப்பாவில் அமைத்து வைத்த உவமை, இடப்பொருட்டு அன்று; காலப்பொருட்டே. அவ்விரு அடிகளின் தெள்ளிய உவமைப்பொருளைத் திவ்யப் பிரபந்த திவ்யார்த்த தீபிகை உரைகாரரும் உணர்ந்திலர் என்பதனை அவரது திரிபு உணர்ச்சிச் செயலை விளக்குவான் எழுதப்பட்ட இந்நூலின் பன்னிரண்டாவது ஆய்வு உரையைக் கற்று அறிக. இவ்வாய்வு உரையில் உரைக்கப்பட்ட ஏதுக்களால் திவ்யப் பிரபந்தத்தின் உரைகாரர் யாவரும் திரு ஆழ்வார்கள் அமைத்தருளியஉண்மை ஆகிய உவமைப் பொருள்களை உணராதவர் ஆயினர் என்பதனை அறிக. (உ)

ஏழாவது ஆய்வு உரை முற்றிற்று.

திரு ஆழ்வார்கள் திருமொழி திகழ்க.

---

## எட்டாவது ஆய்வு உரை: கிளை-1.

திருப்பேரருளாளப் பெருமாள்தம் திரு அடிகட்கு வணக்கம்.

திரு ஆழ்வார்கள் திவ்யப் பிரபந்தத்துள் அமைத்து அருளிய செந்தமிழ் மொழியின் திரிசொற்களையும் திவ்யப் பிரபந்த திவ்யார்த்த தீபிகை உரைகாரர் உணர்ந்திலர் என்பதனை இவ்வெட்டாவது ஆய்வு உரை விளக்கிக் காட்டுதலை அறிக.

"மெச்சூது சங்கம் இடத்தான் நல் வேய்ஊதி
பொய்ச்சூதில் தோற்ற பொறையுடை மன்னர்க்காய்ப்
பத்தூர் பெறாதுஅன்று பாரதம்கை செய்த
அத்தூதன் அப்பூச்சி காட்டுகின்றான்
அம்மனே அப்பூச்சி காட்டுகின்றான்." (பெரியாழ். 2. 1. 1)

இந்திருப்பாவிற்குத் திவ்யார்த்த தீபிகை உரை: "(அனைவரும், கொண்டாடும்படி-ஊதுகின்ற--பாஞ்சஜன்யத்தை—இடக்கையில் ஏந்தியுள்ளவனும்—நல்ல வேய்ங்குழலை—ஊதுபவனும்-க்ருத்ரிய மான சூதிலே-(தம்முடைய சொத்துக்களை எல்லாம்) இழந்தவர்களாய்-பொறுமைசாலிகளான-பாண்டவர்கட்கு-(தான் எல்லா வகைத்) துணையுமாயிருந்து—(துர்யோதநாதிகளிடத்துத் தூது போய்க் கேட்டுப் பார்த்தும் அவர்களிடத்தினின்றும்)-பத்து ஊரையும்-அடைய முடியாமல்-அக்காலத்திலே-பாரத யுத்தத்தை-அணி

வகுத்துச் செய்த-அந்தப் பாண்டவ தூதனுன கண்ணன்-அப்படிப் பட்ட (மிகவும் பயங்கரமான) பூச்சி காட்டுகின்றன்; அம்மா! அப் பூச்சி காட்டுகின்றன்–.'' என்பது.

திவ்யப் பிரபந்த திவ்யார்த்த தீபிகை உரையின் சிறப்பை யும் இறப்பையும் உய்த்துணர்க. உய்த்துணருங்கால் உரை நடையின் அழகையும், "அம்மனே" என்பதற்கு "அம்மா" எனவும், "அப்பூச்சி" என்பதற்கு "அப்படிப்பட்ட பூச்சி" எனச் சுட்டுவிரித்தும் பொருள் எழுதப்பட்ட பொறபில் செயலை யும் நினைவில் வைத்துக்கொண்டு ஆய்க. "அம்மனே" என் பது இவண் "அம்மஹானே" என்பதன் மரூஉ என்பதனை யும் மறவற்க.

இத்திருப்பாவில் அமைந்துள்ள "பத்தூர்" என்பதனைப் "பத்து ஊர்" எனப் பிரித்துப் "பத்து" என்பதற்கு எட்டும் இரண்டும் கூடிய பத்து என்னும் தொகையைப் பொருள்எனக் கொண்டு பத்து ஊர்கள் எனப் பொருள் எழுதி வைத்தார் திவ் யார்த்த தீபிகை உரைகாரர். திருக்கண்ணபிரானுர் துரியோத னன் இடம் தூதராகச் சென்றகாலத்தில்–ஒற்றராகச் சென்ற காலத்தில்–(ஒற்றுமைக்காம் வழியை உரைப்பவர் ஒற்றர். உலாவும் உண்மையை உணர்ந்து உரைப்பவர் உளவர்.) அவர், அவனிடம் பத்து ஊர்களைப்-பத்து வீடுகளைப்-பாண்டவர்கட் காகக் கேட்டார் என்பது மூன்னூற்களுள் கூறப்படவில்லை. ஆதலால், திவ்யார்த்த தீபிகை உரைகாரர். உரைத்து வைத்த பொருள் போலிப் பொருளெனப் புறக்கணித்தற்பாலது. மற்று என்னை பத்து ஊர் என்பதன் பொருள்? "பத்தூர்" என்பதில் "பத்து" என்பது "பகுத்து" என்பது விகாரப்பட்ட தால் ஆயமொழி. பத்து: பகுத்து; பாதி. ஊர்; நாடு. இஃதே கவிக்கருத்து. மற்று,

"சீர்ஒன்று தூதாய்த் துரியோ தனன்பக்கல்
ஊர்ஒன்று வேண்டிப் பெருத உரோடத்தால்
பார்ஒன்றிப் பாரதம் கைசெய்து பார்த்தற்குத்
தேர்ஒன்றை ஊர்ந்தாற்குஓர் கொல்கொண்டுவா
தேவர்பிரானுக்குஓர் கோல்கொண்டுவா" (பெரியா. 2-6-5)

இத்திரு ஆழ்வாரே 'ஊர் ஒன்று' என்று தொகையாக அருளி இருத்தலை நினைக்க. ஊர் ஒன்று: ஊர்; தேசம், நாடு. ஒன்று,

அசைநிலை. எண்ணல் பொருட்டன்று. அன்றியும்,

“பார்வ ழங்கநினைவு இல்லை யேல்அவனி
பாதி யாயினும் வழங்குவாய்
தார்வ ழங்குதட மார்ப என்ன அது
தானும் மன்னவன் மறுக்கஐந்து
ஊர்வ ழங்குகென உற்று இ ரந்தனன் இவ்
வுலகுள லாம் உதவு முந்தியான்”

(வில்லி-பார-தூது 113)

இப்பாவில் பெரும்பேராசிரியர் ‘அவனி பாதி’ என அருளி இருத்தலையும் நினைக்க.

‘பகுத்து’ என்பது ‘பத்து’ எனத் திரிபுறுமோ எனின், அது, பாத்துஎனத் திரிபுறும் எனின் பத்து எனவும் திரிபுறும் என்பதில் இழுக்கு என்னை! ஐயம் என்னை! பகுத்து என்பது பாத்து எனத்திரிபுற்று இருத்தலைத் திருக்குறள் செய்யுள் 44, 227, 1107 ஆகிய அம்மூவிடத்துப்பாக்களின் பொருள்களைப் பார்த்துத் தெளிக.

மற்று, “எட்டுத் திசையும்” என்ற திருப்பாவில் (பெரியாழ். 4-2-10ல்) பெண் யானையின் பெயராகிய ‘பாட்டி’ என்பது ‘பட்டி’ எனத் திரிபுற்று இருத்தலையும் நினைக்க. அப்பாவின் பொருளை இந்நூலின் ஐந்தாவது ஆய்வு உரையின் நான்காவது கிளையைக் கற்று அறிக.

இத்திருப்பாவின் கவிக்கருத்தாகிய உண்மைப் பொருளை உணராமையால் திவ்யார்த்த தீபிகை உரைகாரர் செந்தமிழ் மொழியுரராய ஆசிரியன்மார் கொண்ட திரிசொல்லை அறியாதவராயினர் என்க. (க)

## எட்டாவது ஆய்வு உரை: கிளை-2.

“பலபல நாழம் சொல்லிப் பழித்தசிசு பாலன்தன்னை
அலவலைமை தவிர்த்த அழகன் அலங்காரன்மலை
குலமலை கோலமலை குளிர்மாமலை கொற்றமலை
நிலமலை நீண்டமலை திருமாலிருஞ் சோலையதே” (பெரியாழ். 4-3-5)

இத்திருப்பாவிற்குந் திவ்யார்த்த தீபிகை உரை: “பலபல குற்றங்களை-சொல்லி – தூஷித்த – சிசுபாலனுடைய – அற்பத்தனத்தை-(சரம தசையில்) போக்கி அருளின-அழகை உடையவனும்-அலங்காரத்தை உடையவனுமான கண்ணபிரான் (எழுந்

தருளி இருக்கிற—மலையாவது;—தொண்டர் குலத்துக்குத் தலையான மலையும்—அழகை உடைய மலையும்—குளிர்ந்த பெரிய மலையும்—ஜயத்தை உடைய மலையும்—(நல்ல மரங்கள் முளைக்கைக்குப் பாங்கான) நிலத்தை உடைய மலையும்—நீட்சியை உடைய மலையுமான—திருமாலிருஞ் சோலைஅதே" என்பது.

இப்பொருள் திவ்யார்த்த தீபிகை உரை என்னும் நூலுள் உள்ளது. இப்பொருள் கவிக்கருத்தன்று ஆதலால் போலிப் பொருள் எனப் புறக்கணித்தற்பாலது. என்னை?

இத்திருப்பாவில் அமைந்துள்ள "நாழம் சொல்லி" என்பது பிழைப்பாடம். அது "தாழம் சொல்லி" என இருத்தற்பாலது. தாழம், "தாழ்மை" என்பதன் திரிபுமொழி. பொருள்: கீழ்மையை—இழிவைச்—சுட்டிய சொல்லைச் சொல்லி என்பது. "அலவலைமை தவிர்த்த" என்பது அலவு-அல்—ஐமை—தவிர்த்த" எனப் பிரித்துப் பொருள் கோடற்பாலது. அலவு, அளவு என்பதன் 'ள'கரம் 'ல'கரமாகத் திரிந்த மொழி, அத்திரிபு, எதுகையின்பொருட்டு. லகரம், இன எதுகை என்னலும் ஆம். அல: அல்லாத. ஐமை உயர்வு உடைமை, பெருமை. தவிர்த்த: கெடுத்த. சிசுபாலனது அளவு இல்லாத பெருமையை—ஆண்மையை—அழித்த என்பது கருத்து. அலவு (அளவு)—அல்—ஐமை—எனப் பிரித்து முடிக்க.) அழகன் அலங்காரன் என்ற தொடர் இரு பெயர் ஒட்டுத் தொடர். அழகன் எனினும் அலங்காரன் எனினும் பொருள் ஒன்றே. அழகன் தமிழ் மொழி; அலங்காரன் வடமொழிப் பெயர் ஆதலால். "குல மலை" என்ற தொடரின் பொருள்:' திருமால் வீற்றிருப்பதால் சிறந்த மலை—பெருமையை உடைய மலை-என்பது. "தொண்டக் குலத்துக்குத் தலைமையானமலை" எனல் கவிக்கருத்தன்று. அது தீபிகை உரைகாரர் கருத்து என்க. "நில மலை" என்பது நீலமலை என்பதன் திரிபு மொழி. அத்திரிபு மோனைத் தொடைப் பொருட்டு. பொருள்: கரிய மலை என்பது. "அல வலமைதவிர்த்த" எனப் பாடங் கொண்டு அதற்குச் "சிசுபால னது அளவு இல்லாத (பல) குற்றங்களைப் பொருள் படுத்தாமல் விடுத்த என்பது பொருள் என்னலும் ஆம்.

—

11+7 இத்திருப்பாவின் கவிக் கருத்தை உணர மாட்டாமையால் "நாழம்" என்ற பிழைப்பாடத்தை நேரிய பாட

மாகக் கொண்டு அதற்குக் 'குற்றம்' எனவும், 'அல வலைமை' என்ற தொடரை ஒரு மொழியாகக் கொண்டு அதற்கு 'அற்பத்தனத்தை'' எனவும், 'அழகன்' என் பதற்கு 'அழகை உடையவன்' எனவும், 'அலங்காரன்' என்பதற்கு 'அலங்காரத்தையுடையவன்' எனவும் 'குலமலை' என்பதற்குத் 'தொண்டக்குலத்துக்குத் தலைமையான மலை' என வும் 'நிலமலை' என்பதற்கு 'நல்ல மரங்கள் முளைக்கைக்குப் பாங்கான நிலத்தை உடைய மலை'' எனவும் திவ்யார்த்த தீபிகை உரைகாரர் பொருள் உரைத்திருத்தலை அறிக. இத்திருப்பா வில் அமைந்துள்ள 'நிலமலை' என்றது 'நீலமலை' என்பதன் திரிபு மொழி என்றதன் சிறப்பை; அழகன் மலை, குலமலை, கோலமலை, குளிர்மாமலை, கொற்ற மலை, நில (நீல) மலை (கரிய மலை) என்ற அடுக்கின் சிறப்பை ஆழ்ந்து சூழ்ந்து தேறுக.

இத்திருப்பாவிற்கு அத்திவ்யார்த்த தீபிகை உரைகாரர் எழுதி வைத்த பொருள்; அவர் திரிசொல் அறியாதவர் என்ப தனையும், இன எதுகை அறியாதவர் என்பதனையும், இரு பெயர் ஒட்டுத் தொடர் அறியாதவர் என்பதனையும் விளக்குதலை அறிக. (உ)

## எட்டாவது ஆய்வு உரை: கிளை-3.

"கற்றுக் கறவைக் கணங்கள் பல கறந்து
செற்றார் திறலழியச் சென்று செருச் செய்யும்
குற்றம் ஒன்றில்லாத கோவலர்தம் பொற்கொடியே
புற்றர வல்குல் புனமயிலே போதராய்
சுற்றத்துத் தோழிமார் எல்லாரும் வந்துநின்
முற்றம் புகுந்து முகில்வண்ணன் பேர்பாடச்
சிற்றாதே பேசாதே செல்வப் பெண்டாட்டிநீ
எற்றுக்கு உறங்கும் பொருள் ஏலோரெம்பாவாய்" (திருப். 11)

இத்திருப்பாவிற்குத் திவ்யார்த்த தீபிகை உரை: கற்று—கன் றாகிய பசுக்களினுடைய—பல திரள்களை-கறப்பவர்களும்-சத்து நுக்களினுடைய வலி அழியும்படி—(தாமே படையெடுத்துச்) சென்று—போர் செய்யுமவர்களும்—ஒருவகைக் குற்றமும் அற்ற வர்களுமான—கோபாலர்களுடைய (குடியில் பிறந்த)-பொன் கொடி போன்றவளே!—புற்றிலிருக்கிற பாம்பின் படம் போன்ற அல்குலையும், காட்டில் (இஷ்டப்படி திரிகிற) மயில் போன்ற

சாயலையுமுடையவளே!-செல்வமுள்ள பெண்பிள்ளாய்!-(எழுந்து) வருவாயாக;--பந்து வர்க்கத்திற் சேர்ந்தவர்களும் தோழிமார்களு மாகிய எல்லாரும்-(திரண்டு) வந்து-உனது-(திருமாளிகையின்) முற்றத்தேறப் புகுந்து-கார்மேகவண்ணனுன கண்ணபிரானுடைய திருநாமங்களைப் பாடச் செய்தேயும்—(பேருறக்கமுடைய) நீ— சிற்றது, சலியாமலும்-(ஒன்றும்) பேசாமலும்-உறங்குவது என்ன் பிரயோஜனத்திற்காகவோ? (அறியோம்)-ஏல்ஓர் எம்பாவாய்—'' என்பது.

திவ்யார்த்த தீபிகை உரைகாரரால் எழுதிவைக்கப்பட்ட அப்பொருள் கவிக் கருத்தன்று. ஆதலால், அப்பொருள் போலிப் பொருள் எனப் புறக்கணித்தற்பாலதே. என்னை? கற்று, கன்று என்பதன் விகார மொழி. அவ்விகாரம் இன்னோசைப்பொருட்டு. 'கறந்து' என்பது பிழை. அது, 'கரந்து' என இருத்தற்பாலது. பொருள்: களவால் மறைத்து-கவர்ந்து- என்பது. கணங்கள்: கணம், கூட்டம். கள், அசை. அவ் வாய்ப்பாடியில் உள்ள ஆயர் பலராதலால் கணங்கள், பலவின் பொருட்டு என்னலும் ஆம் 'செற்றார்' என்பது சென்றார் என் பதன் விகார மொழி. அவ்விகாரம் எதுகைத் தொடை இன் பத்தின்பொருட்டு. 'சிற்றதே' என்பது 'சிற்றும்' என இருத் தற்பாலது. பொருள்: சிறிதும் என்பது.

இத்திருப்பாவின் முதல் மூன்று அடிகளையும் ஒரு தொட ராகக்கொண்டு, "கன்றுகளை உடைய பசுக்களால் ஆய கூட் டங்கள் பலவற்றைக் களவால் (கரந்து)-கவர்ந்து-(செற்றார்)- சென்றாரைத் தேடிச்சென்று கவர்ந்து சென்ற அவரின் திற லழியப் போர் செய்பவரும் பழிச்செயல் (சிற்றும்) சிறிதும் இல்லாதவரும் ஆகிய கோபாலர்தம் அழகிய கொடி போன்ற வளே!" எனப் பொருள்கொள்க. இப்பொருளே கவிக்கருத்து. இப்பொருளைத் திவ்யார்த்த தீபிகை உரைகாரர் உரைத்து வைத்த பொருளொடு ஒப்பிட்டுப் பொருளின் சிறப்பை உணர்க.

இத்திருப்பாவில் செறிந்துள்ள பிழைகளையும் கவிக் கருத்தையும் அறியமாட்டாமையால் திவ்யார்த்த தீபிகை உரை காரர் 'கற்றுக் கறவை' என்ற பிழைப்பாடத்தை நேரிய பாட மாகக்கொண்டு 'கன்றாகிய பசுக்களினுடைய பல திரள்களைக் கறப்பவர்களும்' எனப் போலிப் பொருளை நேரிய பொருள் என எழுதிவைத்தார், அவர் கன்றாகிய பசுக்களைக் கறப்பது

வழக்கில்லை என்பதனையும் கன்றை ஈன்று உள்ள தாய்ப் பசுக்களைத்தான் கறப்பது வழக்கம் என்பதனையும் மறந்தனர். அந்தோ! அவரது சிறப்பு நன்று! நன்று! மிக நன்று! சென்றார் என்பதன் திரிசொல்லாகிய "செற்றார்" என்பதற்குச் "சத்துருக்கள்" எனவும் "சிற்றும்" என்பதன் பிழை மொழியாகிய "சிற்றாதே" என்பதற்குச் "சலியாமலும்" எனவும் பதவுரைகள் எழுதி வைத்தார். 'கரந்து' என்பதன் பிழையாகிய 'கறந்து' என்ற பாடத்தை நேரிய பாடமாகக் கொண்டதன்றி அப்பாடத்தை-வினை எச்ச மொழியைப்-பெயரெச்ச மொழியாகக் கொண்டு "கறப்பவர்களும்" எனப் பொருள் எழுதிவைத்தார். தாம் எழுதிவைத்த போலிப் பொருளைப் போற்றுதல்செய்வான் கல்லுடை ஒட்டத்தி கள்ளுண்ட களிப்பால் மொழியும் மொழிபோலும் கலப்பு மொழியால் ஒரு இலக்கண விதியும் எழுதி வைத்தார். அவ்விதியை உடையதாகிய அவர் கற்ற இலக்கண நூல் யாதோ? அது எம்மொழியாலாயதோ? அவற்றை அவரே அறிகுவர் போலும்! என்னை? "கறந்து என்பது வினை எச்சமாயினும் பெயரெச்சப் பொருள் உரைத்தது தாத்பரிய மரியாதையாலாம்; எனவே, இக்குற்ற வினை எச்ச விகுதி-உத்தரகாலீநத்வத்தில் நோக்குடைத்தன்று என்றதாயிற்று" என ஓர் இலக்கணக் குறிப்பும் எழுதி வைத்தார். அக்குறிப்பைத் தாங்குதற்கு மதலையாக;

"வரிந்திட்ட வில்லால் மரம் ஏழும் எய்து மலைபோலுருவத்து
ஓர் இராக்கதி மூக்கு அரிந்திட்டவன்" (பெரியதிரு. 10-6-9)
"பண்டு அரவின் அணை கிடந்து
பாரளந்த பண்பாளா" (பெரிய திரு. 3-6-7.)

என்ற இவை முதலான பல்லாயிரம் பாசுரங்கள் இதற்கு உதாரணமாம், எனக் காட்டும் எழுதிவைத்தார் திவ்யார்த்த தீபிகை உரைகாரர் ஆதலால்.

அத்திவ்யார்த்த தீபிகை உரைகாரரால் குறிப்பிடப்பட்ட பாக்கள் முற்றாக மேலே உள்ளன. அவற்றைக் கண்டு அவரது அறிவின் திறத்தினைத் தேறுக.

"சுரிந்திட்ட செங்கேழ் உளைப்பொங்கு அரிமாத் துலையப்
பிரியாது சென்று எய்தி எய்தாது
இரிந்திட்டு இடங் கொண்டு அடங்காததன் வாய்
இருகூறு செய்தபெருமான் முனநாள்

வரிந்திட்ட வில்லால் மரம் ஏழும் எய்து
மலைபோல் உருவத்துஓர் இராக்கதிமூக்கு
அரிந்திட்டவன் காண்மின் அன்று ஆய்ச்சியால்
அளைவெண்ணெய் உண்டு ஆப்புண்டு இருந்தவனே"
(பெரிய திரு. 10-6-9)

"கொண்டு அரவத் திரையுலவு குரைகடல்மேல் குலவரைபோல்
பண்டு அரவின் அணைக்கிடந்து பாரளந்த பண்பாளா
வண்டு அமரும் வளர்பொழில்சூழ் வயலாலி மைந்தா என்
கண்துயில் நீ கொண்டாய்க்கு என் கனவளையும் கடவேனோ"
(பெரிய திரு. 3-6-7.)

இவ்விரு திருப்பாக்களின் பொருள்களை அறிந்து திவ்யார்த்த தீபிகை உரைகாரர் உரைத்து வைத்த கல்லுடை ஒட்டத்தி கள்ளுண்ட களிப்பால் மொழிந்தால் அன்ன கலப்பு மொழியாலாய இலக்கணக் குறிப்பின் இழிவைக் கண்டு அதனைப் புறக்கணிக்க.

திவ்யார்த்த தீபிகை உரைகாரரால் எழுதப்பட்ட பொருள், கன்றுகளினின்று பாலைக் கறப்பதில்லை என்பதனையும் (கறவாது) கன்றுகளை ஈன்றுள்ள ஆக்களினின்றேதான் பாலைக் கறத்தல் வழக்கம் என்பதனையும் அவர் உணர்ந்திலர் என்பதனை அறிவித்தலை அறிக. என்னை? "கன்றாகிய பசுக்களினுடைய பல திரள்களைக் கறப்பவர்களும்" என இரு பெயர் ஒட்டின்பாத்தியாய்த் தொடரை விரித்துப் பொருளை எழுதி வைத்தார் ஆதலால். (திரள் என்பது ஆவிற்குப் பெயர் அன்று) தாம் கற்ற புதிய இலக்கணக் கொள்கையால் 'கரந்து' என்பது 'கறந்து' எனப் பிழையுற்று உளது என்பதனையும் அவர் உணர்ந்திலர் என்பதனை அறிக. என்னை? "கற்றுக் கரவை" என்பது வேற்றுமைத் தொகைத் தொடர்; 'கன்றினை உடைய கரவை" என்பது பொருள். "கரவைக் கணம்" என்பது இரு பெயர் ஒட்டுப் பண்புத் தொகைத் தொடர். இததொடர் இலக்கணமும் உணர்ந்திலாமையால் சென்றார் என்பதன் திரிபு மொழியாகிய "செற்றார்" என்பதற்குச் "சத்துருக்கள்" எனப் போலிப் பொருளை எழுதி வைத்தார். அதனால் அவர், திரிசொல் உணர்ந்திலர் என்பதனை அறிக.

மன்னர்க்கு மன்னர் நாட்டின்பொருட்டுப் பகைவராக இருத்தல்போலக் கோபாலர்க்குக் கோபாலர்—ஆயர்க்கு ஆயர்—

ஆவின்பொருட்டுப் பகைவராக இருத்தல் வழக்கில்லை. இல்லை ஆயினும், அவருடைய ஆக்களைக் களவால் கவர்பவரே அவர்கட்குப் பகைவராகுவர். தம்மின் ஆக்களைக் கவரும் கள்வரை அடக்கி அக்கள்வரால் கவரப்பட்ட தம்மின் ஆக்களை மீட்டுக் கோடலே ஆயர்தம் வழக்கம். அவ்வழக்கினைத் திவ்யார்த்த தீபிகை உரைகாரர் உணர்ந்திலர்போலும்!

அவரால் காட்டாகக் கொள்ளப்பட்ட பெரிய திருமொழி 3-6-7; 10–6–9 ஆகிய இரு திருப்பாக்களும் பண்டே பிழை செறியப்பட்ட பாக்கள். (பெரிய திருமொழி 3. 6. 7ல்) "கிடந்து" என்பது "கிடந்தாய்" எனவும் (பெரிய திருமொழி 10–6–9-ல் "எய்து" என்பது "எய்தவன்" எனவும் இருத்தற்பாலன. இப்பிழைகள் கால நீட்டிப்பால் அத்யயனக்காரரால் செறிக்கப் பட்டனவாகும். இப்பிழைகளையும் உணர்ந்திலர் போலும் திவ்யார்த்த தீபிகை உரைகாரர். அவர் உணர்ந்திருப்பின், அவ்விரு திருப்பாக்களையும் காட்டாகக் கொண்டிரார் ஆதலால்.

திருப்பாவையின் பதினோராவதாகிய இத்திருப்பாவிற்குத் தீபிகை உரைகாரர் உரைத்து வைத்த பொருள், அவர் திரிசொல் உணராதவர் என்பதனை விளக்குதலை அறிக. (ந)

## எட்டாவது ஆய்வு உரை: கிளை-4.

"நைவாய எம்மேபோல் நாண்மதியே! நீ இந்நாள்
மைவான் இருள் அகற்றாய் மாழாந்து தேம்புதியால்
ஐவாய் அரவணைமேல் ஆழிப் பெருமானார்
மெய்வாசகம் கேட்டுஉன் மெய்ந்நீர்மை தோற்றாயே."
(திருவாய். 2-1-6.)

இத்திருப்பாவிற்குத் திவ்யார்த்த தீபிகை உரை: "சந்திரனே! நைந்து போவதையே-இயற்கையாக உடைய-எங்களைப்போல (ஒளியுருவாகிய, நீயும்-இக்காலத்திலே ஐந்து முகங்களையுடைய சேஷ சயனத்தின்மீது உள்ள ச்க்கரபாணியான எம்பெருமானது- உண்மையான வார்த்தையைக்கேட்டு-உனது வடிவின் குணமாகிய ஒளியை-இழந்தாய்போலும்–" என்பது.

"ஐவாய் இத்யாதி: அவருடைய பெரும்பொய்யிலே அகப்பட்டாயாகாதே நீ தம் பாம்புபோல் நாவும் இரண்டுள வாயிற்று என்கிறபடியே தமக்கும் பொய்சொல்ல ஒருவாய் உண்டாகில்

தம்பரிகாரத்துக்கு அஞ்சுவாய் உண்டு அவனுக்குப் பள்ளித் தோழமை பலித்தபடி'' என்பது முப்பத்தாறாயிரப்படி என்னும் உரை நூலுள் உள்ளது.

"ஐவாய் இத்யாதி: பல வார்த்தை சொல்லுகைக்குப் பல வாயை உடைய திரு அநந்த ஆழ்வானோடேயிறே பழக்கம்'' என்பது திருப்பெரிய ஆச்சான் பிள்ளை உரை நூலுள் உள்ளது. அவர், இத்திருப்பாவில் ஐவாய் என்பதற்கு ஒரு தொகையைச் சுட்டி உரையாமல், பொதுவாகப் பலவாய் என உரைத்து வைத்தார் ஆயினும், ஐவாய் என்பதற்குத் தொகைப்பொருள் சுட்டிய ஐந்து வாய் என்பதே அவரது கருத்துப் போலும். திருவாய் மொழி. 2–6–5. ஆகிய திருப்பாவிற்கு அவர் எழுதி வைத்த பொருளை இதனடியில் பார்த்துத் தேறுக.

"உய்ந்து போந்து என் உலப்பிலாத வெந் தீவினைகளை நாசஞ்
அந்தமில் அடிமை அடைந்தேன் விடுவேனோ [செய்து உனது
ஐந்து பைந்தலை ஆடரவணை மேவிப் பாற்கடல் யோக நித்திரை
சிந்தை செய்த எந்தாய் உன்னைச் சிந்தை செய்து செய்தே''
(திருவாய், 2-6-5.)

இத்திருப்பாவிற்குத் திவ்யார்த்ததீபிகை உரை: "திருப்பாற் கடலிலே ஐந்தாகிய படங்களோடு கூடிய சிரங்களை உடையவனாய் ஆடுகின்ற ஆதிசேஷனாகிற சயனத்தின்மீது-யோக நித்திரையிலே பொருந்தி லோகரக்ஷண சிந்தனை பண்ணின ஸ்வாமியே! உன்னை நிரந்தரமாகச் சிந்தித்து உஜ்ஜீவனம் பெற்று-முடிவில்லாத கொடிய எனது பாவங்களைத் தொலைத்து-உன்னுடைய முடிவில்லாத கைங்கர்ய ஸாம்ராஜ்யத்தை அடைந்தவனான நான்-இனி விட்டு நீங்குவேனோ?'' என்பது.

"ஐந்து இத்யாதி: அடிமையில் சுவடு அறிந்த திருஅநந்த ஆழ்வான் உன்னைவிடில் அன்றோ நான் உன்னைவிடுவது? பெரு வெள்ளத்திற்குப் பல வாய்த்தலைகள் போலப் பகவத் அநுபவத்தால் வந்த ஹர்ஷத்துக்குப் போக்கு வீடாகப் பல தலைகளை உடையனாய் மதுபானமத்தரைப்போல ஆடாநிற்பானாய் சைத்ய சௌகுமாரிய சௌகந்தியர்களை உடையனான திரு அநந்த ஆழ்வான் மேலே திருப்பாற்கடலிலே சகலப் பிராணிகளும் கரைமரம் சேர்ந்ததாம் விரகு என்று ஏற்றி யோக நித்திரையிலே திருவுள்ளம் செய்த என் நாயகனானவனே'' என்பது. இப்பொருள் முப்பத்தாறாயிரப்படி என்னும் உரைநூலுள் உள்

ளது. இவ்வுரையாசிரியர் இத்திருப்பாவில் "ஐந்து பைந்தலே" என்பதற்கு இவண் ஒரு தொகையைச் சுட்டி உரையாமல் பொது வாகப் பலதலேகள் என உரைத்து வைத்தார் ஆயினும், "ஐந்து பைந்தலே" என்பதற்குத் தொகைப் பொருள் சுட்டிய "ஐந்து தலேகள்" என்பதே அவரின் கருத்துப்போலும்! திருவாய் மொழி 2-1-6 ஆகிய திருப்பாவிற்கு அவர் எழுதி வைத்த பொருளே இதன் தலேயில் பார்த்துத் தேறுக

"ஐவாய் இத்யாதி: அடிமையிற் சுவடு அறிந்த திரு அனந்த ஆழ்வான் விடிலன்றே நான் விடுவது? பகவதானுப ஹர்ஷத் துக்கு விடுகைக்கு ஐந்து பைந்தலேயை உடைய சாய்கைக்குச் சுபாவிகமான குளிர்த்தியை உடையனுய்ப் பிரீதியாலே தூங்கு மெத்தைபோல அசைந்து வாராநிற்பானுய் நாற்றந் தொடக்க மானவற்றை ப்ரக்ருத்தியாக உடையனவும் திரு அநந்த ஆழ் வான்மேலே" என்பது, திருப்பெரிய ஆச்சான் பிள்ளே உரை நூலுள் உள்ளது.

இவண் காட்டப்பட்ட திருவாய்மொழி 2-1-6, 2 6-5 ஆகிய இருதிருப்பாக்களிலும் அமைந்துள்ள "ஐவாய் அரவணே" "ஐந்து பைந்தலே ஆடு அரவணே" என்ற தொடர்கட்கு முன் உரைகாரர்கள், "ஐந்து முகங்களே உடைய ஆதிசேஷன்" எனவும் "ஐவாய்" எனவும்; "ஐந்தாகிய படங்களோடுகூடிய சிரங்களே உடைய ஆதிசேஷன்" எனவும், "ஐந்து பைந்தலேயை உடைய ஆதிசேஷன்" எனவும் பொருள் எழுதிவைத்தார்கள். ஆதலால், அவர்கள், அத்தொடர்களில் அமைந்துள்ள ஐ என் னும் மொழியை அலகிட்டு எண்ணலாகிய அளவால் தொகைப் பொருள் சுட்டும் ஐந்து என்னும் மொழியின் திரிபு மொழியாகக் கொண்டு "ஐந்து வாய்களே உடைய ஆதிசேஷன்" எனப் பொருள் உரைப்பின் அப்பொருள் பண்டையபுராண வரலாற் ருேடு முரணுதலே உணர்ந்திலர் போலும்! அப்பொருத்தமற்ற பொருளேப் பொருந்திய பொருளென உரைத்த செயலால் அவ் வுரைகாரர் யாவரும் பகலே இரவு எனச் சொல்லும் பெற்றியரா யினர். அந்தோ! பாவம்! என்னே? திருமாலின் படுக்கை ஆகிய (அணேயாகிய) ஆதிசேஷன் என்னும் அரவினுக்குத் தலேகள் "ஆயிரம்" என்பது புராண வரலாறு ஆதலால்.

"ஆயிரம் பைந்தலேய அநந்த சயனன்" (பெரியாழ். 4-4-10)

"ஆயிரம் வாய்ப் பாம்பணேமேல்" (2-ந் திரு அந். 97.)

"பணங்கள் ஆயிரம் உடைய பைந்நாகம்" (திருவாய். 8-1-8.)
"பணங்கள் ஆயிரம் உடைய நல்லரவணை"(பெரியதிரு. 1-2-6.)
"ஆயிரம் சுடர்வாய் அரவணைத் துயின்றான்" (,, ,, 5-7-6)
"ஆயிரம் வாய் அரவணைமேல் பேராளர்" (,, ,, 8-3-9.)
"இனத்துத்தி யணிபணம் ஆயிரங்களார்ந்த அர
வரசப் பெருஞ்சோதி அநந்தன்" (பெருமாள்திரு-1-1.)

எனச் செந்தமிழின் செவ்வியை அறிந்த இருந்தமிழ்க் கவிஞர்களாகிய திரு ஆழ்வார்களும்,

"தன்னுருப் பாற்கடல் நாப்பண்
மின்னவிர் சுடர்மணி ஆயிரம் விரித்த
கவைநா வருந்தலைக் காண்மின் சேக்கைத்
துளவஞ் சூடிய வறிதுயி லோனும்" (பரிபாடல்-13-26,29.)

"நீல மேக நெடும்பொற் குன்றத்துப்
பால்விரிந் தகலாது படிந்தது போல
ஆயிரம் விரித்தெழு தலையுடை யருந்திறல்
பாயல் பள்ளிப் பலர்தொழு தேத்த
விரிதிரைக் காவிரி வியன்பெருந் துத்தித்
திருவமர் மார்பன் கிடந்த வண்ணமும்" (சிலப்பதி. 11-36-40)

எனச் செந்தமிழராய பெரும்பேராசிரியர்களும் பண்டைய புராண வரலாற்றுக்கு ஏற்பத் திருமாலின் படுக்கை ஆகிய (அணையாகிய) ஆதிசேஷன் என்னும் அரவிற்குத் தலைகள் "ஆயிரம்" எனவே இயம்பி வைத்திருத்தலை நினைக்க.

திவ்யப்பிரபந்தத்தின் உரைகாரர்களே செந்தமிழில் வழங்கப்படும் திரிசொல்லை அறியாமையால் பண்டைய புராண வரலாற்றுக்கு மாறாக ஆதிசேஷன் என்னும் பாம்பிற்குத் தலைகள் "ஐந்து" என (அலகிட்டு எண்ணலாகிய அளவால்) தொகைப் பொருளை உரைத்து வைத்தார்கள். "ஐ" என்னும் மொழிக்கு "ஐந்து" என்னும் தொகையைச்சுட்டிய பொருளை உரைத்ததால் அவ்வுரைகாரர்கள் யாவரும், செந்தமிழ் மொழியுள் வழங்கப்படும் திரிசொல்லை உணராதவர்கள் போலும்! என்னை? அவர்கள் உணர்ந்திருப்பின், ஐ என்னும் மொழிக்கு "நஞ்சு" என்னும் பொருள் கொண்டு திருமாலின் படுக்கை அணையாகிய ஆதிசேஷன் என்னும் அரவிற்குத் தலைகள்-நஞ்சை உடைய வாய்கள்-"ஆயிரம்" எனவே பொருள் உரைத்து வைத்திருப்பர் ஆதலால்.

"ஐவாய்" என்பதற்கு "நஞ்சை உடைய வாய்" என்னல் ஆமோ? ஆம். என்னை? "ஐவாய்ப்பாம்பின் அணைப்பள்ளி" என்ற தொடரில் அமைந்துள்ள "ஐ என்பதனை மை என்பதன் திரிபாகக் கொண்டு (மை-கருமை) அதனை, "நஞ்சு" என்னும் பெயர்க்கு ஆகுபெயராகக் கொண்டு "நஞ்சை-விஷத்தை" உடைய "ஆயிரம் வாயை" உடைய (ஆயிரம் தலைகளை உடைய) பாம்பு – ஆதிசேஷன் – என்னும் அரவாகிய பள்ளி அணை எனப் பொருள் கொள்ள வேண்டும். அப்படிப் பொருள் கொள்ளின் அப்பொருள், கவிக்கருத்தாகும். அப்பொருள், பண்டைய புராண வரலாற்றினைப் போற்றுதலால். அன்றி, "ஐ" என்பதனைப் "பை" என்பதன் திரிபு எனக் கொண்டு (பை-படம்) "பை போன்ற தலைகளை" அல்லது "பை போன்ற படங்களை உடைய தலைகளை" (ஆயிரம்) உடைய ஆதிசேஷன் என்னும் பள்ளி அணை எனப் பொருள் கொள்ள வேண்டும். இவ்விருவகைப் பொருள்களையும் கொள்ளலாம் ஆயினும், "ஐ" என்னும் மொழியை ஆளப்பட்ட காலத்தையும், இடத்தையும், ஆழ்ந்து சூழ்ந்து அம்மொழி ஆளப்பட்ட அவ்விடத்துக்கு ஏற்றதொரு பொருளை உரைத்தலே புலமைக்குப் பொற்பாம் என்பர், பொற்புறு புலவர்.

"ஐந்தலை வாய்" என்பதற்கு; "ஐ" என்பதனை, "மை" என்பதன் திரிபு மொழியாகக் கொண்டு (ஐ: நஞ்சு. தலை: இடம். "நஞ்சுக்கு இருப்பிடமான வாய்" எனப் பொருள் கொள்க.) நகரம் விகாரம். "ஐந்து பைந்தலை" என்பதற்கு "நஞ்சினை உடைய பை போன்றதலை" அல்லது "நஞ்சினை உடைய மெல்லிய தலை" எனப் பொருள் கொள்க. (பை: பசுமை விகாரம், மென்மைப்பொருட்டு) "பை" என்பதனைப் "பசுமை" என்பதன் திரிபு ஆகக் கொள்ளின், "பச்சை" வண்ணம் எனவும், கரிய வண்ணம் எனவும் நிறப்பண்பைப் பொருளெனக் கொள்ளலோடு மெல்லிதாகிய இயல்புப் பண்பையும், பொருளெனக் கொள்ளலாம். கொள்ளுங்கால் ஏற்புழி அறிந்து பொருள் கொள்க.

"ஐ வாய் விடம் பாய் அரவம்" (திருவிளை-பன்றி-மந்திரி 12.) என்பது போன்ற தொடர்கட்குப் "பை" போன்ற வாயினின்றும் "நஞ்சு ஒழுகுகின்ற-நஞ்சைச் சொரிகின்ற" அரவம் எனப் பொருள் கொள்ள வேண்டும். இவண் ஐ, "பை" என்பதன் விகாரம். "மை" என்பதன் விகாரம் அன்று.

"ஐந்தலைய, பைந்நாகத் தலைப்பாய்ந்தவனே" (திருப்பல்-10) என்பது போன்ற தொடர்கட்கு (ஐ, "மை" என்பதன் விகாரம். பொருள், நஞ்சு.) "நஞ்சு பொருந்திய தலையை உடைய நாகம்" என ஒரு வினை முடிபும், பை: படம். "பை போன்ற படத்தை உடைய நாகம்" என மற்றொரு வினை முடிபும் கொள்ளல் வேண்டும். அன்றி, "நஞ்சு இருத்தற்கு இடமான (தலை-இடம்) பை போன்ற தலையை உடைய நாகம்" என ஒரே முடிபாகவும் கொள்ளலாம்

ஆதிசேஷன் என்னும் அரவின் தலைகளை அளவிட்டுத் தொகைப் பொருளைச் சுட்டி உரையாமல் நஞ்சுப் பொருளையும், படப் பொருளையும் சுட்டி உரைக்கும் வழக்கை;

"விடமுடை அரவில் பள்ளி விரும்பினான்" (திருவாய்: 10-2-1)
"நச்சு அரவின் அணைமேல்" ( ,, 5-9-4)
"நச்சு நாக அணையான்" ( ,, 5-10-10)
"பை விடப் பாம்பு அணையான்" ( ,, 7-7-6)
"படமுடை அரவில் பள்ளி அமர்ந்தான்" ( ,, 10-2-8)
"பை அரவணைப் பள்ளியான்" (பெரியாழ்: 3-7-1)
"பை அரவின் அணை" ( ,, 4-10-5)
"பை அரவு அணையான்" (பெரியதிரு: 5-9-1)
"பை அரவின் அணைப் பள்ளியினாய்" (பெருமாள்திரு: 6-7)
"பைந் நாகப் பள்ளி" (முதலந்தாதி: 7-8)

இத்தொடர்களுள் ஆதிசேஷன் என்னும் அரவினை "நஞ்சம் உடைய தலையை உடைய அரவு" எனவும், "பை போன்ற தலையை உடைய அரவு" எனவும் அருளி இருத்தலை ஏதுவாகக் கொண்டு அறிக. மற்றும்,

"ஐந்தலை நாகணைப் பள்ளியான்" (அப். தேவா. சோற்றுத்)
"ஐந்தலை நாக அணை கிடந்த மாலொடு" (அப். தேவா. ஆலம்.)
"ஐந்தலை மா நாகம் நாணாக்கினான்" (அப். தேவா. வீழிமி.)
"பை கொள் பாம்பணைப் பள்ளி" (சம். தேவா. அம்பர்.)

எனத் திருச்சைவ சமய ஆசிரியர்களும், ஆயிரம் தலைகளை உடைய ஆதிசேஷனும் வாசுகியும் ஆகிய இரு அரவுகளையும் "ஐ" என்னும் சொல்லால் "நஞ்சு-விஷம்" என்னும் பொருளைச் சுட்டியும், "பை" என்னும் சொல்லால் "படம்" என்னும்

பொருளைச் சுட்டியும் உரைத்திருத்தலையும், அச்சொற்களால் ஆயிரம் என்னும் தொகைப்பொருளைச் சுட்டி உரைத்திலாமையையும் நினைக்க.

இப்பெற்றிய உண்மைப் பொருளை உணரமாட்டாமையால் புராண வரலாற்றுக்கு முரணாக ஐந்து தலைகளை உடையவன் ஆதிசேஷன் என்னும் அரவன் என முன் உரைகாரரும் பொருள் எழுதிவைத்தமையால், அவ்வுரைகாரர் யாவரும் திரு ஆழ்வார்கள் அருளிய திருப்பாக்களில் செறிந்துள்ள செந்தமிழ் மொழியின் திரிசொற்களை உணர்ந்திலர் எனக்கொள்க.

மற்றும், "இண்டைச்சடைமுடி ஈசன்" (பெரியாழ் 1-8-9ல்) என்ற தொடரில் அமைந்துள்ள இண்டை என்பது பிறை என்னும் பொருளைச் சுட்டும் இந்து என்னும் வடமொழியின் திரிந்த திரிசொல் என்பதனை இந்நூலின் முதல் ஆய்வு உரையுள் நான்காவதுஆகிய கிளைப்பகுதியைக் கற்று அறிக. "இண்டக்குலத்தை எடுத்துக் களைந்தவன்" "பண்டக் குலத்தைத் தவிர்ந்து" என்ற தொடர்களில் உள்ள (திருப்பல்லாண்டு 5) "இண்டக் குலம்" என்பது இந்திர குலம் என்பதன் திரிபுமொழி என்பதனையும், "பண்டக்குலம்" என்பது "பந்தக்குலம்" என்பதன் திரிபு மொழி என்பதனையும் இந் நூலின் முதல் ஆய்வு உரையுள் மூன்றுவது ஆகிய கிளைப் பகுதியைக் கற்று அறிக. ௯

எட்டாவது ஆய்வு உரை முற்றிற்று.

திரு ஆழ்வார்கள் திருமொழி திகழ்க.

---

## ஒன்பதாவது ஆய்வு உரை: கிளை-1.

திருப்பேரருளாளப் பெருமாள்தம் திரு அடிகட்கு வணக்கம்.

திவ்யப் பிரபந்தத்துள் திரு ஆழ்வார்கள் அமைத்தருளிய சொற்களின் உண்மைக் கருத்துக்களை உள்ளபடி உணர்ந்திலர் திவ்யார்த்த தீபிகை உரைகாரர் என்பதனை இவ்வொன்பதாவது ஆய்வு உரை விளக்குதலை அறிக.

"உடுத்துக் களைந்த நின்பீதக ஆடை உடுத்துக் கலத்ததுண்டு
தொடுத்த துழாய் மலர் சூடிக்களைந்தன சூடும் இத்தொண்டர்களோம்
விடுத்ததிசைக் கருமம் திருத்தித் திரு ஓணத் திருவிழாவில்
படுத்த பைந்நாகணைப் பள்ளி கொண்டானுக்குப் பல்லாண்டு
கூறுதும்மே" (திருப்பல்லா. 9.)

இத்திருப்பாவிற்குத் திவ்யார்த்த தீபிகை உரை: "திருவரையிலே சாத்தி–கழித்துப் போகடப்பட்ட–தேவரீருடையதான – திருப்பீதாம்பரத்தை–தரித்து–(தேவர் அமுது செய்த)காலத்தில் மிகுந்த ப்ரஸாதத்தை--ஸ்வீகரித்து–(தேவர் திரு முடியிலே) சூடி–களையப்பட்டதாய்–(அழகிதாகத்) தொடுக்கப்பட்டதுமான–திருத்துழாய் மலர்களை–முடித்துக்கொள்ளுகிற–இப்படிப்பட்ட சேஷத்வகாஷ்டையையுடைய–அடியார்களாயிராநின்றேம் நாங்கள்;–நியமித்தருளின–திக்கிலுள்ள—காரியத்தை—குறையறச் செய்து தலைக்கட்டி–படுக்கப்பட்டு (அதனால்) விகஸித்த பணங்களையுடைய–திருவனந்தாழ்வானுகிற திருப்பள்ளியின் மேலே-திருக்கண் வளர்ந்தருளுகிற உனக்கு–திருஓணமென்கிற திரு நாளிலே–பல்லாண்டு கூறுதும்—" என்பது.

இத்திருப்பாவில் அமைந்துள்ள "கலத்ததுண்டு" என்ற தொடர் "கழித்ததுண்டு" என இருக்தற்பாலது. என்னை? முன்னர் "உடுத்துக் களைந்ததை உடுத்து" என்றதற்கு ஏற்ப "உண்டு கழித்ததை உண்டு" எனப் பொருள் கொள்ளும்படி தொடர் இருத்தலே பொருத்தமாகும்–சிறப்பாகும்–ஆதலால், பின்னரும் "சூடிக்களைந்தன சூடும்" எனத் தொடர் அமைந்திருத்தலையும் அதன் அழகையும் அறிக. இத்திருப்பாவைப் பன்முறை படித்துப்பார்த்து இத்திருத்தத்திலுலாய பொருளின் பொற்பை அறிக. இத்திருப்பாவில் செறிந்துள்ள இச்சிறு பிழையையும் அறிந்து களைந்து நேரிய பொருளை உணர மாட்டாமையால் "கலத்ததுண்டு" எனப் பிழையுற்ற பாடத்தையே நேரிய பாடமாகக் கொண்டு (செந்தமிழ் மொழியாலாய) அத்தொடர்க்குக் "கலத்தில் மிகுந்த ப்ரஸாதத்தை ஸ்வீகரித்து" எனத் தம இனத்தார் மொழியால் பொருள் எழுதி வைத்தார் திவ்யார்த்த தீபிகை உரைகாரர். அவர் எழுதிவைத்தபொருள் போலிப் பொருள் என்பதனையும், அவர் திரு ஆழ்வார் அருளிய சொல்லின் உண்மைப் பொருளை உணரும் உணர்வை இல்லாதவராயினர் என்பதனையும் இவ்வாய்வு உரையில் கூறப்பட்ட ஏதுக்கள் அறிவித்தலை அறிக. (க)

## ஒன்பதாவது ஆய்வு உரை: கிளை-2.

"வன்ன மாடங்கள் சூழ் திருக் கோட்டியூர்
கண்ணன் கேசவன் நம்பி பிறந்தினில்
*எண்ணெய் சுண்ணம் எதிர் எதிர் தூவிடக்
கண்ணன் முற்றம் கலந்து அளருயிற்றே." (பெரியா: 1-1-1)

இத்திருப்பாவிற்குத் திவ்யார்த்த தீபிகை உரை: "அழகு பொருந்திய-மாடங்களாலே – சூழப்பட்ட-திருக்கோட்டியூரில்-ப்ர சஸ்த கேச யுக்தனுப்-கல்யாணகுண பரிபூர்ணனை-ஸ்ரீக்ருஷ் ணன்-(நந்தகோபருடைய) இனிய திருமாளிகையிலே-திருவவதரித் தருளினவளவிலே, (திருவாய்ப்பாடியிலுள்ளார்)-எண்ணெயை யும்-மஞ்சள் பொடியையும்-(ஸந்தோஷத்தாலே ஒருவர்க்கொருவர்) எதிர்த்துத் தூவ-விசாலமாய்-விலக்ஷணமான-(நந்தகோபர் திரு மாளிகையில்) திருமுற்றமானது-(எண்ணெயும் மஞ்சள் பொடியும் துகையுண்டு) தன்னிலே சேர்ந்து-சேருய்விட்டது;" என்பது.

அப்பொருள் போலிப் பொருளே, கவிக்கருத்தன்று ஆத லால். மற்று என்னை? இத்திருப்பாவில் அமைந்துள்ள "எண் ணெய்" என்பது பிழை. அது "வண்ணம்" என இருத்தற்பாலது. இவண் "வண்ணம்" என்றது குங்குமப்பூவொடு பசிய கற் பூரத்தையும் செஞ்சந்தனத்தையும் தேய்த்துக் கரைத்து ஆக்கப் பட்ட மிக்க நல்ல மணமுடைய ஒரு வகைக் குழம்பு-சேறு. "சுண்ணம்" என்பது புழுகு நெய், கத்தூரி முதலியன கலக் கப்பட்ட ஒருவகைப் பொடி. (புழுதி-துகள்) நம் செந்தமிழ்த் தேஎத்தில் பாஞ்சாலியின்-திரௌபதா தேவியின்-திருவிழாக் காலத்தில் மஞ்சள் வண்ணப் பொடியை மகிழ்ச்சிக்குறியாகவும் மங்களக் குறியாகவும் இன்றும் வழங்குதலை நினைக்க. இக்காலத் தில் திருஇஸ்லாமிய மதத்தருள்ஒருவகையார் தம் மதச்சார்பான விழாக் காலத்தில்-திரு அல்லாவின்-மோஹரம் பண்டிகையில்– "அபீர்" என ஒருவகைப் பொடியைப்-புழுதியைத்-தூவுதலை நினைக்க. மற்று, சென்னையில் வாழும் வடதேஎத்தினருள் ஒரு வகையார் (குஜராத்தியர்-மார்வாரியர்) தம் ஹோளிபண்டிகை யில்-திருக்காமன் விழாவில்-வண்ணங் கலந்த நீரையும்-"சேற் றையும்"-பொடியையும்-"சுண்ணத்தையும்" (சூர்ணத்தையும்) ஒருவரொடொருவர் தம்மீது தூவிக்கொள்ளலையும் நினைக்க. அப்படித் தூவிக்கொள்ளல் மகிழ்ச்சிக் குறிப்பும் மங்களக் குறிப்பும் ஆம். "சுண்ணம்" என்பது "சூர்ணம்" என்னும் வட மொழியின் திரிந்து தமிழ் மொழியுள் போந்த பெயர். பொருள்: பொடி-துகள், புழுதி என்பதே.

திருச்சமண சமயத்தவரின் செந்தமிழ் மொழியாலாய சீவக சிந்தாமணி என்னும் நூலுள் "குணமாலையார் இலம்பகம்" என்னும் பகுதியில் சுண்ணம்-சூர்ணம்-என்பதன் இயல்பை ஒருவாறு அறியலாம். திருச்சைவசமய ஆசிரியர் திருவாதவூர்

அடிகள் அருளிய திருவாசகம் என்னும் செந்தமிழ்த் திருமுறையுள் "திருப்பொற்சுண்ணம்" என்னும் பதிகத்தில் "ஆடப் பொற் சுண்ணம் இடித்தும் நாமே" என்ற குறிப்பாலும் "சுண்ணம்" என்னும் பொருளின் இயல்பை அறியலாம். "சுண்ணம்" என்னும் (ஒருவகைப் பொடியாகிய) பொருளைப் பண்டு மகிழ்ச்சிக்குறியாக மக்கள் தம் மெய்யில் ஒருவரோடொருவர் தூவிக் கொண்ட வழக்கை,

"கைபுனை சாந்தமும் கடிசெய் மாலையும்
மெய்புனை சுண்ணமும் புகையும் மேவிய
நெய்யொடு குங்குமம் நிறைந்த நாணினல்
பொய்கைகள் பூம்படம் போர்த்த போன்றவே"

என்ற "சீவக சிந்தாமணிச் (80)செய்யுளாலும் அறியலாம். (நெய், புழுகுநெய்)

புதிய மகிழ்ச்சியைப் பெற்ற நல்ல நாளில் நல்ல மணமுடைய சேறுகளையும் பொடிகளையும் மக்கள் ஒருவர்க்கொருவர் வழங்கிக்கொள்ளும்—தூவிக்கொள்ளும்-வழக்கு நம் தேசத்தில் பண்டு உண்டு போலும்! அவ்வழக்குப்படியே திருக்கண்ணபிரானர் பிறந்தருளியதால் ஆய புதிய மகிழ்ச்சியால் "வண்ணத்தையும் (சந்தனச் சேற்றையும்) சுண்ணத்தையும் திருக்கண்ணபிரானரைக் காண்பான் போந்த ஆய்ப்பாடியுள் உள்ள ஆயர் திரு நந்தகோபர் இல்லத்தில் ஒருவரோடொருவர் தம்மீது தூவிக் கொண்டனர் எனவும், அவர்கள் தூவிக்கொண்ட "வண்ணமும் (சந்தனச்சேறும்) சுண்ணமும்" கலந்து திரு நந்தகோபர் தம் இல்லின் முற்றம் அளறுயிற்று எனவும் பொருள் கொள்க.

மக்கள் பேறு பெற்றூர் தம் மகிழ்ச்சிக் குறியாக "எண்ணெயையும் மஞ்சள் பொடியையும், ஒருவரோடொருவர் தூவிக் கொண்ட வழக்கு நம் தேசத்தில் பண்டும் இல்லை. இன்றும் இல்லை. என்றும் இல்லை என்பது நினைவில் இருத்தற்பாலது,

இத்திருப்பாவில் அமைந்துள்ள "பிறந்தினில்" என்பது "பிறந்த இனிதில்" என்பதன் விகாரம். "பிறந்த இனிமையால்" என்பதன் மரூஉ என்னலும் ஆம். "பிறந்ததனாலாய மகிழ்ச்சியால்" என்பது கருத்து. நம்பி—திருக்கண்ணபிரானர்—பிறந்தனர் எனக்கேட்ட மகிழ்ச்சியால் எனப் பொழிப்புரைக்க. இப் பெற்றிய சொல் நிறையாப் பாக்களை ஆரிஷப் பாக்கள் என்பர்

செந்தமிழராய ஆசிரியன்மார். இவண் காட்டப்பட்ட ஏதுக்களால் இத்திருப்பாவில் அமைந்துள்ள "எண்ணெய்" என்பது "வண்ணம்" என இருத்தற்பாலது எனவும், "பிறந்தினில்" என்பது "பிறந்த இனிதில்" என்பதன் மரூஉ எனவும் துணிக.

பண்டைய வழக்குப்படியே தான் புதிய மணம் செய்துகொண்ட ஆடவரும் மாதரும் அவர் சுற்றத்தினரும் "மஞ்சள் நீர் ஆட்டு" என ஒருவகை விளையாட்டை இன்றும் நம் தேசத்தில் நடத்துகின்றனர் போலும்! அவ்விளையாட்டின் ஏதுவை—உண்மைப் பெருமையை—மறந்தமையால் சிலர் மாடுகட்கு ஊட்டுதற்காகப்பத்தர்களில் செறித்து வைக்கப்பட்ட அழுக்குக்கலந்த எச்சில் நீரையும், ஆப்பியால் ஆக்கப்பட்ட சேற்றையும் விளையாட்டாக ஒருவரோடொருவர் தம்மீது தூவிக்கொள்கின்றனர். (இன்னும் சில நாட்கள் கழியக் கழிய மாந்தர் பவ்வீயையும் கரைத்துத் தம்மீது தூவிக்கொள்ளினுங்கொள்வர் போலும்!) இத்திருப்பாவிற்கு உரைத்த பொருள்:

"பேணிச் சீருடைப் பிள்ளை பிறந்தினில்
காணத்தாம் புகுவார் புக்குப் போதுவார்
ஆணைப்பார் இவன் நேரில்லை காண்திரு
ஓணத்தான் உலகாளும் என்பார்களே" (பெரியா: 1-1-3)

இத்திருப்பாவில் அமைந்துள்ள "பிறந்தினில்" என்பதற்கும் பொருந்தும். 'விரும்பத்தக்க மிக்க புகழிற்கு உரிய உத்தம லக்ஷணமுள்ள—தலையாய திரு உருவை உடைய—பிள்ளை—திருக்கண்ணபிரானார்—(பிறந்தினில்) பிறந்தார் எனக் கேட்ட காலத்தில் தம்மனத்தில் விளைந்த இன்பத்தால்—மகிழ்ச்சியால்—என முதலடிக்குப் பொருள் கொள்க. இத்திருப்பாவில் அமைந்துள்ள "பேணிச்சீருடை" என்ற முதல் தொடர் (பேண்—நல்) "பேணல் சீருடை" என இருத்தற்பாலது.

"பண்ணையும் ஆயமும் திரளும் பாங்கரும்
கண்ணகல் திருநகர் களிப்பும் கைமிகுந்து
*எண்ணெயும் களபமும் இழுதும் நானமும்
சுண்ணமும் தூவினர் வீதி தோறுமே" (இராம-அவ: 118)

இச் செய்யுள் திரு இராமபிரானார் திருப்பிறப்பு அருளிய காலத்தில், அயோத்தியில் வாழ்ந்த மக்கள் திரு இராமபிரானார் பிறந்தருளினார் எனக் கேட்டதால் தம் மாட்டு விளைந்த புதிய

மகிழ்ச்சியால் அம்மக்கள் ஒருவரோடொருவர் வண்ணமும் களபமும்-சந்தனச் சேறு. இழுது-புனுகு நெய். நானம்-கத்தூரி. சுண்ணம்-பொடி. ஆகிய இவற்றைத் தம்மீது தூவிக்கொண்டனர் என்பதனை விளக்குதலை நினைக்க.

இப்பாவில் அமைந்துள்ள "எண்ணெயும் என்பது "வண்ணமும்" என இருத்தற்பாலது. வண்ணம் எனினும், களபம் எனினும் பொருள் ஒன்றே. ஆதலால், அத்தொடரை இரு பெயர் ஒட்டுத் தொடர் என்க. "ஐயமும் பிச்சையும்" "பொய்யும் புளுகும்" என்னும் தொடர்களில் சொற்களின் ஈறுகள் திரிந்திருத்தலைப்போல இத்தொடரிலும் சொற்களின் ஈறுகள் திரிந்துள என்க. திவ்யப் பிரபந்தத்தின் (பெரியாழ். 1-1-1ன்) "எண்ணெய்" என்ற பிழைப் பாடத்தை நேரிய பாடம் என நினைத்தவர் ஒருவர் இப்பாவிலும் "வண்ணமும்" என இருந்த நேரிய பாடத்தை "எண்ணெயும்" எனப் பிழை படுத்தி இருப்பர் எனத் துணிக.

"சுண்ணமும் மலரும்*சாந்தும் கனகமும் தூவவந்து
வண்ண மேகலையும் நாணும் வளைகளும் தூவுவாரும்
புண்ணுற அநங்கன் வாளிபுழைத்ததம் புணர்மென் கொங்கை
கண்ணுறப் பொழிந்தகாம வெம்புனல் கழுவு வாரும்"

(ராமா-கை-சூழ்-85)

(சாந்து, வண்ணம்—சேறு)

"வண்ணமும் சுண்ணமும்" (சிலப்பதி. 5-13)

"வண்ணமும் ஏந்தினர் சுண்ணமும் ஏந்தினர்" (சிலப். 20-15)

எனப் பெரும் பேராசிரியன்மார் "வண்ணம் சுண்ணம்" எனும் இருபெயர்களையும் சேர்த்துக் கூறியுள்ள குறிப்பாலும், (பெரியாழ். 1-1-1லும்) "எண்ணெய்" என்பது "வண்ணம்" எனவே இருத்தற்பாலது எனத் துணிக. வண்ணம் என்பது பசியகற்பூரம் கலந்த குங்குமப் பூவொடு சந்தனத்தைத் தேய்த்துக் கரைத்து ஆக்கப்பட்ட மணமுள்ள ஒரு வகைச் சேறு. மக்கள், தம் மகிழ்ச்சிக் குறியாகவும்—மங்களக் குறியாகவும் வண்ணம்—சாந்து, சுண்ணம்—நானம், புழுகு முதலியவற்றையே ஒருவர்க்கு ஒருவர், தம்மீது தூவிக்கொள்ளல் வழக்கு (எள்+நெய்) எண்ணெயை மகிழ்ச்சிக்குறியாகத் தம்மீது தூவிக்கொள்ளல் வழக்கு இல்லை என்பதனை அறிக. திவ்யப்பிரபந்த உரைகாரர் மரபறிந்து—கவிக்கருத்தை அறிந்து—பொருளை எழுதிவையாமல்

தம் மனத்தில் விளைந்த போலிப்பொருளை எழுதி வைத்தபடியால் அவர் சொற்களின் உண்மைப் பொருள்களை உணராதவர் ஆயினர் என்பதனை அறிக. (உ)

## ஒன்பதாவது ஆய்வு உரை: கிளை-3.

"நோக்கியசோதை நுணுக்கிய மஞ்சளால்
நாக்கு வழித்து நீராட்டும் இந்நம்பிக்கு
வாக்கும் நயனமும் வாயும் முறுவலும்
மூக்கும் இருந்தவா காணீரே மொய்குழலீர் வந்துகாணீரே"
(பெரியாழ். 1-2-15)

இத்திருப்பாவிற்குத் திவ்யார்த்த தீபிகை உரை: யசோதைப் பிராட்டியால் (கண்ணபிரான் திருமேனியின் மென்மைக்குத் தக்க படி) பார்த்து ஆராய்ந்து—அரைக்கப்பட்ட—மஞ்சட்காப்பாலே, நாக்கு வழித்து–;ஸ்நாநம் செய்விக்கப்படாநின்ற–இக்கண்ணபிரானுடைய-திருவாக்கும்-திருக்கண்களும்-அதரஸ்புரணமும்-புன்சிரிப்பும்–மூக்கும் இருந்தபடியை காணீர்!–;செறிந்த குழலையுடைய பெண்காள்!–வந்து காணீர்!!-என்பது.

இப்பாடப் பொருள்களின் சிறப்பையும இறப்பையும் உய்த்துணர்க. உய்த்துணருங்கால் மேல்வரும் ஏதுக்களையும் எண்ணித் தெளிக.

இத்திருப்பாவில் அமைந்துள்ள "வாக்கும்" என்பது பிழைப்பாடம். அப்பாடம், "நாக்கும்" என இருத்தற்பாலது. திரு யசோதைப்பிராட்டியாரால் வழிக்கப்பட்டது நாவே. வாய் அன்று. ஆதலால், முதலில் அப்பொருளைக் கூறுதலே சிறப்பு. அப்பொருளையே முதலிற் கூறி இருப்பர் திரு ஆழ்வார் என்க. ஒரே பொருளை, வாக்கு என்னும் வடமொழிப் பெயராலும் வாய் எனத் தமிழ்மொழிப் பெயராலும் விதந்து விளம்பி இருத்தலை நினைக்க. வாக்கு, வாய், என இருமுறைகூறின், கூறியது கூறல் என்னும் குற்றம் ஆம் என்பர் அறிஞர். இத்திருப்பாவைப் பன்முறைபடித்துப் பார்த்து ஆய்ந்து பொருளின் பொற்பினை அறிக. வாக்கு என்பது ஒரு பொருள் எனவும், வாய் என்பது அதனின் வேறாய மற்றொரு பொருள் எனவும் பிறழக்கொண்டார் திவ்யார்த்த தீபிகை உரைகாரர். வாக்கு என்பதும் வாய் என்பதும் ஒரு பொருளே. பெயர்களே இருபெயர்கள். அப்பெயர்கள், பிறந்த மொழி வழிகளால் இரண்டு ஆயின ஆதலால். இவ்வேதுவினை உணர்ந்திலர் அத்தீபிகை உரைகாரர்,

இவ்வேதுவினுல் இத்திருப்பாவில் செறிந்துள்ள பிழையை அறிந்து அதனைக் களைந்து, கவிக்கருத்தாகிய உண்மைப் பொருளைத் திவ்யார்த்த தீபிகை உரைகாரர் உள்ளபடி உணர்ந் திலர் என்பதனை நினைக்க. (௩)

## ஒன்பதாவது ஆய்வு உரை : கிளை-4.

"பன்றியும் ஆமையும் மீனமும் ஆகிய பாற்கடல் வண்ணு உன்மேல்
கன்றினு ருவாகி மேய்புலத்தே வந்த கள்ள அசுரர்தம்மைச்
சென்றுபிடித்துச் சிறுக்கைகளாலே விளங்காய் எறிந்தாய் போலும்
என்றும் என்பிள்ளைக்குத் தீமைசெய்வார்கள் அங்ஙன மாவார்களே"

(பெரியாழ். 3-3-7.)

இந்திருப்பாவிற்குத் திவ்யார்த்த தீபிகை உரை: "மஹாவ ராஹமாயும் ஸ்ரீ கூர்மமாயும் — மத்ஸ்யமாயும் — திருவவதரித் தருளின—. பாற்கடல் போல வெளுத்திருந்துள்ள திருமேனியை உடையவனே!—உன்னை நலிய வேணுமென்ற எண்ணத்தினுல்— கன்றின் உருவத்தை எடுத்துக்கொண்டு-(கன்றுகள்) மேயும் நிலத் தில் வந்து கலந்த—க்ருத்ரிமனுன் அஸுரனை, (அவன் சேஷ்டை யாலே அவனை அசுரனென்று அறிந்து)—(அக்கன்றின் அருகில்) சென்று—தனது சிறிய கைகளாலே (அக்கன்றைப்) பிடித்து— (அசுராவிஷ்டமானதொரு) விளாமரத்தின் காய்களை நோக்கி- விட்டெறிந்தாயன்றே? என்பிள்ளையான கண்ணபிரானுக்கு—தீமை களை உண்டுபண்ணுபவர்கள்—என்றைக்கும்—அவ்விளவும் கன்றும் போலே நசித்துப்போகக் கடவார்கள்'' என்பது.

இப்பொருளின் சிறப்பையும் இறப்பையும் ஆய்ந்து அறிக. இப்பொருள் போலிப்பொருளே. கவிக்கருத்தன்று ஆதலால்,

இத்திருப்பாவில் அமைந்துள்ள "பாற்கடல் வண்ணு வுன் மேல்'' என்பது, "பாற்கடலண்ணல் தன்மேல்'' என இருத்தற் பாலது. "கன்றினுருவாகி" என்பது "கன்றுமரமாகி'' என இருத்தற்பாலது. "கன்றும் மரமும் ஆகி" என உம்மை விரித்துப் பொழிப்பு உரைக்க "எறிந்தாய் போலும்" என் பது "எறிந்தாற்போலும்" என இருத்தற்பாலது "அங்ஙனமா வார்களே'' என்பது "எங்ஙன மாவார்களே" என இருத் தற்பாலது.

இத்திருப்பாவின் பொருள், "என் மகனுக்குத் தீமையைச் செய்ய நினைப்பவர்கள் எங்ஙனம் ஆவார்கள் எனின், என்

மகனைக் கொல்வான் (தம்மின் உண்மைஉருவை மறைத்துக் கொண்டு) ஆவின்கன்றுகவும் விளாமரமாகவும் என்மகன் ஆக்களை மேய்த்துக்கொண்டிருந்த நிலத்தில் செற்றத்தினை உடையராய் வந்து நின்ற இரு அசுரருள்; கன்றுகமாறி நின்ற அசுரனை விளாமரமாக மாறிநின்ற அசுரன்மீது எறிந்து அவ்விரு அசுரரும் என் மகனல் அழிக்கப்பட்டாற்போல என்றும் அழிக்கப்படுவார்கள்'' என்பது. அழிக்கப்படுவார்கள், சொல் எச்சம். தன்மேல்: மேல், உருபு மயக்கம். ஈற்று ஏ, அசை.

இத்திருப்பாவில் செறிந்துள்ள பிழைகளையும் இத்திருப்பாவின் உண்மைப் பொருளையும் உணரமாட்டாமையால் தம் மனத்தில் விளைந்த போலிப் பொருளை நேரிய பொருளென எழுதிவைத்தார் திவ்யார்த்த தீபிகை உரைகாரர். அவரால் எழுதப்பட்ட பொருத்தமற்றதாகிய போலிப் பொருளைப் பொருத்திவைப்பான், ''கன்றினுருவாகி வந்த, அசுரன் (வத்ஸாஸுரன்) ஒருவனுதலால் ''அசுரன் தன்னை'' என்று ஒருமையாகச் சொல்லவேண்டி இருக்க, அங்ஙனம் சொல்லாது ''அசுரர் தம்மை'' என்று பன்மையாகக் கூறினது பால்வழுவமைதியின் பாற்படுமென்க.'' எனவும்,

''உவப்பினும் உயர்வினும் சிறப்பினும் செறலினும்
இழிப்பினும் பால்திணை இழுக்கினும் இயல்பே' என்றூர் நன்னூலார் எனத் தம்திரிபு உணர்ச்சிச் செயலை நன்கு விளக்கும்படியாக ஒரு விதியையும் காட்டினுர் அத்திவ்யார்த்த தீபிகை உரைகாரர். அவ்விதியும் அவரால் கூறப்பட்ட வழுவமைதியும் திரிபு உணர்ச்சியை உடைய அவர் போன்றுரையே சாரும் அன்றி, நல்ல நேரிய அறிவை உடையார்மாட்டு அணுகாமல் அகலும் என்பதனை அத்தீபிகை உரைகாரர் உணர்ந்திலர் போலும்! என்னை? திருக்கண்ணபிரானுரைக் கொல்வான் தம் உண்மை உருவை மறைத்துக்கொண்டு கன்றும் மரமும் ஆகி ஆக்கள் மேயாநின்ற புலத்திலே வந்துநின்ற அசுரர் தம்மை-அசுரர் இருவரையும்-என வினைமுடித்தல்வேண்டும் என்பதனை அத்தீபிகை உரைகாரர் உணர்ந்திலர் ஆதலால்.

தன் உருவைக் கன்றுக மாற்றிக்கொண்டு நின்றவன் ஒரு அசுரன். தன் உருவை விளாமரமாக மாற்றிக்கொண்டு நின்றவன் மற்று ஒரு அசுரன். கன்றுக மாறி நின்ற அசுரனை எடுத்து விளாமரமாக மாறி நின்ற அசுரன் மீது எறிந்து அவ்

விரு அசுரரையும் அழித்தார் திருகண்ணபிரானுர். அவ்வரலாற்றினைச் சுட்டியே திரு ஆழ்வார் "அசுரர் தம்மை" எனப் பன்மையாக அருளிவைத்தார். திரு ஆழ்வார்தம் திருக்கருத்தைத் தெரிந்துகொள்ளாமல் இத்திருப்பாவைப் பிழைபடுத்தி அப்பிழையைப் போற்றுவான் விதியல்லாத விதியை விதி எனக் காட்டி எழுதிவைத்தார் அத்திவ்யார்த்த தீபிகை உரைகாரர்.

அவரால் காட்டப்பட்ட நன்னூலின் விதி இவண் பொருத்தமற்றதாகும் என்பதனை உணர்வாராக. இத்திருப்பாவில் அமைந்த "கன்றினுருவாகி" என்ற தொடர், "கன்று மரமாகி" என இருத்தற்பாலது என்பதனைத் தீபிகை உரைகாரர் உணர்ந்திலர் என்பது நினைத்தற்பாலது.

இத்திருப்பா, கூப்பாட்டுக்காரரால்— அத்யயனக்காரரால்-பலவாகப் பிழை செய்யப்பட்டது என்க. மற்று,

"தொழுது முப்போதும் உன் அடி வணங்கித்
தூமலர் தூய்த் தொழுது ஏத்துகின்றேன்
பழுதின்றிப் பாற்கடல் வண்ணனுக்கே
பணிசெய்து வாழப் பெறுவிடில் நான்
அழுதழுது அலமந்து அம்மா வழங்க
ஆற்றவும் அது உனக்கு உறைக்கும் கண்டாய்
உழுவதோ ரெருத்தினை நுகங்கொடு பாய்ந்து
ஊட்டமின்றித் துரந்தா லொக்குமே." (நாச்சி. 1-9)

இத்திருப்பாவில் அமைந்துள்ள "பாற்கடல் வண்ணனுக்கே" என்பதும் "பாற்கடலண்ணலுக்கே" என இருத்தற்பாலது. என்னை? மரபு வழா நிலையைக் காத்தற்பொருட்டு. இத்திருப்பாவின் பிழையையும் உணர்ந்திலர் தீபிகை உரைகாரர் என்பதனை நினைக்க. (௬)

## ஒன்பதாவது ஆய்வு உரை: கிளை 5.

"நாணி இனியோர் கருமமில்லை நாலயலாரும் அறிந்தொழிந்தார்
பாணியா தென்னை மருந்து செய்து பண்டு பண்டாக்க உறுதிராகில்
மாணியுருவாய் உலகளந்த மாயனைக் காணில் தலைமறியும்
ஆணையால் நீர் என்னைக் காக்கவேண்டில் ஆய்ப்பாடிக்கே
என்னை உய்த்திடுமின்" (நாச்சி. 12-2)

இத்திருப்பாவிற்குத் திவ்யார்த்த தீபிகை உரை: இனிமேல்-வெட்கப்பட்டு-ஒரு பயனுமில்லை; (ஏனெனில்) ஊரிலுள்ளாரெல்லாரும்-(எனது செய்தியை) அறிந்துகொண்டார்கள்-காலதாமதமின்றி-வேண்டும் பரிஹாரங்களைச் செய்து-என்னை-(பண்டுபண்டாக்க) "இப்போதைய விரஹாவஸ்தைக்கு முற்பட்டதான ஸம்ச்லேஷ தசைக்கும் முற்பட்டதான பகவத் விஷய வாஸனையையே அறியாத தசையிலிருந்த நிறத்தைப் பெற்றவளாகச் செய்ய" நினைப்பீர்களாகில், - நீங்கள் - என்னை - ஸத்யமாக - காப்பாற்ற விரும்புகிறீர்களாகில் - என்னை - திருஆய்ப்பாடியிலே - கொண்டு சேர்த்துவிடுங்கள் ;-(அவ்விடத்தில்) (மாவலியினிடத்தில்) வாமனரூபியாய்ச் சென்று (த்ரிவிக்ரமனாகி) உலகங்களை எல்லாம் அளந்து கொண்ட பெருமானை ஸேவிக்கப் பெற்றால்-(இந்த நோயானது) தலை மடங்கும்" என்பது.

இப்பாடமும்பொருளும் கவிக்கருத்தல்ல. ஆதலால், இவை பொருத்தமற்றன எனப் புறக்கணித்தற்பாலன. மற்று என்னை?

இத்திருப்பாவில் அமைந்துள்ள "பண்டுபண்டாக்க" என்ற தொடர் பிழைபட்டது. அத்தொடர் "பண்டு பெண்டாக்க" என இருத்தற்பாலது. பண்டு பெண்டாக்க உறுதிராகில் என்ற தொடரின் பொருள்: யான் திருக்கண்ணபிரானார்மாட்டுக் கொண்ட காதல் கருத்தால் இன்று என்மேனிப் பசலையுடன் மெலிந்துள்ள உடம்பின் மெலிவைப் போக்கி, யான் இம் மெலிவை அடைதற்குமுன் இருந்தபடி என்னைப் பெரிய வலிய உடம்பினை உடைய (பெண்டு ஆக்க) மகளாக்க நினைப்பீர் ஆயின் என்பதே. என்னைத் திருக்கண்ணபிரானார் திருஉலாச் செய்யும் திருஆய்ப்பாடிக்கண் செலுத்திவைம்மின் என வினை முடிக்க. திவ்யார்த்த தீபிகை உரைகாரர் இப்பெற்றிய உண்மைப் பொருளை உணர்ந்திலர் என்பதனை அறிக. இவ்வாய்வு உரையுள் கூறப்பட்ட ஏதுவினால்;

கெண்டை ஒண்கணும் துயிலும் என் நிறம்
பண்டு பண்டுபோல் ஒக்கும் மிக்க சீர்த்
தொண்டரிட்ட பூந்துளவின் வாசமே
வண்டு கொண்டுவந்து ஊதுமாகில்" (பெரியதிரு. 11-1-9)

இத்திருப்பாவில் அமைந்துள்ள "பண்டு பண்டு போலொக்கும்" என்ற தொடரும் "பண்டு பெண்டு போலொக்கும்" எனவே இருத்தற்பாலது எனத் துணிக. பொருள்: மேலே உரைக்கப்பட்டதே. (ரு)

## ஒன்பதாவது ஆய்வு உரை: கிளை-6.

"கஞ்சன் வலைவைத்த அன்று காரிருள் எல்லிற் பிழைத்து
நெஞ்சுதுக்கஞ் செய்யப் போந்தாய் நின்ற இக்கன்னியரோமை
அஞ்ச உரப்பாள் அசோதை ஆணாடவிட்டு இருக்கும்
வஞ்சகப் பேய்ச்சி பாலுண்ட "மசுமையிலீ" கூறைதாராய்"
(நாச்சி. 3-9.)

இத்திருப்பாவிற்குத் திவ்யார்த்த தீபிகை உரை: "கம்ஸனன வன்–உன்னை அழிப்பதாக நினைத்த காலத்தில்–மிக்க இருளை உடைத்தான–இரவில்–பிழைத்து, (அம்மணமாக) நிற்கின்ற–இளம் பெண்களான எங்களுக்கு-மனத்துன்பத்தை உண்டாக்குவதற்காக-வந்து பிறந்தாய்,–யசோதைப் பிராட்டியோவென்றால்–நீ பயப் படும்படி–உன்னை அதட்டமாட்டாள்;–தீம்பிலே கைவளரும்படி உன்னை விட்டிராநின்றாள்;–வஞ்சனையை உடைய—பூதனையினு டைய–முலைப்பாலை-(அவளுயிரோடேகூட)-உறிஞ்சியுண்ட (மசுமை யிலீ) லஜ்ஜையில்லாதவனே!–சேலைகளைத்தந்தருள்" என்பது.

இப்பொருளின் சிறப்பையும் இறப்பையும் உய்த்துணர்க. உய்த்துணருங்கால் திவ்யார்த்த தீபிகை உரைகாரர் எழுதி வைத்த பொருளைப் பலமுறை படித்து அதன் பழிப்பைத் துணிக.

இத்திருப்பாவில் அமைந்துள்ள "எல்" என்பது "அல்" என இருத்தற்பாலது, "எல்லே இலக்கம்" என்பது (தொல்-இடை) சூத்திரம் ஆதலால். அது,பகலைத்தான் சுட்டும். இருட்டை உடைய இரவைச் சுட்டாது என்பதனை நினைக்க. "அல்லும் பகலும்" என்னும் உலக வழக்கையும் நினைக்க. "கார் இருள் அல்" என்ற தொடரின் பொருள் "கரிய இருளை உடைய இரவு" என்பது. கார் இருள், இருபெயர் ஒட்டு. மற்று,

"அம்மணம்" என்பது உடையை உடுத்தாத மக்கள் உரு வைச் சுட்டாது. "நக்னம்" என்பதே உடையை உடுத்திலாத மக்கள் உருவைச் சுட்டும். ஆதலால் தீபிகை உரைகாரர் "அம் மணம்" என எழுதிவைத்த பொருள் போலிப் பொருள் என்க. உடையை உடுத்தாத திருச்சமணசமயத் துறவிகட்கு "அம் மணம்" என்பதனை ஒரு பெயராக வைத்து "அமணசாமி" எனச் செந்தமிழ்த்தேஎத்தில் வழங்குதலால் உடையை உடுத் திலாத யாவர்க்கும் அப்பெயரை வழங்குதல் நல்ல அறிஞர்

செயலாகாது. "அமணர்" என்பது சுகதுக்கங்களைச் சமனுகக் கொண்டு தவம் செய்பவர் என்னும் பொருளை உடைய "சமானம்" என்னும் வடமொழியின் சிதைவாகிய "சமாணே" என்னும் பாகத மொழியின் திரிபுமொழி. செந்தமிழ் மொழியுள் சகரத்தை மொழிக்கு முதலாகவைத்து வழங்குதற்கு விதி இல்லை. ஆதலால் மொழிமுதல் சகரமெய்யைக் கெடுத்து "அமணர்" எனச் செந்தமிழராய ஆசிரியன்மார் வழங்கினர். (சபா - சபை - என்பதனை அவை எனக் கொண்டிருத்தலை நினைக்க.) அவ்வழக்கைக் திவ்யார்த்த தீபிகை உரைகாரர் உணராமையால் உடையை உடுத்திலாத மக்கள் உருவிற்கு அம்மணம் எனப்பொருள் எழுதிவைத்தார் போலும்! அவர் எழுதி வைத்த பொருள் போலிப் பொருள் எனப் புறக்கணித் தற்பாலதொன்றே. அப்பொருள், சொல்லின் உண்மைப் பொருளை உணர்ாத அவரது வெளிற்று அறிவினைத் தெள்ளி தாக எடுத்துக் காட்டுதலை நினைக்க. மற்று,

இத்திருப்பாவில் அமைந்துள்ள "மசுமையிலீ" என்பது பிழைபட்ட பாடம். அப்பாடம் "மகிமையிலீ" என இருத் தற்பாலது. பொருள்: பெருமை இல்லாதவனே என்பது. இப்பொருள், பழித்தல்போலச் சொல்லிப் புகழ்தல்-நிந்தாஸ்துதி- என்னலும் ஆம். ஆயினும், மகிமை இலீ: மகிமை, பெருமை. இல், இருப்பிடம். இ, குறிப்பு வினைப் பெயர் விகுதி. இகரம் ஈகாரமாகத் திரிபுற்றது விளிப் பொருட்டு. இல்லீ எனற்பாலது இலீ என நின்றது தொகுத்தல் விகாரம். பொருள்: பெருமைக்கு இருப்பிடம் ஆனவனே என்பது. இப்பெற்றிய பொருளைக் கோடலும் ஆம். இவ்வகைப் பொருள்களை உணர மாட்டாமையால் பிழைபட்டதாகிய "மசுமை இலீ" என்ற தொடர்க்கு "லஜ்ஜை இல்லாதவனே" எனப் பொருத்த மற்ற பொருளை எழுதிவைத்தார் தீபிகை உரைகாரர். அவர் எழுதிவைத்த பொருள் போலிப் பொருள் என்பதனை அறிக.

"மசுமை இலீ" என்ற பெயர் வடமொழியாலாய பெயரும் அன்று. தென் மொழியாலாய பெயரும் அன்று. மற்று எம் மொழியாலாய பெயர் என்னின், கருவேப்பிலையை நொடையும் குறத்தி மொழிப் பெயர் போலும். அன்றிக் குடங்கள் எடுத்து ஏறவிட்டுக் கூத்தாடவல்ல சாத்தர் மொழிப் பெயர் என்னலும் ஆம். என்னை? பார்ப்பனருள் தென்கலையார் என

வும் ஸ்ரீவைணவர் எனவும் தம்மைச் சொல்லிக்கொள்ளும் செந்தமிழின் மிலேச்சராய ஒருவகைக் கூட்டத்தார், செந்தமிழராய திரு ஆழ்வார்கள் அருளிய செந்தமிழ்ப் பாக்களைச் செந்தமிழின் மிலேச்சராய கல்லுடைக்கும் ஒட்டத்தி மொழியாகத் திருத்திக்கொண்டு மண்மாற்றும் உப்பரத்தி மொழியால் உரை எழுதிவைத்துக்கொண்டு கருவேப்பிலை நொடையும் குறத்தி மொழியால் உபந்யசிப்பவர்-விரித்து உரைப்பவர்-ஆதலால். அவர் செயலை முற்றாக அறிய விரும்புபவர், செந்தமிழாலாய திவ்யப் பிரபந்தத்துள்ளே அதன் உரைகாரரால் செறிக்கப்பட்டுக்கிடக்கும் வளமில் சொற்களையும், அத்திவ்யப் பிரபந்தத்துக்கு எழுதப்பட்ட உரை நூற்களுள் செறிந்து கிடக்கும் போலிப் பொருள்களையும், அக்கூட்டத்தார் அப்பொருளை விரித்து உரைக்குங்காலங்களில் அவர்களால் ஆளப்படும் தெளிவில் சொற்களையும் பொருள்களையும் நேரில் கண்டும் கேட்டும் ஆய்ந்து அறிக.

"மகிமை இலீ" என்ற தொடர்க்கும் முன் உரைகாரரால் எழுதிவைக்கப்பட்ட 'லஜ்ஜையில்லாதவனே" என்ற பொருளையும் கொள்ளலாம். என்னை? பெருமை இன்மைக்குக் காரணம் "லஜ்ஜை'' இன்மையே-அஞ்சுதற்கு அஞ்சாமையே-ஆதலால்-காரணத்தைச் சொல்லிக் காரியத்தை விளக்கிவைத்தார் என்னலாம். இம் ''மகிமை இலீ'' என்ற தொடர், முன் உரைகாரர் கருத்துக்கும் முரணின்றி ஒற்றுமைப்படுதலை அறிக. ''திருமலை விளாங்குப்பம், உ. வே. ஸ்ரீநிவாஸவரதாசாரிய ஸ்வாமிகளால் பரிசோதிக்கப்பட்டுச் (சோபகிருதுஸு) சென்னை.பி.நா. சிதம்பரநாத முதலியார் அவர்களது வித்யாரத்நாகர அச்சுக்கூடத்தில் பதிப்பிக்கப்பட்டது'' என்றுள்ள புத்தகத்தில் "மகிமை இலீ'' என்ற பாடமே உள்ளது. இவ்வேதுவினால் முன்னுரைகாரர், திருஆழ்வாரால் அருளப்பட்ட'' மகிமை ''இலீ'' என்ற நேரியபாடத்துக்கே பொருள் எழுதிவைத்தார் எனத் துணியலாம், பிற்காலத்தே திவ்யப்பிரபந்தத்தைத் திவ்யார்த்த தீபிகை என்னும் உரையுடன் பதிப்பித்தவர் தாம், ''மசுமை இலீ'' எனப் பிழைபடுத்தி இருத்தல் கூடும் போலும்! (சா)

## ஒன்பதாவது ஆய்வு உரை: கிளை 7.

"அஞ்சிறைய மடநாராய் அளியத்தாய் நீயும் நின்
அஞ்சிறைய சேவலுமாய் ஆ ஆ என்று எனக்கருளி

வெஞ்சிறைப் புள் உயர்த்தார்க்கு என் விடுதூதாய்ச் சென்றக்கால்
வன்சிறையில் அவன்வைக்கில் வைப்புண்டால் என் செய்யுமோ"
(திருவாய்மொழி, 1-4-1)

இத்திருப்பாவில் அமைந்துள்ள இப்பாடங்கள் ஐவகை பாஷ்யங்களுடன் – அகல உரைகளுடன் —(ஆனந்தவருஷம் காஞ்சி-ஸ்ரீநிவாஸ முத்ராக்ஷர சாலையில்) அச்சிடப்பட்ட புத்தகத்துள் உள்ளன. இப்பாடங்கள் திவ்யார்த்த தீபிகை உரைகாரராலும் கொள்ளப்பட்டன.

இத்திருப்பாவில் அமைந்துள்ள "அளியத்தாய்" என்பது, "அளியுந்தாய்" என இருத்தற்பாலது. அது, "அளியுற்ருய்" என்பதன் விகாரமொழி. அவ்விகாரம், அகல உரைகாரரால் ஆக்கப்பட்டது–'ற்'கரத்தைத் 'த்'கரமாக வழங்குதல் அவ்வுரைகாரரின் வழக்கு. அவ்வழக்கைத் திவ்யப்பிரபந்தத்துள் பலவாகக் காணலாம். அவ்வுரைகாரர்தம் வழக்குப்படியே "அளியத்தாய்" என்பதற்கு "அளியற்ருய் அளிக்கும் இயல்பை இல்லாதாய்" என நீக்கப்படு பொருள்–இன்மைப் பொருள்— கொள்ளல் வேண்டும். அவ்வுரைகாரர் நீக்கப்பொருள்–இன்மைப் பொருள் கொண்டிலர், திவ்யப்பிரபந்தத்தின் அகல உரைகாரர் ஐவரும் குறிப்பு உரைகாரர் இருவரும் ஆகிய எழுவரும் "அளியத்தாய்" என்பதற்கு "அளிக்கும்-இயல்பினை உடையையாய்" எனச்சேர்க்கைப் பொருள்–உண்மைப் பொருளை எழுதி வைத்துள்ளார். அவ்வெழுவரும் "அளியத்தாய்" என்பதற்கு எழுதிவைத்துள்ள பொருள்:

1. (அளியத்தாய் து:க்காஸ ஹிஷ்ணுவுமா இருந்த) என்பது 'ஆறயிரப்படி' என்னும் உரை நூலுள் உள்ள பொருள்.

2. (இந்தசையிலே உதவும்படியான தகைமையை உடைய) என்பது 'ஒன்பதாயிரப்படி' என்னும் உரை நூலுள் உள்ள பொருள்.

3. (எனக்கு அளிக்கத்தகுதியான ஸ்வபாவத்தை உடையாய்) என்பது 'பன்னீராயிரப்படி' என்னும் உரை நூலுள் உள்ள பொருள்.

4. (இத்தசையிலே உதவும் அனுக்ரக சீலையான) என்பது 'இருபத்துநாலாயிரப்படி' என்னும் உரை நூலுள் உள்ள பொருள்.

5. (அளி–கிருபை; கிருபை பண்ணத் தக்காய்) என்பது 'முப்பத்தாறயிரப்படி' என்னும் உரை நூலுள் உள்ள பொருள்.

6. (தயை பண்ணுகைக்குக் குறைவறுகை) என்பது ஸ்ரீ ஆத்தான் ஜீயர் அடைய வளைந்தான் அரும்பத விளக்கம் என்னும் உரை நூலில் உள்ள பொருள்.

7. (எனக்குக் க்ருபை பண்ணுகைக்குத் தகுதியான ஸ்வபாவத்தை உடையையாய்) என்பது துணக்கரம் பாக்கம் ஸ்ரீ இராமாநுஜ ஜீயர் அரும்பத விளக்கம் என்னும் உரை நூலில் உள்ள பொருள்.

இவண் காட்டப்பட்ட ஏழுவகை உரைகாரர்களும் "அளியத்தாய்" என்பதற்கு "அளியை உடையாய்" எனச்சேர்க்கைப் பொருளை—உண்மைப் பொருளை—எழுதிவைத்திருத்தலால். "அளியத்தாய்" என்பது "அளியுத்தாய்" எனவே இருத்தற்பாலது எனத் துணிக.

அவ்வேழு உரை ஆசிரியர்களால் எழுதிவைக்கப்பட்ட பொருளைக்கண்டும் இத்திருப்பாவில் செறிந்துள்ள பிழையாகிய "அளியத்தாய்" என்ற பாடத்தை "அளியுத்தாய்" எனத்திருத்தி நேரிய பாடத்தைக் கொள்ளுதற்காம் நல்லஅறிவைப் பெற்றிலாத திவ்யார்த்த தீபிகை உரைகாரர் போன்றவர்களால் அச்சிடப்படும் புத்தகங்களில் பிழைகள் பலவாகச் செறிந்திருத்தல் இயல்பே. அறிஞராயினர் அப்பிழைகளை அறிந்து நீக்கி நேர் செய்துகொள்ளல் வழக்கே. அவ்வழக்குப்படியே "அளியத்தாய்" என்பதனை "அளியுத்தாய்" எனத்திருத்திக்கொள்க.

மற்று, இத்திருப்பாவின் இரண்டாவது அடியில் உள்ள "அஞ்சிறை" என்பது "வெஞ்சிறை" எனவும், (வெண்சிறை) மூன்றாவது அடியில் உள்ள "வெஞ்சிறை" என்பது "செஞ்சிறை" எனவும், (செம்சிறை) நான்காவது அடியில் உள்ள "வன்சிறை" என்பது "வஞ்சிறை) எனவும், (வன்சிறை) இருத்தற்பாலன. இருப்பின் பொருள் சிறப்பாம். பொருள்களின் சிறப்பை உய்த்துணர்க. (எ)

## ஒன்பதாவது ஆய்வு உரை : கிளை-8.

"மைத்தடங் கண்ணி யசோதை வளர்க்கின்ற
செய்த்தலை நீல நிறத்துச் சிறுப்பிள்ளை
நெய்த்தலை நேமியும் சங்கும் நிலாவிய
கைத்தலங்கள் வந்து காணீரே
கனங் குழையீர் வந்து காணீரே" (பெரியாழ். 1-2-12.)

இத்திருப்பாவிற்குத் திவ்யார்த்த தீபிகை உரை: "அஞ்ஜநாலங்கிருதமாய்-கர்ணாந்த விச்ராந்தமான-கண்களை உடைய-யசோதைப்பிராட்டியாலே-வளர்க்கப் படுகின்றவனாய்,-(செய்த்தலை: தலை செய்) உயர்ந்த க்ஷேத்ரத்திலே (அலர்ந்த)-கருநெய்தல் பூவினது போன்ற நிறத்தை உடையனான-இந்த பாலக்ருஷ்ணனுடைய,-(நெய்த்தலை:) கூர்மைபொருந்திய-நுதியை உடைய-திருவாழியும்-திருச்சங்கமும் - அமைந்திரா நின்றுள்ள - உள்ளங்கைகளை வந்து காணீர்!-;பொன்னால்செய்த-காது அணிகளைஉடைய பெண்காள்! வந்து காணீர்'' என்பது''

அப்பொருள் போலிப் பொருளே; கவிக்கருத்தன்று, ஆதலால். என்னை? ''செய்த்தலை" என்பதற்கு ''உயர்ந்த க்ஷேத்ரம்'' எனவும் ''நெய்த்தலை'' என்பதற்குக் ''கூர்மை பொருந்திய நுதி" எனவும் திவ்யார்த்த தீபிகை உரைகாரரால் எழுதி வைக்கப்பட்ட பொருளைப் பார்த்துத் துணிக.

இத்திருப்பாவில் அமைந்துள்ள ''செய்த்தலை'' என்ற தொடரைத் ''தலைசெய்'' எனப் பிரித்துக்கூட்டி உயர்ந்த க்ஷேத்ரம் எனப் பொருள் கொண்டு, உயர்ந்த க்ஷேத்ரத்தில் அலர்ந்த நீலம்-கருநெய்தல்பூ-எனப் பொருள் எழுதிவைத்தார் தீபிகை உரைகாரர். அவர், தலை என்பதற்கு உயர்ந்த எனவும், செய் என்பதற்கு க்ஷேத்திரம் எனவும் பொருள்கொண்டார் என்பதனை அவரால் கொள்ளப்பட்ட அப்பொருளே விளக்குகின்றது. அவ்விளக்கம்: நீலம்என்பது நீர் நிறைந்த பள்ளங்களில்-சேற்று நிலங்களில்-அல்லாமல் நீர் அற்ற மேட்டு நிலங்களில் தோன்றாது-வளராது-என்பதனை அத்தீபிகை உரைகாரராகிய திருக் காஞ்சிபுரம் பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியர் என்பவர் உணர்ந்திலர் என்பதனையும் வெள்ளிடைமலை போல விளக்கிக்கொண்டிருத்தலை அறிக. நீலம் நீர் நிறைந்த சேற்று நிலத்தில் விளைவது அல்லாமல் நீர் கலவாத மேட்டு நிலத்தில் விளையாது. ஆதலால், அத்தீபிகை உரைகாரர் எழுதி வைத்த பொருள் போலிப் பொருள் ஆயிற்று என்பதனைத் தேறுக.

செய்த்தலை என்பதன் பொருள்: (செய், நன்செய் விகாரம்) வயல், கழனி. தலை: (இடப்பொருள் சுட்டிய ஏழனுருபு) இடம். வயலில்-வயலிடத்தில்-என்பது கருத்து. எனவே அத்தொடரை இருபெயர் ஒட்டுப் பண்புத் தொகைத் தொடராகக்கொண்டு

செய்யாகியஇடத்தில் எனவும் பொருள்கொளளலாம். மற்று, இத்திருப்பாவில் அமைந்துள்ள "நேய்த்தலை" என்ற தொடரில் அமைந்த "நேய்" என்பதற்குத் திவ்யார்த்த தீபிகை உரைகாரர், "கூர்மை" என எழுதி வைத்த பொருளும் போலிப் பொருளே. என்னை! நெய்: (எண்ணெய் விகாரம்) தைலம். இருப்பாலாகிய போர்க்கருவிகட்குத் துப்புப் பற்ருது இருத்தல் பொருட்டுத் தைலத்தைப் பூசி வைத்தல் - தைலத்தைத்தடவி வைத்தல்-வழக்கு. அவ்வழக்கை இலக்கணையால் திருஆழிப் படைக்கும் ஏற்றி உரைத்து அருளினர் திருஆழ்வார். இப்படி உரைத்தல் கவி மரபு. அவ்வழக்கை உணராமையால் திவ்யார்த்த தீபிகை உரைகாரர், "நேய்" என்பதற்கு நூல்வழக்கிலும் உலக வழக்கிலும் ஆளப்படாத "கூர்மை" என்னும் பொருளைப் பொருளென எழுதிவைத்தார்.

"நெய்யார் ஆழி" (பெரிய திரு. 7-7-3.)

"நெய்யிலங்கு சுடராழி" (பெரிய திரு. 3-6.10.)

எனத் திருமங்கை மன்னராகிய திருஆழ்வாரும் அருளி இருத்தலை நினைக்க. மற்றும்,

"ஊன் திகழும் நேமி" (2-ம் அந்தாதி 81.)

"ஊன்பருகு நேமி" (பெரிய-அந்தாதி-)

எனத் திரு ஆழிப்படையை இலக்கணையால் படை என்னும் பொருள் சுட்டி அருளி இருத்தலையும் நினைக்க. மற்று,

"கைத்தலத்து உள்ள மாடழியக்
கண்ணலங்கள் செய்திவனை
வைத்து வைத்துக்கொண்டு என்ன வாணிபம்
நம்மை வடுப்படுத்தும்
சேய்த்தலை எழு நாற்றுப் போலவன்
செய்வன செய்துகொள்ள
மைத்தடமுகில் வண்ணன் பக்கல் வளர
விடுமின்களே." (பெரியாழ். 3-7-9)

என்ற இத்திருப்பாவில் "செய்த்தலை" என்பதனை நீர்கலந்த நன்செய் நிலம்-வயல் நிலம்-என்னும் பொருள்கொண்டு இத்திரு ஆழ்வாரே ஆண்டிருத்தலை நினைக்க.

இத்திருப்பாவில் "செய்த்தலை நாற்று" என்றது திருக்கண்ணபிரானுரின் திருமேனிக்கு உவமை. போலவன்:

போன்றவன். திருக்கண்ணபிரானாரின் திருமேனி கருமை நிறம் உடையது. செய்களில் விளைந்து வளரும் பயிர்களும்-நாற்றுக்களும்-பச்சைநிறம்—கருமை நிறம்-உடையன. திவ்யார்த்த தீபிகை உரைகாரர் இவ்வுவமைப் பொருளை உணர்ந்திலர் போலும்! (அ)

## ஒன்பதாவது ஆய்வு உரை: கிளை-9.

"வம்பவிழ் வானவர் வாயுறை வழங்க
மாநிதி கபிலை ஒண்கண்ணாடி முதலா
எம்பெருமான் படிமைக்கலம் காண்டற்கு
ஏற்பன வாயின கொண்டு நன்முனிவர்
தும்புரு நாரதர் புகுந்தனர் இவரோ
தோன்றினன் இரவியும் துலங்கு ஒளி பரப்பி
அம்பர தலத்தில் நின்று அகல்கின்றது இருள்போய்
அரங்கத்தம்மா பள்ளி யெழுந்தருளாயே" (திருப்பள்ளி. 8.)

இத்திருப்பாவிற்குத் திவ்யார்த்த தீபிகை உரை: (வழங்க வம்பு அவிழ் வாயுரை) (தேவரீருக்கு), ஸ்மர்ப்பிப்பதற்காகப் பரிமளம் மிகுந்த அறுகம்புல்லும்; (மாநிதி வானவர் கபிலை ஒண்கண்ணாடி முதலா எம்பெருமான் காண்டற்கு ஏற்பன ஆயின படிமைக்கலம் கொண்டு) சிறந்த சங்கநிதி பத்ம நிதிகளும் (கையிலேயுடையராய்க் கொண்டு) தேவர்களும் காமதேநுவும் ஒளிபொருந்திய கண்ணாடி முதலாக, ஸ்வாமியான தேவரீர் கண்டருளுகைக்கு-தகுதியாயுள்ள வையான-உபகரணங்களெல்லாவற்றையுங் கொண்டு-(நல்முனிவர்) மஹர்ஷிகளும்-தும்புருநாரதர்களும்-வந்து நின்றார்கள்; (இதுவுமன்றி) சூரியனும் தனது மிக்க தேஜஸ்ஸை எங்கும் பரவச் செய்துகொண்டு-உதயமானான்; இருளானது ஆகாசத்தினின்றும் நீங்கிப் போயிற்று, பள்ளி எழுந்தருளாய்-," என்பது பதவுரை.

"வம்பவிழ்" என்பதை வானவர்க்கே அடையாக்கி, நித்ய யௌவநத்தையுடைய தேவஜாதிகள் என்றும் பொருள் கொள்ளலாம். "படிமைக் கலம்-திருவாராதன உபகரணம்" என்பன சிறப்புரை. இப்பாடமும் பொருளும் பொருத்தம் அற்றன, கவிக்கருத்தல்லன ஆதலால். மற்று என்னை?

"வாயுறை" என்பது "வாயுரை" என இருத்தற்பாலது. பொருள்: வேதமொழி. "திருவாய்மொழி" என்பது போலக் கொள்க. "வாயுறை" என்பதற்கு "அறுகம்புல்" எனல், கவிக்

கருத்தன்று. அது திவ்யார்த்த தீபிகை உரைகாரரது கருத்து. "வம்பவிழ் வாயுறை" எனக் கொண்டு கூட்டிப் "பரிமளம்" மிகுந்த "அறுகம்புல்" என்ற பொருளும் பொருத்தமற்றதே. அறுகம்புல்லிற்கு மணம் (இன்று) உண்டு என்றார் ஆதலால். "படிமைக்கலம்" என்பது "பதுமக்கலம்" என இருத்தற்பாலது. பதுமம், திருவடிக்கு ஆகுபெயர். கலம்: படகு, தெப்பம். பதுமக்கலம், உருவகம். பொருள், பிறவிக் கடலின் நின்று வீடாகிய கரையில் சேர்ப்பிக்கும் தாமரைமலர் போலும் திருவடியாகிய தெப்பம்-படகு-என்பது. காண்டற்கு: இவண் காண்டல் தொழில் திருமாலுடையதன்று; தேவமுனிவரர்தம் தொழில். அவர்களே "திருமாலுடைய திருவடிகளைக்கண்டு களிப்பான் போந்தனர்" ஆதலால், இப்பொருளே கவிக்கருத்து என அறிக. "இவரோ" என்பது பிழைப்பாடம். அது "இவரொடு" என இருத்தற்பாலது திவ்யார்த்த தீபிகை உரைகாரர் தாம் கொண்ட "இவ்ரோ" என்ற பிழைப்பாடத்திற்கு ஒரு பொருளை எழுதி வைத்திலர். அவர் அதற்கு ஒருபொருளை எழுதாமல் விட்டதற்கு ஏது என்னையோ? "தேவமுனிவரோடு அம்பரதலத்தில் இரவியும் துலங்கு ஒளி பரப்பித் தோன்றினன்" என வினை முடிக்க, "இருள் போய்" என்பது "இருள்பாய்" என இருத்தற்பாலது. அம்பரதலத்தில் இரவி தோன்றினபடியால் அவ்வம்பரதலத்தில் பரந்துகிடந்த இருள் நீங்குகின்றது-நீங்கிற்று. அரங்கத்தம்மா: அரங்கம், உள் இடம். அத்து, சாரியை. அம், அழகு. மா, என்பது மால் என இருத்தற்பாலது. எழுதலாகிய தொழிலுக்குத் தலைவர்-எழுவாய்-திருமாலே ஆதலால். "படிமைக்கலம்" என்பது உமிழ்நீரைத் துப்பிவைக்கப்படும் கலத்திற்கே பெயர். திருவாராதன உபகரணத்துக்குப் படிமக்கலம் என்பது பெயர் அன்று என்பதனைத் தீபிகை உரைகாரர் மறந்தனர் போலும்!

"எம்பெருமானே! பிறவிக் கடலினின்று வீடாகிய கரையில் சேர்க்கும் நின்னுடைய தாமரை மலர்போலும் திருவடியாகிய தெப்பத்தினைப்-படகினைக்-கண்டு களிப்பான் தேவரீர் துயிலுணர்ந்தவுடன் காண்டற்காம் சிறந்த பொருள்களாகிய கபிலை, ஒள்ளிய கண்ணாடி-முதலியன கொண்டு நன்மணம் கமழும் மேனியராய தேவர் வேதமொழியை ஓதிக்கொண்டுவர நன் முனிவராகிய தும்புரு நாரதர் போந்தனர். இவரோடு இரவியும் அம்பரதலத்தில் நின்று துலங்கு ஒளி பரப்பிக்

கொண்டு தோன்றினன். அம்பர தலத்தில் பரந்து கிடந்த இருளும் அகல்கின்றது. (பொழுது விடியலாயிற்று.) திரு அரங்கமாகிய உள் இடத்தில் அறிதுயிலமர்ந்தருளிய அழகிய திருமாலே எழுந்தருளாய்" எனப் பொழிப்பு உரைத்துப் பொருளின் சிறப்பை அறிக.

இத்திருப்பாவில் திருஆழ்வார் அமைத்தருளிய உண்மைப் பொருளை அறியாதவராய்த் தம் மனத்தில் விளைந்த போலிப் பொருளை நேரிய பொருளெனப் பொறித்துவைத்த படியால், திவ்யப் பிரபந்த திவ்யார்த்த தீபிகை உரைகாரர், சொற்களின் உண்மைப்பொருள்களை உணர்ந்திலர் என்பதனை அறிக. (கூ)

## ஒன்பதாவது ஆய்வு உரை: கிளை-10.

"தையொரு திங்களும் தரை விளக்கித்
தண்மண்டலம் இட்டு மாசிமுன்னுள்
ஐயநுண் மணல்கொண்டு தெருவணிந்து
அழகினுக்கு அலங்கரித்து அனங்கதேவா
உய்யுமாங் கொலோ என்று சொல்லி
உன்னையும் உம்பியையும் தொழுதேன்
செய்யதோர் தழலுமிழ் சக்கரக்கை
வேங்கடவற்கு என்னை விதிக்கிற்றியே" (நாச்சி. 1-1)

இத்திருப்பாவிற்குத் திவ்யார்த்த தீபிகை உரை: "காமதேவனே!—தை மாதம் முழுதும்-நீ எழுந்தருளவேண்டிய இடத்தைச் சோதித்து (மண்டல பூஜைக்காக) குளிர்ந்த (அழகிய) மண்டலாகாரத்தை இட்டு-மாசி மாதத்தின் முதற் பக்ஷத்தில்-அழகிய சிறிய மணல்களினால்-(நீயெழுந்தருளும்) வீதிகளை-அழகுண்டாவதற்காக நன்றாய் அலங்கரித்து-(காமனைத் தொழுதால் நாம்) உஜ்ஜீவிக்க-(லாகுமோ? எனக்கருதி—காமனாகிய—உன்னையும்) உன் தம்பியான சாமனையும்-வணங்காநின்றேன்; (ப்ராதிகூலர் பக்கலில்) உக்கிரமானதும்-நெருப்புப் பொறிகளை உமிழாநிற்பதுமான—ஒப்பற்ற திருவாழியாழ்வானை — திருக்கையில் அணிந்துள்ள திருவேங்கடமுடையானுக்கு-என்னை—(கைங்கரியம் பண்ணும்படி) கல்பிக்க வேணும்; (ஏ, ஈற்றசை.)" என்பது.

இப்பாடமும் பொருளும் பொருத்தமற்றன, கவிக்கருத்தல்லன ஆதலால். இவற்றின் சிறப்பையும் இறப்பையும் உய்த்துணர்க. இத்திருப்பாவில் அமைந்துள்ள "உம்பியையும்"

என்பது "உம்மியையும்" என இருத்தற்பாலது. அது "உம்முடைய உடைமையையும்" என்பதன் மரூஉ. பொருள், உம்முடைய போருக்குரிய கருவிப் பொருள்கள் யாவையும் என்பது. அவை தேரும், ஊரும் பரியாகிய பிணைமாக் கவரியும், கொடியாகிய சுறவும், முழவாகிய கடலும், சங்கமாகிய குயிலும், வில்லாகிய கரும்பும், நாணாகிய சுரும்பும், கணைகளாகிய அரும்புகளும் ஆகிய இவை. காமன் உருவிலான் ஆதலால் "உன்னையும்" என்பதற்கு உன் பேரையும் என்க. என்னை? இத் திருப்பாவை அருளிய திரு ஆழ்வாரே (நாச்சி. 1-4-ல்) "சுவரில் நின் பேர் எழுதி" என்று அருளியிருத்தலை நினைக்க. "உம்மி" என்பதற்கு "உம்மனைவி" என்னலாம் ஆயினும், உருவிலானுக்கு மனைவியும் உருவிலாளே ஆவள். ஆதலால் அவனது போர்க்கருவிகளைப் பொருளாகக் கோடலே சாலச்சிறப்பாம் என்பதனை உய்த்துணர்க.

காமன் என்னும் ஒருதேவனும் அவனுக்கு ஒருதம்பி சாமன் என்பவனும் உளர் என்பது திருச்சமண் சமயத்தவர்க்கும் உடன்பாடு இல்லை. சீவக சிந்தாமணிச் செய்யுள் 43ல் சொல்லப்பட்ட காமன் சாமன் வரலாறு இடைச்செருகல். என்னை? மக்களின் அழகுக்காக உவமை கூறப்படும் தேவனை, எருமை மாட்டிற்கு உவமையாகக் கூறி இருத்தலை நினைக்க. மற்று, அந்நாலுள் சுரமஞ்சரியார் இலம்பகத்துள் கூறப்பட்ட "காமன்" வரலாறும் இடைச் செருகலே. என்னை? ஊழ்வினையின் பயனால் அல்லாமல் ஒரு தெய்வத்தின் வரத்தால் ஒருபயனையும் அடையமுடியாது என்னும் தெளிவினை உடையர் திருச்சமண சமயத்தவர் என்பதனை நினைக்க.

"சுவரில் புராண நின் பேரெழுதிச் சுறவ
நற்கொடிகளும் துரங்கங்களும்
கவரிப் பிணாக்களும் கருப்பு வில்லும்
காட்டித் தந்தேன் காமதேவா
அவரைப் பிராயந் தொடங்கி என்றும்
ஆதரித்து எழுந்த என் தட முலைகள்
துவரைப் பிரானுக்கே சங்கற்பித்துத்
தொழுது வைத்தேன் ஒல்லை விதிக்கிற்றியே" (நாச்சி. 1-4)

இத்திருப்பாவின் பொருளை இவண் நினைக்க.

இத்திருப்பாவில் அமைந்துள்ள "அவரைப் பிராயம்" என்பது "ஐவரைப் பிராயம்" என இருத்தற்பாலது. என்னே? ஐந்து என்னும் பிராயத்தை எல்லையாக முடிந்த நாள் தொடங்கி (ஆறுவது பிராயம் தொடங்கிய நாள் முதலாக) என்பது கருத்து. மக்கட்பிறப்பினார்க்கு ஐந்து பிராயம் முடியச் சிறு அறிவினையும் என்பது ஆன்றோர் அருளி வைத்த முதுமொழி. அம்மொழிப்படியே இன்றும் ஐந்து வயது நிறையப் பெற்ற சிறு அரையே பள்ளிகளில் சேர்த்துக் கல்வியைக் கற்பிக்கும் வழக்கையும் நினைக்க. இத்திருப்பாவின் உண்மைப் பொருளையும் திவ்யார்த்த தீபிகை உரைகாரர் உணர்ந்திலர் என்பதனை அறிக. மற்று,

"தாமரைச் செங்கண் செவ்வாய்த்
தமனியக் குழையி னைய்ஓர்
காமமிங் குடையேன் காளை
சீவகன் அகலம் சேர்த்தின்
மாமணி மகரம் அம்பு
வண்சிலைக் கரும்பு மான்தேர்
பூமணி மார்ப ஈவல்
ஊரொடும் பொலிய என்றாள்." (சீவகசிந்தா. 2057)

இப்பாவின் பொருளையும் இவண் போற்றுக. மற்று,

"கடலொடு காவிரி சென்று அலைக்கும் முன்றில்
மடலவிழ் நெய்தலங் கானல் தடமுள
சோம குண்டம் சூரிய குண்டத் துறைமூழ்கிக்
காமவேள் கோட்டம் தொழுதார் கணவரொடு
தாம் இன்புறுவர் உலகத்துத் தையலார்
போகம்செய் பூமியினும் போய்ப் பிறப்பர்"
(சிலப்பதி. 9:-57-62.)

இவ்வடிகட்கு உரையாசிரியர்-பெரும்பேராசிரியர் அடியார்க்கு நல்லார் எழுதி வைத்த பொருளையும் போற்றுக.

இவண் காட்டப்பட்ட பாக்களின் கருத்துக்களாலும் ஆடவர் ஒருவரை மணப்பான் எண்ணிக் காதலித்த மகளிர் ஒருவர், தம்மால் காதலிக்கப்பட்ட அவ்வாடவரைக் கணவராகப் பெறுதற்குக் காமனைவேண்டி வரம் பெறுதல் நூல்வழக்கு என்பதனை அறிக. (இவ்வழக்குத் திருச்சமண சமயத்தவருக்கு உடன்பாடு அன்று.) இவ்வழக்குப்படியே இத்திரு ஆழ்வாரும் தம்மால்

காதலிக்கப்பட்ட திருமால்தம் திருத்தோள்களைத் தம்மைச் சேர்ப்பித்தற்குக் காமனை வேண்டினர் என்க.

திருஆழ்வார் அருளிய (நாச்சி. 1-1) இத்திருப்பாவின் உண்மைப் பொருளை உணர்விக்கும் உரவைப் பெருமையால் திவ்யார்த்த தீபிகை உரைகாரர் "உம்பியையும்" என்ற பிழைப் பாடத்தை நேரிய பாடமாகக் கொண்டு அதற்கு "உன் தம்பியான சாமனையும் வணங்காநின்றேன்" எனப் போலிப் பொருளை எழுதி வைத்தனர் எனக்கொள்க. என்னை?

இருக்காதி வேத ஆகம புராணங்களை ஒப்புக்கொண்ட ஆசிரியன்மாருள் ஒருவரும் "காமனுக்குத் தம்பிஎனச் 'சாமன்' என்பான் ஒருவன் உளன்" என்று உரைத்து வைத்திலர் ஆதலால், காமனுக்குத் தம்பி சாமன் என்பவன் என எந்நூலகத்தும் இயம்பி வைத்திலர் ஆதலால். திருக்கண்ணபிரானுக்குத் திரு உருக்குமிணி தேவியார் இடத்தில் பிறந்த பிள்ளையைக் காமன் என்னல் முகமன் மொழியே அன்றி உருவிலானாகிய காமன் அல்லன் என்பது நினைவில் இருத்தற்பாலது.

இவ்வாய்வு உரையில் காட்டப்பட்ட திருப்பாக்களின் உண்மைப் பொருளை உணராமல் தம்மனத்தில் விளைந்த போலிப் பொருள்களை உண்மைப் பொருள்களென எழுதிவைத்தபடியால் திவ்யார்த்த தீபிகை உரைகாரர் சொற்களின் உண்மைப் பொருள்களை உணராதவர் ஆயினர் எனத்துணிக. (௰)

ஒன்பதாவது ஆய்வு உரை முற்றிற்று.

திரு ஆழ்வார்கள் திருமொழி திகழ்க.

---

## பத்தாவது ஆய்வு உரை: கிளை-1.

திருப்பேரருளாளப் பெருமாள்தம் திருஅடிகட்கு வணக்கம்.

திவ்யப்பிரபந்தத்தின் திவ்வியார்த்த தீபிகை உரைகாரர், திருஆழ்வார்களால் கருதப்படாத அவையல் கிளவியாலாய-இடக்கர்ப் பொருள்களைத் தம் உரை நூலுள் ஏற்றமாக எழுதி வைத்திருத்தலால், அவர் செந்தமிழ் மொழியராய ஆசிரியன்மார் வகுத்து வைத்த செந்நெறியையும்அன்னெறி (அல்நெறி)யையும் அறியாதவர் ஆயினர் என்பதனை இப்பத்தாவது ஆய்வு உரை விளக்குதலை அறிக.

"வட்டு நடுவே வளர்கின்ற மாணிக்க
மொட்டு நுனையில் முளைக்கின்ற முத்தேபோல்
சொட்டுச் சொட்டெனத் துளிக்கத் துளிக்களன்
குட்டன்வந்து என்னைப் புறம்புல்குவான்
கோவிந்தன் என்னைப் புறம்புல்குவான்" (பெரியாழ். 1-9-1.)

இத்திருப்பாவிற்குத் திவ்யார்த்த தீபிகை உரை: "என்பிள்ளை-(இரண்டு நீலரத்ந) வட்டுக்களின் நடுவே-வளர்ந்து கொண்டிருப்பதான்-இந்திர நீலமயமான-அரும்பினுடைய-நுனியிலே-உண்டாகின்ற-முத்தைப்போல-சொட்டுச் சொட்டென்ற ஓசையுண்டாம்படி (அம்மாணிக்க மொட்டு)-பலதரம் துளியாநிற்க,-ஓடிவந்து-என்னுடைய-முதுகை-கட்டிக்கொள்வான்;-கோவிந்தன் என்னைப் புறம் புல்குவான்-." என்பது பதவுரை.

"வட்டு நடுவே வளர்கின்ற மாணிக்க மொட்டு' என்றது-கண்ணபிரானது குறியை என்க; [குறி-குஹ்யாவயவம்] நிறத்தாலும் ஆகாரத்தாலும் உவமை. 'முளைக்கின்ற முத்து என்பது-அதில் நின்று வெளிவருகிற சிறுநீரை; உபமேயத்தைச் சொல்லாது உபமானத்தை மாத்திரம் சொல்லி அதனால் உபமேயத்தைப் பெறவைத்தது-இடக்கரை அடக்க வேணு மென்ற கருத்தினாற் போலுமென்ப. சிறுநீர்த் துளிகள் இற்று இற்று மீண்டும் வருதலால், 'சொட்டுச் சொட்டென்னத் துளிக்கத் துளிக்க' என்றார். என்னை-(ஐ)உருபு மயக்கம். புல்குவான் அணைத்துக்கொண்ட படியைச் சொல்லுகிறது; இனி, அணைத்துக்கொள்வானாக' என்று விரும்பினதாகவும் கொள்ளலாம்" என்பது சிறப்புரை.

அப்பதவுரையும் சிறப்புரையும் போலி உரைகளே. என்னை? அவை, அவையல் கிளவிகளாலாய இடக்கர்ப் பொருள்கள். அவை கவியால் கருதப்பட்ட பொருள்கள் அல்ல. ஆதலால், அவை புறக்கணித்தற்பாலன என்க. மற்று,

"மாணிக்க மொட்டு" என்பதற்கு "இந்திர நீலமயமான அரும்பு" என்றார் ஆதலால், அவரால் உரைக்கப்பட்ட உரை, பண்பில் உரையாம். மாணிக்கம் என்பது அரவு என்னும் நாகத்தின் உச்சியினின்று உதிருவதாகிய ஒருவகைத் தனிப் பொருளுக்குச் சிறப்புப் பெயர். அப்பொருள், இயற்கை ஒளியையும், செந்நிறத்தையும் உடையது என்பர் அறிஞர். மாணிக்கம் என்னும் பெயர், கல் இனத்தவாகிய இரத்தினங்

கட்கும் ஆம் பொதுப்பெயர் அன்று. மணி என்னும் பெயரே கல் இனத்தவாகிய பலவகை இரத்தினங்கட்கும் ஆம் பொதுப் பெயர். மாணிக்கமணி, பவளமணி, முத்துமணி, இரத்தின மணி, பொன்மணி, பால்மணி, கரிமணி என்னும் வழக்கை நினைக்க. முத்து மாணிக்கம் நீலமாணிக்கம் கருமாணிக்கம் என்பன உருவகப் பெயர்கள். அவை ஆளப்பட்ட இடங்கட்கு ஏற்ப இல் பொருள் சுட்டிய உவமைப் பொருள்கள் என்னலும் ஆம். பொன் மாணிக்கம் எனச்சொல்லும் வழக்கு இல்லை என்பது நினைத்தற்பாலது. இரத்தினக் கற்களைச் சாணையில் வைத்துத்-தேய்ப்புக் கருவியில் வைத்துத்-தேய்த்து அவை களின் மாசுகளைக் கழித்து மண்ணிய பின்னர் அவற்றிற்குச் செயற்கை ஒளி உண்டாகுதலால், அவ்விரத்தினங்கள் மணி என்னும் பெயரைப் பெற்றன என்பர் அறிஞர். இத்திருப் பாவில் திரு ஆழ்வாரால் உருவகம் சொல்லப்படவில்லை என் பது நினைவில் இருத்தற்பாலது.

திருக்கண்ணபிரானார்தம் திருமேனி கருநிறம் உடையது. மாணிக்கம் என்பது செந்நிறம் உடையது. ஆதலால், மாணிக் கம் என்பது திருக்கண்ணபிரானரது ஆண்குறியைச் சுட்டிய உவமைப் பொருள் ஆகாது. இவ்வேதுவினல், மாணிக்கம் என்பது திருக்கண்ணபிரானர்தம் ஆண்குறியைச் சுட்டிய உவமைப் பொருள் ஆயிற்று என்ற திவ்யார்த்த தீபிகை உரை காரர்தம் மாற்றம், அவரது தடுமாற்றத்தினை விளக்குதலை அத் தீபிகை உரைகாரர் உணர்ந்திலர் போலும்! உணராமையால் தான் கவிக்கருத்தை-நேரிய பொருளைப்-புறக்கணித்துத் தம் மனத்தில் விளைந்த அவையல் கிளவியாலாய இடக்கர்ப் பொருளை நேரிய பொருள்என எழுதிவைத்தார். இடக்கர்ப் பொருளை ஏற்றமாகக்கொண்ட தம்முடைய இழிசெயலைத் திரு ஆழ்வார்மீது ஏற்றி இடக்கரை அடக்கினர் என்ற அவரது அறிவுடைமையையும் நினைக்க. மற்று,

"சொட்டுச் சொட்டு என்ன" என்பதற்குச் "சொட்டுச் சொட்டு என்ற ஓசை உண்டாகும்படி" என்ருர் திவ்யார்த்த தீபிகை உரைகாரர். சிறுபிள்ளையின் ஆண் குறியினின்று சொட்டும் சிறு நீர்த்துளி, ஒரு ஓசையை உடைய தாய்ச் சொட் டும் என்ற அவரது மாற்றத்தைக்காணும்-கேட்கும்-சிறுபிள்ளை களும் அவரது அறிவுடைமைப் பண்பை எண்ணி நகைப்பார்

கள் என்பதனை அவர் உணர்ந்திலர் போலும்! அவருடைய அறிவின் அகற்சியை அறியும் பேராசிரியன்மார் அவரை யாது நினைப்பர் எனின்,

"கல்லாதான் ஒட்பம் கழியநன்று ஆயினும்
கொள்ளார் அறிவுடையார்"

என்னும் முதுமொழியை உன்னி அவரை-அவரது உரையைக்-கொள்ளலும் செய்யார் எள்ளலும் செய்யார். என்னை? 'முதிரா அறிஞர்போலும்' எனத் தம் மனத்தில் விளையும் இரக்கத்தால். மற்று, பிறரை ஏதுஇன்றி எள்ளி உரைத்தல் இழிபிறப்பாளர் செயல் என்பதனை அறிந்து பிறரை எள்ளி உரைக்கும் செயலை விட்டவரே நல்லாற்றில் ஒழுகுபவராவர் என்னும் இயல்பினர் பேராசிரியர் என்னும் பெருமைக்குரியர் ஆதலால். சொட்டுச்சொட்டாய்த் துளிக்கும் எனவாவது சொல்லி இருப்பின் அச்சொல் சொல் அளவிலேனும் சிறிது பொருத்தமாக இருக்கும். இச்சிறு பொருத்தத்தையும் அறியாதவர் போலும் திவ்யார்த்த தீபிகை உரைகாரர்!

சிறு பிள்ளைகள் சிறு நீரைக் கழிப்பின் அவர்கட்கு ஆண் குறியில் சிறு நீர் தங்காது. முற்றும் விரைந்து கழிந்துவிடும். உதிர்ந்துவிடும். முதியருள் சிலர்க்கும் மேகநோயால் பீடிக்கப் பட்டார்க்குமே சிறுநீர் விரைந்து–வேகமாகக்–கழியாமலும், முற்றும் கழியாமலும் (சில காலம்) சிறுகச் சிறுகச் சொட்டுச் சொட்டாய்ச் சொட்டிக்கொண்டு இருக்கும் என்பர், மேக நோய் கொண்டு நுகர்ந்தாரும் மருத்து நூல் வல்ல அறிஞரும். திவ்யார்த்த தீபிகை உரைகாரர், மேக நோயால் பீடிக்கப்பட்டுச் சிறுநீர்கழிக்குங்கால் வருந்துபவர்போலும்! அந்தோ! பாவம்! அதனால்தான் தமக்குச் சிறுநீர் சொட்டுச் சொட்டாய்ச் சொட்டுதல் போலவே பிறர்க்கும் சிறுநீர் சொட்டுச் சொட்டாய்ச் சொட்டும் என நினைத்தார் போலும்! அந்நினைப்பால் மலர்மகள் மணவாளரும் பிறரது பிறவிப் பிணியையும் போக்கி அருள வல்லவரும் திருப்பிறப்பால் சிறு பிள்ளையாகி வளர்ந்தருளியவரும் ஆகிய திருக்கண்ணபிரானார் மாட்டுத் தீவினையாலாய தம்முடைய துன்பச் செயலை ஏற்றி உரைத்து வைத்தார் போலும்! அவர் "சிறு பிள்ளைகளின் சிறுநீர் ஓசையை உடையதாய்ச் சொட்டும்" என்றதனால், 'அவ்வோசை எத்தகையது? அவ்வோசையை அவர் எவ் வழியால் உணர்ந்தார்?' என்பன

விளங்கவில்லை. அவர், அவற்றை விளங்கும்படி எழுதவில்லை. அவை விளங்காவிடினும் குற்றம் ஒன்று இன்று. என்னை? இடக்கரை ஏற்றமாகக் கூறிவைத்த அவரது மரபறியா வெள்ளறிவு வெள்ளிடை நின்ற மலைபோல விளங்கி நிற்றலால்.

மற்று, இத்திருப்பாவின் உண்மைப் பொருள் என்னை எனின், "வட்டுநடுவே: வட்டமான தாமரை மலர்போலும் வாயின் நடுவே; வளர்கின்ற: வாழ்கின்ற-உள்ள; மாணிக்க மொட்டு: (அரவின் உச்சியினின்று உதிர்ந்த) மாணிக்க மணியின் செந்நிறம்போலும் சிவந்த நிறத்தை உடையதும் செந்தாமரை மலரின் இதழ்போன்றதும் ஆகிய நாவினது நுனியில்: நுனியினின்று முளைக்கின்ற முத்தே போல்: (முத்து ஏ முளைக்கின்ற போல்) முத்துத் தோன்றினாற்போல; வெள்ளிய சொல்நீர் -சொட்டுச் சொட்டாய்த்துளிக்கத் துளிக்க; என் குட்டன் வந்து: என் மகன் வந்து; என்னைப் புறத்தின்கண் அணைகின்றான்- அணையாநின்றான், கோவிந்தன் என்னைப் புறத்தின்கண் அணையாநின்றான்" என்பதே. சொல் நீர்; சொள்ளு நீர்'' ஆகுபெயர்.

வட்டிலை-வட்டமான மலரை-வட்டு என்றது ஆகுபெயர். மொட்டு: இதழ் முற்றுக விரியாதமலர். மொட்டுப்போலும் நாவினை மொட்டு என்றது ஆகுபெயர். மொட்டு; நாக்கு-(ஆண் குறி-அல்குல்-என்னல் கவிக்கருத்து அன்று.) சொட்டுச் சொட்டாய்த் துளித்தநீர், வாய் நீர்-சொல் நீர். மூத்திர நீர் அன்று. கவிக்கருத்து அன்று ஆதலால். அது திவ்யார்த்த தீபிகை உரைகாரர்தம் கருத்தே. செந்தாமரையின் மலர் ஒன்று புற இதழ்கள் சில விரிந்து செறிந்து வட்டமாக நிற்க, அம்மலரின் நடுவில் அக இதழ்கள் சில விரியாமல் குவிந்து நின்றால் அன்ன வாயும் நாக்கும் எனவும், வட்டமான செந்தாமரையின் மலர் போலும் வட்டமான செவ்வாயின் நடுவில் கிடக்கும் மாணிக்க மணியின் நிறம்போலும் செந்நிறம் உடையதும், செந்தாமரையின் மலரினுள் விரியாமல் குவிந்து நிற்கும் இதழ்போன்றதும் ஆகிய நாக்கு எனவும் இரு வகையாக உவமைப் பொருள் கொள்க. இவ்வுவமை அடுக்கு உவமை. (இவ்வகை அன்றி, மாணிக்கமணி போலும் செந்நிறம் உள்ளது தாமரை மலர்; அம்மலரின் நிறம்போலும் வாயும் நாக்கும் என்னின் அவ்வுவமை அடுத்துவரல் உவமை என்னும் குற்றம் ஆம் என்பர் அறிஞர்.) இப்பொருள் இல்பொருள் சுட்டிய உவமை. அது ஆகுபெயரால்

விளைந்தது. முத்தே: ஏ, தேற்றப் பொருட்டு. 'வட்டு' வாய்க்கும், மொட்டு, நாவிற்கும் உவமை. அவை, திருக்கண்ணபிரானார் தம் ஆண் குறிகளாகிய உறுப்புகட்கு உவமை அல்ல. உவமை என்னல் கவிக்கருத்தன்று. அக்கருத்துத் திவ்யார்த்த தீபிகை உரைகாரர்தம் கருத்தே. மற்று,

'கோவிந்தன்' என்பது 'கோ, இந்த்ரன்' என்னும் வட மொழிகள் மரூஉவின் பாத்தியாய்த் திரிபுற்றுச் செந்தமிழ் மொழியுள் போந்துள்ள பெயர். அதன் பொருள்: ஆக்களைக் காப்பவன்-ஆக்கட்கு அரசன்-என்பது. அதன் பரியாயப் பெயரே 'கோபாலன்' என்பது. தேவ இந்திரனின் ஏவலால் பொழியப்பட்ட பெருமழையைத் திருக்கண்ணபிரானார், குன்றினைக் குடையாகக் கவிழ்த்துத் தடுத்து ஆக்களையும் ஆயர்களையும் பாதுகாத்த பெருமையின்பொருட்டுத் திருக்கண்ணபிரானார்க்குத் தேவ இந்திரன் வழங்கிய பெயர்.

"நாவந்த மாது புணர் நான்மறை யோனை யுந்திப்
பூவந்து அளித்தோற்கு ஒரு பொன் னெடுங்குன்றம் ஏந்தி
ஆவந்து அளிக்கும் அடல் ஆழியஞ் செங்கையாற்குக்
'கோவிந்தன்' என்று ஓர் பெயர் கூறினன் கொற்றவேந்தன்."
(பாகவதம், கோவத்தனம் எடுத்த அத்தியாயம்-37)
இப்பாவின் பொருளை நினைக்க.

[அக் 'கோ, இந்திரன்' என்ற வடமொழிப் பெயர்கள் வட மொழி விதிப்படி (கௌந்திரன்) எனத் திரிபுற்றுப் பின்னர் அது தமிழ்வழக்கின்படி மரூஉவின் பாத்தியாய்க் 'கௌண்டன்' எனத் திரிபுற்றுச் செந்தமிழ்த் தேஎத்தில் போந்திருத்தலை நினைக்க. :என்னை? பண்டு ஆக்களைக் காத்தும் காத்துவித்தும் வாழ்ந்த மக்கட்கு அக்'கௌண்டன்' என்னும் பெயர் (முதலியார் என்பது குடிப்பெயராக வழங்கப்படுதல் போலக்) குடிப்பெயராக வழங்கப்பட்டது போலும்! என்னை? அப்பெயர் இன்றும் நம் செந்தமிழ்த் தேஎத்தில் பலவகையாகிய குடும்பத்தினர்க்குக் குடிப்பெயராக இருத்தலே சான்றாம். அக்'கௌண்டன்' என்னும் குடிப்பெயரை உடையார் ஒருவர்க்கு ஒருவர் பெருமையால் ஏற்றத்தாழ்வினர்களாய்ப் பலவகையினராக இருப்பதன் ஏது என்னை எனின், அவர்களுடைய புதிய ஒழுக்கமும் பழைய பொருள் பிரிவினாலாய புதிய வறுமையுமே ஏதுவாகும் போலும்!

'அதற்குச் சான்று என்னை? எனின்' வேளாள வகுப்பினரினின்று பிரிந்த ஒரு கூட்டத்தினர் கோவில் பூசாகாரிகளாய் வாழ்தலால் அவர்களைக் குருக்கள் என மேன்மக்களாக மதித்தும் அவ்வேளாளரின் பிரிவினராய ஆயர் என்னும் வகுப்பினரை மேன்மக்களாக மதியாமையுமே சான்றாம்.

"பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும் சிறப்பொவ்வா
செய்தொழில் வேற்றுமை யான்"

என்னும் முதுமொழியை நினைக்க. மற்று,

"முதல்முன் ஐவரின் கண்என் வேற்றுமை
சினைமுதல் வருதல் தெள்ளிது என்ப" (தொல். வேற்-மயங்-5.)

என்பது செந்தமிழராய ஆசிரியர் அருளி வைத்த விதி. ஆதலால், அவ்விதிக்கு ஏற்றபடி (என் என்பதனை முதல் எனவும் புறம் என்பதனைக் கிளை-சினை-எனவும் கொண்டு என்னைப் புறத்தின் 'கண்' புல்குவான் எனக் 'கண்' என்னும் உருபைப் புறம் என்னும் கிளையில்-சினையில்-சேர்த்து விரித்துக் கோடலே மரபாம் என்பதனைத் திவ்யார்த்த தீபிகை உரைகாரர் தெரிந்திலர்-அறிந்திலர்; அந்தோ பாவம்! அவர் பிறரை வைதலாகிய தீய நெறிக்கே தம் அறிவைச்செலுத்திவிடுதலால் நல்ல நெறியை அறிதற்கு வற்றிய அறிஞராயினர் போலும்!

வட்டம் அல்லது வட்டில் என்பது வட்டு எனத் திரிந்தது என்றதற்கு வட்டமானஉடையை வட்டுஉடை என்னும் வழக்கை நினைக்க. மற்று, (பிங்கலம் 1243-ஆம் பாவின் பொருளை நினைக்க.) தாமரை மலரை வட்டமலர் என்னும் வழக்கையும் நினைக்க. "வட்டநாள் மரை மலரின்" என்ற (ராமா-அகலிகை-65) திரு வைணவ சமயத்தவரும் செந்தமிழரும் ஆகிய பெரும் பேராசிரியர் திருக்கம்பர்தம் திருக்கருத்தையும் நினைக்க. "வட்டின் நடுவே" என்ற தொடரின் உண்மைப்பொருளை உணரமாட்டாமையால் முன் உரைகாரர் வட்டில் என்பதனை வட்டு எனத் திருத்தி "வட்டு நடுவே" எனத் தொடராக்கி இருத்தலும் கூடும். என்னை? கவியால் கருதப்படாததும் தம் மனத்தில் விளைந்ததும் ஆகிய அவையல் கிளவியாலாய இடக்கர்ப் பொருளை ஏற்றமாக எழுதி வைத்தற்பொருட்டு. "வளரும்" என்பது "உளரும்" என இருத்தற்பாலது. அப்படி இருப்பின் சாலச். சிறப்பாம். உளர்தல்: அசைதல், ஆடுதல். பொருள்: வட்டமான

தாமரைமலர் போலும் வாயின் நடுவே அசைகின்ற-ஆடுகின்ற. அம்மலரின் இதழ்போலும் நாக்கு என்னலாம் ஆதலால்.

இவ்வகையாக உண்மையான உவமைப் பொருளை உணராதவராய்த் திவ்யார்த்த தீபிகை உரைகாரர் எழுதிவைத்த இடர்க்கர்ப் பொருள், அவர் செந்தமிழ் ஆசிரியன்மார் கொண்ட செந்நெறியையும் அன்னெறியையும் (அல்நெறியையும்) அறியாதவர் என்பதனை வெள்ளிடை நின்ற மலைபோல விளக்குதலை அறிக. (க)

## பத்தாவது ஆய்வு உரை: கிளை-2.

"மத்தக் களிற்று வசுதேவர்தம் முடைச்
சித்தம் பிரியாத தேவகிதன் வயிற்றில்
அத்தத்தின் பத்தாநாள் தோன்றிய அச்சுதன்
சித்தம் இருந்தவா காணீரே!
முகிழ்நகையீர் வந்து காணீரே! (பெரியாழ்-1-2-6.)

இத்திருப்பாவிற்குத் திவ்யார்த்த தீபிகை உரை: "மத்தத்தை உடைய – யானைகளை நிர்வகிக்குமவரான – ஸ்ரீவசுதேவருடைய-மனத்தை விட்டுப் பிரியாத-தேவகியினுடைய-வயிற்றிலே-ஹஸ்த நக்ஷத்திரத்துக்குப் பத்தாவதான திருநாளிலே திருவவதரித்த-கண்ணபிரானுடைய-(முத்தம் இருந்தஆ)–"சண்ணம்" இருந்த படியை காணீர்!–; புன் சிரிப்பை உடைய பெண்காள்!–வந்து காணீர்!!–." என்பது பதவுரை.

"முத்தம் பாலிகர்களின் குஹ்யாவயவத்துக்கு (சிந்நத்துக்கு–ஆண்குறிக்கு) ஆகு பெயர்; ரசிகர்கள் முத்தமிடுகைக் குரிய வஸ்துவிறே. பெரியாழ். 1-7-10ல்) சண்ணம், என்றும், (பெரியாழ். 1-9-1ல்) 'மொட்டு' என்றும், இதனையே (ஆண் குறியையே) மேலும் அருளிச் செய்துளர். நகை–ஆபரண மென்று கொண்டு இரட்டுற மொழிதலும் ஆம்" என்பது சிறப்புரை.

அவ்விருவகைப் பொருள்களும் போலிப் பொருள்களே. கவியால் கருதப்படாத இடக்கர்ப் பொருள்கள் ஆதலால், அவை புறக்கணித்தற்பாலன என்க. 'மற்று என்னை உண்மைப் பொருள்?' எனின்,

[முத்தம் என்பதற்குப் பொருந்துதல் எனவும் பொருள் கொள்ளலாம். (சீவக சிந்தாமணி, 2312ல்) "கலை முத்தம்

கொள்ளும் அல்குல்'' என்ற தொடர்க்கு அதன் உரையாசிரியர் "மேகலை பொருந்துதலைக் கொள்ளும் அல்குல்'' எனப் பொருள் எழுதி வைத்தார் ஆதலால். அப்பொருளால் அவ்வுரையாசிரியர், "முத்தம்'' என்பதற்குப் பொருந்துதல் என்பதே பொருளெனக் கொண்டாராயினர். இவ்வேதுவினால் அம்முத்தம் என்னும் மொழி, முகத்தொடு முகத்தைப் பொருந்தச் செய்யும் செயலுக்குத் தொழிலாகு பெயராகிக் காதலர்; தம்முகத்தொடு–உதடுகளோடு–தம்மால் காதலிக்கப்பட்டார் தம் முகத்தை-உதடுகளைப் பொருத்திக்கொள்ளும்–பொருந்தச் செய்யும்–செயலுக்கு இருமடி ஆகுபெயராகியதுபோலும்! இப்பொருள் இவண் கவிக்கருத்து அன்று என்பது நினைவில் இருத்தற்பாலது.]

இத்திருப்பாவில் அமைந்துள்ள "மூத்தம்" என்பது உவம ஆகு பெயர். அதன் பொருள் பல்–எயிறு–என்பது. தன் மகனது பல் அழகைக் கண்டு மகிழ்ந்த தாய், தன் மகிழ்ச்சியைத் தன் தோழியர் மாட்டு உரைத்த மாற்றம் எனக் கொள்ளலே கவிக்கருத்தாம். இப்பெற்றிய பொருளை உணரமாட்டாமையால் திவ்யப் பிரபந்த திவ்யார்த்த தீபிகை உரைகாரர் "மூத்தம்'' என்பதற்குப் "பாலிகர்களின் ஆண் குறி–குஷ்யாவயவம்'' என்ப் பொருளை எழுதிவைத்தார். அவரால் எழுதி வைக்கப்பட்ட அப்பொருள், செந்தமிழ் ஆசிரியன்மார் கொண்ட செந்நெறியையும் அன்னெறியையும் (இடக்கரையும்) அறியாதவர் என அவரது பண்பை வெள்ளிடை நின்ற மலையின் தோற்றத்தை வெயிலவன் விளக்கிக் காட்டுதல்போல விளக்கிக் காட்டுதலை அவ்வுரைகாரர் உணர்ந்திலர் என்பதனை அறிக. (உ)

## பத்தாவது ஆய்வு உரை : கிளை-3.

"திரைநீர்ச் சந்திர மண்டலம் போல்
செங்கண்மால் கேசவன்தன்
திருநீர் முகத்துத் துலங்கு சுட்டி
திகழ்ந்து எங்கும் புடைபெயரப்
பெருநீர்த் திரையெழு கங்கையிலும்
பெரியதோர் தீர்த்தபலம்
தருநீர்ச் சிறுசண்ணந் துள்ளம் சோர்த்
தளர்நடை நடவானோ'' (பெரியாழ். 1-7-10)

இத்திருப்பாவிற்குத் திவ்யார்த்த தீபிகை உரை: "சிவந்த கண்களவும் கருநிறத்தையு முடைய-கேசவனென்னுந் திருநாம முடைய இவன்,-அலைகின்ற நீரை உடைய ஸமுத்திரத்தின் நடுவில்-(அசைந்து தோன்றுகின்ற)-ப்ரதிபிம்ப சந்த்ர மண்டலத்தைப் போல-தன்னுடைய-அழகிய ஒளியை உடைய-திரு முகத்திலே-விளங்குகின்ற—சுட்டியானது — எல்லாவிடத்திலும்-பிரகாசித்துக் கொண்டு-வலமாகவும் இடமாகவும் அசையவும்,-சிறந்த தீர்த்த மாகிய-அலையெறிகிற கங்கையிற் காட்டிலும்-அதிகமான-ஒப்பற்ற-தீர்த்த பலத்தை-கொடுக்கின்ற-ஜலத்தை உடைத்தான-சிறிய "சண்ணமானது")-(ஆண் குறியானது)-துளி துளியாகச் சொட்டவும்-தளர்நடை நடவானோ—" என்பது பதவுரை.

"கருநிறத்தனான கண்ணனது திருநெற்றியிலசைந்து கொண்டு விளங்குஞ் சுட்டிக்கு, கருநிறமான கடலின் நடுவில் அசைந்து கொண்டு தோன்றும் சந்த்ர பிரதிபிம்பம் ஏற்ற உவமையாம். சிறு "சண்ணம்-பெல்லாகுட்டி"-என வழங்குதலறிக. [குறி] (ஆண்குறி)" என்பது சிறப்புரை.

அவ்விரு வகைப் பொருள்களும் கவிக் கருத்துக்களல்ல. ஆதலால், அவை போலிப் பொருள்கள் எனப் புறக்கணித்தற் பாலன.

இத்திருப்பாவில் அமைந்துள்ள "சண்ணந்துள்ளம்" என்ற தொடர் பிழையுற்ற தொடர். அத்தொடர் "சரணத்தாள்" என இருத்தற்பாலது. "சரணம்+தாள்" "சரணத்தாள்" என்பது இருபெயர் ஒட்டுப் பண்புத் தொகைத் தொடர். பொருள்: தாள்-அடி-என்பதே. திவ்யார்த்த தீபிகை உரைகாரர் இத்திருப்பாவில் அமைந்துள்ள இப்பிழையை அறிந்திலர் போலும்! என்னே? கவியால் கருதப்படாத அவையல்கிளவியாலாய இடக்கர்ப் பொருளை-ஆண்குறியை-நேரிய பொருளென எழுதிவைத்தார் ஆதலால்.

அவரால் எழுதப்பட்ட சிறப்புரைப் பகுதியுள் "சிறுச் சண்ணம்-பெல்லாக்குட்டி-என வழங்குதலறிக. [குறி]" என்ற குறிப்பின்படி "ஆண்குறி" என்பதனைப் "பெல்லாகுட்டி" என வழங்குதல் அவரின் இனத்தாரின் வழக்குப்போலும். அதனால் அப்பொருளை அவர் அறிந்திருப்பர். அப்படி வழங்குதல் நூல் வழக்கு அன்று. உலக வழக்கும் அன்று என்பதனை அவர் அறிந்திலர் போலும்! மற்று,

"ஆண்குறி" என்பதற்குச் "சண்ணம்" என்பதும் ஒரு பெயர் என்பதனைத் திவ்யார்த்த தீபிகை உரைகாரர் எவ்வழியால் அறிந்தனரோ? அவ்வழியை அவர் விளங்க வைத்திலர். "ஆண் குறி" என்பதற்குச் "சண்ணம்" என்னும் பெயரைத் தாமாக வழங்கினர் போலும்! மரபறியார் மரபை-வழக்கை-விரும்புவரோ? விரும்பார். தம் விருப்பத்திற்கு ஏற்றபடி ஏதேனும் ஒன்றனைப்-பொருத்தமற்ற பொருளைத்தான்-பொருத்தமெனப் புகல்வர்-எழுதுவர்-என்க.

சிறு பிள்ளைகள் நடக்குங்கால் சோர்வை அடைவன அவர்களுடைய தாள்கள் அல்லாமல் அவர்களின் அல்குல்கள்-ஆண் குறிகள்-அல்ல என்பதனையும்; அவர்கள் நடக்குங்கால் அவர்களின்-அல்குல்களினின்று - ஆண்குறிகளினின்று - சிறுநீர்கள்-மூத்திர:நீர்கள்-துளித் துளியாய்த் - துளிக்கா-சொட்டுச் சொட்டாய்ச்சொட்டா—என்பதனையும் நேரில் கண்டு அறியத் தமக்குக் கண்கள் இல்லை ஆயின் கண்களை உடையார்கள் மாட்டுக்கேட்டு இன்றேனும் அறிவாராக. மற்று,

தன்னில் மூழ்கினர்க்குச் சிறந்ததோர் நற்பயனை அளிக்க வல்ல திருக்கங்கையின் நீரைக்காட்டிலும், வேறு கதி இல்லை எனத் தம்மையே முழுமுதல் இறைஎன அடைந்தவர்க்குச் சிறந்ததோர் நற்பயனைப்-பரமபதத்தை-அளிக்கவல்லன திருக்கண்ணபிரானர்தம்—திருமால்தம்— திரு அடிகளை விளக்கிய திருத்தீர்த்தங்களே அல்லாமல் அவரின் குஷ்யாவயவத்தினின்று - ஆண்குறியினின்று - சொட்டும் சிறுநீர்-மூத்திரநீர்-அன்று என்பதனையும் திவ்யார்த்த தீபிகை உரைகாரர் உணர்ந்திலர் போலும்! அவர், நூல் நெறியறிந்து நுண்மாண் நுழைபுலம் உடையராய வடமொழித் துறையை நன்ருக அறிந்துள்ள ஆசிரியர் மாட்டேனும், செந்தமிழின் செவ்வியநெறியை நன்ருக அறிந்துள்ள ஆசிரியர் மாட்டேனும் கேட்டுத் தெளிவாராக.

திருக்கண்ணபிரானரின்-திருமாலின்-திரு அடிகளை விளக்கிய திருத்தீர்த்தங்களே (அத்திருமாலின் திருவடிகளை அடைந்தார்க்குச்) சிறந்ததோர் நற்பயனைப்-பரமபதத்தை— அளிக்க வல்லன என்பது நூல் வழக்கு ஆதலால்.

அத்திவ்யார்த்ததீபிகை உரைகாரர் கொள்கைப்படி இனித் திருமால்தம் திருக்கோவில்களில் அளிக்கப்படும் திருநீர்-திருத்

தீர்த்தம் திருமால்தம் திரு அடிகளை விளக்கிய திருநீர் ஆகிய திருத்தீர்த்தம் அன்று என்றும், அவரின்-குஹ்யாவயவத்தின்-ஆண்குறியின்-நின்று உதிர்ந்த மூத்திரநீர்தான் திருத்தீர்த்தமென அளிக்கப்படுகிறது என்றும் கொள்ளவேண்டும் போலும்! "கங்கையினைக்காட்டிலும் அதிகமான ஒப்பற்ற தீர்த்தபலத்தைக் கொடுக்கின்ற ஜலத்தை உடைத்தான "சிறு சண்ணம்-ஆண்குறி" என்றார் ஆதலால். அவரது தேர்தல் நன்று! நன்று! மிகநன்றே!

'இத்திருப்பாவின் உண்மைப் பொருள்—கவியால் கருதப்பட்ட பொருள்-மற்று எவன்?' எனின், "தீர்த்தபலம் தருநீர் சிறு சரண் அடி" எனக் கொண்டு கூட்டித் "தம்மைத் தெரிசித்தார்க்குத் தீர்த்த பலத்தை அளிக்கும் (நீர்) நீர்மையை உடைய-இயல்பினை உடைய-சிறிய திரு அடி" எனப் பொருள் கோடலே கவிக் கருத்தாகும். இத்திருப்பாவில் அமைந்துள்ள "நீர்" என்பதன் பொருள் "புனல்" அன்று. (நீர், நீர்மைவிகாரம்) "இயல்பு" என்பதே. "சண்ணம் துள்ளம் சோர" என்ற தொடர் "சரண் நைந்து உள்ளம் சோர" என முன்னர் இருந்து பின்னர்ப்பிழை பெற்றதுபோலும் என எண்ணவும் இடம் உண்டு. அறிஞராயினர் ஆய்ந்து உண்மையை அளித்தருள்வாராக. இத்திருப்பாவிற்கு இடக்கர்ப் பொருளை எழுதி வைத்தபடியால் திவ்யார்த்த தீபிகை உரைகாரர் செந்தமிழ் ஆசிரியன்மார் கொண்ட செந்நெறியையும் அந்நெறியையும் அறியாதவராயினர் என்பதனைத் தெளிக. (ந)

## பத்தாவது ஆய்வு உரை: கிளை-4

"மடிவழி வந்து நீர்ப்புலன் சோர
 வாயில் அட்டிய கஞ்சியும் ஈண்டே
கடைவழி வாரக் கண்டம் அடைப்பக்
 கண்உறக்கமது ஆவதன் முன்னம்
துடைவழி உம்மை நாய்கள் கவரா
 சூலத்தால் உம்மைப் பாய்வதுஞ் செய்யார்
இடைவழியில் நீர்கூறையும் இழவீர்
 இருடிகேசன் என்றுஏத்த வல்லீரே" பெரியாழ் 4-5-5)

இத்திருப்பாவிற்குத் திவ்யார்த்த தீபிகை உரை: (யமகிங்கரர்களைக்கண்ட பயத்தினுல்) லிங்கத்தின் வழியாகவந்து—மூத்திரநீர்

பெருகவும்,—வாயிலே—பெய்த-பொரிக்கஞ்சியானது—கழுத்தை அடைக்கவும்,-மறுபடியும்-கடைவாய் வழியாலே-(அந்தப் பொரிக் கஞ்சி) வழியாநிற்கவும்-கண் உறக்கம் அது ஆவதன் முன்னம் 'ஹ்ருஷீ கேசன்' என்று (எம்பெருமான் திருநாமத்தைச் சொல்லி)-ஸ்தோத்திரம் பண்ண வல்லவர்களே! (யமலோகத்திலுள்ள) செந்நாய்களானவை-உங்களை-துடையிலே கவ்வமாட்டா; (யமகிங் கரர்கள்)-உங்களை-சூலாயுதத்தினுல்-குத்தவும் மாட்டார்கள்; நீங் கள்-நடுவழியில்-வஸ்திரத்தையும்-இழக்க மாட்டீர்கள்'' என்பது பதவுரை.

''மடிப்புலன் என்று-ஆண்குறியைக் குறித்தவாறு-அச்சத் தினுல் மூத்திரம் விட்டுக்கொள்ளுதல் அனைவர்க்கும் அனுபவத் திற் கண்டதாகும்'' என்பது சிறப்புரை.

இவண் காட்டப்பட்ட திருப்பாவின் பாடமும் இருவகைப் பொருள்களும் பொருத்தம் அற்றன. கவிக்கருத்தல்லன ஆத லால், அவை புறக்கணித்தற்பாலன. 'மற்று எவன் உண்மைப் பொருள்?' எனின், ''மடிவழி'' என்பது பிழை. அது மடைவழி என இருத்தற்பாலது. மடுக்கும் வழியை மடை என்னல் மரூஉ வழக்கு. ''மடுத்தல்'' என்னும் தொழிற்பெயரின் ''மடு'' என் னும் முதல்நிலை ஈறுதிரிந்தது என்னலும் ஆம். மடைவழி: உண்ட வழி, பருகியவழி. ''மடைவழி நீரைக் கட்டுக'' என்னும் உழ வர்தம் வழக்கை இவண் நினைக்க. மற்று, ''நீர்ப்புலன்'' என்பது பிழை. அது ''நீர்ப்புனல்'' என இருத்தற்பாலது. அத்தொடர் இருபெயர் ஒட்டுத் தொடர். அத்தொடரின் பொருள்: நீர், வெள்ளம் என்பதே. ''ஏத்த வல்லீரே'' என்பது ''ஏத்துவீரே'' என் இருத்தற்பாலது. ஈற்று ஏகாரம் அசைப்பொருட்டு-ஏத் துவீர், ஈர் வியங்கோள் பொருட்டு. ஏத்துவீராக. சொல் எச்சத் தின் பாத்தியாய் ''ஆயின்'' எனத் தந்துரைக்க. ''கண் உறக்கம் ஆவதன் முன்னம் இருடிகேசன் என்று ஏத்துவீர் (ஆயின்) இழவீர்'' என வினை முடிவுகொண்டு பொருளின் பொற்பை அறிக.

நீராகிய புனல் (மடைவழி) மடுத்தவழியே-பருகிய வழியே-வந்து சொரியவும், வாயில் ஊட்டிய கஞ்சியும் ஈண்டே-இப்படியே-ஊட்டிய வழியே-வாயின் கடை இடத்து வழியாக (வார) வழியவும்-ஒழுகவும், ஐயத்தால்-சிலேத்துமத்தால்-கண் டம் அடையப்பட்டு, அதனல் சொல்லும் இயல்பு சோர்வை

அடையவும், கண் உறக்கம் ஆவதும்—சாதலும்—ஆகிய இவற்றின் முன்னம் "இருடிகேச! எம்மைக் காக்க!" என்று அப்பெருமானை ஏத்துவீராயின் "முற்கூறப்பட்ட" துன்பத்துக்கு ஏதுவாகும் செயல்களெல்லாம் நுங்களைச் சேராமல் ஒழிவதன்றி நீர் செல்லுகின்ற வழி இடையில் வழிபறி வேடரால் ஏவப்படும் நாய்கள் உம்முடைய துடை இடத்துத்தசையைக் கௌவி உம்மை வருத்தா. அவ்வேடரும் உம்மைச் சூலத்தால் பாய்ச்சி வதைத்தலைச் செய்யார். உம்முடைய கூறை அணிகள் முதலிய பொருள்களை அவ்வழிபறி வேடரால் பறிக்கப்பட்டு இழத்தலும் செய்யீர்" எனப் பொழிப்புரைக்க.

இத்திருப்பாவில் குறிப்பிடப்பட்டன எல்லாம் இம்மையில் நிகழும் நிகழ்ச்சிகளே என்பது நினைவில் இருத்தற்பாலது. திவ்யார்த்த தீபிகை உரைகாரரால் கூறப்பட்ட மறுமை நிகழ்ச்சி ஒன்றும் இத்திருப்பாவுள் இல்லை என்பதும் நினைவில் இருத்தல் பாலது. "யமலோகம் போக நேர்ந்து, வழி இடையில் செந்நாய்களால் துடை கவ்வப்பட்டும் யமகிங்கரர்களினால் சூலம் கொண்டு குத்தப்பட்டும் அரையின் கூறையை இழக்கப் பெற்றும், இப்படிப் பல துன்பங்கள்படவேண்டி வருமாதலால் அவற்றுக்கெல்லாம் இடம் அறும்படி முந்துற—முன்னமே—எம்பெருமானை ஏத்தப்பெறில் இடர்ப்பாடு ஒன்றும் பட நேராது என்கிறார்" எனத் திவ்யார்த்த தீபிகை உரை காரரால் எழுதப்பட்ட உரையை உற்று நோக்குக. அவ்வுரைகாரர் "யமகிங்கரர், தம்மால் பற்றப்படுபவரின் அரையில் அமைந்த கூறையை வழி இடையில் கொள்ளுவர் என்பதற்குப் புராண நூல் ஒன்று சான்றாக இன்மையால் அவர் உரை போலி உரையாயிற்று என்பதனை அறிக.

மற்று அவர் "ஏத்துவீரே" என்ற தொடரை 'ஏத்தவல்லவர்களே' என்று விளியாகக் கொண்டுள்ளார். விளியாகக் கொண்டுவிடின் அவரால் கூறப்பட்ட நற்பயனுக்கு ஒரு ஏது இல்லாது ஒழிதலையும் நினைத்திலர் போலும்!

இப்பத்தாவது ஆய்வு உரையுள் கூறப்பட்ட-காட்டப்பட்ட திருப் பெரிய ஆழ்வார் திருமொழி 1-2-6; 1-7-10; 1-9-1; 4-5-5. ஆகிய இந்நான்கு திருப்பாக்களிலும் அத்திரு ஆழ்வார் அருளிய நேரிய பொருள்களைக் கொள்ளாமல் தம்மனத்துள் விளைந்த அவையல்கிளவியாலாய இடக்கர்ப்பொருள்களைத் திவ்யார்த்த

தீபிகை உரைகாரர் எழுதிவைத்தனர். திருப்பெரியாழ்வார் 1-2-6ல்)-வாயிடத்து உள்ள பல் என்னும் பொருளையும், 1-9-1ல் வாயிடத்து உள்ள நாக்கு என்னும் பொருளையும் 4-5-5ல் வாய்வழி-சொரியும் புனல்என்னும் பொருளையும் புறக்கணித்து அவற்றுக்கு மாருகக் கவியால் கருதப்படாத இடை இடத்துள்ள ஆண்குறி என்னும் பொருளை எழுதிவைத்ததன்றி, 1-7-10ல் அடியிடத்துப் பொருளாகிய தாள் என்னும் பொருளைப் புறக் கணித்து அதற்கு மாருகக் கவியால் கருதப்படாத இடை இடத்து உள்ள ஆண்குறி என்னும் பொருளையும், (1-6-4ல்) *கவியால் கருதப்பட்ட புட்டி-வட்டில்-என்னும் பொருளைப் புறக் கணித்து அதனுக்கு மாருக அரை-இடை-என்னும் பொருளையும் (ஆகு பெயரால் ஆண்குறி என்னும் பொருளையும்) வலிந்து பொருள் கொண்டு உரை எழுதி வைத்தார் திவ்யார்த்த தீபிகை உரைகாரர்.

அப்பொருள், அவ்வுரைகாரர் தலை இடத்துப் பொருளை யும் அடியிடத்துப் பொருளையும் விரும்பாதவர் என்பதனையும் இடை இடத்துப் பொருளாகிய "ஆண்குறி" என்னும் இடக்கர்ப் பொருளையே விரும்பிப் போற்றுபவர் என்பதனையும் அறிவித் தலை உற்று நோக்குக.

இவ்வாய்வு உரையுள் காட்டப்பட்ட நான்கு திருப்பாக் களுக்கும் இடக்கர்ப் பொருளவாகிய குற்றங்களை உணராதவ ராய்ப் போலிப்பொருள்களை எழுதி வைத்ததனல் அத்திவ் யார்த்த தீபிகை உரைகாரர், செந்தமிழர்தம் செந்நெறியையும் அன்னெறியையும்- இடக்கரையும்-அவையல் கிளவியையும் உணராதவர் ஆயினர் என்பதனை அறிக. (சு)

பத்தாவது ஆய்வு உரை முற்றிற்று.

*திரு ஆழ்வார்கள் திருமொழி திகழ்க.*

---

## பதினேராவது ஆய்வு உரை: கிளை-1.

திருப்பேரருளாளப் பெருமாள்தம் திரு அடிகட்கு வணக்கம்.

திவ்யப் பிரபந்தத்துள் பண்டு ஏட்டில் எழுதியவர்களால்

---

* திருப்பெரியாழ்வார் 1-6-4ல் "புட்டி" என்பதற்குத் தீபிகை உரைகாரர் இடக்கர் எழுதினர் என்பதன் ஏதுவை இந்நூலுள் இரண்டாவது ஆய்வு உரையின் கிளை ஒன்றினுள் காண்க.

செறிக்கப்பட்ட பிழைகளையும் திவ்யார்த்த தீபிகை உரைகாரர் உணர்ந்திலர் என்பதனை இப்பதினோராவது ஆய்வு உரை விளக்கிக் காட்டுதலை அறிக.

மாதர்தம் கூந்தலின் பெயர், அஞ்சல் ஓதியா-அஞ்சில் ஓதியா?

"எஞ்சலில் இலங்கைக்கு இறை எங்கோன்தன்னை
முன் பணிந்து எங்கள் கண்முகப்பே
நஞ்சுதான் அரக்கர் குடிக்கு என்று
நங்கையை அவன் தம்பியே சொன்னான்
விஞ்சை வானவர் வேண்டிற்றே பட்டோம்
வேரிவார் பொழில் மாமயில் அன்ன
அஞ்சலோதியைக் கொண்டு நடமின்
அஞ்சினோம்தடம் பொங்கத்தம்பொங்கோ" (பெரியதிரு. 10-2-4)

இத்திருப்பாவிற்குத் திருப்பெரிய ஆச்சான் பிள்ளை உரை: "(அஞ்சலோதியை) சுருண்டு நெய்த்துப் பரிமளிதமாய், என்றைப் போலே அஞ்சுவகைப் பட்டு இருப்பதாய் இருண்டிருந்துள்ள மயிர் முடியை உடைய பிராட்டியைக் கொண்டுபோங்கோள்" என்பது பதவுரை.

"அஞ்சு என்று: அஞ்சுவகைப் பட்டிருக்கை." "அல் என்று ராத்திரி. அத்தால் இருட்சியை நினைக்கிறது." "ஓதி என்று மயிர்முடி" என்பது சிறப்புரை.

அஞ்சு: "இருட்சி, சுருட்சி, நீட்சி, குளிர்ச்சி, அழகு என்று ஐந்து வகைப்பட்டிருக்கை." என்று, குறிப்பு ஒன்று அத்திருப் பெரிய ஆச்சான் பிள்ளை உரை என்னும் புத்தகத்தில் வியாக்கியானம் என்னும் பகுதியில் உள்ளது. அப்புத்தகத்தில் உள்ள அரும்பதவுரை என்னும் பகுதியில், "என்றைப்போல என்றது செறிவையும் மென்மையையும் ஸூசிப்பிக்கிறது. (க) செறிமென் கூந்தல் என்னக் கடவதிறே." "மாமயில் என்ற த்ருஷ்டாந்த பலத்தாலே நீட்சி ஸித்தமென்று திருவுள்ளம் பற்றி மற்றவற்றைப் பிரித்தருளிச் செய்தார்" என மற்றொரு குறிப்பும் உள்ளது. அவற்றின் சிறப்பையும் இறப்பையும் உய்த்துணர்க. அப்பொருள்கள் யாவும் போலிப் பொருள்களே எனத் தெளிக. மற்று,

இந்திருப்பாவிற்குத் திவ்யார்த்த தீபிகை உரை: "ஒரு குறைவுமில்லாதவனாய், (இந்த) லங்காபுரிக்கு அரசனாய், எங்களுக்குத் தலைவனாய் இருந்த இராவணனை நோக்கி, முன்பு எங்கள் கண்

ணெதிரிலே, அவனுக்குத் தம்பியான விபீஷ்ணுழ்வான், விநய முடன் கை கூப்பி நின்று, இப்பிராட்டி ராக்ஷஸ குலத்துக்கு விஷ மாகத் தோன்றியவள் கிடாய் என்று சொன்னுன். (அப்படிச் சொல்லியும் அப்பாவி பணிந்து வாழ மாட்டாமையாலே) தேவ ஜாதிகள் ஆசைப்பட்டிருந்தபடியே (நாங்கள்) அனர்த்தப்பட்டோம். பரிமளத்தை உடைத்தாய் விசாலமான சோலையில் வளர்ந்த சிறந்த மயில் போன்றவளும், (அஞ்சு அல் ஓதியை) சுருட்சி, நீட்சி, குளிர்ச்சி அழகு பரிமளம் என்று ஐந்து வகைப்பட்ட குணங்களை உடையதாய், ராத்திரிபோற் கறுத்திருக்கின்ற கூந்தலையுடையளு மான பிராட்டியை, கொண்டு போங்கள், அஞ்சினேம் தடம் போங்கத்தம் போங்கோ" என்பது பதவுரை.

"அஞ்சல் ஓதியை—ஓதி என்று கூந்தலுக்குப் பெயர்." "ஐந்து" என்பது "அஞ்சு" என மருவிக்கிடக்கின்றது. "மிருது வாயிருத்தல், குளிர்ந்திருத்தல், நறுமணம் மிக்கிருத்தல், கறுத் திருத்தல், நீண்டிருத்தல்" என் உத்தம கேசலக்ஷணம் ஐவகைப் பட்டதாகும். "அல்" என்பது இரவுக்குப் பெயராகி இருளைக் குறிக்கின்றது. இருண்ட கூந்தல் என்றபடி. ஐவகை லக்ஷ ணங்களில் கறுத்திருத்தல் என்பது சேர்ந்தே இருத்தலால் 'அல்' என்றது புனருக்தியாகுமே என்னில், ஐவகையில் கறுத்திருத் தல் என்பதை நீக்கி அடர்ந்திருத்தலைக் கூட்டிக்கொள்க" என்பது சிறப்புரை.

இப்பொருள்களும் போலிப் பொருள்களே, கவிக்கருத் துக்களல்லன ஆதலால். 'மற்று எவன் கவிக்கருத்து?' எனின், இத்திருப்பாவில் அமைந்துள்ள "அஞ்சலோதி" என்ற தொடர், "அஞ்சிலோதி" என இருத்தற்பாலது. திவ்யப் பிரபந்தத்தைப் பண்டு ஏட்டில் எழுதியவர் அத்தொடரில் அமைந்துள்ள மகளிர்தம் கூந்தலின் விகற்பப் பெயராகிய "ஓதி" என்னும் பெயரைச் சிறப்பித்து நின்ற "அஞ்சல்" என்னும் தொடரில் "ச"கரத்துக்கு, மேலே தூங்கல் கோடு (ി) வையாமல்—சகர மெய்க்குமேல் இகரக் குறி (ി) வையாமல்—விட்டனர் போலும்! "அஞ்சில் ஓதி" என எழுதாமல் "அஞ் சல் ஓதி" எனவே எழுதி விட்டனர் போலும்! அன்றித் திவ் யப் பிரபந்தத்தை முதல் முறை அச்சிட்ட காலத்தில் அச்சிட்ட வரால்—பிழையைத் திருத்தியவரால்—அறியப்படாமல் விடுபட் டிருத்தலும் கூடும் என்னல் ஆம். செந்தமிழ் மொழியைச்

செவ்விய முறைமையின் பயின்று செந்தமிழ் மொழியராய ஆசிரியன்மார் வகுத்துவைத்த செந்நெறியை அறியாமையால் திவ்யப் பிரபந்தத்தின் முன் உரைகாரர், அப்பிழையை விலக்கிச் "சகர" மெய்க்குமேலே. இகரக் குறியை வைத்து "அஞ்சிலோதி" எனத் திருத்திக்கொண்டு நேரிய பொருளை எழுதிவையாமல், "அஞ்சலோதி" என்ற பிழைபட்ட பாடத்தையே கொண்டு, அதற்கு (அஞ்சல்: "அஞ்சு" இருட்சி, சுருட்சி, நீட்சி, குளிர்ச்சி, அழகு) என ஐந்து வகைப்பட்டிருக்கை" என்று ஐந்துவகைப் போலிப் பொருள்களைப் பொருந்திய பொருள்கள் என எழுதிவைத்தனர். அன்றி, "அல் என்றது இராத்திரி. அத்தால் இருட்சியை நினைக்கிறது." என மற்றும் ஒரு கருமைப் பொருளைச் சுட்டிய (இருட்டெனப்) பொருத்த மற்ற பொருளையும் எழுதிவைத்தனர். திவ்யப் பிரபந்தத்தின் முன் உரைகாரர் எழுதிவைத்த பொருளையும் திவ்யார்த்த தீபிகை உரைகாரர் எழுதிவைத்த பொருளையும், மறவாதீர். என்னை? அப்பொருள்கள்: அவ்வுரைகாரர்கள் ஒருவரை ஒருவர் மறுத்துக்கொண்ட செயலை விளக்குதலை அறிதற்கு.

திவ்யார்த்த தீபிகை உரைகாரர் "எம் முன் ஆசிரியர் கொண்ட பாடத்தை அன்றிப் பொருளை அன்றி ஒருரேகா மாத்திரமும் வேறு பாடத்தை–வேறு பொருளைத்-திவ்யப் பிரபந்தத்துள் யான்–கொள்ளேன்–கொண்டிலேன்" எனக் கூறிக் கொள்கிறார், தம் நூற்களிடையே எழுதிவைக்கின்றார். அவர் கூறிக்கொண்டபடி–எழுதிவைத்தபடி-நடப்பவர் அல்லர் என்பதனை விளக்குதற்கே இக்குறிப்பை இவண் எழுதிவைத்தேன். என்னை?

திவ்யப் பிரபந்த திவ்யார்த்த தீபிகை உரைகாரர், தம்மால் எழுதப்பட்ட உரை நூலுள் (பெரிய திருமொழி. 10-2-4ல்) இத்திருப்பாவில் அமைந்துள்ள (பிழைபட்டதாகிய "அஞ்சலோதியை" என்ற பாடத்தையே கொண்டு அத்தொடரை "அஞ்சு–அல்–ஒதி" எனப் பிரித்து "அஞ்சு" என்பதற்கு "மிருதுவாக இருத்தல், குளிர்ந்திருத்தல், நறுமணம் மிக்கிருதல், கறுத்திருத்தல், நீண்டிருத்தல்' என ஐவகைப் பொருள்களை எழுதிவைத்தார். அவரால் எழுதப்பட்ட ஐவகைப் பொருள்களுள் உள்ள "நறுமணம், மிருது' என்னும் இரு வகைப் பொருள்களைக்கொண்டு தம் முன் ஆசிரியர் எழுதி

வைத்த ஐவகைப் பொருள்களுள் உள்ள "சுருட்சி, அழகு" என்னும் இருவகைப் பொருள்களையும் மறுத்தவர் ஆயினர். அன்றித் தம் குறிப்புரையுள் ("அல்" என்பது இரவுக்குப் பெயராகி இருளைக் குறிக்கின்றது-இருண்ட கூந்தல் என்றபடி. ஐவகை லக்ஷணங்களில் "கறுத்திருத்தல்" என்பது சேர்ந்து இருத்தலால் "அல்" என்றது "புனருக்தி" ஆகுமே என்னில், ஐவகையில் "கறுத்திருத்தல்" என்பதனை நீக்கி "அடர்ந்திருத்தல்" என்பதனைக் கூட்டிக்கொள்க) எனவும் எழுதிவைத்தார். அக்குறிப்புரையை எழுதிவைத்ததனால் அவர், தமக்கு முன் உரை எழுதிய ஆசிரியரைப் "புனருக்தியை" அறியாதவர் எனப் பழித்தவர் ஆயினர் அன்றோ? ஆம். அவர் தமக்கு முன் உரை எழுதிய ஆசிரியரைமறுத்தவரே—பழித்தவரே—ஆவர். அதனை அவர் அறிந்திலர்போலும்! மற்று, "அஞ்சில் ஓதி" என்ற தொடரில் அமைந்துள்ள "ஓதி" என்பதற்குக் "கூந்தல்" என்னும் பொருளைத் திவ்யார்த்த தீபிகை உரைகாரர் எழுதி வைத்தபடியால் அவர், தமக்கு முன் உரை எழுதிய ஆசிரியர் "ஓதி" என்பதற்கு "முடி" என எழுதிவைத்த பொருளை மறுத்தவர் அல்லரோ? ஆம். மறுத்தவரே ஆவர். இவண் கூறப்பட்ட குறிப்புக்களை மறவாதவராய்த் திவ்யப் பிரபந்தத்தின் முன் உரைகளையும், திவ்யார்த்த தீபிகை உரையையும் மற்றுமொரு முறை பார்த்துத் திவ்யார்த்த தீபிகை உரைகாரர் தமக்கு முன் உரை எழுதிய ஆசிரியர் கருத்தை மறுத்துள்ள செயலைத் தேர்ந்து தெளிக.

"அஞ்சல் ஓதி" என்பதற்கு அவ்வுரைகாரர்களால் எழுதிவைக்கப்பட்ட ஐவகைப் பொருள்களுள் சில போலிப்பொருள்களே; கவிக்கருத்து அல்லன. ஆதலால், அவ்வுரைகாரர்களால் எழுதப்பட்ட அப்பொருள்கள் புறக்கணித்தற்பாலன.

முன் உரைகாரராலும் திவ்யார்த்த தீபிகை உரைகாரராலும் எழுதிவைக்கப்பட்ட போலிப் பொருள்களுள் சில:—

திவ்யப் பிரபந்தத்தின் முன் உரைகாரரும் திவ்யார்த்த தீபிகை உரைகாரரும "அஞ்சல் ஓதி" என்ற தொடரில் அமைந்துள்ள "அஞ்சு" என்னும் மொழிக்கு எழுதிவைத்த ஐந்து வகைப் பொருள்களுள்ளே "இருட்சி—கறுத்திருத்தல்" என ஒரு பொருள் உள்ளது என்பதனை நினையாதவராய் "அல்" என்பதனைப் பிரித்து அதற்கு மற்றும் ஒரு "இருள்" என்னும்

பொருளைக் கூறிவைத்தனர். அப்படிக்கூறின், கூறியது கூறல் என்னும் குற்றம் ஆகும் என்பதனை அவ்வுரைகாரர்கள் மறந்தனர் போலும்! கூறியது கூறல் என்னும் குற்றம் ஆதலால், அவ்வுரைகாரர்கள் உரைத்து வைத்த பொருள் போலிப் பொருள் ஆயிற்று என்க.

"அல்" என்பதனை இவண் ஓதிக்குக்-கூந்தலுக்குப்-பெயர் மாத்திரை அடை-இயற்கை அடை என்னலாம். இக்குறிப்பை யும் அவ்வுரைகாரர்கள் உணர்ந்திலர்கள் என்பதனை நினைக்க.

அவ்வுரைகாரர்கள் எழுதிவைத்த "சுருட்சி" என்பது கூந்தலுக்கு அழகைத்தாராது. கூந்தலின் அழகை அழிக்கும். அது உடலுறுப்பு (ஸாமுத்திரிகா லக்ஷண) நூலாராலும் ஒதுக் கப்பட்டது. ஆதலால், அப்பொருளும் போலிப்பொருளே. பண்டைய நூற்களுள் "சுரிகுழல்" எனச் சொல்லப்பட்டதால் எனின், அது, கூந்தல் வளர்ந்து நீண்டதால் அதன் கடையில் குவிந்து வளைந்துள்ள குழற்சியை-வளைவாகிய சுருக்கத்தைச் சுட்டியது என்க.

அவ்வுரைகாரர்கள் எழுதிவைத்த "குளிர்ச்சி" என்பது கூந்தற்கண் பொருந்திய ஐவகைப்பட்ட இயற்கைப்பண்பு களுள் ஒன்று அன்று. ஆதலால், அப்பொருளும் போலிப் பொருளே என்க.

அவ்வுரைகாரர்கள் எழுதிவைத்த "நறுமணம்" என் பதும் கூந்தற்கண் பொருந்திய ஐவகைப்பட்ட இயற்கைப் பண்புகளுள் ஒன்று அன்று. ஆதலால், அப்பொருளும் போலிப்பொருளே என்க.

அவ்வுரைகாரர்கள் எழுதிவைத்த "அழகு" என்னும் பொருள், எப்பொருளையும் சாராமல் தனித்து நிற்பதொரு பொருள் அன்று. ஆதலால், அப்பொருளும் போலிப்பொருளே. ஒரு பொருள் தனது இயற்கைத் தன்மையில் ஏற்றமும் இழிவும் இன்றி நிற்கும் நிலைமையேதான் அழகு என்னும் பண் பாகும். ஆதலால், "அழகு" என்னும் பொருளைத் தனிமை யாகக்கோடல் கோட்டம் உடைய கொள்கையேயாம் என்க.

திவ்யப் பிரபந்தத்தின் உரைகாரர்கள் இக்குற்றங்களைப் புணர்த்திப் பொருள் எழுதியதன் ஏது என்னை? அவர்கள் செந்தமிழ் மொழியைச் செவ்விதின் கற்றுச் செந்தமிழின் செந்நெறியை முற்றாக உணராமுன் அயல் மொழியாகிய வட

மொழியைக் கற்ற அறிவைக்கொண்டு செந்தமிழ்மொழி யாலாய நூலிற்கு உரை எழுதிய செயலேயாம் எனக்கொள்க.

"அஞ்சல் ஓதி" என்ற தொடரின் பொருள்தான் என்னே? அத்தொடர் பிழைபட்டது, அத்தொடர் பண்டைய நூற்களுள் பயிலாதது ஆதலால். அது புறக்கணித்தற்பாலதே.

"அஞ்சில் ஓதி" என்பதே நேரிய பாடம், அப்பாடம் பண்டைய நூற்களுள் பயின்றது ஆதலால். இவ்வேதுவினுல் இத்திருப்பாவில் (பெரியதிரு. 10-2-4-ல்) உள்ள "அஞ்சல் ஓதி" என்ற தொடர் "அஞ்சில் ஓதி" எனவே இருத்தற்பாலது எனத் துணிக. நேரிய பாடம் ஆகிய "அஞ்சில் ஓதி" என்னும் தொடரின் பொருள் அழகிய சிலவாகிய கூந்தல்-அழகிய நுண்மையாகிய கூந்தல்" என்பதே. அப்பொருளேயே தம் நூற்களுள் செந்தமிழ் மொழியராகிய பண்டைய பேராசிரியர்கள் எழுதி வைத்திருத்தலே நினேக்க. அப்பேராசிரியர்கள் எழுதிவைத்த அப்பொருள் முற்றிலும் பொருத்தம் உடைத்தே. ஆதலால், அப்பொருள் பொன்னேப் போற்றுதல் போலப் போற்றற் பாலதே. அப்பொருள் போற்றற்பாலதே ஆயினும், இத்திருப் பாவில் அமைந்துள்ள "அஞ்சில் ஓதி" என்ற தொடர்க்கு "அழகிய சிலவாகிய (மெல்லியவாகிய) மொழியை மொழியும்" பிராட்டியார் என (அன்மொழித் தொகைப்பெயராக) மற்றும் வேறு ஒரு வகைப் பொருளேக் கொள்ளலும் ஆம். சின்மை, மென்மைப் பொருட்டு. (திருக்கோவையார்-196,343.) ஓதி, மொழிப் பொருட்டு. ஓதி: சொல்பவள், சொல்லி. (திருக் கோவையார்-80, 104.)

"அஞ்சில் ஓதியை" என்னும் தொடரை அன்மொழித் தொகைப் பெயராகக்கொண்டு உரை ஆசிரியர் ஒருவர், தம் உரை நூலுள் தக்கதோர் இடத்தில் "அழகிய மெல்லிய மொழியை மொழியும் மகளே" எனப் பொருள் எழுதிவைத் திருந்தால் அப்பொருள் தள்ளற்பாலது ஒன்று அன்று. அப் பொருள் கொள்ளற்பாலதே. "ஓதி" என்பது மொழிதலே உடையாள்-மொழிபவள், ஓதுதலே உடையாள், ஓதுபவள் என்னும் பொருளேத் தருமோ எனின், தரும். என்னே? ஓது தல் என்னும் தொழிற்பெயரின் முதல் நிலேயாகய "ஓது" என்பது இகர விகுதியுடன்கூடி குறிப்பு வினேப்பெயராகியும் ஆகுபெய ராகியும் அடை அடுத்து அன்மொழித்தொகைப் பெயராகி

ஓதுபவளாகிய-மொழிபவளாகிய மகளைச் சுட்டும் என்பர் அறிஞர் ஆதலால்.

மற்று, கோள் சொல் சொல்பவனையும் கோள் சொல் சொல்பவளையும் சுட்டிக் 'கோள் சொல்லி வந்தான்; கோள் சொல்லி வந்தாள், கோள் சொல்லியைக் கண்டேன்' என அன்மொழித் தொகைப் பெயர் வழங்குதலை நினைக்க. மற்று,

"குழலின் நேர் மொழி கூறிய" (அப்பர்-கழிப்பாலை.)
"யாழின் மொழி அவள்" ( ,, ,, அதிக வீரட்.)
"தேமொழி அவரைச் சூழா" (காரைக்கால் அம்-புரா-42.)

எனத் திருச்சைவ சமயத்தவர்தம் திருமுறைத் தொடர்களில் அமைந்துள்ள குழலின் நேர்மொழி, யாழின் மொழி, தே மொழி என்ற தொடர்களில் அமைந்துள்ள "மொழி" என்பது மொழிபவளை-மொழிபவரைச் சுட்டி முறையே உவமைத் தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகைப் பெயர் களாகித் தேனின் இனிமை போலும் இனிமையைப் பயக்கும் மொழியை மொழிபவள்-மொழிபவர் என மகள் ஒருத்தியைச் சுட்டுதலையும் திரு உமாதேவியாரைச் சுட்டுதலையும், திருக்காரைக்கால் அம்மையாரைச் சுட்டுதலையும் அறிக. மேலே குறிப்பிடப்பட்ட யாழின் மொழி அவள், தேமொழி அவர் என்பன இருபெயர் ஒட்டுத்தொடர்கள். "குழலின் நேர் மொழி" என்பதன் பொருள்: குழலினின்று எழும் இனிய மெல்லிய பண்ணாகிய ஒலிபோலும் இனிய மெல்லிய ஒலியாலாய அழகிய மொழியை மொழிபவளாகிய மகள் என்பது. "யாழின் மொழி அவள்" என்ற தொடரின் பொருள்: யாழினின்று எழும் இனிய மெல்லிய பண்ணாகிய ஒலி போலும் இனிய மெல்லிய ஒலியாலாய பண்போலும் மொழியை மொழியும் மகளாகிய உமாதேவியார் என்பது. "தேமொழி அவர்" என்ற தொடரின் பொருள்: உண்பவர்க்கு உண்ணுங்கால் இனிமையைத் தரும் தேன்போலும் கேட்பார்க்குக் கேட்குங்கால் இன்பத்தைத் தரும்படி இனிய மெல்லிய ஒலியாலாய பண்போலும் மொழியை மொழியும் மகளாராகிய திருக்காரைக்கால் அம்மை யார் என்பது இவ்வேதுக்களால், அழகிய சிலவாகிய-மெல்லிய வாகிய-மொழியை மொழிபவளை-ஓதுபவளை "அஞ்சில் ஓதி" என்னலாம். (சின்மை, மென்மைப் பொருட்டு. (திருக்கோவை

யார்-196, 343) ஓதி, சொல்லி, சொல்பவள் பொருட்டு-(திருக்கோவையார் 80-104-)மற்று,

"அரும்பு கொங்கையார் அம்மெல் ஓதிபோல்
சுரும்பு வாழ்வதோர் சோலை வைகினர்" (ராமா-கைய. 22.)

இவ்விரு அடிகளின் பொருள் (மகளிர்தம்) அழகிய மெல்லிய கூந்தலைப்போலும் கரிய நிறத்தை உடைய வண்டுகள் வாழ்வதற்கு இடமான அரும்புகளின் தாதுக்கள் பொருந்திய சோலையுள் தங்கினர் என்பது. இஃது ஒரு வகைப் பொருள். இவ்வடிகட்கே, தாமரையின் மொட்டுக்களைப் போலும் முலைகளை உடையராய மகளிர்தம் அழகிய மெல்லிய சொற்களாய ஒலிகளைப்போலும் பறக்குங்கால் அழகிய மெல்லிய ஒலியாலாய (பண்களைப்போலும்) ஒலிகளை வழங்கும் வண்டுகள் வாழ்வதற்கு இடமான பூங்காவில் தங்கினர் என்பது மற்று ஒரு வகைப் பொருள். இப்பாவில் அமைந்துள்ள "அம் மெல் ஓதி" என்ற தொடர்க்குக் கூந்தல் எனவும், மொழி எனவும் இரு வகைப் பொருள்களும் பொருந்துதலை அறிக. உவமை சுட்டிய "சுரும்பு" எனும் பொருளின் நிறம் கூந்தலுக்கும், அது பறக்குங்கால் எழும் ஒலி மொழிக்கும் உவமை ஆதலை அறிக.

"சில் இயல் ஓதி கொங்கைத் திரள்மணிக் கனகச் செப்பில்
வல்லியும் அநங்கன் வில்லும் மான்மதச் சாந்தின் தீட்டிப்
பல்இயல் நெறியின் பார்க்கும் பரம்பொருள் என்னயார்க்கும்
இல்லை உண்டு என்ன நின்ற இடையினுக்கு இடுக்கண்
செய்தார்" (ராமா-கோலங்காண். 12)

இப்பாவில் அமைந்துள்ள "சில் இயல் ஓதி" என்ற. தொடர்க்குச் "சில வகைகளாக வகுத்து அலங்கரிக்கப் படுகின்ற கூந்தலை உடைய சானகி" எனப் பொருளை எழுதி வைத்தார் அதன் உரை ஆசிரியர் ஒருவர். அவ்வுரை ஆசிரியரே அப்பொருளைச் சிறப்பிப்பான் "சில்லியல் ஓதி" அன்மொழித் தொகை. முடி, கொண்டை, சுருள், குழல், பனிச்சை என இங்ஙனம் சிலபகுப்புகளாகக் கூந்தல் அலங்கரிக்கப்படுதலால் "சில்லியலோதி" எனப்பட்டது" எனக் குறிப்புரையும் எழுதிவைத்தார்.

அவர்தம்மால் எழுதப்பட்ட ஐவகை முடிகளையும் மாதர் ஒருவர் தம் தலையில் ஒரே காலத்தில் முடித்துக் கொள்ளல் வழக்கு இல்லை என்பதனை மறந்தனர் போலும்! இச் "சில்

இயல் ஓதி'' என்னும் தொடரின் பொருள் திருப் பிராட்டியார் ஒருவரையே சார்ந்து நிற்றலை நினைக்க. இவ்வேதுவினுல் அவ்வுரைகாரர் உரைத்து வைத்த பொருள் பொருத்தம் அற்றது ஆயிற்று என்பதனை அறிக. மற்று என்னை? அச் "சில் இயல் ஓதி" என்னும் தொடரின் பொருள்: "சில், மென்மை. இயல், பண்பு. ஓதி, கூந்தல். "மெல்லிய பண்பினை உடைய கூந்தலை உடையாராகிய திருப்பிராட்டியார்" என்பது. சில் என்பது மகளிர்தம் கூந்தலின் ஐவகை இயற்கைப் பண்புகளுள் (மென்மைப் பண்பாகிய) ஒன்று. சின்மை, மென்மைப் பொருட்டு, (திருக்கோவை. 196, 343) இப்பாவை அருளிய ஆசிரியரே மகளிர்தம் கூந்தலின் ஐவகை இயற்கைப் பண்புகளுள் ஒன்ருகிய "அறல்" என்னும் பண்பைச்சுட்டி (ராமா.—எழுச்சி. 610.) "அறல் இயல் கூந்தல்" எனக் கூறி இருத்தலை நினைக்க. கூறினர் ஆயினும், இஃது ஒரு வகைப் பொருளே. அச் "சில் இயல் ஓதி" என்னுந் தொடருக்கு மற்றும் ஒருவகைப் பொருளைக் கொள்ளலாம். என்னை? (சில்,மென்மை. இயல், பண்பு. ஓதி, சொல்வி, மொழிதலை உடைய மகள். "மெல்லிய ஒலியாலாய மொழியை மொழியும் பண்பினராகிய திருப் பிராட்டியார்" எனவும் பொருள் கொள்ளலாம். என்னை?

இப்பாவில் "ஓதி" என்பதற்குக் கூந்தல், மொழிபவள் ஆகிய இவ்விருவகைப் பொருள்களும் பொருந் துதலை அறிக. அச் "சில் இயல் ஓதி" என்னுந் தொடர், கூந்தல் அல்லது மொழிபவளை மட்டும் விளக்கும்படி இனம் சுட்டிய அடை மொழியை—அடை மொழித் தொடரைச்-சாராமலும், உவமை சுட்டிய சொற்களைத்-தொடர்களைச்-சாராமலும் தனித்து நிற்றலால். மற்று,

"ஐம்பால் ஓதியை ஆகத்து இருத்தினை". (பெரியதிரு. எழுகூற்)

என்ற இத்தொடரில் அமைந்த ஓதி என்பதற்குக் (கூந்தல் என) ஐந்துவகைப்பட்ட இயற்கைப் பண்புகளை உடைய கூந்தல் எனப் பொருள் கொள்ளலாம். (இஃது ஒருவகைப் பொருள்.) ஆயினும், பருகுபவர்க்குப் பருகுங்கால் இனிமையைத்தரும் இயல்பினது ஆகிய அழகிய வெள்ளிய பாலினது இனிமை போலும் கேட்பார்க்குக் கேட்குங்கால் இனிமையைத்தரும் இயல்பினது ஆகிய இனிய மொழியை மொழிபவராகிய-ஓதுபவராகிய (திருமகளாராகிய) பிராட்டியாரை நின் திரு மார்பில்

வைத்தனே என மற்றொரு வகைப் பொருளும் கொள்ளலாம். இவ்வேதுவினால், ஓதி என்னும் பெயர்க்கு மொழிபவள் என்னும் பொருள் சுட்டிய அன்மொழித் தொகைப் பெயர் கோடலும் ஆம் என்பதனை அறிக. (ஐம்பால் ஓதியை) என்னும் இத்தொடரும், ஓதி என்னும் ஒரு பெயரைக் கொண்டு கூந்தலும் மொழிபவளும் ஆகிய இரு வகைப் பொருள்களையும் கொள்ள இடனாகி இருத்தலை அறிக. அன்றியும்,

"வெஞ்சிலையின் வேட்டர் வெள்ளம் அப்புமாரி தூவலின்
எஞ்சலின்றி நம்படை இருமுறை உடைந்தபின்
மஞ்சு சூழ் கணைமழை பொழிந்து மாநிரை பெயர்த்து
அஞ்சிலோதியர் புனைந்த செஞ்சொல் மாலை சூடினான்"
(சீவகசிந். 691)

இப்பாவில், ஈற்றடியில் அமைந்துள்ள "அஞ்சிலோதியர்" என்பதற்கு அழகிய பலவாகிய—மெல்லியவாகிய-கூந்தலார்-கூந்தலை உடைய மகளிர்-எனவும், அழகிய சிலவாகிய மெல்லியவாகிய மொழியார்-மொழிதலை உடைய மகளிர்-எனவும் இருவகைப் பொருள்களும் பொருந்துதலை உய்த்துணர்க. பொருந்துகின்றன ஆயினும், "செஞ்சொல்மாலை சூடினான்" என்ற சிறப்பிற்கு ஏற்ப "ஓதியார், மொழியார்" என அழகிய சிலவாகிய-மெல்லியவாகிய-மொழியை மொழிபவர் ஆகிய மகளிர் எனப் பொருள் கோடலே பொற்பாம் என்பதனை உய்த்துணர்க. அன்றியும்,

"வல்லோர் புனைமாளிகை வார்பொழிலோடு
எல்லாமுள வாயினும் என்மனமோ
சொல்லார் அமுதின் சுவையோடு இனிதாம்
*மேல்லோதியர்தாம் விளையாடிடமே" (ராமா. கடிமணம். 18)

இப்பாவில் அமைந்துள்ள *மேல்லோதியர் என்ற தொடரை "எல் ஓதியர்" எனப் பிரித்து ஒளியை உடைய கூந்தலார்" எனப் பொருள் எழுதிவைத்தார் உரை ஆசிரியர் பலர். அப்பொருள் கவிக்கருத்து அன்று. அத்தொடர்க்குக் கவிக் கருத்து: மெல்லிதாக மொழிபவர்-ஓதுபவர் என்பதே. என்னே? பருகுங்கால் இனிய சுவையைப் பயத்தலால்-பருகினார்க்கு நன்னலம் பயத்தலால்-புகழ்ந்து சொல்லப்படுகின்ற பாலின் இனிய சுவை போலும், புகழ்தற்கு ஏதுவான இனிதாகிய இன்பத்

தைக் கேட்குங்கால் பயக்கின்ற "மெல்லிய ஒலியாலாய மொழியை மொழிபவர்—ஓதுபவர்" எனப் பொருள் கொண்டு உபமேயத்திற்கு உரிய சிறப்பை உவமைச் சுட்டால் அறிக. இப்பாவில் அமைந்துள்ள ஓதி என்பது இவண் மொழிபவராகிய ஒருவகைப் பொருளைத்தான் சுட்டி நிற்கின்றது என்பதனை அறிக. என்னை? உவமைச் சுட்டை நோக்கித் தெளிக. மற்று "எல் ஓதியர்" எனப் பிரித்தவர், "அமுதின் சுவையோடு இனிதாம் சொல்லார்" என மொழி மாற்றி வைத்திருப்பின் சிறிது பொருத்தமாக இருக்கும். இப்பொருத்தத்தை அறியவும் மறந்தனர் அவ்வுரைகாரர். மற்றும்,

"கடலமிர்தின் தெளிவன்னதோர் மொழியாள்" எனவும்
(ராமா. கங்கை. 2)
"அமிர்தின் அன்ன அஞ்சில் கிளவி" எனவும்,
(உதயண. 1-48-35)
"அமுதமென் சொல் கன்னி" எனவும் (சம்ப. புரா. 311)
மொழிந்து வைத்த செந்தமிழ் ஆசிரியர்தம் செவ்விய கருத்துக்களையும் இவண் நினைக்க.

இவ்வேதுக்களால், ஓதி என்னும் மொழி-ஓதி என்னும் மொழியை உடைய தொடர் (ஐம்பால் ஓதி, அஞ்சில் ஓதி, சில் இயல் ஓதி என்பன) ஒருவகை உவமையைச் சுட்டுகின்ற தொடர்களோடு-சாராமல் தனித்து நிற்குமாயின் அம்மொழிக்கு-அத்தொடர்க்குக் கூந்தலும் மொழிபவரும் ஆகிய இருவகைப் பொருள்களையும் கொள்ளலாம். அவ்வோதி என்னும் மொழி அல்லது அதனை உடைய தொடர், யாதேனும் ஒரு வகை உவமையைச் சுட்டுகின்ற தொடர்களைச் சார்ந்து நிற்குமாயின், 'அமுதின் சுவையோடு இனிதாம் மெல்ஓதியர்' (ராமா-கடிமணப்-18) 'சில் அல்ஓதியை-'(ராமா-பிலம் நீங்கு-5) என்பனபோல நிற்குமாயின், அவ்வுமைச்சுட்டுக்கட்கு ஏற்ப மொழிபவர் அல்லது கூந்தல் ஆகிய ஒருவகைப் பொருளையே கொள்ளவேண்டும் என்பது நினைவில் இருத்தற்பாலது.

இவ்வேதுக்களால் அமுதைச் சிறுவர்தம் மழலை மொழிக்கு உவமிப்பதோடு மகளிர்தம் மழலை மொழிக்கும் உவமித்துரைத்தல் வழக்கே. மகளிரது கூந்தலுக்கு அமுதை உவமித்து உரைத்தல் வழக்கின்று. ஆதலால், "மெல் ஓதியர்" என்பதனை (ராமா-கடிமண-18.) "எல் ஓதியர்" எனப்பிரித்து

ஓதியைக் கூந்தல் என்பார் கூற்றுப் போலிக்கூற்று ஆயிற்று என்பதனை அறிக. என்னை? உவமைச்சுட்டை நோக்கித் தெளிக. மேலேகுறிப்பிடப்பட்ட தொடர்கள் போன்ற பலவகைப் பொருள்களைச் சுட்டும் மொழிகள்—தொடர்கள்—ஆளப்பட்ட இடங்களில் அவைகளின் பொருளை ஆய்ந்து அறிந்து தெளிந்து அவ்விடத்துக்கு ஏற்றதாகிய ஒரு வகைப் பொருளை உரைத்தல் தான் புலமைக்குப்பொற்பாம் என்பர் அறிஞர்.

"மலையும் பெண்பால் மயிரும் பூசையும்
ஓதினவன் பெயரும் ஓதி என்று உரைப்பர்" (பிங்க-32-52.)

என்றதனால், ஓதினவன் பெயர், ஓதிஎன்று ஆகுமாயின், ஓதின வள் பெயரும் ஓதி என்று ஆகும் என்பதில் ஐயம் என்னை? இழுக்கு என்னை? ஐயமின்றி ஓதினவளை-ஓதுபவளை-ஓதி என்னலாம் என்க. இப்பிங்கலப்பாவில் உள்ள 'ஓதினவன்' என்பது 'ஓதினவர்' என இருத்தற்பாலது, இருபாலாரையும் கோடற் பொருட்டு.

"மாயோள் கூந்தல் குரலு நல்ல
கூந்தலில் வேய்ந்த மலரும் நல்ல
மலரேர் உண்கணும் நல்ல
பலர்புகழ் 'ஓதியும்' நனிநல் லவ்வே"
(யாப்-கலம்-சூத் 20 உரை-மேற்கோள்)

இப்பாவில் ஓதி என்னும் பெயர், மொழி-கல்வி-என்னும் பொருள் ஒன்றனையே சுட்டுதலை நினைக்க.-என்னை? "கூந்தல் குரலும் நல்ல" என்று கூந்தல் விதந்து கூறப்பட்டதால் ஓதி என்பது மொழியையே-கல்வியையே-சுட்டிற்று என்க.

"மாமணிச் சிவிகைதன்னின் மடநடை மயிலன்னுரைத்
தாமரைத் தவிசின் வைகும் தனித்திரு வென்ன ஏற்றிக்
*காமரு கழனி வீழ்த்துக் காதல்செய் சுற்றத்தாரும்
தேமொழியவருந் சூழச் சேணிடைக் கழிந்து சென்றார்"
(திருக்காரைக்-புரா-42.)

---

* "காமரு கழனி வீழ்த்து" பிழை. அது "காமரு எழினி சூழ்த்து" என இருத்தற்பாலது. நிகண்டுகளில் "கழனி-திரை" என்று உள்ளது எனின் இந் நூலைப் பார்த்தே இப்பிழையைக் களையமாட்டாமையால் நிகண்டுகாரர்கள் தவருக எழுதிவிட்டார்கள் போலும்! வேறு பண்டைய நூற்களுள் "திரை" என்பதற்குக் "கழனி" என்னும் பெயா இல்லாமையே சான்றும். சூழ்த்து: சூழவிட்டு.

இப்பாவில் அமைந்துள்ள "தேமொழி அவரும் சூழ" என்ற அத்தொடருக்குத் "தோழியர் முதலிய பெண்களும் சூழ்ந்து" எனப்பொருள் எழுதப்பட்டதால் எனின், (பெரிய புராணம் தொகுப்புரை நூல், கோவைப் பதிப்பு) அத் தொடர்க்கு அப்பொருள் எழுதினவர் அப்பாவில் செறிந்துள்ள பிழையையும், செந்தமிழ்க்கவி மரபையும் ஆய்ந்து அறிய மறந்தனர் போலும் என்க. என்னே! அப் பாவில் "தேமொழி அவரும்சூழ" என்ற தொடர் "தேமொழி அவரைச் சூழ" எனவே இருத்தற்பாலது. என்னே? "தேமொழி அவரை, திருக்காரைக்கால் அம்மையார் ஆகிய அவரை; 'இத்தொடர் இருபெயர் ஒட்டுத்தொடர், அன்றி "தேமொழி அவரும் சூழ" என்ற தொடரின் உம்மையை அசை நிலையாகத்தள்ளி அத்தொடரை வேற்றுமைத் தொகைத் தொடராகவும் கொள்ளலாம். அப்படிக்கொள்ளினும் இரு பெயர் ஒட்டுத் தொடரே என்க. எழுத்து வற்றிநிற்கும் இடத் தில்தான் தொகை என்னல் வழக்கு. சூழ: செயவென் எச் சம், செய்தென் எச்சப்பொருட்டு என்பதனை நினைக்க. காதல் செய் சுற்றத்தாரும், திரு அம்மையார் ஆகிய அவரைத்—தே மொழியார் ஆகிய அவரைச்—சூழ்ந்து உடன் சென்றார் என வினைமுடித்துப் பொருளின் பொற்பை அறிக. காதல் செய் சுற்றத்தார் என்பதில் திரு அம்மையாரின் தோழியரும் உள் ளிட்டாராவர் என்பதனையும் அறிக. சுற்றத்தார் என்னும் பன்மைச் சுட்டுக்கு இருபாலாரையும் கொள்க.

இவ்வேதுக்களால் "அஞ்சலோதி" என்னும் தொடர் (பெரிய திரு. 10-2-4) "அஞ்சிலோதி" எனவே இருத்தற்பாலது. அது, பண்டு ஏட்டில் எழுதியவரால் சகரத்துக்கு இகரக் குறி வைக்கப்படாமையால் பிழை பெற்றது என்பதனை அறிக. இது கிடக்க. மற்றும்,

"அஞ்சிலோதி" என்னும் தொடரை (பெரிய திரு-10-2-4.) அஞ்சு: ஐந்து வகை. இல்: இருப்பிடம். ஓதி: கூந்தல். (கள் இல் பாளை) என்றாற்போலக் கொள்க. அஞ்சு இல் ஓதி எனப் பிரித்து அத்தொடர்க்கு ஐந்துவகை இயற்கைப் பண்புகட்கும் இருப்பிட மான கூந்தல் எனவும் பொருள் கொள்ளலாம். கூந்தலின் ஐந்து வகை இயற்கைப் பண்புகள் எவை?

கருமை—1: கூந்தல், கரிய நிறமுடையதாய்க் கறுத்திருத்தல் ஒரு வகைப் பண்பு.

நெடுமை—2: கூந்தல் வளர்ந்து நீண்டு இருத்தல் ஒருவகைப் பண்பு.

மொய்ம்மை—3: கூந்தல், செறிந்திருத்தல்-அடர்ந்திருத்தல்-ஒரு வகைப் பண்பு.

மென்மை—4: கூந்தல், நுண்ணியதாய் மெத்தென இருத்தல் ஒரு வகைப் பண்பு.

அறன்மை—5: கூந்தல் வெள்ளம் வற்றிய ஆற்றில் மணலின் செறிவு படிப்படியாய்ப் படிந்து இருத்தல் போலப் படிப்படியாய்ப் படிந்து இருத்தல் ஒரு வகைப் பண்பு. இவ்வைவகைப் பண்புகளே கூந்தலின் இயற்கைப் பண்புகளாம் எனத் தெளிக.

(இப்பொருள், யான், பன்னாள் ஆய்ந்து கொண்ட-தெளிந்த பொருள். இவ்வைவகைப் பொருள்களைப் பலநூற்றாண்டுகட்குப் பின்னர் இன்றுவரை எவரும் முற்றாகக் கொண்டிலர் என்பது நினைத்தற்பாலது.)

இவ்வைவகைப் பண்புகளையும் மாதர் ஒருவரது கூந்தலிலும் காணலாம். இவைகளை மாதர் ஒருவரதுகூந்தலின்கண் ஒரே காலத்திலும் காணலாம். இக்காட்சி மனத்திற்கு மகிழ்ச்சியை மன்னுவிக்கும். "அஞ்சிலோதி" என்பதற்குப் பிறரால்-நிகண்டுகாரரால்—சொல்லப்பட்ட "கொண்டை, குழல், பனிச்சை, முடி, சுருள்" என்பன இயற்கைப் பண்புப் பொருள்கள் அல்ல. அவை செயற்கையால் ஆவன. அவற்றை மாதர்ஒருவர் ஒரே காலத்தில் முடித்துக் கொள்ளும் வழக்கில்லை. என்பது நினைவில் இருத்தற்பாலது. அன்றியும், குழல் என்பது மயிரின்-கூந்தலின்-பெயரே அல்லாமல், ஒருவகை முடியின் பெயர் அன்று என்பதும் நினைவில் இருத்தற்பாலது. திவ்யப் பிரபந்தத்தின் உரைகாரரால் உரைக்கப்பட்ட ஐவகைப் பொருள்களும் பொருத்தம் அற்றன என முன்னரே விளக்கப்பட்டதை நினைக்க.

ஒவ்வொரு வகை முடியை ஒவ்வொரு காலத்தில்தான்-வெவ்வேறு காலத்தில்தான்-மாதர், தம்தலையின் மயிரால் முடித்தல் வழக்கு. ஆதலால், "ஐம்பால் ஓதி" என மாதர் ஒருவரைச்

சுட்டிச் சொல்லிய இடங்களில் செயற்கையால் ஆவன வாகிய அவ்வைவகை முடிகளும், பொருத்தம் அற்றனவா தலே அறிக. அவ்'வஞ்சில் ஓதி' என்னும் தொடர்க்குக் கருமை, நெடுமை, மோய்ம்மை, மென்மை, அறன்மை ஆகிய இவ்வை வகை ஆகிய இயற்கைப் பண்புகளாகிய பொருள்களைக் கொள் ளாமல் "கொண்டை, குழல், பனிச்சை, முடி, சுருள்" என நிகண்டு களிலும் அகராதிகளிலும் எழுதப்பட்ட செயற்கையாலாய ஐவகை முடிகளையும் பொருள்களாகக் கொள்வர். மேலே சொல் லப்பட்ட ஏதுக்களை மறந்தார் சிலர். அவை போலிப் பொருள்களாம் எனப் புறக்கணித்தற்பாலவாம். என்னை? ஐங்கூந்தல், ஐம்பால், ஐம்பால் ஓதி, ஐஞ்சில் ஓதி, அஞ்சில் ஓதி என மாதர் ஒருவரையேசுட்டிச் சொல்லுங்கால் அம்முடிகளா கிய பொருள்கள் பொருந்தாப்பொருள்களாம் ஆதலால். என்னை!

ஒரு மாதர், ஒரே காலத்தில் ஐவகை முடிகளையும் முடித் துக்கோடல் வழக்கில்லை. ஒவ்வொரு மாதர் ஒவ்வொரு காலத் தில் ஒவ்வொரு வகை முடியையே முடித்துக்கோடல்தான் வழக்கு. ஒரு மாதர் தலையில் ஒரே காலத்தில் ஐவகை முடி களும் காணப்படின், அக்காட்சி தாழ்ச்சியாகவே தோன்றும் என்பதனை நினைக்க. மற்றும் அவரால் சொல்லப்பட்ட முடிகள் ஐந்தனுள் குழல் என்பது முடித்தல் பொருளன்று. அது மயிரின் பெயர். ஆதலால், ஐவகைப் பொருள்களை முற் றுகச் சொல்வினர் அல்லர் என்பதும் நினைத்தற்பாலது.

"பண்டைய செந்தமிழ்ப் பேராசிரியர்கள், முன்னர்க் கூறப்பட்ட "கருமை, நெடுமை, மொய்ம்மை, மென்மை, அறன்மை" ஆகிய ஐவகை இயற்கைப் பண்புகளையே "ஐங் கூந்தல், ஐம்பால், ஐம்பால் ஓதி, ஐஞ்சில் ஓதி" என்பன வற் றுக்குப் பொருளாகக் கொண்டார்கள் என்பதற்கு ஏதுக்கள்-சான்றுகள்-உண்டோ?" எனின், உண்டு. அவை எவை?

### 1. கருமைப் பண்பு

| | |
|---|---|
| "கருங்குழல்" | (பெரியாழ். 1-6-7) |
| "கருங்குழலார்" | (ராமா-மீட்சி. 46) |
| "கனக் கருங்குழல்" | (வில்லி-சம்பவ. 9) |
| "அல்லார் கூந்தல்" | ( ,, சூது. 237) |
| "காரணி கூந்தல்" | (பரிபாடல், 11-124) |

"இருள்புரை கூந்தல்" (நற்றிணை. 270)
"இருண்ட கூந்தல்" ( ,, 284)
"மையிருங் கூந்தல்" (சிலப்பதி. 4-56)
"நாறு இருங்கூந்தல்" ( ,, 6-79)
"கருங்குழல்" (மணிமேகலை. 28-6)
"கருங்குழல்" (உதயண. 1-34-193)
"புயலேர் கூந்தல்" ( ,, 4-12-265)
"மைவிரி குழலினளை" (சீவகசிந். 488)
"சுருளார் கருங்குழல்" (திருக்கோ. 73)

இத்தொடர்கள் யாவும், கருமை ஆகிய ஒருவகைப் பண்பினையே சுட்டுதலை அறிக. இவை போன்றன கருமைப் பண்பைச் சுட்டும் தொடர்கள் பிறவும் பலவுள, அவற்றைப் பண்டைய நூற்களுள் ஆய்ந்து அறிக.

## 2. நெடுமைப் பண்பு

"வார் குழல் நன்மடவார்" (பெரியாழ். 1-5-5)
"நீண்ட கூந்தலாள்" (ராமா. மந்திர. 86)
"நன்னெடுங்கூந்தல்" ( ,, கிளைக. 85)
"நீண்ட கருங்குழல்" (வில்லி. கிரு. தூது. 41)
"மாமணியபுனை நெடுங்கூந்தல்" (நற்றிணை. 374)
"நன்னெடுங் கூந்தல்" (மணிமேகலை. 19-89)
"வார் குழல்" (சீவகசிந். 23-29)
"வார் குழல்" (திருக்கோவை. 38)
"நெடுங்கூந்தல்" (மதுரைக்காஞ்சி. 552)

இத்தொடர்கள் யாவும், நெடுமை ஆகிய ஒரு வகைப் பண்பினையே சுட்டுதலை அறிக. இவை போன்றன (நெடுமைப் பண்பைச் சுட்டும் தொடர்கள்) பிறவும் பலவுள. அவற்றைப் பண்டைய நூற்களை ஆய்ந்து அறிக.

## 3. மோய்ம்மைப் பண்பு

"மொய் குழல்" (பெரியாழ், 1-6-6)
"செறி கூந்தல்" ( ,, 3-6-3)
"மொய் குழல்" (ராமா. சடா. நீத்த. 3)
"துன்ற லோதியை" (ராமா. ஆறுசெல். 54)
"செறி குழல்" (ராமா. பொழிலி. 44)

"துதையளி செறிகுழல்" (வில்லி-குருகுல-72.)
"பொம்மல் ஓதி" (நற்றிணை-274.)
"மொய் குழல் மங்கை" (சிலப்ப. 29. தேவ.)
"நறும்பல் கூந்தல்" ( " " 10-39.)
"பொம்மலோதி" (உதயண. 1-55. 119.)
"மொய் குழலாள்" (சீவகசிந். 1307.)
"மொய் குழற்கே" (திருக்கோவை. 93.)

இத்தொடர்கள் யாவும், மொய்ம்மை ஆகிய ஒரு வகைப் பண்பினையே சுட்டுதலை அறிக. (மொய்ம்மைப் பண்பைச் சுட்டும் தொடர்கள்) இவைபோன்றன பிறவும் பலவுள. அவற்றைப் பண்டைய நூற்களை ஆய்ந்து அறிக.

## 4. மேன்மைப் பண்பு

"சுரும்பார் மென்குழல்" (பெரியாழ். 3-1-6.)
"தூமென் குழலியர்" (ராமா. அவதா. 48.)
"சில் இயல் ஓதி" ( " " கோலங்கா. 12.)
"கள் உயிர்க்கு மென் குழலியர்" ( " " பிணிவீட். 39.)
"புரி மென் கூந்தலார்" ( " எழுச்சி. 15.)
"நறு மலர் மென் கூந்தல்" (வில்லி-இந்திரப். 35.)
"அம்மென் கூந்தல்" (உதயண. 2-2-173.)
"நறு மென் கூந்தல்" (உதயண. 1-40-205.)
"சில்லென் கூந்தல்" ( " " 4-16-11.)
"பூமென் கூந்தல்" (சிலப்பதி. 6-8)
"மென்பூங்குழல்" (சீவகசிந். 2056.)
"மெல்லோதி" (திருக்கோவை. 310.)
"மென்கூந்தல்" (பதிற்றுப்ப. 5-19.)
"அம்மென் கூந்தல்" (சிறுபாண. 263.)
"ஒலி மென் கூந்தல்" (குறிஞ்சிப். 2.)
"நறு மென் கூந்தல்" (நெடுநல்வா. 152.)

இத்தொடர்கள் யாவும், மென்மையாகிய ஒருவகைப் பண்பினையே சுட்டுதலை அறிக. இவைபோன்றன (மென்மைப் பண்பைச் சுட்டும் தொடர்கள்) பிறவும் பலவுள. அவற்றைப் பண்டைய நூற்களை ஆய்ந்து அறிக.

## 5. அறன்மைப் பண்பு

"நெறித்த குழல்" (பெரியாழ். 2-6-3.)

"அறல் இயல் கூந்தல்" (ராமா. எழுச்சி. 61.)
"அறல் துன்னிய குழலாள்" ( ,, ,, கங்கைப். 2.)
"அறல் நறுங் கூந்தல்" ( ,, ,, பிலம் நீ. 9.)
"அறல் ஓதி" ( ,, ,, சூர்ப்ப. 34.)
"நெறிந்த குழல்" ( ,, ,, சூடாம. 4.)
"நெறிதரு பைங்குழல்" (வில்லி. காண்ட. 10.)
"நெறிபடு கூந்தல்" (நற்றிணை. 368.)
"குறு நெறிக் கூந்தல்" (சிலப்ப. 12-23.)
"அறற் கூந்தல்" ( ,, ,, 13-167.)
"நெறி மயிர்க் கூந்தல்" (உதயண. 1-42-146.)
"ஆற்றறல் அன்ன கூந்தல்" ( ,, ,, 4-11-64.)
"குறு நெறிந்...கூழைக் கூந்தல்" ( ,, ,, 1-46-221.)
"நெறிப் பல கூந்தல்" ( ,, ,, 2-12-119.)
"குறு நெறி பயின்ற கூந்தல்" (சீவகசிந். 1573.)
"அறல் இயல் கூழை" (திருக்கோவை 375.)
"குறு நெறிக் கொண்ட கூந்தல்" (பெரும்பாண. 163.)
"அறல் போலக் கூந்தல்" (பொருநரா. 25.)
"அறல் வாழ் கூந்தல்" (மலைபடுகடாம். 304.)
"அறல் போலக்கூந்தல்" (குறுந் தொகை. 286.)
"நெறிந்த குரல் கூந்தல்" (கலி-மருத. 28-22.)

இத்தொடர்கள் யாவும் அறன்மை ஆகிய ஒருவகைப் பண்பினையே சுட்டுதலை அறிக. இவைபோன்றன (அறன்மைப்பண்பைச் சுட்டும் தொடர்கள்) பிறவும் பலவுள. அவற்றைப் பண்டைய நூற்களை ஆய்ந்து அறிக.

இவ்வறன்மைப் பண்பிற்கு விகற்பப் பெயர்கள் "குறுநெறி, நெறிப் பல" (பல நெறி) என்பன இருத்தலால், சுருட்சி எனும் பெயர் அறன்மைப் பண்பைச் சுட்டாது என்பதனையும் அறிக.

மேலே காட்டப்பட்டபடி ஐவகைப் பண்புகளைச் சுட்டி ஒவ்வோரிடத்தில் ஒவ்வொரு பண்பினைச் சொல்லி வைத்தல் அல்லாமல், அவைகளை உறழ்ந்து-விகற்பித்து-ஒவ்வோரிடத்தில் இருவகைப் பண்புகளையும், ஒவ்வோரிடத்தில் மூவகைப் பண்புகளையும், ஒவ்வோரிடத்தில் நான்கு வகைப் பண்புகளையும், ஒவ்வோரிடத்தில் ஐவகைப் பண்புகளையும விதந்து சொல்லி வைத்தலும் பண்டைய செந்தமிழ்ப் பேராசிரியர்கள் வழக்கு.

ஒவ்வோரிடத்தில் அவ்வைவகைப் பண்புகளையும் இன்ன இன்ன பண்பு என விதந்து பிரித்துக்கூறாமல் தொகையாக ஐங்கூந்தல் (சிவகசிந். 2074;) (சிலப்பதி. 15-97) ஐம்பால், (சூளா-இரதநூ. 294) (ராமா-கார்கா. 72) (பெரியதிரு. 7-5-3) ஐம்பால் ஓதி, (பெரியதிரு-எழுகூற்று) ஐஞ்சில் ஓதி (சிலப்ப. 11-195). அஞ்சில் ஓதி (பெரியதிரு. 10-2-4) என இயம்பி வைத்தலும் பண்டைய செந்தமிழ்ப் பேராசிரியர்கள் வழக்கு. அவ் வழக்குகளை மேல் வருமாற்றால் அறிக.

ஒவ்வொரு பண்பினை விதந்து கூறப்பட்ட வழக்கிற்கு ஆட்சிச் சான்றுகள் முன்னர் ஐவகைப் பண்புகட்கும் தனித் தனியாகக் காட்டப்பட்ட பலவகைக் கட்டுக்களே சான்றுகளாம். ஆதலால்,

இரண்டு இரண்டு வகைப் பண்புகளைக் கூட்டி விதந்து கூறப்பட்ட வழக்கிற்கு ஆட்சிச் சான்றுகள் மேல்வருமாறு:—

| | |
|---|---|
| "செறிமென் கூந்தல்" | (பொய்யாழ். 1-1-4) |
| "நெறிந்த கருங்குழல்" | ( ,, ,, 3-10-1) |
| "நெறி மென் குழல்" | (நாச்சியார். 12-2) |
| "நெறியிருங் கூந்தல்" | (ராமா. நைலமா. 53) |
| "சில் அல் ஓதி" | (ராமா. பிலம்பி. 5) |
| "அஞ்சில் வார் குழலி" | (வில்லி. சம்பவ. 72) |
| "நீண்ட கருங் குழல்" | (வில்லி. கிரு. தூது. 41) |
| "கற்றை வார் குழல்" | (வில்லி. அர்-தீர்த். 62) |
| "நெறி இருங்குஞ்சி" | (சிலப்ப. 10-96) |
| "பல் விருங் கூந்தல்" | ( ,, ,, 2-65) |
| "தாழிருங் கூந்தல்" | ( ,, ,, 2-80) |
| "வாரொலி கூந்தல்" | ( ,, ,, 2-84) |
| "நெட்டிருங் கூந்தல்" | (உதயண. 2-6-172) |
| "தாழிருங் கூந்தல்" | ( ,, ,, 1-43-141) |
| "காரிருள் கூந்தல்" | ( ,, ,, 1-42-146) |
| "சில் விருங் கூந்தல்" | ( ,, ,, 1-56-146) |
| "நெறி இருங் கூந்தல்" | ( ,, ,, 3-21-79) |
| "தாழிருங் குழலி" | (சீவகசிந். 483) |
| "மணி அறைந்தன்ன வரி அறல் ஐம்பால்" | ( ,, ,, 335) |
| "நெட்டிருங் கூந்தல்" | ( ,, ,, 835) |
| "மொய்யிருங் கூந்தல்" | (மதுரைக்கா. 417) |

"மைந்நிற வார் குழல்" (திருக்கோவை. 69)
"தாழ் தரு மொய் குழலே" ( ,, ,, 314)
"வாரிருங் கூந்தல்" (பட்டினப்பா. 219)
"பல்லிருங் கூந்தல்" (நெடுநல்வா. 54)
"நெட்டிருங் கூந்தல்" (கலி. மருத. 93-35)

இத்தொடர்கள் ஒவ்வொன்றும் முன்னர்க் காட்டப்பட்ட "கருமை, நெடுமை, மொய்ம்மை, மென்மை, அறன்மை ஆகிய ஐவகைப் பண்புகளையே உறழ்ந்து-விகற்பித்து-வேறு வேறுகப் பலவகையாக-இவ்விரண்டு வகைப் பண்புகளைச் சுட்டுதலை அறிக. இவை போன்றன (இவ்விரண்டு வகைப் பண்புகளைச் சுட்டுந தொடர்கள்) பிறவும் பல உள. அவற்றைப் பண்டைய நூற்களை ஆய்ந்து அறிக.

மூன்று மூன்று வகைப் பண்புகளைச் சுட்டி விதந்து கூறப் பட்ட வழக்கிற்கு ஆட்சிச் சான்றுகள் மேல் வருமாறு:—

"தாழும் பெரிய கரிய குழல்" (வில்லி-சூது-220)
"வார் ஒலி மென் கூந்தல்" (சிலப்ப. 23-173)
"செறிவார் கருங்குழல்" (திருக்கோவை. 333)
"அறல் கடுக்குந் தாழ் இருங்கூந்தல்" (பதிற்றுப்ப. 743)
"மை உக்கு அன்ன மொய் இருங்கூந்தல்" (மதுரைக்கா. 418)

இத்தொடர்கள் ஒவ்வொன்றும் முன்னர்க் காட்டப்பட்ட "கருமை, நெடுமை, மொய்ம்மை, மென்மை, அறன்மை" ஆகிய ஐவகைப் பண்புகளையே உறழ்ந்து-விகற்பித்து-வேறு வேறுகப்-பலவகையாக-மும்மூன்று வகைப் பண்புகளைச் சுட்டுதலை அறிக. இவை போன (மும்மூன்று வகைப் பண்புகளைச் சுட்டும் தொடர்கள்) பிறவும் பல உள. அவற்றைப் பண்டைய நூற்களை ஆய்ந்து அறிக.

நான்கு நான்கு வகைப் பண்புகளைச் சுட்டி விதந்து கூறப் பட்ட வழக்கிற்கு ஆட்சிச் சான்றுகள் மேல் வருமாறு:—

"அவிர் 1. அறல் கடுக்கும் அம் 2 மென் 3. குவை
4. இருங் கூந்தல்" (புறநா-25-13)

"1 நெறிந்து கடைகுழன்று நெய்த்து 2 இருண்டு 3 நீண்டு
4 செறிந்து பெருமுருகு தேக்கி-நறுந்துணர்
வார்ந்து கொழுந்தெழுந்த வல்லியாய் மாந்தளிர்
சோர்ந்து மிசையசைந்த சோலையாய்ச்-சேர்ந்து

திருவிருந்த தாமரையாய்ச் சென்றடைந்த வண்டின்
பெருவிருந்து பேணுங் குழலாள்'' (விக்கிரம-உலா-238)

1 ''நெறித்துக் கடைகுழன்று நெய்த்து 2 இருண்டு 3 நீண்டு
4 செறிந்துப் பெருமுருகு தேக்கி... (ராஜராஜ-உலா-239)

[நெய்த்து; பூசப்பட்ட வாச நெய்யை உடைத்தாய் என்க.

''கூந்தல் நெய்யணி மறப்ப'' (சிலப்ப. 4-56)
''எண்ணெயும் நானமும் இவை மூழ்கி'' (சீவகசிந். 164)
''நெய்யார் கருங்குழல்'' ( ,, 295)
''நானஎண்ணெய் கதுப்புறைத்து
நாவிக் குழம்பு உறீஇ'' ( ,, 2632)
''நெய்கனிந்து இருண்ட ஐம்பால்'' ( ,, 1411)
''நானம் நீவி'' (கல்லாடம். 37-13)

இப்பாக்களின் கருத்துக்களால் கூந்தற்கு வாசநெய் அணியும் வழக்கு உண்டு என அறிக.]

''கொலைபின ருள்ளமும் குறைகொள 1இருண்டு
நானம் நீவி நாண்மலர் மிலைந்து
கூடி யுண்ணுங் குணத்தினர் கிளைபோல்
2 நீடிச் 3 செறிந்து, நெய்த்து உடல் 4 குளிர்ந்த
கருங்குழல் பெருமணம் போல'' (கல்லாடம்-37-13)

(இக்கல்லாடத்தின் தொடர்களில் அமைந்த ''குளிர்'' என்பதற்கு மென்மை என்பது பொருள். இவ்வாசிரியர், ''கூடியுண்ணும் குணத்தினர் கிளைபோல்'' என்று உவமையைச் சொல்லி வைத்தார் ஆதலால் அவர் ஒரே மாதர் தலையில் பொருந்திய கூந்தலில் ஒரே காலத்தில் நான்குவகைப் பண்புகளும் இருந்தன எனக்கூறி வைத்தார் எனத் தேறுக.

இத்தொடர்கள் ஒவ்வொன்றும், முன்னர்க் கூறப்பட்ட ''கருமை, நெடுமை, மொய்ம்மை, மென்மை, அறன்மை'' ஆகிய ஐவகைப் பண்புகளையே உறழ்ந்து-விகற்பித்து-வேறு வேறுகப்-பலவகையாக-நன்னான்கு வகைப்பண்புகளைச் சுட்டுதலை அறிக. இவை போன்றன (நன்னான்கு வகைப் பண்புகளைச் சுட்டும் தொடர்கள்) பிறவும் பல உள. அவற்றைப் பண்டைய நூற்களை ஆய்ந்து அறிக.

ஐந்தைந்து வகைப் பண்புகளைச் சுட்டி விதந்து கூறப்பட்ட வழக்கிற்கு ஆட்சிச் சான்றுகள் மேல் வருமாறு:—

"1 நீண்டு குழன்று 2 நோய் திரண்டு 3 நெறிந்து 4 செறிந்து
5 நெடுநீலம்
பூண்டுபுரிந்து சரிந்து கடைசுருண்டு புகையும் நறும்பூவும்
வேண்டுமல்ல வெனத் தெய்வ வெறியே கமழு நறுங்குஞ்சி
ஈண்டுசடை யாயினது என்றால் மழைஎன்றுரைத்தல்
இழிபன்றோ?" (ராமா. உருக்கா. 57)

[இப்பாவில் 'நெய்த்திருண்டு' என்பது முன் பாடம். அப்பாடம், பிழைப்பாடம். "நீலம் பூண்டு" என்ற தொடரில் கருமைப் பண்பு விதந்து விளம்பப்பட்டதால், "நெய்த் திருண்டு" என்பது "நொய்திரண்டு" என இருத்தலே சாலச் சிறப்பாம். என்னே? நொய், (நொய்ம்மை விகாரம்) மென்மை. திரண்டு: செறிந்து. இப்பொருளால் கூந்தலின் ஐவகைப் பண்பு களையும் எஞ்சாமல் விதந்து விளம்பியபடியாம். ஆதலால், ஆசிரியர் "நொய் திரண்டு" எனவே இயம்பி இருப்பர் என்பது என் நம்பிக்கை. ஆசிரியர், திரு இராமபிரானாரின் கூந்தலின்-குஞ்சியின்-சிறப்பினைச் செப்பிவைத்த இப்பாவில் கூந்தலின்—குஞ்சியின்-ஐவகைப் பண்புகளையும் எஞ்சாமல் அமைத்திருப்பர் என்பதில் ஐயம் என்னே?]

"பெருக 1 நீண்டு அளவும் குறுகிடாவாகிப்
பிளந்திடாக் கடையவாய்த் தழைத்து
கருவிவான் வண்டின் கணமெனக் 2 கறுத்துக்
கடைகுழன்று இயல்மணங் கான்று
புரையறச் 3 செறிந்து 4 நெறிந்து 5 மெல்லென்று
புந்திகண்கவர நெய் திரண்ட
மருமலர்க் குழலாள்தன்பதிக்கு இனிய மல்லல்
வான் செல்வம் உண்டாகும்" (திருவிளை. வேல்வளை. 30)

[இப்பாவில் "அறவும்" என்பது முன் பாடம். அப்பாடம் பிழைப்பாடம். "அளவும்" என்பதன் பொருள், உடலுறுப்பை விளக்கும் நூலுள்—சாமுத்திரிகா லக்ஷண நூலுள்—கூறப்பட்ட "அளவு குறையாமல்" என்பது. "நெய்ந் திருண்ட" என்பது முன் பாடம். அப்பாடம், பிழைப் பாடம். "கறுத்து" எனக் கருமைப் பண்பு முன்னரே—மேலே—விதந்து விளம்பப்பட்ட தால். "நெய் திரண்ட" என்பதன் பொருள்: நெய்யைத் தன் இடத்தில் பொருந்தப் பெற்ற என்பது. [நெய்: தேன் நெய்.]

அவ்வடை மலரை அடுத்திருத்தலால் அதனை மலருக்குச் சிறப்பாகக் கோடலே நேரிய செயலாம். 'நெய் திரண்டமலர்' என்க.

இப்பாக்களின் தொடர்கள்: கூந்தலின் ஐவகைப் பண்புகளையும் விதந்து சுட்டுதலை அறிக. இவை போன்றன ஐந்தைந்து வகைப் பண்புகளைச் சுட்டும் தொடர்கள் பிறவும் பல உள. அவற்றைப் பண்டைய நூற்களை ஆய்ந்து அறிக.

கூந்தலின் ஐவகைப் பண்புகள் இன்ன இன்ன என விதவாமல் தொகையாகக் கூறப்பட்ட வழக்கிற்கு ஆட்சிச் சான்றுகள் மேல் வருமாறு:—

"மணி ஐம்பால்" (சூளா-இரதநூ-294.)
"நீல நிறங்கொண்ட ஐம்பால்" (சீவக சிந்-2940.)
"மணி அறைந்தன்ன வரி அறல் ஐம்பால்" ( ,, 335.)
"புயலேங்கூந்தல்" ( ,, 2074.)
"புயலேய்கூந்தல்" (சிலப்பதி. 11-10-9.)
"நாறு ஐங்கூந்தல்" (சிலப்பதி-15-97.)
"வண்டுளர் ஐம்பால்" (உதயண-2-20-96.)
"ஆயிழையார் ஐம்பால்" (ராமா-கார்கா. 72.)
"அம்பராவும் கண்மடவார் ஐம்பால்" (பெரிய திரு 7-5-3.)
"ஐம்பால் ஓதியை" (பெரிய திரு-எழுகூற்று)
"ஐஞ்சில் ஓதி" (பெரிய திரு-10-2-4)
"அஞ்சில் ஓதியை" (சிலப்பதி. 11-195.)

என்பனவாகிய இவை. இவை போன்றன (கூந்தலின் பண்புகளை விதவாமல்-தொகையாகக்-கூறப்பட்ட தொடர்கள்) மற்றும் பல உள. அவற்றைப் பண்டைய நூற்களை ஆய்ந்து அறிக.

முன்னர்க் காட்டப்பட்ட "கருமை, நெடுமை, மொய்ம்மை, மென்மை, அறன்மை" ஆகிய ஐவகை இயற்கைப் பண்புகளே "அஞ்சிலோதி" என்னும் தொடர்க்குச் சான்றோரால் பொருள் எனக் கொள்ளப்பட்டன என்பதற்கு இவண் "நாறைங் கூந்தல்" "புயலேய் கூந்தல்" "வண்டு உளர் ஐம்பால்" "ஆயிழையார் ஐம்பால்" "மணி ஐம்பால்" "ஐம்பால் ஓதியை" "ஐஞ்சில் ஓதியை" என்று தொகைப் பொருள் சுட்டிய தொடர்களே சாலச் சான்றுகளாம் என்க.

இவ்வாய்வு உரையுள் கூறப்பட்ட ஏதுக்களால், திரு ஆழ்வார்கள் அருளிய திவ்யப் பிரபந்தத்தின் உரைகாரர், பிழை

பட்டதாகிய "அஞ்சலோதியை" (பெரியதிரு-10-24) என்பதற்கு உரைத்துவைத்த "இருட்சி, சுருட்சி, நீட்சி, குளிர்ச்சி, அழகு" எனவும் (முன் உரை-பழைய உரை) "ஐம்பால்" (பெரியதிரு-7-5-3.) என்பதற்குக் "கந்தம், மது, மார்த்தவம், ஸ்நிக்த்தை, இருட்சி" எனவும் (முன் உரை-பழைய உரை) "சுருண்டிருத்தல், நீண்டிருத்தல், அடர்ந்திருத்தல், கறுத்திருத்தல், நறுமணங் கொண்டிருத்தல்" எனவும், (திவ்யார்த்த தீபிகை உரை) "ஐம்பால் ஓதியை" (பெரியதிரு-எழுகூற்று) என்பதற்கு "மென்மை, குளிர்த்தி, நறுமணம், கருமை, நெடுமை" என்னும் ஐந்து குணங்கள் அமைந்த கூந்தலை உடையளானபிராட்டியை"எனவும் (திவ்யார்த்ததீபிகைஉரை) முன்உரைகாரரால் எழுதப்பட்டபொருள்கள் யாவும் போலிப் பொருள்களாயின என்பதனை உய்த்து உணர்க. திவ்யார்த்த தீபிகை உரைகாரர் தம்முடைய முன் ஆசிரியர் எழுதிவைத்த பொருளைத் தாம் உரைத்த பொருளால் மறுத்திருத்தலையும் அறிக. தம்முடைய முன் ஆசிரியர் எழுதிவைத்த பொருளை மறுத்து வேறு ஒரு பொருளை எழுதினவர், 'யான் என்னுடைய முன் ஆசிரியர் கொள்கையை மறுத்து அவரது கொள்கைக்கு மாறான பொருளைக் கொள்பவன் அல்லன்' எனக் கூறுதல் நேர்மை ஆகாது என்பதனை அறிந்திலர் போலும்!

திரு ஆழ்வார்கள் அருளிய திவ்யப் பிரபந்தத்தின் உரைகாரர் யாவரும் செந்தமிழைச் செவ்விய நெறியில் நின்று கற்று வல்லுநராய இருந்தமிழ்ப் புலவர் அல்லர் போலும்! அவர், இருந்தமிழ்ப் புலவராகி இருப்பின், "அஞ்சில் ஓதி" என்பதே (பெரியதிரு-10-2-4.) "அஞ்சல் ஓதி" எனப் பிழையுற்றது என்பதனை அறிந்து, அப்பிழையைக் களைந்து "அஞ்சில் ஓதி" என்னும் பாடத்தைக் கொண்டு முன்னர்க் காட்டப்பட்ட செந்தமிழ் மொழியைவல்லுநராய ஆசிரியன்மார் வழக்கிற்கு ஏற்ற செவ்வியபொருளை உரைத்திருப்பர். அன்றி, "அஞ்சல் ஓதி" எனப் பிழையுற்ற தொடரை 'அஞ்சு அல் ஓதி' எனப் பிரித்து அஞ்சு அல்: (அஞ்சுதல் அல்லாத, விரும்பத்தக்க) அழகிய. ஓதி: கூந்தல், கூந்தலை உடையாள் என்றாவது, ஓதி: மொழிபவள். விரும்பத்தக்க அழகிய-மெல்லிய-மொழியை மொழிபவள் என்றாவது, அஞ்சு அல்: (அஞ்சு, அஞ்சுவிக்கும். அல், இருட்டு-கருமை.) தன்னைக் கண்டாரை அஞ்சுவிக்கும் இருட்டுப்

போன்ற கரிய கூந்தல்—கூந்தலை உடையவள் என்ருவது புதிய தொரு வழியில் ஆயினும் பொருளை உரைத்திருப்பர். அத் தொடர்க்கு இம்மூவகைப் பொருள்களும் பொருந்தும். இப் பெற்றிய பொருள்களுள் ஒன்றனையும் உரைத்திலர் உரை காரர். ஆதலால், அவ்வுரைகாரர், இருந்தமிழ்ப் புலவர் அல்ல ராயினர் என்பதனை அறிக. செந்தமிழைச் செவ்விய நெறி யால் கற்றுப் புலமையைப் பெருமையால் புல்லியராய புராணி கர்கள், இருந்தமிழ்ப் புலவர்கள் ஆகிய திரு ஆழ்வார்கள் அமைத்து வைத்த பொருளை உள்ளபடி அறிய வல்லுநராகு வரோ? ஆகார். இத்திவ்யார்த்த தீபிகை உரைகாரரும், செந் தமிழ்ப் புலமையைப் பெருமையால் புல்லியராய புராணிகர் இனத்தாரைச் சார்ந்தவரே. ஆதலால், இருந்தமிழ்ப் புலவ ராய திரு ஆழ்வார், தம் திருப்பாவில் அமைத்துவைத்த உண் மைப் பொருளை உள்ளபடி அறிய இயலாதவராயினர்—திவ்யப் பிரபந்தத்தைப் பண்டு ஏட்டில் எழுதியவரால் செறிக்கப்பட்ட பிழையையும் அறியாதவராயினர் என்க. நிற்க.

"நில் அடீ எனக் கடுகினன் பெண்ணென நினைத்தான்
வில் எடாது அவள் வயங்கு எரியாம் என விரிந்த
சில் அல் ஓதியைச் செங்கையின் திருகுறப் பற்றி
ஒல் வயிற்று உதைத்து ஒளிகிளர் சுற்றுவாளுருவி"
(ராமா-சூர்ப்பண. 93.)

இப்பாவில் அமைந்துள்ள "சில் அல் ஓதியை" என்ற தொடர்க்கு "வட்டமல்லாத கூந்தலை" எனப்பொருள் எழுதி வைத்தார் உரை ஆசிரியர் ஒருவர். மற்றெரு உரை ஆசிரியர், அத்தொடர்க்குச் "சில் அல:" "சில் அல்லாத—மிகப்பலவாகிய—ஓதி-தலைமயிரை" எனப் பொருள் எழுதிவைத்தார். அவ்விரு ஆசிரியர்களும் எழுதிவைத்த பொருள்கள், புராணிகர்களால் உரைக்கப்படும் போலிப் பொருள்கள் போன்றனவே. புலவர் களால் உரைக்கப்படும் பொற்புறு பொருள்கள் போன்றன அல்ல. என்னை? இப்பாவில் "சில் அல் ஓதி" என்பதன் பொருள்: (சில்: மென்மை. அல்: அல்லாத) "வலிய முருட்டுப் பண்பினை உடைய ஓதி—கூந்தல்" என்பதே. இப்பொருளே கவிக்கருத்து. சூர்ப்பணகை அரக்கி ஆதலால், அவளது பிறப் புக்குப்—பண்புக்கு—ஏற்றபடி அவளது கூந்தலின் முருட்டுப் பண்பை விளக்கிவைத்தார் ஆசிரியர். அவ்வாசிரியர் கருத்தை

உணர்ந்திலர் உரைகாரர். என்னே? மகளிர் ஆயினர்க்குக் கூந்தல் பலவாக-செறிவாக-இருத்தல் ஒருவகைப் பண்பு. அப்படி இருத்தல் மகளிர்தம் கூந்தலின் ஐவகை இயற்கைப் பண்புகளுள் ஒன்று, அது தலையாய நல்ல அழகு. அழகிய அப் பண்பை அரக்கிக்குக் கூறுதல் கவிமரபன்று ஆதலால். "சில் அல் ஓதி" என்ற தொடர்க்குச் (சில்: மென்மை. அல்: இருட்டு, கருமை. ஓதி: கூந்தல்.) மென்மையும் கருமையும் உடைய கூந்தல் எனப்பொருள் கொள்ளலாம் ஆயினும், அப்பொருளும் இவண் பொருந்தாது. சூர்ப்பணகை அரக்கி ஆதலாலும், "வயங்கு எரியாம் என விரிந்த ஓதி" என்று ஆசிரியர் உவமைச் சுட்டால் கூந்தலின் சிவந்த நிறத்தை விதந்து விளம்பினர் ஆதலாலும். அத்தொடர்க்கு வலிய சொல்லி எனப்பொருள் கொள்ளலாம் ஆயினும், (சில், மென்மை. அல்: அல்லாத, வலிய. ஓதி: சொல்லி.) அப்பொருள் கோடற்கும் பாவில் அமைந்த உவமைச்சுட்டு இடந்தரவில்லை என்பதனை அறிக. மற்றும்,

"மல்லன் மா ஞாலம் ஓர் மறுவுரு வகையின் அச்
சில் அல் ஓதியை இருந்து உறைவிடந் தேடுவார்
புல்லின ருலகினைப் பொதுவிலா வகையினல்
எல்லை மாகடல்களே யாகுமாறு எய்தினர்" (ராமா. பிலம் நீ. 5)

இப்பாவில் அமைந்த "சில் அல் ஓதி" என்ற தொடர்க்கு (சில்: மாதர்கள் அணியும் பொன்வட்டத்தகட்டு அணி) எனவும் பொன்வட்டத் தகட்டை அணிந்த இருள்போன்ற (அல்) கரிய கூந்தலை உடையவளாகிய சீதை" எனவும் பொருள் எழுதி வைத்தார் உரை ஆசிரியர் ஒருவர். அப்பொருள், புராணிகர்களால் உரைக்கப்படும் போலிப்பொருளே. என்னே? "சில்" என்பதற்குப் "பொன்வட்டத் தகட்டு அணி" என்பது பண்டைய நூற்களுள் வழங்கப்படாத பொருள் ஆதலால். மற்றென்னே? (சில்: சின்மை விகாரம்) மென்மை. அல்: இரா, இருட்டு, கருமை.) மென்மையையும் கருமையையும் உடைய கூந்தலை உடைய திருப்பிராட்டியை" என்பதே அத்தொடரின் உண்மைப்பொருள். சில் அல்: (சில அல்லாத-பல) செறிந்த-கூந்தலை உடைய திருப்பிராட்டியை என்னலும் ஆம். இப் பொருள்கள் மாதர்தம் கூந்தலின் இயற்கைப் பண்புகளை விளக்குதலை அறிக. (ராமா-சூர்ப்ப-93; பிலம் நீ. 5.) ஆகிய

அவ்விரு பாக்களிலும் "சில் அல் ஓதி" என்னும் ஒரு தொடரே இருப்பினும், அத்தொடர் ஒன்றனுக்கே அது ஆளப்பட்ட இடத்துக்கு ஏற்ப-அது சார்ந்துள்ள மகளிர்தம் இயல்பினுக்கு ஏற்ப-முன்னர்க் கூறப்பட்ட வலிய கூந்தலும், மெல்லிய கூந்தலும் ஆகிய இருவகைப் பொருள்களையே கொள்ள வேண்டும் என்பதனை உய்த்துணர்க. இவ்வேதுவினால், அவ்விருபாக்கட்கும் பொருள் எழுதிவைத்த இருவகை உரைகாரர்தம் கருத்துக்களும் கவிக்கருத்துக்களல்ல என்பதனை அறிக. அவ்விரு பாக்களிலும் அமைந்த ஓதி என்னும் பெயர், மொழி என்னும் பொருளைச் சுட்டவில்லை என்பதனையும் அறிக.

இவ்வேதுக்களால், திவ்யப்பிரபந்த உரைகாரர் கொண்ட பிழையுற்றதாகிய "அஞ்சு அல் ஓதி" (பெரிய திரு. 10-2.4) என்ற தொடரிலும் "அல்" என்பது "அஞ்சுதலை" மறுத்தது எனக்கொண்டு (அதன் விதியாகிய விரும்புதலை விளக்கிற்று என) விரும்பப்படும் கூந்தல்-கூந்தலை உடைய மகளை என்றுவது; (ஓதி-மொழிபவள்) விரும்பப்படும் மொழி-மொழியை உடைய மகளை என்றுவது புதியதொரு வழியில் பொருள் கொண்டு இருப்பின், அப்பொருள் சிறிது பொருத்தமாக இருக்கும் என்பதனையும் அவ்வுரைகாரர் அறிந்திலர். இவ்வகை அன்றி,

"புயலைங்கூந்தல்" (சீவகசிந். 2074.)
"நாறைங்கூந்தல்" (சிலப்ப. 15-97.)
"மணி ஐம்பால்" (சூளா இரத. 294.)
"ஐஞ்சில் ஓதியை" (சிலப்ப. 11-195.)

என்ற செந்தமிழ் ஆசிரியர் வழக்கிற்கு ஏற்றபடி "அஞ்சல் ஓதி" என்பதனை "அல் அஞ்சு ஓதி" என மொழி மாற்றிக் "கருமை முதலான ஐவகை இயற்கைப் பண்புகளை உடைய கூந்தல்" என்றுயினும் பொருள் உரைத்து இருப்பின் நன்றும். இத்தகைய பொருள்களுள் ஒன்றனை உரைத்து வையாமையால் அவ்வுரைகாரரைச் செந்தமிழ் அறிவைப் பெறாதவர் என்பதில் ஐயம் என்ன? அதனால் இழுக்கு என்னை?

இவ்வாய்வு உரையில் முன்னர்க் கூறப்பட்ட ஏதுக்களால் திவ்யப்பிரபந்தத்தைப் பண்டு ஏட்டில் எழுதியவரால் செறிக்கப்பட்ட பிழையையும், திவ்யப்பிரபந்தத்துள் ஆளப்பட்ட சொற்

களும்-சொல் தொடர்களும் சுட்டும் உண்மைப் பொருள்களையும் உரைகாரருள் ஒருவரும் உணர்ந்திலர் என்பதனை அறிக. (யக)

பதினோராவது ஆய்வு உரை முற்றிற்று

திரு ஆழ்வார்கள் திருமொழி திகழ்க.

---

## பன்னிரண்டாவது ஆய்வு உரை: கிளை-1.

### திருப்பேரருளாளப் பெருமாள்தம் திரு அடிகட்கு வணக்கம்.

திரு ஆழ்வார்கள் அருளிய திவ்யப்பிரபந்தத்திற்குத் "திவ்யார்த்த தீபிகை உரை" என உரைநூல் எழுதியவரும் காஞ்சிபுரத்தில் வாழ்பவரும் பிரதிவாதி பயங்கரர்தம் குடியில் பிறந்தவரும் ஆகிய திருவளர் அண்ணங்கராசாரிய சுவாமிகள் என்பவரின் திரிபு உணர்ச்சிச் செயல்களை இப்பன்னிரண்டாவது ஆய்வு உரை விளக்கிக் காட்டுதலை அறிக.

*[திவ்யார்த்த தீபிகை உரைகாரராகிய திருவளர் அண்ணங்கராசாரிய சுவாமிகள் தம்பெயரின் தலையில் சேர்த்துக் கொண்ட "பிரதிவாதி பயங்கரம்" என்னும் சிறப்புப் பெயர் அவர்க்கு உரியது அன்று. என்னை? அவருடைய கல்வி அறிவைப் புகழ்ந்து எக்காலத்திலும் எப்பெரியாராலும் "பிரதிவாதி பயங்கரம்" என்னும் அச்சிறப்புப் பெயர் அவர்க்கு வழங்கப்பட்டதில்லை என்கிறார்கள் அவரை அறிந்தவர்கள் ஆதலால். மற்று என்னை? பண்டு ஒரு காலத்தில் அவருடைய முன்னோருள் ஒருவர் கலைகளை நன்றாகக் கற்றுப் பெரு நாவலராய்த் திகழ்ந்திருந்தார் எனவும், கலைகளைக் கற்றூராலாய கழகங்களில் தம் கருத்தைப் பிறர் மறுத்தற்கு இடனில்லாதபடி கலைகளின் கருத்துக்களை ஐயமும் திரிபும இல்லாதவராய் அவர் இயம்புவர் எனவும், அதனால் அவரது நாவின் வன்மையைப் புகழும் குறியாகப் 'பிரதிவாதி பயங்கரம்' என்னும் சிறப்புப் பெயரை அப்பெருநாவலர்க்கு அந்நாளில்வாழ்ந்திருந்த பேராசிரியர்கள் வழங்கினார்கள் எனவும் இயம்புகின்றார்கள் அறிஞர்கள். அப்பெருநாவலர்க்கு வழங்கப்பட்ட அப்பெருமொழியைத் தம்மதாக நினைக்கும்படி பிறரை மயங்க வைத்துப் போலிப்புகழைத் தாம் பெறுதல்பொருட்டுத் தம் பெயரின் தலையில் அப்'பிரதிவாதி பயங்கரம்' என்னும் சிறப்புப் பெயரைச் சேர்த்து வைத்துக்கொண்டிருக்கிறார் என்பதனை யாவரும் உய்த்துணரும்

பொருட்டே இவண் அவரைப் "பிரதிவாதி பயங்கரர் குடியில் பிறந்தவர்" என்று எழுதி வைத்தேன் என்க. அவர் போலிப் புகழை விரும்பாதவராயின் அக்குடிப் பெயரை விளக்குதற்குத் தேவை ஆகும் அளவில் 'பிர-பிரதி' என்ற அளவில் தம் பெயரின் தலையில் சேர்த்துக்கொண்டு இருப்பர் என்பதனை நினைக்க.]

அத்திவ்யப் பிரபந்த திவ்யார்த்த தீபிகை உரைகாரர்தம் திரிபு உணர்ச்சிச் செயல்கள் மேல் வருமாறு:—

பண்டு ஒரு காலத்தில் அகத்தியர் என்னும் முனிவர் ஒருவர் உவர்க் கடலின் நீரை முற்றும் எஞ்சாமல் பருகினர் எனவும் பருகிய பின்னர் அந்நீரை அவர் 'சிறுநீராக-மூத்திரநீராகக் கழித்துவிட்டார் எனவும் புராணீக மாக்கள் எண்ணி இருத்தல் போலச் செந்தமிழுக்கு யாப்பு இலக்கணமாகிய கடலின் கட்டளையாகிய (விதியாகிய) நீரை முற்றும் எஞ்சாமல் பருகினவர் எனத் தம்மையும் செந்தமிழ் உலகம் எண்ணி இருப்பதாக நினைத்துக்கொண்டு இருக்கிறார் போலும் அத்திவ்யார்த்த தீபிகை உரைகாரர்! என்னே?

மாதர்தம் கூந்தலின் விகற்பப் பெயராகிய "அஞ்சல் ஓதி-அஞ்சில் ஓதி" என்பதனைப் பற்றிய ஆராய்ச்சியாக எழுதிச் "செந்தமிழ் ஆராய்ச்சி" எனப் பெயர் வைத்துத் தம்மால் வெளியிடப்பட்ட சிறு நூல் ஒன்றனுள்; "தளை தட்டுகின்றதென்ற காரணம் காட்டிப் பாடங்களைப் பஹிஷ்கரித்திருக்கும் இடங்களில் விவேகிகள் ஊன்றி நோக்கவேணும்' தளை தட்டுகையாலே பாடத்தைத் திருத்த வேண்டும் என்று அடியேனுக்குக் கொள்கை இருந்ததுமில்லை" எனவும்;

"முதலாவார் மூவர் அம்மூவ ருள்ளும்
முதலாவான் மூரிநீர் வண்ணன்—முதலாய
நல்லான் அருளல்லால் நாமநீர் வையகத்துப்
பல்லார் அருளும் பழுது." (முதல் திரு அந். 15)

இத் திருப்பாவில் அமைந்துள்ள "முதலாவார் மூவர்" என்ற பாடமே பெரும்பான்மையாக வழங்கிவரும் பாடம் ஆயினும், அதில், 'தளைதட்டுதலானும்' அப்பாடம் பெரியோர்களின் பாடம் அன்றாகையாலும், "மூவரே" என்ற பாடம் கொள்ளப் பட்டது எனவும் எழுதிவைத்தார். அவரால் செய்யப்பட்ட திருத்தம் சாலச் சிறப்புற்றதே ஆயினும், அவர் பெரும்பான்மையாக ஓதும் பாடம் "பெரியோர்களின் பாடம் அன்று

ஆகையாலும்" என்றதனுல் சிறுபான்மையாக ஓதப்படும் பாடந்தான் "பெரியோர்களின் பாடம்" ஆம் என்பது அவரது கருத்துப்போலும்! அக்கருத்துச் சாலச் சிறப்பற்றது ஆயிற்று. மற்று, அவர் "தளை தட்டல்" என்னலைக் குற்றமாக வும்-விதி அல்லது ஆகவும், 'தளை தட்டாமை' என்னலை நேரிய தாகவும்-விதியதாகவும்-அறிந்தவர் என்பதனை அவரால் எழுதப் பட்ட அவரது கருத்து விளக்குதலை அவர் அரிந்திலர் போலும்! என்னை? பண்டைய செந்தமிழராய பேராசிரியர்கள் யாவரும் ஒரு முகமாகத் 'தளை தட்டல்' என்னலை நேரியதாகவும்-விதி யதாகவும், 'தளை தட்டாமை' என்னலைக் குற்றமாகவும்-விதி அல் லது ஆகவும்-கொண்டனர் என்பதனை அவர் உணர்ந்திலர் ஆதலால். (தட்டல்: பொருந்தல். தட்டாமை: பொருந்தாமை.) இவ் வேதுவினுல் திவ்யார்த்த தீபிகை உரைகாரர் தமது அறிவு திரிபு உடைத்து என்பதனை இன்றேனும் செந்தமிழைச் செவ் வையாக அறிந்த நல்ல ஆசிரியர் மாட்டுக் கேட்டு அறிந்து தம் முடைய திரிபு உணர்ச்சியைப் போக்கி நல்ல உணர்ச்சியைப் பெற்றுப் பிறரை வைதலாகிய தீய நெறியில் செல்லாமல் நல்ல நெறியில் நடந்து நல்ல புகழைப் பெற முயல்வாராக.

அவர் செந்தமிழைச் செவ்வையாக அறிந்தவராக இருப் பின், செந்தமிழ் மொழியையும் செந்தமிழராய ஆசிரியன் மாரையும் இழித்து உரைத்து எழுதிவையார். செந்தமிழ் மொழியைப் பள்ளன் தமிழ், கள்ளன் தமிழ் எனவும், செந்தமிழ ராய ஆசிரியன்மாரைக் கள்ளன், பள்ளன், புலையன், என்றன் ஒரு தமிழன் எனவும், இழித்து உரைத்து எழுதுபவர் செந் தமிழைச் செவ்வையாக அறிந்தவருள் ஒருவர் ஆகுவரோ! அறிந் தவருள் ஒருவர் ஆகார். செந்தமிழரும் ஆகார். 'மகரிஷிகளின் மேம்பட்டவர் நம் பூர்வாசாரியர் (திவ்யப் பிரபந்தத்தின் உரை காரர்") என்று எழுதி வட மொழியாலாய இருக்காதி வேத உப நிடத புராணங்களின் ஆசிரியன்மார்களாகிய (ஆரியராய) மக ரிஷிகளைப் பழித்து எழுதுபவர் ஆரியர் ஆகுவரோ? ஆரியர் ஆகார். ஆரிய மொழியை ஆசறக் கற்று அறிந்தவரும் ஆகார். ஆரியர்தம் அரிய நெறியை அறிந்தவரும் ஆகார். மற்று எவர் ஆகுவர்? என்னின், பெருநிலத்தின் திரிபு உற்றதால் நல்லபயனை அளிக்காத சிறு நிலத்தை நிலம் என்னும் ஒற்றுமையால் பாலை நிலம் என ஒரு பெயரை வைத்து வழங்குதல் போலப் பெரு

மக்கள்தம் நல்ல இயல்பின் திரிபுற்று நல்ல நெறியின் நீங்கிஒழுகு பவரை மக்கள் இனத்தார் என்னும் ஒற்றுமையால் 'சிற்றினத் தர்' என ஒரு சிறு பெயரை அவர்க்கு வைத்து வழங்குதல் ஆன்றோர்தம் வழக்காக இருத்தலால், பிறரை வைது உரைக் கும் தீய இயல்பினராய சிற்றினத்தார் செயலே உடைய அத் திவ்யார்த்த தீபிகை உரைகாரரையும் மக்கள் இனத்தார் என்னும் ஒற்றுமையால் சிற்றினத்தர் என்னலாம். அவர் செந்தமிழ் மொழியையும் செந்தமிழராய ஆசிரியன்மா ரையும், ஆரியராய மகரிஷிகளையும் பழித்து உரைத்து எவ்விடத்தில் எழுதிவைத்தார்? என்னின், தம்மால் 'செந் தமிழ் ஆராய்ச்சி' எனப் பெயர் வைத்து வெளியிடப்பட்ட ஒரு சிறு நூலுள். (அந்நூலுள் செந்தமிழ் மொழியைப் பற் றிய ஆராய்ச்சி ஒன்றும் இல்லை என்பதனை அந்நூலைக் கற்று அறிக.) அந்நூலுள் வெண்பாவில் தளை தட்டல் என்னலைக் குற்ற மாகவும் தளை தட்டாமை என்னலை நேர்மையாகவும் உரைத்து வைத்தபடியால் அவர், திரிபு உணர்ச்சியினர் ஆயினர் எனத் தேறுக. (கு)

## பன்னிரண்டாவது ஆய்வு உரை: கிளை-2.

"மற்றுந் தொழுவார் ஒருவரையும் யான்இன்மை
கற்றைச் சடையான் கரிகண்டாய்—எற்றைக்கும்
கண்டுகோள் கண்டாய் கடல்வண்ணு யானுன்னைக்
கண்டுகோள் கிற்கு மாறு" (நான்மு-திரு அந்-26.)

திவ்யார்த்த தீபிகை உரைகாரர் இத்திருப்பாவின் ஈற்று அடியைக் "கண்டுகோள்—கிற்குமா—று" எனப் பிரித்து-வகை யுளிப்படுத்தி ஈற்று'று'என்னும் தனிக்குற்றெழுத்தை இவ்வெண் பாவில் ஈற்று நாள் என்னும் வாய்பாட்டு அசைச்சீர்க்குப் பொருந்தும் என்று எழுதிவைத்தார், தம்மால் எழுதப்பட்ட 'செந்தமிழ் ஆராய்ச்சி' என்னும் நூலுள். அவர் வெண்பா வின் ஈற்று நாள் என்னும் வாய்பாட்டு அசைச்சீர்க்கு 'று' என் னும் தனிக்குற்றெழுத்தை நிறுத்தி விதி எனக்காட்டி எழுதினர் ஆதலால், அவர் வெண்பாவின் ஈற்று நாள்என்னும் வாய்பாட்டு அசைச் சீராகக் குற்றெழுத்துத் தனியாக நிற்றலும் விதியாம் எனத் தேர்ந்துள்ளார் போலும்! அத்தேர்வினால் இவ்வெண்பா விற்குத் 'தளை தட்டுகின்றது என்னும் குற்றம் இல்லை' எனவும் எழுதிவைத்தார். தம்முடைய 'செந்தமிழ் ஆராய்ச்சி' என்னும்

## திருத்தம்

இந் நூலில் பக்கம் 158ல், வரி 5ல், "ஆயிற்று" என்பதன் பின்னர், மேல் வருமாறு கூட்டிப் படிக்க.

ஆதலால், திவ்யார்த்த தீபிகை உரைகாரரால் செய்யப்பட்ட "மூவரே" என்ற திருத்தம் சிறப்பற்றதாயிற்று. என்னை? செந்தமிழ் உலகில் செந்தமிழ் மொழியாலாய திவ்யப் பிரபந்தத்தைச் செந்தமிழ் மொழியாலாய வேதம் எனக்கொண்டு "அத்யயனம் செய்பவர் யாவரும்—பெரும்பான்மையோர்—தொன்று தொட்டு ஒரு நெறியாக "முதலாவார் மூவர்" என்றே அத்யயனம் செய்து வருகின்றனர்" என்றார், திவ்யப் பிரபந்த திவ்யார்த்த தீபிகை உரைகாரர் ஆதலால். மற்று என்னை?

அம் 'மூவர்' என்னும் சீரிடையே வெண்தளைக்கு ஏற்றபடி 'உ' கரத்தை அளபெடையாகப் பெய்து அம்மாச்சீரைக் காய்ச்சீராக்கி 'மூஉவர்' என்று நீட்டி ஓதுதலே சிறப்பாம். அப்படி ஓதுதலே கவிக்கருத்தும் ஆம் அத்யயனம் செய்பவர் யாவரும் "மூஉவர்" என்றே அத்யயனம் செய்துவரும் வழக்கத்தால் தீபிகை உரைகாரரால் 'மூவரே' எனச் செய்யப்பட்ட திருத்தம் சிறப்பற்றதாயிற்று என்பதனை உய்த்துணர்க.

---

நூலுள். விதி அல்லதை விதியாகக் கொண்ட-குற்றத்தைக் குற்றமற்றதாக-நேரியதாகக்கொண்ட-தமது திரிபு உணர்ச்சிச் செயலைத் தாங்குதற்கு ஒரு மதலையாக,

'இன்னுயிர்மால் தோன்றினது இங்கு என்னெஞ்சில் என்று கன்னல்
அன்று அவனைக் கான எண்ணி ஆண் பெண்ணுய்ப்-பின்னை அவன்
தன்னை நினைவிப்பவற்றால் நான்தளர்ந்த மாறன் அருள்
உன்னும் அவர்க்கு உள்ளம் உருகும்'' (திருவாய்-நூற்றந்-85)

இத்திருப்பாவின் ஈற்று அடியை "உன்னுமவர்க்-குள்ளமுரு-கும்" என வகையுளிப்படுத்திக் காட்டாகக் கொண்டார்.

"உன்னுமவர்க்குள்ளமுருகும்" என்ற இவ்வடியின் ஈறும் 'கண்டுகோள் கிற்குமாறு' என்ற அடியின் ஈறும் (நான்முகன் திருஅந்-26) வெண்பாவின் ஈற்று நாள் என்னும் வாய்பாட்டு அசைச்சீர்களால் ஒக்கும் என்பது அவரது எண்ணம் போலும்! அவ்வெண்ணம் அவரது திரிபு உணர்ச்சியால் விளைந்த எண்ணமே என்க. என்னை? 'உன்னுமவர்க்குள்ள முருகும்' என்ற அடியை 'உன்னுமவர்க்–குள்ளமுரு–கும்' என வகையுளிப் படுத்தினால் தளைதட்டுகின்றது—பொருந்துகின்றது. 'கும்' என்னும் ஈற்று அசைச்சீரும் வெண்பாவின் ஈற்றுக்குரிய கடையாய விதிச் சீராகி-வழுவமைதிச்சீராகி-நாள் என்னும் வாய்பாட்டு அசைச் சீர்க்குப் பொருந்துகின்றது. பொருந்தினும் அச்சீர் அவரது திரிபு உணர்ச்சிச் செயலொடு பொருந்தவில்லை. அதனை அவர் உணர்ந்திலர்போலும்! என்னை? நான்முகன் திருவந்தாதி-26-வது வெண்பாவின் ஈற்று அடியைக் "கண்டு கொள்-கிற்குமா-று" என வகையுளிப்படுத்தி 'று' என்னும் தனிக் குற்றெழுத்தை நாள் என்னும் வாய்பாட்டு அசைச் சீராகக் கொண்டார்—(திருவாய் மொழி நூற்றந்தாதி எண்பத்தைந்தாவது ஆகிய) இத்திருவெண்பாவின் ஈற்று அடியை "உன்னுமவர்க்–குள்ளமுரு–கும்" என வகையுளிப்படுத்திக் "கும்" என்னும் ஒற்று ஒன்றிய குற்றெழுத்தை வெண்பாவின் ஈறாகிய நாள்என்னும் வாய்பாட்டு அசைச்சீராகக் கொண்டார் ஆதலால்.

ஒற்று ஒன்றிய குற்றெழுத்தாலாய'கும்' என்னும் அசைச்சீர் ஒற்று ஒன்றாத 'று' என்னும் தனிக் குற்றெழுத்தாலாய அசைச்சீர்க்கு அளவால் ஒப்பாகாமல் முரணுதலை அவர் அறிந்திலர் போலும்! ஒப்பு எனக் கொண்ட அவரது செயல் திரிபு உணர்ச்சிச் செயலே என்க.

மற்று, வெண்பாவின் ஈற்றுச்சீர்; நாள், மலர், காசு, பிறப்பு என்னும் நான்கு வகை வாய்பாடுகளுள் ஒருவகை வாய்பாட்டால் முடிதல் வேண்டும் என்பது விதி. அவ்விதிப்படி வெண்பாவின் ஈற்றுக்கு ஆம் பிறப்பு என்னும் வாய்பாட்டிற்குரிய அசைச்சீர் வன்தொடர்க் குற்றுகர மொழியாலாய சீராக இருத்தலே சிறப்பாம். அப்படி இருப்பின் அது தலையாய விதிச்சீராகும் ஆதலால். ஆயினும், உயிர்த்தொடர், இடைத்தொடர், மென்தொடர் (படகு, விடர்பு, கரும்பு) என்பன போன்ற குற்றுகர மொழிகளுள் ஒன்று தனி தட்டலொடு வெண்பாவின் ஈற்றுச்சீராகப்-பிறப்பு என்னும் வாய்பாட்டு அசைச்சீராக-நிற்குமாயின், அச்சீரை இடையாய விதிச்சீராக-வழுவமைதிச் சீராகக்—கொண்டனர் பண்டைய பேராசிரியன்மார்.

இவ்வகை அன்றி, வடிவு, கதவு என்பன போன்ற முற்றுகரச் சொற்களுள் ஒன்று தனி தட்டலொடு வெண்பாவின் ஈற்றில் பிறப்பு என்னும் வாய்பாட்டு அசைச்சீராக நிற்குமாயின் அவ்வெண்பா வழுவுடைய பாவே ஆகும். ஆயினும், அப்பெற்றிய பாக்கள் திருமால் சமயத்தவர்தம் திவ்யப்பிரபந்தத்துள்ளும், திருச்சைவ சமயத்தவர்தம் திருமுறைகளுள்ளும் மல்கிக் கிடத்தலால் (முற்றுகர மொழியாலாய) அசைச்சீர்களையும் கடையாய விதிச்சீராக-வழுவமைதிச்சீராகக் கொண்டனர் பண்டைய பேராசிரியன்மார் என்க.

வெண்பாவின் ஈருகும் நாள் என்னும் வாய்பாட்டு அசைச்சீர் ஒற்று ஒன்றிய நெடிலாக இருத்தலே சிறப்பு. அப்படி இருப்பின் அது தலையாய விதிச்சீராம். ஒற்று ஒன்ருத தனி நெட்டெழுத்தாலாய சீர், வெண்பாவின் ஈருகும் நாள் என்னும் வாய்பாட்டு அசைச்சீராக நிற்குமாயின், அச்சீர் சிறப்பில்லாச் சீரே—வழுவுடைய சீரே—ஆயினும், அச்சீரை இடையாய விதிச் சீராக—வழுவமைதிச் சீராகக்-கொண்டனர் பண்டைய ஆசிரியன்மார். அவ்வாசிரியன்மார் ஒற்று ஒன்றிய குற்றெழுத்தாலாய சீரையும் வெண்பாவின் ஈருகும் நாள் என்னும் வாய்பாட்டு அசைச்சீர்க்கு ஒப்பாகக் கொண்டனர்—வழுவமைதிச் சீராகக் கொண்டனர். ஒற்று ஒன்ருத தனிக் குற்றெழுத்தை வெண்பாவின் ஈற்று நாள் என்னும் வாய்பாட்டு அசைச்சீராகக் கொண்டிலர்.

ஒற்று ஒன்றிய நெட்டெழுத்தாலாய சீர் வெண்பாவின் ஈற்றில் அசைச் சீராக நிற்குமாயின், அச்சீர் இரண்டரை மாத்திரை அளவு ஒலியை உடையது ஆதலால் அதனைத் தலையாய விதிச்சீராகவும், ஒற்று ஒன்றாத தனி நெட்டெழுத்தாலாய சீர் வெண்பாவின் ஈற்றில் அசைச் சீராக நிற்குமாயின், அச்சீர், இரண்டு மாத்திரை அளவு ஒலியை உடையது ஆதலால், அதனை இடையாய விதிச்சீராகவும்—வழுவமைதிச் சீராகவும், ஒற்று ஒன்றிய குற்றெழுத்தாலாய சீர் வெண்பாவின் ஈற்றில் அசைச்சீராக நிற்குமாயின் அச்சீர் ஒன்றரை மாத்திரை அளவு ஒலியை உடையது ஆதலால், அதனைக்கடையாய விதிச்சீராகவும் கொண்டனர் பண்டைய செந்தமிழராய ஆசிரியன்மார். ஒற்று ஒன்றாத தனிக்குற்றெழுத்தாலாய சீர் வெண்பாவின் ஈற்றில் நாள் என்னும் வாய்பாட்டு அசைச் சீராக நிற்குமாயின் அவ் வெண்பா வழுவுடைய பாவே ஆகும் என்பர் ஆசிரியன்மார். தனிக்குற்றெழுத்து ஒரு மாத்திரை அளவு ஒலியையே உடையது ஆதலால், தனிக்குற்றெழுத்தாலாய சீரை வெண்பாவின் ஈற்று நாள் என்னும் வாய்பாட்டு அசைச்சீராகக் கொண்டிலர் பண்டைய செந்தமிழராய ஆசிரியன்மார் என்பது நினைவில் இருத்தற்பாலது. ஏனைய "மலர், காசு" என்னும் வாய்பாட்டு அசைச் சீர்களையும் தலையாய அசைச் சீர், இடையாய அசைச் சீர், கடையாய அசைச்சீர் என மூவகையாக வழங்குவர் ஆசிரியன்மார். அவ்வழக்கை ஆய்ந்தறிதல் ஒரு செயல், அறிஞர் வாய்க்கேட்டறிதல் ஒருசெயல் என்பது நினைவில் இருத்தற் பாலது.

இவ்வேதுக்களால் திவ்யார்த்த தீபிகை உரைகாரர் (நான்முகன் திருஅந்தாதி 26-ஆம் பாவில்) கடை அடியை வகையுளிப்படுத்தி ஒற்று ஒன்றாத(று) என்னும் தனிக் குற்றெழுத்து ஒன்றனை மட்டும் அவ்வெண்பாவினது ஈறுகும் நாள் என்னும் வாய்பாட்டு அசைச்சீராகக் கொண்டசெயல் அவருடைய திரிபு உணர்ச்சியை விளக்குதலை அறிக. (௨)

## பன்னிரண்டாவது ஆய்வு உரை: கிளை-3.

திவ்யார்த்த தீபிகை உரைகாரர் "செந்தமிழ் ஆராய்ச்சி" என்னும் தம் நூலுள் வெண்பாவிற்கு ஈறுகும் நாள் என்னும் வாய்பாட்டு அசைச்சீர்க்குக் காட்டாகக் கொண்டார் என்று முன்னர் (இரண்டாவது கிளையுள்) கூறப்பட்ட நான்முகன் திரு

அந்தாதியுள் இருபத்து ஆறுவதும், திருவாய்மொழி நூற்றந்தாதியுள் எண்பத்தைந்தாவதும் ஆகிய அத்திருப்பாக்கள் இரண்டும் பண்டே பிழை செறிந்துள்ள பாக்கள். என்னை? நான்முகன் திரு அந்தாதியுள் இருபத்து ஆறுவது திருப்பாவிற்கு ஈறுகிய அடியில் அமைந்துள்ள "கண்டு கோள் கிற்கு மாறு" என்ற தொடர் "கண்டு-கோளகிற்கு-மால்" என இருத்தற்பாலது.

அத்தொடர் அமைந்துள்ள அப்பாவை உடைய நூல் அந்தாதித் தொடையால் ஆய நூல் ஆதலால். என்னை? அத்தொடரில் ஈற்றுச் சீராகிய-அந்தத்துச் சீராகிய- "மால்" என்பதனை அடுத்தபாவின் (27-வது பாவின்) முதலில் (ஆதியாக) வைத்து "மால்தான்" எனத் தொடங்கி இருத்தலை நினைக்க. அவ்வடியில் அமைந்துள்ள 'கிற்குமால்" என்ற தொடரைக் "கிற்கும்-ஆல்" என வகையுளிப்படுத்திப் பிரித்து அவற்றை அசைநிலை எனக் கொள்க.

அவ்வெண்பாவை; "எற்றைக்கும் யான் தொழுவார் ஒருவரையும் இன்மை கற்றைச்சடையான் கரி கடல்வண்ணா யான் உன்னைக் கண்டுகோளக் கண்டுகோள்" எனக் கொண்டு கூட்டி வினைமுடித்துப் பொழிப்புரைத்துக்கொள்க.

மற்று, கண்டாய், கண்டாய், கிற்கும், ஆல் என்பன அசை நிலைகள்.

யான் உன்னையே சேவித்துக்கொண்டு வாழும்படியாக நீ எனக்கு அருளவேண்டும் என்பது இத்திருப்பாவின் கருத்து.

இத்திருப்பாவிற்கு (நான்முகன் திரு அந்தாதி. 26-க்குத்) திவ்யப் பிரபந்தத்தின் உரை ஆசிரியர் பலருள் ஒருவராகிய திருப்பெரிய ஆச்சான் பிள்ளை என்னும் ஆசிரியரால் எழுதி வைத்த பொருள்: "யான் மற்று ஒருவரையும் தொழுவார் இன்மை கற்றைச்சடையான் கரி கண்டாய் கடல்வண்ணா யான் உன்னை எற்றைக்கும் கண்டு கொள்கிற்குமாறு கண்டுகொள் கண்டாய்" என்பது. இப்பொருள் அவருடைய உரை நூல் என வழங்கும் புத்தகத்துள் அன்வயம் என்னும் பாத்தியுள் உள்ளது.

"மற்று, "யான் (உன்னை ஒழிய) வேறு ஒருவரையும் ஆஸ்ரயணீயமாக உடையேனல்லேன். இதற்கு நெருங்கின ஜடையை உடைய ருத்ரன் ஸாக்ஷி. ஸமுத்ரம் போன்ற திரு

மேனியை உடையவனே! நானுன்னை எப்போதும் சேவிக்கும் படி கடாக்ஷித்தருள்வாய்'' என்பது அந்நூலுள் அர்த்தம் என்னும் பாத்தியுள் உள்ள பொருள்.

மற்று, ("மற்றுத் தொழுவார் இத்தியாதி) நான் தேவதாந்தர ஸமாஸ்ரயணம் பண்ணேனென்னுமிடத்துக்கு ஆள் பிடித்துத் தொழுவித்துக் கொள்ளும் ருத்ரன் ஸாக்ஷி. (எற்றைக்கு மித்யாதி) ஸ்ரமஹரமான வடிவை உடைய நீயே மேலுமிந்த நன்மை நிலை நிற்கும்படியாகப் பார்த்தருள வேணும்'' என்பது அந்நூலுள் வியாக்கியானம் என்னும் பாத்தியுள் உள்ள பொருள்.

இவண் காட்டப்பட்ட உரையை எழுதி வைத்த திருப் பெரிய ஆச்சான் பிள்ளை ஆசிரியர் காலத்தில் இத்திருப்பாவில் (நான்முகன் திரு அந்தாதி. 26ல்) ஈற்றடி:

"கண்டு-கொளகிற்கு-மால்'' எனவே இருந்ததுபோலும்! என்னை? அப்பேராசிரியர், "கண்டு கோள் கண்டாய்" என்று அப்பாவில் மூன்றாவது அடியில் அமைந்துள்ள தொடரை நான்காவது அடியில் ஈற்றில் சேர்த்துச் "சேவிக்கும்படி கடாக்ஷித்தருள்வாய்" எனப் பொருள் உரைத்து வைத்திருத்தலால்.

அப்பேராசிரியர் காலத்தில் "கண்டு-கோளகிற்கு-மால்'' என இருந்த நேரிய பாடத்தை அவருடைய பிற்காலத்தில் திவ்யப் பிரபந்தத்தை ஏட்டில் எழுதியவர் அல்லது முதல் முறை அச்சிட்டவர் "கண்டு கோள்கிற்கு மாறு'' எனப் பிழை படுத்தி இருத்தல் கூடும்போலும்! பண்டைய உரைகாரர்க்குப் பிற்காலத்தவரால் செறிக்கப்பட்ட பிழையைத் திவ்யார்த்த தீபிகை உரைகாரர் உணர்ந்திலர் என்பதனை நினைக்க.

நான்முகன் திரு அந்நாதியுள் இருபத்தாறும் பாவிற்குந் திவ்யார்த்த தீபிகை உரை: "கடல் போன்ற நிற முடைய பெருமானே! அடியேனால் ஆச்ரயிக்கப்படும் தெய்வம் நீ தவிர வேறு எதுவுமில்லை என்னும் விஷயத்தில்-சேர்த்துக் கட்டின ஜடையை யுடையனான ருத்ரன் சாக்ஷிகாண்;—இப்படி அநந்ய பக்தனான அடியேன் உன்னை எந்நாளும் சேவித்துக் கொண்டே இருக்க வல்லேனும்படி கடாக்ஷித்தருள வேணும்'' என்பது.

திவ்யார்த்த தீபிகை உரைகாரர் திருப் பெரிய ஆச்சான் பிள்ளை ஆசிரியர் கருத்தைப் படி எடுத்திருக்கிறார். படி எடுத்தார் ஆயினும், அத்திருப்பாவில் செறிந்து கிடக்கும் பிழையை

மட்டும் அத்தீபிகை உரைகாரர் உணர்ந்திலர். என்னே? அத்திருப்பாவின் கடை அடியைக் "கண்டுகோள்-கிற்குமா-று" என்றே கொண்டார்-வகையுளிப்படுத்தி வைத்தார்—தம் திவ்யார்த்த தீபிகை உரைநூலுள்ளும் தம் 'செந்தமிழ் ஆராய்ச்சி' என்னும் நூல் உள்ளும் ஆதலால் அவரால் எழுதப்பட்ட பொருளுக்கும் "கண்டு-கோளகிற்கு-மால்" என்ற பாடமே பொருத்தமாக இருத்தலை அவர் அறிந்திலர் போலும்! மற்று,

"இன்னுயிர்மால் தோற்றினது இங்கு என்னெஞ்சில் என்று கண்ணுல்
அன்று அவனைக்காண என்னிஆன் பெண்ணைப்ப்-பின்னை அவன்
தன்னை நினைப்பவற்குல் தான் தளர்ந்த மாறன் அருள்
உன்னும் அவர்க்கு உள்ளம் உருகும்" (திருவாய்- நூற்று அங்-85)

இத்திருப்பாவில் ஈற்றடி "உன்னும் அவர்க்கு உள்ளம் உருது" என இருத்தற்பாலது. ('உருகும்' என்ற பாடம் பிழைப் பாடம்) என்னே? 'உள்ளம்' என்பது அண்மை விளிப் பொருட்டு. 'உருது' என்பது முன்னிலை ஏவல் பொருட்டு. சொல் எச்சத்தின் பாத்தியாய் விளி உருபாகிய 'ஏ'காரத்தைத் தந்து வினைமுடித்து 'உள்ளமே உருது' எனப் பொருளை உரைக்க. இத்திருப்பாவின் கருத்து "நெஞ்சொடு கிளத்தல்" என்னும் துறைப்பொருட்டு. மற்றும் அந்நூலுள் நெஞ்சொடு கிளத்தல் என்னும் துறைப்பொருட்டாக அமைந்துள்ள 17, 19, 23, 25, 54, 56, 60 ஆகிய திருப்பாக்களின் கருத்துக்களை நினைக்க. "உருது" என்னும் அசைச்சீர் பிறப்பு என்னும் வாய்பாட்டு அசைச்சீர்க்கு இடையாய வழுவமைதிச் சீராகப் பொருந்துதலை அத்திவ்யார்த்த தீபிகை உரைகாரர் உணர்ந்திலர் போலும்! என்னே? அவர் இத்திருப்பாவின் ஈற்றடியை—"உன்னுமவர்க்-குள்ளமுரு-கும்" என வகையுளிப் படுத்திப்-பிழைபடுத்திப்-பொருள்கொண்டார் ஆதலால். இப்பாவின் ஈறுகிய "உருகு" என்னும் அசைச்சீர் அடுத்தபாவின் தலையில் ஆதியாகக் கோடற்குப் பொருந்தி இருத்தலை நினைக்க. இத்திருப்பாவுள் மூன்றுவது அடியில் உள்ள 'தான்' என்பது அசைநிலை என்பதனையும் தீபிகை உரைகாரர் உணர்ந்திலர் போலும்!

அவர் இத்திருப்பாவிற்கு எழுதி வைத்த பொருள்: "எனக்குத் தாரகனான எம்பெருமான்-இப்போது ஸேவை ஸாதித்ததானது-எனது நெஞ்சிலே நின்று ப்ரத்தியக்ஷமாக வில்லையே" என்று (வருந்தி)-அப்போது அப்பெருமானைக் கண்ணாரக் கண்டநுபவிக்க

விரும்பி—ஆண் தன்மை குலைந்து பெண் தன்மை அடைந்து—மேலும் அப்பெருமானை நினைப்பூட்டுகின்ற மேகம் முதலியவற்றால்—தளர்ச்சியடைந்த ஆழ்வாருடைய க்ருபையை அநுசந்திப்பவர்களுக்கு நெஞ்சு குழையும்'' என்பது.

''எனக்குத் தாரகனான ஸர்வேஸ்வரன் இத்தரையில் ப்ரத்யக்ஷமானது என் மனஸ்ஸிலென்று—அன்று—அவனைக் கண்ணால் கண்டு அநுபவிக்க விரும்பி—ஆண் தன்மை குலைந்து பெண் தன்மை அடைந்து மேலும் அவனை ஸ்மரிப்பிக்கிற மேகஸமூஹம் முதலானவற்றால் தான் தளர்ச்சியடைந்த ஆழ்வாருடைய க்ருபையை அநுசந்திப்பவர்களுக்கு மனமுருகாநிற்கும்'' என்பது திருப் பெரிய ஆச்சான் பிள்ளை ஆசிரியர் உரை என்னும் புத்தகத்தில் பதவுரைப் பகுதியில் உள்ளது.

இத்திருப்பாவில் (திருவாய்-நூற்-85ல்) கடை அடியில் கடைச்சீரில் செறிந்துள்ள பிழையை அவ்வுரைகாரர்கள் அறிந்திலர் என்பதனை நினைக்க.

உரை ஆசிரியர் திருப் பெரிய ஆச்சான் பிள்ளை பண்டு அக்கடை அடியை 'உன்னும் அவர்க்கு-உள்ளம்-உருகு' எனவே பாடங்கொண்டு அவ்வடிக்கு ''ஆழ்வாருடைய கிருபையை அநுசந்திப்பவர்களுக்கு ''மனமே உருகா நிற்க!—உருகுக!—'' என்றே பொருள் கொண்டிருப்பர் என்பதும், அவ்வாசிரியர் உரை எழுதிவைத்த காலத்திற்குப் பின்னர்த்தான் திவ்வியப் பிரபந்தத்தைப் பண்டு ஏட்டில் எழுதியவரே-அல்லது-முதல் முறை அச்சிட்டவரே 'உன்னும் அவர்க்கு உள்ளம் உருகும்' என்று பிழைப்பாடம் கொண்டும் அப்பிழைப்பாடத்திற்கு ஏற்றபடி ''ஆழ்வாருடைய க்ருபையை அநுசந்திப்பவர்களுக்கு மனம் உருகா நிற்கும்'' என்றும் பிழையைச் செறித்து அச்சிட்டு வைத்திருப்பர் என்பதே என் நம்பிக்கை. மற்று,

நான்முகன் திருஅந்தாதியுள் இருபத்தாறுவதும், திருவாய்மொழி நூற்றந்தாதியுள் எண்பத்தைந்தாவதும் ஆகிய அவ்விரு திருப்பாக்களுள் உண்மைப் பாடங்களை அறியாமல் பிழையுற்ற பாடங்களையே நேரிய பாடங்களென வைத்துக்கொண்டு அத்திவ்யார்த்த தீபிகை உரைகாரர் உரை எழுதி வைத்துள்ளார். அப்படி உரை எழுதி வைத்த அவரது செயலும் யாப்பு இலக்கணம் ஆராய்ந்த அவரது செயலும் அவரது திரிபு உணர்ச்சியை விளக்குதலை அறிக. (ரு

## பன்னிரண்டாவது ஆய்வு உரை: கிளை-4.

"முத்தவை காண முதுமணற் குன்றேறிக்
கூத்து உவந்து ஆடிக் குழலால் இசைபாடி
வாய்த்த மறையோர் வணங்க இமையவர்
ஏத்தவந்து என்னைப் புறம்புல்குவான்
எம்பிரான் என்னைப் புறம்புல்குவான்" (பெரியாழ்-1-9-8)

இத்திருப்பாவிற்குத் திவ்யார்த்த தீபிகை உரை "வயசு சென்ற இடைச்சனங்கள்-காணும்படியாக-நெடுநாளாய்க் குவிந்து (மேடாக இருந்த)-மணற் குன்றின் மேலேறி இருந்து-(தன்னுடைய சேஷ்டி தத்தைக் காணும்படி) கிட்டின-ப்ராஹ்மரிஷிகள்-தன்னைக் கண்டு வணங்கவும்-தேவர்கள்-ஸ்தோத்ரஞ் செய்யவும்-வேய்ங்குழலினால் ராகம்பாடிக்கொண்டும்-சந்தோஷித்து கூத்தாடியும்-நின்று வந்து என்னைப் புறம்புல்குவான்—;-எம்பிரான் என்னைப் புறம் புல்கு வான்—" என்பது

இப்பாடமும் பொருளும் பொருத்தம் அற்றன. கவிக் கருத்து அல்லன. ஆகலால், இவற்றின் சிறப்பையும் இறப்பை யும் ஆய்ந்தறிக. அறியுங்கால் பொழிப்புரையில் அமைந்த வாக்கிய அமைப்பையும் நினைக்க. அப்பாடமும் பொருளும் பொருத்தமற்றன என்பதன் ஏது மேல் வருமாறு:—

இத்திருப்பாவில் அமைந்துள்ள "மூத்தவை" என்பது பிழைப்பாடம், அப்பாடம், "மூத்தவன்" என இருத்தற்பாலது. மூத்தவன், திருப்பல ராமர். திருப்பல ராமரும், திருக்கண்ண பிரானும் பிரியாமல் கூடி உலவிய வழக்கைத் திருப்பாகவதம் என்னும் புராண நூலுள் பரக்கக் காணலாம். ஆயினும், அடி யில் காட்டப்பட்டுள்ள திருப்பாவை-17; திருநாச்சியார் திரு மொழி-14-1. ஆகிய இத்திருப்பாக்களின் பொருள்களைக் கண்டும் தேறுக.

"அம்பரமே தண்ணீரே சோறே அறம்செய்யும்
எம்பெருமான் நந்தகோபாலா எழுந்திராய்
கொம்பனார்க் கெல்லாம் கொழுந்தே குலவிளக்கே
எம்பெரு மாட்டி யசோதாய் அறிவுறாய்
அம்பரம் ஊடறுத்து ஓங்கி உலகுஅளந்த
உம்பர்கோ மானே உறங்காது எழுந்திராய்
செம்பொன் கழலடிச் செல்வா பலதேவா
உம்பியும் நீயும் உறங்கேலோர் எம்பாவாய்" (திருப்பாவை-17)

"பட்டி மேய்ந்துஓர் காரேறு பலதே வர்க்கோர் கீழ்க்கன்றாய்
இட்டீ றிட்டு விளையாடி இங்கே போதக் கண்டீரோ
இட்ட மான பசுக்களை இனம றிந்து நீர் ஊட்டி (நாச்சி-14-1.)
விட்டுக் கொண்டு விளையாட விருந்தா வனத்தே கண்டோமே"

இத்திருப்பாவிற்குத் திவ்யார்த்த தீபிகைஉரை: "(கண்ணபிரான் என்கின்ற) காளையொன்று–காவலில்லாமல் யதேச்சமாய்த்திரிந்து கொண்டும்-பலராமனுக்கு ஒப்பற்ற தம்பியாய்–ஸந்தோஷத்துக்குப் போக்கு வீடாகப் பல வகையான கோலாஹலங்களைப் பண்ணி–விளையாடிக்கொண்டும் – இப்படிவர – பார்த்தீர்களோ ?–(தனக்கு) இஷ்டமான–பசுக்களை–திருப்தியாக–மடக்கி மேய்த்து–தண்ணீர் குடிப்பித்து (இப்படியாக) அவற்றை மேயவிட்டுக்கொண்டு (அப் பெருமான்) விளையாடாநிற்க–ப்ருந்தாவனத்திலே–சேவித்தோம்" என்பது.

இப்பொருளின் சிறப்பையும் இறப்பையும் உய்த்துணர்க. இவ்வளவே அன்றி "இட்டீறிடுகை–சபதமிடுகை" என ஒரு குறிப்புரையை எழுதி அதனடியில் அப்பொருத்தமற்ற குறிப் புரையின் சிறப்பைத் "தெளிவுடையார் பக்கல் தினவடங்கக் கேட்டறிக" என எழுதித் தம்முடைய சிற்றின இயல்பையும் விளக்கிவைத்துள்ளார். தினவடங்கக் கேட்டல்–தினவடங்கச் சொல்லல்–என்ற சொல் தொடர்களை நற்குடியிற்பிறந்து நல்ல உணவை உண்டு வளர்ந்து நல்லாசிரியன்மார் மாட்டுக் கற்று நல்ல அறிவைப் பெற்றதால் நல்ல ஒழுக்கமுடையராய் வாழ்வார் தம் வாயால் சொல்லார்; தம்கையால் எழுதார்; தம் நெஞ்சால் நினைத்தலும் செய்யார். ஆதலால், தம் சிற்றின இயல்பை விளக்கினார் என்றேன். "நலத்தின்கண் நாரின்மை தோன்றின் அவனைக் குலத்தின்கண் ஐயப்படும்" என்ற திரு வாக்கையும் நினைக்க. இத்திருப்பாவிற்குத் திவ்யார்த்த தீபிகை உரைகாரரால் எழுதப்பட்ட பொருள், போலிப் பொருளே. அவரால் கொள்ளப்பட்ட பாடமும் போலிப் பாடமே. என்னை?

இத்திருப்பாவில் (திரு. நாச்சி. 14-1ல்) "இட்டீறிட்டு" என்றபாடம், பிழைப்பாடம். அப்பாடம், "இட்டி இட்டு" என இருத்தற்பாலது. பொருள்: நெருங்கி,-கூடி-என்பது. "இட்டி" "கிட்டி" என்பதன் திரிபுமொழி "இட்டு" என்பது துணைவினை விகுதி. "இடு" என்பதே இவண் "இட்டுஎன" விகாரப்பட்டது. சென்றிடுவேன் - சென்றிட்டேன், கிட்டிடுவேன்-கிட்டிட்டேன் என்னும் வழக்கை நினைக்க. மற்றும்,

"கிட்டு இடையார்' எனற்பாலது "இட்டு இடையார்" எனவும்;
(சீவகசிந். 880)

"மெலிமயிர்ப்போர்வை" எனற்பாலது "எலிமயிர்ப் போர்வை"
எனவும், (சீவகசி. 2471, 2681.)

"மேனகை" எனற்பாலது "ஏனகை" எனவும்
(சடாயு-உயிர் நீ-44.)

மொழிமுதல் மெய்கள் திரிபுற்றிருத்தலை நினைக்க. மற்று,

[இத்திருப்பாவில் மூன்றுவது அடியில் தலைச்சீரில் அமைந்த "இட்டம்" என்பது "ஈட்டம்" என்பதன் திரிபு மொழி பொருள்: "கூட்டம்" என்பதே. திருக்கண்ணபிரானுர்க்கு ஆக்களுள் இட்டமானதென ஒரு வகையும், இட்டமிலது என ஒரு வகையும் இல்லை ஆதலால், இப்பொருளின் பொருத்தத்தைப் பொருமையைவிட்ட மனத்தினராய் ஆய்வார் அறிகுவர்.

இத்திருப்பாவின் முதல் இரண்டு அடிகளுக்குப் பொருள்: "திருக்கண்ணபிரானுர், திருப்பலராமருடன் கூடி, இங்கு-இவ்வழியே, போதக்கண்டீரோ?-செல்லுதலைக் கண்டீரோ?" என்பது. இக்கருத்துக் கண்டாரை வினுதல் என்னும் துறைப் பொருட்டு.

இத்திருப்பாவில் அமைந்துள்ள "பட்டி" என்பதன் பொருள்: (பட்டி: படிறு விகாரம்) வஞ்சனை, மாயம் என்பது. மேய்ந்து என்பதன் பொருள், விரும்பி என்பது. மே, என்னும் (உரிச்சொல்) பெயர் ஈறு திரிந்தது என்க. "நம்பும் மேவும் நசையாகும்மே" (தொல் உரிச். 329.) என்பதன் பொருளை நினைக்க. வஞ்சனைச் செயலை-மாயச் செயலை-விரும்புபவராகிய கார் ஏறு எனக்கூட்டிப் பொருளின் பொற்பை அறிக. இப்பெற்றிய பொருளை அறியமாட்டாமையால், இத்திருப்பாவில் செறிந்துள்ள பிழையையும் அறியாதவராய்த் தீபிகை உரைகாரர், "பட்டி மேய்ந்து" என்பதற்குக் "காவலில்லாமல் யதேச்சமாய்த்திரிந்துகொண்டும்" எனப் பொருள் எழுதி வைத்தார். அவ்வழகலாப் பொருளின் சிறப்பைத் "தேளிவுடையார் பக்கல் தினவடங்கக் கேட்டுத் தேளிக," எனவும் எழுதிவைத்தார். அதனுல், அவர் தம்முடைய சிற்றினப்பண்பைத் தெள்ளத் தெளிய விளங்கவைத்தார் அல்லாமல், இத்திருப்

பாவின் கருத்தைச் சிறிதும் விளங்கவைத்திலர்-உணர்ந்திலர்-என்பதனை அறிக.

இவண் காட்டப்பட்ட (திருப்பாவை-17ம்; திரு நாச்சியார் திருமொழி, 14-1ம் ஆகிய) இரு திருப்பாக்களினுள்ளும் திருப் பலராமரும், திருக்கண்ணபிரானும் நெருங்கிக் கூடி உறைந்த செயலைக் குறிப்பிட்டு இருத்தலை நினைக்க. இக்குறிப்புக் களே மேலே காட்டப்பட்ட (பெரியாழ். 1-9-8) திருப்பாவில் "மூத்தவை" என்பது மூத்தவன் என இருத்தற்பாலது என்ற தற்குச் சான்றாகும். 'மூத்தவர்' என்று இருப்பினும் பொருந் தும். பொருள்: பிராயத்தால் முதிர்ந்த ஆயர் என்னலாம். மூத்த 'அவை' என்னல் எவ்வகையானும் பொருத்தம் ஆகாது. அத்திவ்யார்த்த தீபிகை உரைகாரர் 'மூத்தவன்' என்னற் பாலதை "மூத்த அவை' எனப்பாடம் கொண்டு அதற்கு ஒரு போலிப் பொருளை நேரிய பொருளென எழுதிவைத்ததால் அவ ரது செயல் அவரது திரிபு உணர்ச்சியை விளக்குதலை அறிக (சு)

## பன்னிரண்டாவது ஆய்வு உரை: கிளை-5.

(முன்னர் நான்காவது கிளை உரையுள் காட்டப்பட்ட திருப் பெரிய ஆழ்வார் அருளிய (1-9-8 ஆகிய) திருப்பாவில் அமைந்துள்ள உடன்பாட்டுப் பெயராகிய 'இமையவர்' என் பதற்குக் "கண் இமையாதவர்" என மறைப்பொருள் எழுதி வைத்தார் திவ்யார்த்த தீபிகை உரைகாரர். (குறிப்புரைப் பகுதியில்) அப்பொருள் போலிப் பொருளே. அதன் உண்மைப் பொருள் மற்று என்னை? 'இமை' என்பதன் பொருள் 'ஒளி' என்பதே. அப்பொருள் தேவர்க்குக் குறிப்பு-வினைப்பெயர் ஆயிற்று. தேவருடைய மேனிகள் எப்போதும் மழுங்காமல் மிக்க ஒளியைப்-பிரகாசத்தை-உடைத்தாய் இருப் பன ஆகலால் "மாசற இமைக்கும் உருவினர்" (திருமுருகா-128) என்ற தொடரின் பொருளை நினைக்க. மற்றும்,

"சுடர்மணிகள் இமைக்கும் நெற்றி" (பெருமாள் திரு. 1-1)
"விடுசுடர் இமைக்கும் பூணன்" (சீவகசிந். 213)
"கதிர்பரந்து இமைக்கும் மேனியன்" ( ,, ,, 950)
"மணிபரந்து இமைக்கும் மேனியன்" ( ,, ,, 2266)

இத்தொடர்களில் அமைந்துள்ள "இமை" என்னும் உரிச் சொல் "ஒளி-பிரகாசம்" என்னும் பொருளைச் சுட்டுதலை அறிக.

இப்பெற்றிய உண்மைப் பொருளை உணரமாட்டாமை யால் 'இமையவர்' என்னும் உடன் பாட்டுப் பெயர்க்குக் "கண் இமையாதவர்" என மறைப் பொருளை எழுதி வைத்தார் திவ் யார்த்த தீபிகை உரைகாரர். அவர் எழுதிவைத்த பொருள் போலிப் பொருளே எனவும் "இமையவர்" என்பதன் உண்மைப் பொருள் "விளக்கமான—பிரகாசமான—ஒளியை உடைய—மேனி யர் என்பதே எனவும் தேறுக. 'கண் இமையாதவர்' என்னும் மறைப் பொருளைக் கோடற்குக் "கண் இமையார்—கண் இமை யாதவர்" என்னும் மறைப் பெயர்களின் திரிந்த தலைக்குறைப் பெயர்களாகி "இமையார்—இமையாதவர்" என மறை விகுதி புணர்ந்திருத்தல் வேண்டும் என்பதனைத் திவ்யார்த்த தீபிகை உரைகாரர் உணர்ந்திலர் போலும்! "இமையவர்" என்னும் உடன்பாட்டுப் பெயர்க்குக் "கண் இமையாதவர்" என மறைப் பொருள் எழுதி வைத்ததனால் அத்திவ்யார்த்த தீபிகை உரை காரர் திரிபு உணர்ச்சியை உடையர் எனத் தேறுக. மற்று,

செந்தமிழிற்குத் தொல்காப்பியம் என்னும் இலக்கண நூலைத் தொகுத்தவர்க்கு அக்காலத்தில் "எல்லே இலக்கம்" (தொல்—இடை 21) "வாள் ஒளியாகும்" (தொல். உரி. 69) என்னும் பாக் கள் கிடைத்தாற்போல "இமையே இலக்கம்" அல்லது "இமையே விளக்கம்" அல்லது "இமையே ஒளியாகும்" எனப் பா ஒன்று கிடைத்திருப்பின் அப்பாவையும் தொல்காபியத்துள் சேர்த்து வைத்திருப்பர். சேர்த்து வைத்து இருப்பின் 'இமை'என் பதற்குப் பொருள் "ஒளி" என்பது என எழுத்தொடு புணர்ந்த சொல் அகத்து அமைந்த உண்மைப் பொருளை அறிய முய லாத புராணீக மாக்களும் அறிந்திருப்பர். அப்புராணீக மாக்கள்மாட்டுத் திவ்யார்த்த தீபிகை உரைகாரரும் கேட்டுத் தெரிந்திருப்பர். "இமையே இலக்கம்" அல்லது "இமையே விளக்கம்" அல்லது "இமையே ஒளியாகும்"எனப் பாஒன்று அத் தொல்காப்பியம் என்னும் நூலைத் தொகுத்தவர்க்கு அந்நாளில் கிடைத்திலாமையால், அவர் அத்தொல்காப்பியம் என்னும் நூலுள் சேர்த்துவைத்திலர். அவர் சேர்த்துவைத்திலாமையால் "இமை" என்பதன் பொருள் 'ஒளி' என்பது எனப் புராணீக மாக்களுள் ஒருவரும் உணர்ந்திலர்போலும்! புராணீக மாக்கள் உணராமையால் எழுத்தோடு புணர்ந்த சொல்லகத்தமைந்த உண்மைப் பொருளை உணர முயலாத புராணீக மாக்களுள்

ஒருவராகிய அத்திவ்யார்த்த தீபிகை உரைகாரரும் உணர்ந்திலர் போலும்!

"கற்க கசடறக் கற்பவை கற்றபின் நிற்க அதற்குத் தக"

என்னும் பெருமொழியைப் புறக்கணித்துச் செந்தமிழ் மொழியையும் செந்தமிழ் மொழியராய ஆசிரியன்மாரையும் பழித்து இழித்து உரைத்தார் ஆதலால், அத்திவ்யார்த்த தீபிகை உரைகாரரும் புராணிகரே ஆவர் என்க (புலமை உடையார் புலமை உடையாரைப் பழித்து உரையார்) மற்று,

['புன்மையே சிவப்பு ஆதம்' எனப் பா ஒன்று தொல்காப்பியத்துள்ளும் நிகண்டுகளுள்ளும் இல்லாமையால் திருச்சிவ பெருமானர்தம் திருச்சடையைச் சுட்டிச் சொல்லப்பட்ட "புன் சடை" என்ற தொடரில் அமைந்துள்ள "புன்" என்பது அச் சடையின் செம்மை வண்ணத்தைச்–சிவந்த நிறத்தைச்" சுட்டுதலை அறியாதவராய் அதற்குப் பெரிய புராணச் சைவர்களால் எழுதப்படும் போலிப் பொருளது பொலிவும் அவர்கள் காட்டும் இடர்ப்பாட்டு நெறியின் இழிவும் ஏட்டில் எழுதிக்காட்ட இயலா. அப்பெரியபுராணச் சைவர்களால் எழுதப்பட்ட இடர்ப்பாட்டு நெறியை அவர்களால் எழுதப்பட்ட உரைநூற்களைக் கண்டு அறிக.

"புன்" என்பது சிவந்த நிறத்தைச் சுட்டும் உரிச்சொல் என்பதற்கு (மலைபடுகடாம்-217லும் 253லும்) "புன்தலை மகாரொடு" என்ற தொடர்க்குச் "சிவந்த தலையினை உடைய பிள்ளைகளோடு" எனவும் (பட்டினப்பாலை 90ல்) "புன்தலை இரும்பரதவர்" என்ற தொடர்க்குச் "சிவந்த தலையினை உடைய பெரிய பரதவர்" எனவும் உரைஆசிரியர் நச்சினர்க்கு இனியரால் எழுதப்பட்ட பொருளே சாலச் சான்றாகும். மற்று, திவ்யப்பிரபந்த உரைகாரரும், புன் என்பது சிவந்த நிறத்தைச் சுட்டும் உரிச்சொல் என்பதனை அறிந்திலர் என இந்நூலின் பத்தாவது ஆய்வு உரையுள் விளக்கி வைத்தேன். அவ்வுரைகாரரது தெளிவை ஆங்குக் கண்டு தேறுக. மற்று,

செந்தமிழ் மொழிக்கு ஆக்கப்பட்ட செந்தமிழ் மொழியாலாய தொல்காப்பியம் என்னும் இலக்கண நூல், திரு "அகத்தியர்" என்னும் முனிவர் ஒருவரால் செந்தமிழ் மொழிக்கு இலக்கணம் என முதலாக எழுதப்பட்ட "அகத்தியம்" என்னும் முதல் நூலுக்கு வழி நூலாக அவ்வகத்திய முனிவருடைய

மாணக்கருள் ஒருவராகிய திரண தூமாக்கினி என்னும் "திருத் தொல்காப்பியர்" என்பவரால் ஆக்கப்பட்டது என ஒருமுக மாகச் செந்தமிழ் உலகம் செப்பாநிற்க, அத்தொல்காப்பியம் என்னும் நூலினைத் தொகுக்கப்பட்ட நூல்—தொகுப்பு நூல்—என்னல் என்னை? அந்நூல் ஒரு காலத்தில் வாழ்ந்திருந்த 'ஆசிரியர் ஒருவரால் தனிமையாக ஆக்கப்பட்ட தனி நூல்—முதல் நூல் அல்லது வழிநூல் அன்று. சார்பு நூலும் அன்று. அதனை (அகத்தியம் என்னும் நூலின் "வழிநூல்" என்னல் முகமன் சொல்லே.) அது, அகநானூறு, புறநானூறு, குறுந்தொகை, இறையனர் அகப்பொருள், நாலடியார் என்பனவற்றைப் போலும் தொகுக்கப்பட்டதொரு நூலே. என்னை? அத்தொல் காப்பியம் என்னும் நூலுள் 'எச்ச இயல்' என ஒரு இயல் அமைக்கப்பட்டு இருத்தலும், 'இடை இயல், உரி இயல்' என்னும் பகுதிகளில் பண்டே இறந்துபட்ட "நிகண்டு பாக்களின்" தொடர்களைச் சூத்திரங்களாகச் சேர்க்கப்பட்டுள்ள அமைப்பும் அந்நூல் தொகுப்பு நூல் என்பதற்குப் போதிய சான்றாகும் என்பதனை ஆழ்ந்து சூழ்ந்து ஆய்ந்து தேறுக. மரபு இயலுள் உள்ள பல பாக்கள் நிகண்டு பாக்களே. விதிப்பாக்கள் அல்ல என்பது உய்த்துணரற்பாலது.

அத்தொல்காப்பியம் என்னும் நூலைத் தொகுத்தவர்க்கு அவ்"வெச்ச இயலில்" வைக்கப்பட்ட பாக்களை நூலுள் சேர்த்து வைத்தற்குத் தக்கதொரு இடம் தோன்றுமையாலும் அவை அவர்க்கு மிகை எனத் தோன்றினபடியாலும் எச்ச இயல் என ஒரு இயலை வகுத்து அவ்வியலுள் அப்பாக்களை வைத்துக் கொண்டார் போலும்! அப்படி வைத்துக்கொண்டது அப் பாக்களது பெருமையையும் சிறப்பையும் நோக்கிப்போலும்! மற்று,

தனிநூலாசிரியர் ஒருவரால் அத்தொல்காப்பியம் என்னும் நூல் ஆக்கப்பட்டிருப்பின், அவர் 'எச்ச இயல்' என ஒரு இயலைத் தனியாக அமைத்து வைத்திரார் என்பது உய்த்துணரற்பாலது. மற்று, விதிகளைத் தனிப்பாக்களால் விதந்து உணர்த்தாமல் இலேசினல் உய்த்துணரும்படி வைத்தார் என்னும் கூற்றும் அத்தொல்காப்பியம் என்னும் நூல் தொகுக்கப்பட்டதொரு நூல் என்னற்குப் போதிய சான்றாகும். மற்று,

நன்னூல் என்னும் இலக்கண நூல் ஒரே ஆசிரியரால் ஆக்கப்பட்ட தனி நூலாக இருந்தும் அதனுள் சில விதிகளை இலேசினுல் உய்த்துணரவைத்திருத்தல் என்னை? எனின், தொல்காப்பியத்தின் பிற்காலத்தாரால் புதியன புகுதலாகக் கொள்ளப் பட்ட சில வழக்கிற்குச் சில விதிகளை நிலையாக வைத்தற் பொருட்டு, ஆசிரியர் பவணநந்தி முனிவர் என்பவர் அந்நன்னூலைச் சின்னூலாகச் செய்தார் ஆதலால், உரை ஆசிரியர்கள் முன்னூலார் கொண்ட சிலவிதிகளை உய்த்துணரல் என்னும் உத்தியின் பாத்தியாய்க் கொண்டார்கள் எனத் தேறுக. மற்று,

தொல்காப்பியம் என்னும் நூலைத்தொகுத்த ஆசிரியர் திருப்பௌத்த சமயத்தவர் ஆவர் போலும்! 'அவர் பௌத்த சமயத்தவர் ஆவர் என்னற்கு ஏது என்னை?' எனின்,

அவர் பௌத்த சமயத்தவர் ஆனபடியால்தான் அத்தொல்காப்பியம் என்னும் நூலின் தலையில் கடவுள்வாழ்த்துப் பா என ஒருபா இல்லை. இல்லாமையே, அந்நூலைத் தொகுத்தவர் திருப்பௌத்த சமயத்தைச் சார்ந்தவர் என்பதற்குச் சான்ரும். மற்றும் அந்நூலுள் சான்றுகள் பலவாகக் கிடக்கின்றன. உய்த்துணர்க. வல்லார்வாய்க்கேட்டு அறிக. திருப்பௌத்த சமயத்தினர் உலகிற்குத் தலைவராக ஒரு கடவுளை வேண்டாதவர், அதாவது திருச்சைவ சமயத்தவர், திருச்சிவ பெருமானுரையும் திருமால் சமயத்தவர் திருமாலையும் தங்கட்கு முழுமுதல் இறைவராகக் கொண்டு இருத்தல் போல, ஒரு கடவுளை முழுமுதல் கடவுளாகத் திருப்பௌத்த சமயத்தவர் கொண்டிலர். அதனுல்தான் அம்மதத்தவர், பண்டு அகத்திணைத் துறைக்குரிய அகப் பொருள் இலக்கண இலக்கியங்களையும், புறத்திணைத் துறைக்குரிய புறப் பொருள் இலக்கண இலக்கியங்களையும், பலவாக எழுதி வைத்தார்கள்,

மணிமேகலை என்னும் நூலும் திருப் பௌத்த சமயச்சார்பான நூலே. அந்நூல் திருப் பௌத்த சமயச் சார்பான நூல் ஆனதால் தான் அதன் தலையிலும்—முதலிலும்—கடவுள் வாழ்த்துப்பா என் ஒருபா இல்லை எனத்தேறுக. மற்றுச் சிலப்பதிகாரம் என்னும் நூலும் திருப் பௌத்த சமயச் சார்பான நூலே. அந்நூல் திருப்பௌத்த சமயச் சார்பான நூல் ஆனதால்தான் அந்நூலின் தலையிலும்—முதலிலும்—கடவுள் வாழ்த்துப்பா என ஒருபா இல்லை எனத் தேறுக. அந்நூலை ஆக்கிய ஆசிரியரும்

திருப்பௌத்த சமயத்தரே ஆவர். பண்டு வாழ்ந்த ஆசிரியன்மார் தம் மதச்சார்பல்லதாகிய பிறமதச் சார்பான நூலை ஆக்க முயலார்: ஆக்கார் என்பது நினைவில் இருத்தற்பாலது. அந்நூலுள் தலையாய—கூற்றுளர்களாகப் பாத்திரங்களாகக்—கூறப்பட்ட திருக் கோவலனும் திருக் கண்ணகியும் திருப்பௌத்த சமயத்தையே தம் சமயமாகக் கொண்டு ஒழுகியவர்கள். என்னை?

"பைந்தொடி தந்தை யுடனே பகவன்
இந்திர விகாரம் ஏழும் ஏத்துதலின்
துன்பக் கதியில் தோற்றரவு இன்றி
அன்புறு மனத்தோடு அவனறங் கேட்டுத்
துறவி உள்ளம் தோன்றித் தொடரும்
பிறவி நீத்த பெற்றியம் ஆதவம்" (மணிமே. 26-54)

இத்தொடர்களின் பொருள்களையும் அப்பொருள்கள் திருக் கண்ணகியார் கூற்றுக அமைந்திருத்தலையும் நோக்க. (மற்றும் அந்நூலுள் சான்றுகள் பல்வாக உள்ளன. அவற்றை ஆழ்ந்து சூழ்ந்து தேறுக. இத்தொடர்களின் உண்மைப் பொருள்களை உணராதபடியால் திருக் கோவலனும் திருக் கண்ணகியும் சமணசமயத்தவர் என ஒருசாராரும் திருச்சைவ சமயத்தவர் என மற்று. ஒருசாராரும் சாற்றித் திரிகின்றனர். அவர்களின் அறியாமைப் பண்பை அறிவுடைய உலகம் கண்டு கழிக்கும் என்பதனை அவர்கள் உணர்ந்திலர் போலும்! திருக் கண்ணகி திருச்சமணசமயத்தினளாயின், மதுரை எரிந்து அழிதற்கான சிறு செயலைச் செய்திராள் என்பதும், சிலப்பதிகாரத்தின் ஆசிரியர் திருச்சமண சமயத்தவராயின் தம் நூலுள் ஊரை எரித்த கொடுஞ்செயலை அந்நூலின் தலையாய கூற்றுளராகிய-பாத்திரம் ஆகிய-திருக்கண்ணகி மாட்டு ஏற்றித் தம் நூலுள் சேர்த்து எழுதி இரார் என்பதும் உய்த்துணரற் பாலன. மற்று,

செந்தமிழ் மொழியாலாய சிலப்பதிகாரம் என்னும் நூலும் மணிமேகலை என்னும் நூலும் இன்று இடையன் கொல் மரம் போலத் தம் எழிலை இழந்து கிடக்கின்றன. (இடையன், ஆடு மேய்ப்பவன்) என்னை? அவை ஆக்கப்பட்டபடி இன்று இல்லை. சிற்றினச் செயலாளரால் அந்நூற்களுள் இடை இடையே பொருத்தமற்ற போலி வரலாறுகள் புகுத்தப்பட்டும், அந்நூல்கட்கு உறுப்பாகப் பொருந்திக்கிடந்த உண்மை வரலாறுகள் அழிக்கப்பட்டும் உள்ளன ஆதலால். என்னை?

திருச்சமண சமயத்தவர் பெண்பால் துறவிகட்கு மிகக் கடுமையான விதிகளை ஒழுக்கத்தின்பொருட்டு விதித்திருக்கின்றனர். அவர்கள் ஆண்மக்களோடு அருகில் இருத்தலும் கூடாது. அவர்கள் தனியாக வழிநடை கொள்ளலும் கூடாது. என்பதும் ஒரு விதி. அவர்கள் தனியாக வழி நடை கொள்ளார். ஒழுக்கத்துக்கு உரிய விதி ஒன்று இல்லாமையால் திருச்சமண சமயத்துப் பெண்பால் துறவியாகிய திருக் "கௌந்தி அடிகள்" என்பவர் தனியாகத் திரிந்துகொண்டு இருந்தார் என்று நினைக்கும்படி அம்மதத்தைப் பழித்தற்காகத் திருக் கௌந்தி அடிகளைப் பற்றிய குறிப்புகள் சில அந்நூலுள் அந்நூலை ஆக்கியோன் கருத்துக்கு மாறாகப் புதிதாகப் புகுத்தப் பட்டது போலும்! மற்று அம்மதத்துத் துறவிகட்குக் கோபம் என்பது சிறுகால அளவும் இருத்தல் ஆகாது என்பது விதி. "குணமென்னும் குன்றேறி நின்றார் வெகுளி கணமேயும் காத்தல் அரிது" என்பதன் பொருளை நினைக்க. கணம் என்னும் சிறு கால அளவும் கோபம் தங்கள் மாட்டு நிற்காதபடி (கோபம் தோன்றாத படி) தம் ஒழுக்கத்தைப் பாதுகாப்பார். குணக்குன்று என்னும் பெருமைக்கு உரியார் என்பது கருத்து. இவ்விதி சிறப்பாகத் திருச் சமண சமயத்தவர்க்கே உரித்து. இத்தகைய விதியை ஏற்றுக்கொண்ட திருச்சமண சமயத்துறவியாகிய ஒருவர் மனிதப் பிறப்பினரை நரிகளாகும்படி சபித்து விட்டார் என்பது எவ்வளவு இழி செயலாகும் என்பதனை நினைக்க. இவ்வரலாறுகள் திருச்சமண் சமயத்தவரைப் பழித்தற்கே அந்நூலுள் ஆக்கியோன் கருத்துக்கு மாறாகப் புகுத்தப்பட்டது. போலும்!

விஸ்வ கர்மாக்கள் என்று சொல்லப்படும் உலோகத் தொழிலாளரைக்—கம்மாளர் என்பவரைப்—பழித்துப் பேசுதற் பொருட்டுப் பொற்கொல்லர் ஒருவர் வரலாறும் அந்நூலுள் புகுத்தப்பட்டது போலும்! இவ்வரலாற்றைப் புகுத்தியவர் பொற்கொல்லர் வழியாகச் சில பொருள் கேடுற்றவராக இருப்பர் போலும்! மக்கள் பிறப்பில் பிறந்தவர் எந்தக் குடியில் பிறந்திருப்பினும் வஞ்சனைச் செயல் இல்லாதவராக இரார். நஞ்சினை உடைய அரவு இனத்தில் பிறக்கும் அரவுகளுள் ஒன்றும் நஞ்சு இல்லதாகப் பிறவாது. அதுபோல மனிதவர்க்கத்தில் பிறப்பவருள் ஒருவரும் வஞ்சனைச் செயல் இல்லாதவராகப் பிறவார். நஞ்சினை உடைய அரவு இனத்தில் ஒரு அரவும் நஞ்சு

இல்லதாகப் பிறவாததுபோல மக்கள் பிறப்பில் பிறப்பவர் ஒவ்வொருவரும் வஞ்சனைச் செயலை இலராகப் பிறவார். மனஸ் என்னும் அந்தக்கரணத்தை உடையவரே மனிதர். அம் மனஸ் என்னும் அந்தக்கரணத்தின் இயல்பு வஞ்சித்தலே.எது போல எனின், வேப்பங்காய்க்கும் எட்டிக்காய்க்கும் கசப்புத் தன்மை அவற்றின் வித்திலே அமைந்திருத்தல்போல மக்கள் பிறப்பினர்க்கும் அவர்கள் மாட்டுக் கருவிலே வஞ்சிப்புத் தன்மை பொருந்தி விடுகின்றதுபோலும்! அதனை உணராதவரே, 'கணக்கன் பொய்யன், கம்மாளன் கள்ளன், பார்ப்பான் பழிக்கு அஞ்சான்' எனப் பழித்து உரைப்பர். எந்தக் குடியில் பிறந்தவராயினும் மக்கள்பிறப்பினர் வஞ்சனையாளரே ஆகுவர்; நல்ல இயல்பு இல்லாதவரே ஆகுவர், நச்சரவுபோல என்க. பலவகைக் குடிகளில் பிறந்தவரும் பலவகைச் சமயத்தினரும் ஆகிய பலராலும் யான் பலமுறை வஞ்சிக்கப்பட்டேன். ஒவ்வொருவரும் நெருங்கிப் பழகுதற்குக் காலம் கூடுமாயின், பழகுந்தோறும் தம் வஞ்சனைச் செயலை விளைக்கின்றனர். பலவகை உபகாரத்தைப் பெற்றவர்களும் வஞ்சிக்கின்றார்கள். அதனால், யான் ஒவ்வொரு குடியில் பிறந்தவரைக் குறிப்பிட்டு ஒருவரையும் குற்றக் குடியினர் என்று சொல்லகில்லேன்.

மனிதப் பிறப்பினர் யாவரும் கொடிய இயல்பினை உடையராக இருக்க – வஞ்சிப்பாளராக இருக்க-ஒவ்வொருவர் ஒவ்வொரு குடியில் பிறந்தவரைச் சுட்டி இழிவாக உரைத்தல் எது போலும் எனின்,

"மிகினும் குறையினும் நோய்செய்யும் நூலோர்
வளிமுதலா எண்ணிய மூன்று"

என்ற முதுமொழிப்படி வாத பித்த சிலேத்துமங்களின் ஏற்றத் தாழ்வால் மக்கள் மாட்டுத் தோன்றும் எல்லா நோயும் மக்களைத் துன்புறுத்துவனவாய் இருப்பினும், தலைவலியை உற்றார் ஒருவர், 'எல்லா நோயையும் பொறுத்துக்கொள்ளலாம் தலைவலியை மட்டும் பொறுத்துக் கொள்ளல் இயலாது' என்றும், வயிற்றுவலியைத் கொண்டார் ஒருவர், 'எல்லா நோயையும் பொறுத்துக்கொள்ளலாம்; வயிற்றுவலியைமட்டும் பொறுத்துக்கொள்ளல் ஆகாது' என்றும் இயம்புவர். ஒவ்வொரு நோய் உறும்காலத்திலும் அந்த அந்த நோயின் கொடுமையை எடுத்து இயம்புதல்போல ஒவ்வொரு குடியிலும் பிறந்தவருடைய வஞ்

சனையை அறிந்த ஒவ்வொருவரும் ஒவ்வொரு குடியையே பழித்துப் பேசுகின்றனர் அல்லாமல் மக்களெனப் பிறந்தார் யாவரும் வஞ்சனையாளரே என்பதனை மறந்துவிடுகிறார். என்னை? ஒவ்வொருவரும் தம்மாட்டுக்கிடக்கும் வஞ்சனை இயல்பை மறைத்தே-மறந்தே-பேசுகிறார் ஆதலால். இஃதே உண்மை.

நச்சரவின் நஞ்சு வெளிப்படாதவரையில் அந்த அரவு நல்ல அரவே. மக்கள்பிறப்பினர்தம் வஞ்சனைச் செயல்கள் வெளிப்படாதவரையில் அப்பிறப்பினர் நல்லவரே. வேப்பங்காயும் எட்டிக்காயும் நாவில் உறுதவரையில் அவை நல்ல காய்களே. மக்கள்பிறப்பினரில் ஒருவரொடு ஒருவர் கூடிப் பழகாதவரையில் மக்கள்பிறப்பினர் நல்லவரே. மக்கள்பிறப்பினர் ஒருவரோடு ஒருவர் கூடிப்பழகிய பின்னரே ஒவ்வொருவரும் தம் தம் வஞ்சனைச் செயலைத் தக்கதொரு காலத்தில் விளைக்கின்றனர் என்பது நினைவில் இருத்தற்பாலது. பிறப்புவகைகளுள் மிகத் தீயஇயல்பினை உடைய பிறப்புக்கள் மக்கட்பிறப்பும் நாய்ப்பிறப்புமே என்க. என்னை? நாய் ஒன்று எச்சில் இலையை நக்கிக்கொண்டிருக்கும் காலத்தில் தன்னுடன் பன்றி ஒன்று சேர்ந்து அவ்விலையை நக்கும் ஆயின், அதனை அந்நாய் வெறுப்பதில்லை. தன் இனத்ததாகிய வேறு ஒரு நாய் தான் நக்கிக்கொண்டு இருக்கும் எச்சில் இலைக்கு அருகில் செல்லினும் அந்நாயை வெறுத்துத் துரத்தும். அதுபோல, மக்கள்பிறப்பினர் கன்றுக்குப் பாலை விடாமல் முற்றும் கறந்து விற்று உண்ணுகின்ற அயலானுடைய ஆக்கட்குப் புல்லைக் கொடுத்தலும், வாகைக்கீரையை வழங்குதலும், பறவைகட்குப் பணியாரத்தை எறிதலும், எறும்புகட்கு அவற்றின வளையைத் தேடி வாயுறையை வழங்குதலும் செய்கின்றனர். தம் இனத்தினராகிய மக்களைத் தம்மொடு பழகிய மக்களைக் காலம் அறிந்து வஞ்சித்தலைச் செய்கின்றனர்; வஞ்சித்தற்காம் காலத்தையே நோக்கி வாழ்கின்றனர் ஆதலால்.

வேப்பங்காய் பழுத்தகாலையில் அதனிடத்தில் சிறிது இனிப்புச் சுவையும் தோன்றுதல் போலப் பண்டைய "பெருமொழி மாந்தர்தம் திருமொழி" வழியில் நின்று ஒழுகியவர் மாட்டுச் சிறிது நல்ல இயல்பும் விளையும் என்பதும் நினைவில் இருத்தற்பாலது. எட்டிக்காய் பழுத்த காலத்தும் தன் கைப்பாகிய இயல்பில் மாறுதிருத்தல்போலப் பெருமொழி மாந்தர்தம்

திருமொழி வழி நிற்பினும் தம் சிற்றின இயல்பில்மாறுதவராய்ச் சிலர் இருப்பர் என்பதும் மறத்தற்பாலதொன்று அன்று. பெருமொழி மாந்தர்தம் திருமொழிவழி ஒழுகியும் தம் சிற்றின இயல்பின் நீங்காதவராய் இருப்பவரைப் பிறரை வஞ்சித்தற் பொருட்டுப் பெருமொழி மாந்தர்தம் திருமொழி நெறியைப் புறத்தே வைத்து ஒழுகுபவர் எனவும் அந்நெறியைத் தம் அகத்தே வைத்து ஒழுகாதவர் எனவும் கொள்க. அப்புற ஒழுக்கம் உடையார்பொருட்டே,

"புறந்தூய்மை நீரான் அமையும் அகந்தூய்மை
வாய்மையான் காணப்படும்" என்றும்

(நீர்: நீர்மை விகாரம்; ஒழுக்கம். இவண் புனல் அன்று.)

"அச்சமே கீழ்களது ஆசாரம் எச்சம்
அவாஉண்டேல் உண்டாம் சிறிது" என்றும் அருளி வைத்தார்போலும் மேலைப் பெரியார் எனத்தேறுக.

இவ்வேதுக்களால் ஒருவகைக் குடியில் பிறந்த ஒருவரைச் சுட்டிப் (ஒருவகைக் கூட்டத்தாரைச் சுட்டிப்) பழித்து உரைத்தல் நேரிய செயல் அன்று என்பதனை உய்த்துணர்க. மற்று,

முதலில் செந்தமிழ் மொழிக்கு இலக்கண நூலாகத் திரு அகத்திய முனிவரால் ஆக்கப்பட்ட "அகத்தியம்" என்னும் இலக்கண நூல் முற்றாக—விரிவாக—இருந்த காலத்தில் "தொல்காப்பியம்" என ஒரு நூல் தொகுக்கப்பட்டதற்கு ஏது என்னை? எனின், திரு அகத்திய முனிவர் புத்த சமயத்தவர் போலும்! அவர் புத்த சமயத்தவர் ஆனபடியால் அவரால் ஆக்கப்பட்ட நூலைப் பெரிய புராணச்சைவர்கள் அழித்துவிட்டார்கள் போலும்! எக்காலத்தில் அழித்தார்கள் எனின், திருச்சமண சமயத்தவரை அழித்த காலத்தில் என்பது உய்த்துணரற்பாலது. என்னை? பெரிய புராணச்சைவர்கள் உயரிய கருத்துக்களை உடைய நல்ல நூற்களை அழித்ததாகிய இழி செயலைத்தான் உருவகத்தின் பாத்தியாய்ப் பெரிய புராணத்துள் "புனலில் இட்ட ஏடு எதிர்சென்றது" எனவும் "கனலில் இட்ட ஏடு பச் சென்று இருந்தது" எனவும் திரித்து எழுதி வைத்துக்கொண்டார்கள் என்பதும் உய்த்துணரற்பாலதே.

திரு அகத்திய முனிவரால் ஆக்கப்பட்ட "அகத்தியம்" என்னும் நூல் அழிக்கப்பட்டபின்னர்ச் செந்தமிழ் மொழிக்கு இலக்கணம் இல்லாக் குறையைப் போக்குவான் செந்தமிழ்த்

தேஎத்தில் ஆங்காங்கு வாழ்ந்த கற்றூரைக் கேட்டும் இறந்து படாமல் எஞ்சிநின்ற உரை நூற்களின் இடை இடையே காட்டாகக் .காட்டப்பட்டுக்கிடந்த பாக்களைச் சேர்த்தும் ஒரு நூலாக்கி வைத்தார் ஆசிரியர் ஒருவர் என்க. திரு அகத்திய முனிவர் திருப் புத்த சமயத்தவர் என்பதை "வீர சோழியம்" என்னும் நூலுள், பாயிரப் பாவில்,

"ஆயுங் குணத்து அவலோகிதன் பக்கல் 'அகத்தியன்' கேட்டு
ஏயும் புவனிக்கு இயம்பிய தண்தமிழ்"

என்ற அடிகளின் பொருள் அறிவித்தலை உய்த்துணர்க.

முதல் முறை செந்தமிழ்த் தேஎத்தினர்க்கு நல்ல ஒழுக்க முறையினைக் கற்பித்தவர் திருப் புத்தசமயத்தவரே. அச்சமயத்தினருள் ஒருவராகிய திரு அகத்தியமுனிவரே முதலில் நம் தமிழ் மொழியைச் செந்தமிழ் மொழி ஆக்கினவர். (இலக்கண வரம்பால் செவ்வைசெய்யப்பட்ட தமிழே செந்தமிழ்) திருப் புத்த சமயத்தவரின் பின்னர்த்தான் திருச்சமண சமயத்தவர் போந்தனர். அவர் போந்ததால்தான் செந்தமிழர்தம் செவ்விய மறம் முற்றும் மாய்ந்து ஒழிந்தது. அவர் மாட்டு வஞ்சனைச் செயல்கள் வளர்ந்தன. அச்சமண் சமயத்தவரின் காலத்தில் தான் செந்தமிழ்த்தேஎத்தில் சீரியதாய நெறியில் கடவுள் வணக்கம் போந்தது. அவர்கள் தம் ஆகமங்களுள் கூறப்பட்ட "சமவசரணம்" என்னும் ஆலயத்தையே—விமானத்தையே—உலகில் திருக்கோயிலாகக் கொண்டார்கள். அவர்களைப் பின் பற்றித்தான் திருச்சைவ ஆகம வழிபாடும் திருமால் சமய ஆகம வழிபாடும் தோன்றின. திருக்கோயில்களும் பெருகின. அவ்வாகம வழிபாடுகளால் திருக்கோயில்கள் தோன்றிய பின்னர்த்தான் கடவுள் வழிபாட்டிற்குரிய செந்தமிழ் மொழியாலாய திருப்பாக்கள் செந்தமிழ்த் தேஎத்தில் தோன்றின—வளர்ந்தன-என்பது ஆழ்ந்து சூழ்ந்து தெளிதற்பாலது. திருச்சமண சமயத்தவர் செந்தமிழ்த் தேஎத்திற்கு வருதற்கு முன்னர்த் தூயநெறியால் உயிர்க்கொலை இல்லாத வழியால் கடவுள் வழிபாடு இல்லை என்பதற்குப் பண்டைய செந்தமிழ் நூற்களே சான்றும். என்னை? திருமுருகாற்றுப்படை என்னும் நூலினுள்,

"சிறுதினை மலரோடு விரைஇ மறிஅறுத்து" (அடி-28.)
"மதவலி நிலைஇய மாத்தாள் கொழுவிடைக்

குருதியொடு விரைஇய தூவெள்ளரிசி, சில்பலி செய்து''
''குருதிச் செந்தினை பரப்பி'' (அடி (230-231-) 242.)

இவ்வடிகளின் பொருள் பண்டைய செந்தமிழ்த் தேளத்தினருடைய கடவுள் வழிபாட்டிற்குரிய தூய்மையின் நீங்கிய நெறியை விளக்குதலை அறிக.

''சினைச் சுறவின் கோடு நட்டு
மனைச் சேர்த்திய வல்லணங்கினன்'' (பட்டி-பாலை. 86, 87)

இவ்வடிகளின் பொருளையும் நினைக்க. இவை பண்டைய தமிழர்தம் தூய்மையின் நீங்கிய கடவுள் வழிபாட்டு நெறியைக் காட்டுதலை அறிக. [''சினைச்சுறவு'' என்பது ''சினச்சுறவு'' என இருத்தற்பாலது; சுறவு, கொலையைச் செய்யும் வன் மீன் ஆதலால். மற்று, ''மனைச் சேர்த்திய'' என்பது ''மனச் சேர்த்திய'' என இருத்தற்பாலது. ''மனத்தின்கண் நிறுத்திய'' என்பதே பொருள் ஆதலால்.]

தொல்காப்பியர் என்னும் பெயர் புனை பெயரே. அப் பெயரை உடையராய ஒருவர் பிறந்ததும், இருந்ததும், இறந்ததும் இல்லை என்பது உய்த்துணரற்பாலது. பிறந்திலார் இருத்தலும் இறத்தலும் இல்லை. செந்தமிழ் மொழிக்கண் பெரும் பேராசிரியர்கள் எனச் சொல்லப்படுபவராகிய அடியார்க்கு நல்லார், நச்சினர்க்கு இனியர், பரிமேலழகர், இறையனர் என்னும் பெயர்களும் புனை பெயர்களே. அப்பெயர்கள் பண்டு ஒரு காலத்தில் திருப்புத்த சமயத்தையும், திருச்சமண் சமயத்தையும் அழித்த காலத்தில் திருப் பெரியபுராணச் சைவத்தைத் தோற்றுவித்த காலத்தில்-திருச்சைவ மடாதிபதிகளாகிய தம்பிரான்மாரால் அல்லது திருப்பெரிய புராணச் சைவர்களால் ஆக்கப்பட்ட புனை பெயர்களாக இருத்தல் கூடும் என்பது என் நம்பிக்கை. என்னை? திருவாரூர்த் திருப்பதியைப் பற்றிய புராணம் (ஸ்தல புராணம்) ஆகிய திருச் சேக்கிழார் என்பவரால் செய்யப்பட்ட திருத்தொண்டர் புராணம் என்னும் நூலுள் அதன்பிற்காலத்தாரால் பல கதைகள் புகுத்தப்பட்டு அந்நூல் பெரிய புராணம் என மாற்றப் பட்டிருத்தலே சான்றும்.

திருவாரூர்த் திருப்பதிப் புராணம் ஆகிய திருத்தொண்டர் புராணமே பெரிய புராணம் என மாற்றப்பட்டது என்பதற்கு அப்புராணத்தினுள் (இன்றுள்ள) அமைப்பே சான்றும். அப்

புராணத்தை நடுநின்று ஆய்ந்து பார்ப்பார் உண்மையை உணர்குவர்.

திருக் காஞ்சிப் புராணத்தை ஆக்கிய ஆசிரியர், திருக் காஞ்சித் திருப்பதியின் பெருமையையும் திருச்சிவ பெருமானார் தம் திரு அருளின் சிறப்பையும் திருச்சைவ சமயத்துத் திருத் தொண்டர்தம் திருப்பணிக்கு ஆம் திருப்பயனையும் காஞ்சிப் புராணம் எனத் திருக்காஞ்சித் திருப்பதியின் பெயரால் ஆக் கப்பட்ட நூலுள் விரித்து உரைத்து எழுதிவைத்தார் என்க.

திருவிளையாடல் புராணத்தை ஆக்கிய ஆசிரியர் திருவால வாய்த் திருப்பதியின்-திருமதுரைத் திருப்பதியின்-பெருமையை யும், திருச் சிவபெருமானார்தம் திருஅருளின் சிறப்பையும், திருச்சிவ சமயத்துத் திருத்தொண்டர்தம் திருப்பணிக்கு ஆம் திருப்பயனையும் திருவிளையாடல் புராணம் எனத் திருச் சிவ பெருமானார்தம் திருஅருளின் பெயரால்-திருச்சிவபெரு மானார்தம் விழைவு என்னும்-பெயரால் ஆக்கப்பட்ட நூலுள் விரித்து உரைத்து எழுதிவைத்தார் என்க.

திருவாரூர்த் திருப்புராணத்தை ஆக்கிய ஆசிரியர் திருவா ரூர்த்திருப்பதியின் பெருமையையும், அதில் வாழ்ந்த சோழ அரசன் ஒருவனதுமுறைமையையும், திருச் சிவபெருமானார்தம் திருஅருளின் சிறப்பையும், திருச்சிவ சமயத்துத் திருத்தொண் டர்தம் திருப்பணிக்கு ஆம் திருப்பயனையும் திருத்தொண்டர் புராணம் எனத் திருத்தொண்டர்தம் பெயரால் ஆக்கப்பட்ட நூலுள் விரித்து உரைத்து எழுதிவைத்தார் என்பதனை நினை வில் வைத்துக்கொண்டு அப்பெரிய புராணம் என்னும் நூலை ஆய்ந்து பார்ப்பார், திருத்தொண்டர் புராணம் என ஆக்கப் பட்ட திருவாரூர்த் திருப்பதிப் புராணமே பெரிய புராணம் என மாற்றப்பட்டிருத்தலை அறிகுவர். இவண் எடுத்துச் சொல்லப் பட்ட புராணங்களுள் எது முதலாக ஆக்கப்பட்டது என்பது இவண் ஆராயப்படவில்லை. அப்புராணங்களுள் கூறப்பட்ட கருத்துக்களே இவண் ஆராயப்பட்டன என்க. மற்று,

திருக் காஞ்சிப்புராணம், திருவிளையாடல் புராணம், திருத் தொண்டர் புராணம் எனப் பெயர்கள் மூன்றாக இருப்பினும், அவற்றுள் சொல்லப்பட்ட பொருள் ஒன்றே என்பதும் நினை வில் இருத்தற்பாலது.

அப்படி மாற்றப்பட்டதன் ஏது என்னை? திருச்சமண சமயத்தவர் 'மஹாபுராணம்' என அறுபத்துமூவர் வரலாறுகளை விரித்து உரைத்து வைத்திருத்தல் போலத் தங்களுக்கும் புராணம் என நூல் ஒன்று விரிவாக இருத்தல்வேண்டும் என்ற எண்ணத்தால் திருத்தொண்டர் புராணம் என்பது 'பெரிய புராணம்' என மாற்றப்பட்டதுபோலும்! (மஹா: பெரிய.)

அப்படி மாற்றியவர் திருச்சிவசமயத்தின் தத்துவம் சிலவும் தெரிந்திலாதவர்போலும்! தெரிந்தவராயின், அவர் அப்பெரியபுராண நூலுள் திருச்சிவசமய (ஆகமக் கருத்தாகிய) தத்துவத்தில் சிலவேயும் தர்க்க நெறிப்படி குறித்திருப்பர். அவர் திருச்சைவ ஆகமக் கருத்தாகிய தத்துவத்தில் சிலவும் தர்க்க நெறிப்படி குறித்திலர் ஆகலால், அப்பெரிய புராணத்தை ஆக்கியவர் இருந்தமிழ்ப் புலமையை உடையர்அல்லர் போலும்! அவர் புராணிக மாக்கள் இனத்தைச்சார்ந்தவரே போலும்! அவர் ஒரு புராணீகரே ஆவர். ஆதலால்தான் மக்கள் மாட்டு நல்ல ஒழுக்கம் வளராமைக்கும் தீய ஒழுக்கம் வளர்தற்கும் ஏதுவான பொய்க்கதைகளைப் புகுத்திப் புராணத்தைப் பெருக்கி எழுதிவைத்தார் என்க. அவர் திருவாரூர்த் திருப்பதிப் புராணமாகிய திருத்தொண்டர் புராணத்தைப் பெரியபுராணம் என மாற்றமல் ஒரு பொய்ப் புராணத்தை விரிவாகப்-பெரிதாக-எழுதி, அதற்கு மக்கள் மாட்டு இழிசெயலை வளர்க்கும் திருப் பெரிய புராணம் எனப் பெயர்வைத்து அவர்வரையில் மகிழ்ந்து சென்றிருந்தால் இன்று செந்தமிழ் மொழியராய மக்களைச் சார்ந்துள்ள இழிசொல் விளைந்திராது.

செந்தமிழ் மொழியராய மக்கட்கு இன்றுள்ள செந்தமிழ் மொழியாலாய பெரியபுராணம் என்னும் நூலைப் போலும் இழிவை வளர்ப்பது வேறு ஒரு நூல் எம்மொழியிலும் இல்லை. அப்பெரிய புராணத்தால் செந்தமிழ் மொழியாரைச் சாரும் இழிவை அறிந்துகொள்ளாதவரே மக்கட்கு நல்ல நெறிவளர்தற்கான பிற நூற்களைத்தீயிலிட்டு எரித்தல் வேண்டும் என்கிறார்கள். அத்தகையார் தம்முடைய அறிவுக்கு ஏற்ற செயலையே செய்கிறார்கள்போலும்! அந்தோ! அவர் செயலில் வியப்பு என்னை? வெறுப்பு என்னை?

திருத்தொண்டர் புராணமே பெரியபுராணம் என மாற்றப் பட்டது என்பதற்குச் சான்றுகள்பல அந்நூலுள்ளே கிடத்தலை

அந்நூலை நடுநின்று ஆய்வார் அறிகுவர். ஆயினும், அதற்குரிய சான்றுகளுள் சில: திருச்சுந்தரமூர்த்தி நாயனார் அருளிய 'திருத்தொண்டத் தொகை' என்னும் பதிகம் தோன்றியதற்குச் சொல்லும் கற்பனை பொருத்தம் அற்றிருத்தல் ஒன்று. திருத்தொண்டத் தொகைக்கும், திரு நம்பி ஆண்டார் நம்பிகள் அருளிய திருத்தொண்டர் திரு அந்தாதிக்கும் கற்பித்த கற்பனைகள் பொருத்தம் அற்றிருத்தல் ஒன்று. அப்புராணத்தின் தலையில் திருமலைச் சிறப்புடன் திருநாட்டுச் சிறப்பும் திருவாரூர்ச் சிறப்பும் கூறப்பட்டிருத்தல் ஒன்று. அப்புராணத்துள் திருச்சுந்தரர் வரலாறு நான்கு புராணங்களுள் பலவாகக்கலந்து கிடத்தல் ஒன்று. (அவற்றுள் திரு ஏயர்கோன் கலிக்காம நாயனார் புராணத்தில் கலப்புற்று இருத்தல் ஒன்று. அக்கலப்புப் பெருங் கலக்கமே விளக்கின்றது) இவற்றை எண்ணித் தெளிக.

'மணிமேகலை என்னும் நூலினுள்ளும் இடை இடையே கேடு செய்யப்பட்ட இடங்கள் உளவோ? ஆக்கியோன் கருத்துக்குமாறாகப் புதியனவாகப் புகுத்தப்பட்டனஉளவோ?' எனின், பல உள. என்னை! பலவகைக் கருத்துக்கள் ஆக்கியோன் கருத்துக்கு மாறாகப் புகுத்தப்பட்டிருத்தல் அல்லாமல் "சமயக்கணக்கர்தம் திறம் கேட்ட காதை" என்னும் பாவினுள் "ஆசீவகமத"த் தத்துவங்களைப்பற்றிய கூற்றுக்களுள் கடைப்பகுதியில் சிலவற்றைக் கெடுத்தும் "மற்கலிமத"த் தத்துவங்களைப் பற்றிய கூற்றுக்களுள் தலைப்பகுதியில் பலவற்றைக் கெடுத்தும் அவ்விரு மதத் தத்துவங்களையும் ஒருமதத் தத்துவமாக எண்ணும்படி மயங்கவைத்துள்ள பகுதியே மணிமேகலை என்னும் நூலுள் இடை இடையே கேடு செய்யப்பட்டுள்ள இடங்கள் பலவாக உண்டு என்பதற்குச் சான்றாம். அக்காதையுள்ளே பிற மதங்களைப் பற்றிய கூற்றுக்களுள்ளும் இடை இடையே பலவாகக் கேடு செய்யப்பட்டிருத்தலை வல்லார் வாய்க் கேட்டு அறிதல் ஒரு செயல். ஆய்ந்து அறிதல் ஒரு செயல் போலும்!

ஆசிவக மதத்தைப்பற்றி எழுதப்பட்ட பகுதியில் அம்மதத்தைப் பற்றிய கடைப்பகுதி எழுதப்பட்ட ஏடும்-ஏடுகளும், மற்கலி மதத்தைப்பற்றி எழுதப்பட்ட பகுதியில் அம்மதத்தைப் பற்றிய தலைப்பகுதி எழுதப்பட்ட ஏடும்-ஏடுகளும், அழிவுற்றோ, களையப்பட்டோ இருத்தல் கூடும் என்பதனை நுண்ணிய ஆய்வினை உடையாரே அறிகுவர். அந்நூலைப்பதிப்பித்த ஸ்ரீ உத்தம

தானப்பதி ஆகிய ஐயர் அவர்களே அக்கேட்டை அறிந்திலரா யின், பிறருள் யாரே அறிய வல்லார்? அவர் அறிந்திருப்பின், அக்கேட்டைப் பற்றிய குறிப்பு ஒன்று அந்நூலுள் வைத்திருப் பர். அவர்கள் அந்நூலுள் குறிப்பு ஒன்றும் வைத்திலர் ஆத லால், அவர்களும் அக்கேட்டை அறிந்திலர் போலும் என்பது உய்த்துணரல் ஆயிற்று என்க.

ஸ்ரீ உத்தம தானப்பதியாகிய ஐயர் அவர்கள் அந்நூலுள் முகவுரைப் பகுதியுள் எழுதி வைத்துள்ளபடி பாரீஸ் நகரத் திலே கையெழுத்துப் புத்தகசாலையுள் உள்ள "மணிமேகலை" என்னும் (மூலப்பிரதி) நூல் கிடைக்குமாயின் அதனால் பல வகைத் திருத்தங்களை அறிதல் கூடினும் கூடும். திறமுடை யார் ஊக்கங் கொண்டு தேடி அறிதல் நன்றாகும். பண்டு நம் தேசத்தில் வழங்கிய மதங்களுள் மற்கலி மதம் என்பது ஒன்று என்பதனையும் ஆசிவக மதம் என்பது அதனின் வேறாய மற்று ஒரு மதம் என்பதனையும் ஸ்ரீ உத்தம தானப்பதி ஆகிய ஐயர் அவர்கள் மறந்தனர் போலும்! என்னை? நீலகேசித் திரட்டு என வெளிப்போந்துள்ள திருச்சமணசமயச் சார்பான நூலுள்ளே "மொக்கல வாதச்சருக்கம்" என ஒரு சருக்கமும், "ஆசீவக வாதச்சருக்கம்" என மற்று ஒரு சருக்கமும் இருத்தலே மற்கலி மதம் என்பது ஒரு மதம் எனவும், "ஆசிவக மதம்" என்பது அதனின் வேறாய மற்று ஒரு மதம் எனவும் தெளிதற்கு ஏது வாகும் ஆதலால். "மொக்கலன் மதம்" என்பதும், "மற்கலி மதம்" என்பதும் ஒன்றே என்பதனையும் அப்பெயர்கள் திரிபுற்ற தால் இரண்டு மதங்களைக் குறிக்கும் இரு பெயர்கள் போல நின்று மயங்கவைக்கின்றன என்பதனையும் உய்த்துணர்க.

மற்று, ஒன்றனைச் சொல்ல மறந்து ஒழிந்தேன்! என்னை? திருக்குறள் என்னும் நூலும் திருச்சமண சமயத்தவரால் ஆக் கப்பட்டதும் திருச்சமணசமயச் சார்பாயதும் ஆகிய நூலே என்பதனை. அது, பிற எச்சமயச் சார்பாயதும் அன்று. அது அன்று ஆக்கியபடி இன்று இல்லை. 'அது திருச்சமணசமயச் சார்பாயது என்பதற்கு ஆம் ஏது என்னை?' எனின், "திருவாத வூர் அடிகள் அருளிய திருவாசகம் என்னும் திருமுறை நூலுள் சிவ புராணம் என்னும் முதல் பாவிற்கு" என்னால் எழு தப்பட்ட உரை நூலினுள் கடையில் சேர்க்கையாக வைக்கப் பட்ட "திருக்குறள் ஆசிரியர்தம் மதம் சமணமே" எ ஙு.ற கட்

டுரையைக் கண்டு அறிக. அக்கட்டுரையுள் எழுதப்பட்ட ஏது அல்லாமல் மற்றும் சில ஏதுக்கள் மேல் வருவன:—

திருச்சமண சமயத்தவர் தம்மால் ஆக்கப்பட்ட நூல்கட்குப் பெயர்களை அமைப்பாராயின், சமயச் சார்பான, ஒரு பொருளைச் சார்த்திச் சொல்லாமல் (வாளா) அந்நூல் ஆக்கப்பட்ட யாப்பின் அடியாக அல்லது பொருளின் அடியாகப் பெயர்களை வழங்குவர். என்னை? "திருநூற்றந்தாதி, திருக்கலம்பகம், திருப்பாமாலை, திருவெம்பாவை, ஜீவசம்போதனை" என்னும் பெயர்களை நினைக்க. மற்று, "நாலடியார், நான்மணிக்கடிகை, சிறுபஞ்சமூலம், ஏலாதி, பழமொழி நானூறு, வெண்பா மாலை" என்னும் பெயர்களையும் நினைக்க.

திருமால் சமயத்தவர், "இராமாநுஜ நூற்றந்தாதி, சடகோபர் அந்தாதி, நாராயண சதகம், அழகர் அந்தாதி" என்னும் நூற்களில் கடவுளர்—ஆசிரியர்-பெயர்களைச் சார்த்தியே நூல்கட்குப் பெயர்களை வைத்திருத்தலையும் திருச்சைவர், கோயில் மும்மணி மாலை, கோயில் நான்மணி மாலை, நடராஜர் பஞ்சரத்தினம், மூத்த நாயனர் இரட்டைமணி மாலை, இளைய நாயனர் நவரத்தின மாலை எனத் தம் சமயச்சார்பான கடவுள் தம் பெயரைச் சார்த்தியே நூல்கட்குப் பெயர் வைத்து இருத்தலையும் நினைக்க.

திருச்சமண சமயத்தவர் தம் புராணங்கட்குச் சமயச் சார்பான ஒரு பொருளையும் சார்த்திச் சொல்லாமல் "மஹாபுராணம், ஸ்ரீபுராணம்" என வாளா பெயர் வைத்திருத்தலையும், திருச்சைவர் தம் புராணங்கட்குக் "கந்த புராணம், விநாயக புராணம், சிவ மஹாபுராணம்" எனத் தம் கடவுளர் பெயரைச் சார்த்திப் பெயர் வைத்திருத்தலையும் நினைக்க.

திருச் சமண சமயத்தவர், தம் வழக்குப்படியே தம் சமயச் சார்பான ஒரு பொருளையும் சார்த்திச் சொல்லாமல் திருக்குறள் என்னும் நூலிற்கு அதனை ஆக்கப்பட்ட பாவின் பெயரை ஆகு பெயராகக் கொண்டு "திருக்குறள்" எனப் பெயர் வைத்திருக்கிறார்கள் என்பது நினைவில் இருத்தற்பாலது. அத்திருக்குறள் என்னும் பெயரைக்கொண்டே அந்நூல் திருச்சமண சமயத்தவரால் ஆக்கப்பட்டது எனவும் அது திருச்சமண சமயச் சார்பாயது எனவும் கொள்ளலாம். அந்நூலிற்கு வழங்கப்படும் மற்றும் ஒரு பெயரைக்கொண்டும் அத்திருக்குறள் என்னும்

நூல் திருச்சமண சமயச் சார்பாக அம்மதத்தவரால் ஆக்கப்பட்டது என்னலாம். என்னை? அப் பெயர் "மூப்பால்" என்னும் பெயரே, அப்பெயர் அந்நூல் திருச்சமண சமயச் சார்பாயது என்பதற்கு ஏதுவாகும் ஆதலால்.

'திருச் சமண சமயத்தவர் திருக்குறள் என்னும் நுலிற்கு "மூப்பால்" எனப் பெயர் வைத்ததற்கு ஏது என்னை?' எனின், அம்மதத்தவர் தலையாய கொள்கை "அமிர்தன்ன மூன்று" வகைப் பொருள்கள் கூடிய ஒரு பொருளால் அமைந்தது. அவ்வொரு பொருள்: "சம்யக்த்வம் அல்லது திரு அறம்" என்பது. அவ்வொரு பொருளுள் கூடியுள்ள மூவகைப் பொருள்கள்: சமயக்ஞானம், சம்யக்தரிசனம் சம்யக்சாரித்ரம்" என்பன. இப்பெயர்கள் வடமொழியாலாய பெயர்கள். "நன்ஞானம், நற்காட்சி, நல்லொழுக்கம்" என்பன இப்பெயர்கட்குச் செந்தமிழ் மொழியாலாய் விகற்பப் பெயர்கள். திருச்சமணசமயத் தத்துவமாகிய உண்மைப் பொருள்கள் யாவும் இம்மூவகைப் பொருள்களால் ஆய "சம்யக்த்வம் அல்லது திரு அறம்" என்னும் குறுக்கமாகிய பெயரின் பொருளையே பற்றுக்கோடாக உடையன. இம்மூவகைப் பொருள்களே மோக்ஷ மார்க்கத்தை—வீட்டு நெறியை—அடைவிப்பன என்பது திருச்சமண சமயத்தவர்தம் கொள்கை என்பது நினைவில் இருத்தற்பாலது.

"சம்யக் தரிசன ஞான சாரித் ராணி மோக்ஷ மார்க்க:"
(தத்வார். அத். 1. சூத். 1)

இவ்வடமொழியாலாய பாவில் சொல்லப்பட்ட பொருளையும்,

"நற்காட்சி நன்ஞானம் நல்ஒழுக்கம் இம்மூன்றும்
தொக்க அறச்சொல் பொருள்" (அருங்கலச். 2)

தமிழ் மொழியாலாய இப்பாவில் சொல்லப்பட்ட பொருளையும் நினைக்க. இதன் பொருள்: நற்காட்சி, நன்ஞானம், நல்லொழுக்கம் என்பனவாகிய இம்மூவகைப் பொருள்கள் கூடிய தொகைப் பொருளே திரு அறம் எனவும்—சம்யக்த்வம் எனவும்—சொல்லப்படும் ஒரு பொருள் என்பது.

கார்ப்புச் சுவையை உடைய "சுக்கு, மிளகு, திப்பிலி" ஆகிய மூவகைப் பொருள்களின் கூட்டத்தைத் "திரிகடுகம்" எனச்சொல்லுதல் போலவும், துவர்ப்புச் சுவையை உடைய "கடுக்காய், நெல்லிக்காய், தான்றிக்காய்" ஆகிய மூவகைப்

பொருள்களின் கூட்டத்தைத் "திரிபலை" எனச் சொல்லுதல் போலவும், அமிர்தம் போலும் நல்ல பயனை விளைக்கும் "சம்யக் ஞானம், சம்யக்தரிசனம், சம்யக் சாரித்திரம்" ஆகிய மூவகைப் பொருளின் கூட்டத்தையே "முப்பால்" எனச் செந்தமிழ் மொழி யால் செப்பினர், அத்திருக்குறள் என்னும் நூல் செந்தமிழ் மொழியால் ஆயது ஆதலால். மற்று,

"சம்யக் ஞானம், சம்யக் தரிசனம், சம்யக் சாரித்திரம்" என்னும் இம்மூவகைப் பொருள்களின் கூட்டத்தாலாய (சம்யக்த்வம் அல்லது திரு வறம்என்னும்) தொகைப் பொருளைத் "திரியோக மருந்து" என்றார் "நீல கேசி" என்னும் நூலின் ஆசிரியர்.

அம்முப்பொருள்களின் இயல்புகளை,

"பேர்தற்கு அரும்பிணி தாம்இவை அப்பிணி
தீர்தற்கு உரிய 'திரியோக மருந்து'இவை
'ஓர்தல் தேளிவோடு ஒழுக்கம்' இவைஉண்டார்
பேர்த்துஅப் பிணியுள் பிறவார் பெரிது இன்பம் உற்றே"

(நீலகேசி-தரும உரை. 107.)

திரி: மூன்று, யோகம்: சேர்க்கை, மருந்து: அமிர்தம்,

(இவை முப்பால்)

"நன்றாய காட்சி யுடனாகிய ஞானம் தன்னோடு
ஒன்றாகி உள்ளத்து ஒழியாமை ஒழுக்கம் என்ப
குன்றாத ஒன்றும் குறைபாட்டதுங் கூறு பவ்வே
வென்றார்தம் நூலின் விதிமெய்ம் மைஉணர்ந் தவரே."

(நீலகேசி-தரும உரை. 115)

"உள்பொருள் இதுஎன உணர்தல் ஞானமாம்
தெள்ளிதின் அப்பொருள் தெளிதல் காட்சியாம்
விள்ளற இருமையும் விளங்கத் தன்னுளே
ஒள்ளிதின் தரித்தலே ஒழுக்கம் என்பவே" (சீவகசிந்.)

இப்பாக்களின் பொருள்களால் அறிக. (விள்அற: நீக்கம் இல்லாமல்).

ஒருவர், "நன்ஞானம், நற்காட்சி, நல்லொழுக்கம்" ஆகிய இம் மூவகைப் பொருள்களுள் ஒரு பொருளைப் புறக்கணிக்கினும் அவர் வீட்டை அடையார் என்பது திருச்சமணசமய விதி. அவ் விதிப்படியே திருக்குறள் என்னும் நூல் முன்னர்க் கூறப் பட்ட "நன்ஞானம், நற்காட்சி, நல்லொழுக்கம்" என்பனவற்

மைப்பற்றியே எழுதப்பட்டது என்பதும் அத்திருக்குறள் என்னும் நூலிற்கு "முப்பால்" எனும் சிறப்புப் பெயரைத் திருச்சமண சமயத்தவர் வழங்கினர் என்பதும் உய்த்துணரற்பாலது. அச்சமயத்தவரே அந்நூலிற்கு "முப்பால்" என்னும் பெயரை வழங்கினர் என்பதனை ஐயத்தின் நீங்கித் துணிக.

திருச்சமண சமயத்தவர்தம் மதச்சார்பாக எழுதப்பட்ட நூலின் பெருமையைக் கெடுத்தற்பொருட்டே பண்டு ஒரு காலத்தில் பெரிய புராணச் சைவர்கள், உலகிற்கு ஒரு முழு முதற் கடவுளை வேண்டாத திருப் பௌத்த சமயத்தவர்களால் எழுதப்பட்ட புறத்திணைக் குரிய புறப்பொருள்களைச் சுட்டிய பாக்களைத் தொகுத்துப் பொருட்பால் எனவும், அகத்திணைக்கு உரிய அகப்பொருள்களைச் சுட்டிய பாக்களைத் தொகுத்துக் காமத்துப்பால் எனவும் பெயர்களை வைத்துத் திருச்சமண சமயத்தவரால் ஆக்கப்பட்ட திருக்குறளாகிய முப்பால் என்னும் நூலினுள் இடை இடையே கேடு செய்து, அந்நூலினுள் பொருட்பால் காமத்துப்பால் எனத் தொகுக்கப்பட்ட அவ்விரு பாலையும் கூட்டி, வேறு ஒரு வகை முப்பாலாக்கிவிட்டனர் என்பது உய்த்துணரற்பாலது.

இவ்வேதுவினால் இன்றுள்ள திருக்குறளாகிய 'முப்பால்' என்னும் நூலினுள் உள்ள பொருட்பாலும் காமத்துப்பாலும் ஆகிய இருபாலும் திருச்சமண சமயத்தவரால் ஆக்கப்பட்ட திருக்குறளாகிய முப்பாலைச் சேர்ந்தன அல்ல என்பதனைத் தேறுக. மற்று,

ஆக்கியோன் கருத்துக்கு மாறாகப் பல பாக்களைப் பிரித்துப் புதிதாக வகுத்துவைத்த பல இயல்களுள்ளும் பிறமதச் சார்பான பல பாக்களைப் புகுத்திவிட்டனர் என்பதும் உய்த்துணரற்பாலது. அந்நூலை ஆக்கிய ஆசிரியர் ஒரு பொருளைச் சுட்டிய ஒரு வகை இயலை ஒரே பாவாலும், மற்றொருவகைப் பொருளைச் சுட்டிய ஒரு வகை இயலைச் சில பாவாலும், மற்றொரு வகைப் பொருளைச் சுட்டிய ஒரு வகை இயலைப் பலபாவாலும் சொல்லி இருப்பர். அத்திருக்குறளாகிய நூலொடு புறத்திணை அகத்திணைகட்கு உரிய நூல்களின் பாக்களைக் கலந்து அந்நூலைப் பல இயலாக வகுத்து ஒவ்வொரு இயலுக்கும் பத்துப் பத்துப் பாக்களாக அறுதி இட்டு அமைத்து இருத்தலும் உய்த்துணரற்பாலதே. என்னை? "கள்ளாமை, நடுவு

நிலைமை, வெஃகாமை" என்னும் இயல்களுள் அமைந்துள்ள பாக்கள் வெவ்வேறு வகைப் பொருள்களைச் சுட்டாமல் ஒரு வகைப் பொருளையே சுட்டுதலால்.

இவ்வேதுக்களால் அந்நூலை ஆக்கிய ஆசிரியர், திருச் சமண சமயத்தவர் என்பதனையும், அவர் இன்று உள்ள திருக் குறளுள் உள்ள பொருட்பாலையும் காமத்துப்பாலையும் செய் திலர் என்பதனையும், அவர் அந்நூலுள் இயல்களைப் பத்துப் பத்துப் பாக்களாகப்பகுத்து வைத்திலர் என்பதனையும், அவ ரால் ஆக்கப்பட்ட முப்பால் என்னும் நூலினின்றும் எடுத்துச் சேர்க்கப்பட்ட பல பாக்கள் இன்றுள்ள முப்பால் என்னும் நூலுள் கலந்து கிடக்கின்றன என்பதனையும் ஆழ்ந்து சூழ்ந்து அறிதல் நல்ல அறிவை உடையார்க்கு அழகாகும். மற்று,

திருக்குறளாகிய நூலுக்கு "முப்பால்" என்னும் பெயரை வழங்கியவர் அந்நூலை ஆக்கிய ஆசிரியரே ஆவர் போலும்! தம் சமயச்சார்பான "நன்ஞானம், நற்காட்சி, நல்லொழுக்கம்" ஆகிய் இம்மூன்றனைப் பற்றியே எழுதினர்-எழுதி இருப்பர் ஆதலால். அச்சமண சமயத்தவர்க்கு "முப்பால்" என ஒரு நூல் முற்காலத்தில் இருந்ததுபோலும் எனப் பிற்காலத்தவர் எண்ணுதிருத்தற்பொருட்டுச் சிவதத்துவம் சிலவும் தெரிந்து கொள்ளாத திருப் பெரிய புராணச் சைவர் திருப்புத்த சமயத் தவரால் ஆக்கப்பட்ட புறத்திணைக்கு உரிய நூற்களையும் அகத் திணைக்கு உரிய நூற்களையும் கலந்து திருச்சமண சமயச் சார் பான "நன்ஞானம், நற்காட்சி, நல்லொழுக்கம்" என்னும் முப் பொருள்களைச் சுட்டிய முப்பால் என்னும் பெயரை உடைய நூலை (திருக்குறளாகிய நூலை) அறத்துப்பால், பொருட்பால், காமத்துப்பால் ஆகிய முப்பால் என வகுத்து வைத்தனர் போலும்! சிவதத்துவத்துட் சிலவேயும் தெரிந்தவர் பெரிய புராணம் என்னும் நூலைச் சிறிதும் போற்ருர் மதியார் என்பது நினைவில் இருத்தற்பாலது.

மணிமேகலை என்னும் நூலுள் (22:59 முதல் 61 வரை) ஆசிரிய வாக்கெனக்கொண்டுள்ள "தெய்வம் தொழாஅல் (ள்) கொழுநன் தொழுது எழுவாள், பெய்யெனப் பெய்யும் பெரு மழை என்ற அப், பொய்யில் புலவன் பொருள் உரை தேராய்" என்ற அகவற்பாவின் அடிகளையே "தெய்வம் தொழாஅள் கொழுநன் தொழுது எழுவாள் பெய்யெனப் பெய்யும் மழை".

எனக் குறைத்துத் திருக்குறள் ஆசிரியர் தம் நூலுள் வைத்துக் கொண்டார் என்க. என்னை? தெய்வம் தொழாஅல் என்பதன் பொருள் "தெய்வத்தைத் தொழுதல் போல" என்பது. தெய்வம் திருச்சமணர்தம் பஞ்சபரமேட்டிகள். அத்தொடர்களை மணிமேகலை என்னும் நூலை ஆக்கிய ஆசிரியர் பிறர் ஒருவரால் ஆக்கப்பட்ட திருப்பௌத்த சமயச் சார்பாய நூலினின்று கொண்டனர் என்பது உயத்துணரற்பாலது. மற்று, இன்றுள்ள திருக்குறளாகிய நூலுள் "அறிதோறும் அறியாமை கண்டற்றால் காமம், செறிதோறும் சேயிழையார் மாட்டு" என்று உள்ள பாவும் பண்டு திருப்பௌத்த சமயத்தவரால் அகத்திணைத் துறைக்கு இலக்கியமாகச் செய்யப்பட்ட ஒரு நூலினின்று கொண்டபர்வாகும் என்பதும் உய்த்துணரற்பாலதே. என்னை? திருச்சமண சமயத்தவர், தன்னைச் சேர்ந்தாரைப் பின்னரும் பிறத்தலைச் செய்விக்காத வீட்டை அடைதற்கு ஆம் நெறி பெரும்பாலும் இளமையில் துறத்தலே இளமையில் துறத்தலே எனத் துறவையே சிறப்பித்துச் சொல்பவர் ஆதலால். வீட்டை அடைதற்கு ஆம் நெறியை விளக்குவான் எழுதப்பட்ட திருக்குறளாகிய முப்பால் என்னும் நூலுள் பெண்களைக் காதலித்து அவர்களைக் கூடும் காதலர்க்கு அக்கூட்டத்தால் உண்டாம் இன்பம் இத்தகையது என அவ்வின்பத்தை உவமை முகத்தால் சிறப்பித்துச் சொல்லார் ஆதலால். கடவுளையும் வீட்டையும் பற்றிச் சிலவும் பேசாதவரும், புறத்திணைத்துறை அகத்திணைத்துறைகட்கு ஆம் இலக்கண இலக்கியங்களைப் பலவாக எழுதிவைத்தவரும் திருப் புத்தசமயத்தவராய ஆசிரியன்மாரே ஆவர். ஆதலால், அவரே மகளிரைக் கூடுங்கால் அக்கூட்டத்தால் ஆடவர்க்கு உண்டாம் இன்பம் இத்தகையது என உவமை முகத்தால் அவ்வின்பத்தைப் பெரிதாக மதித்து விதந்து விளம்பி வைத்திருப்பார் என்பது உய்த்துணரற்பாற்று. உலகிற்கு ஒரு முழு முதற் கடவுளை வேண்டாத திருப் புத்த சமய ஆசிரியன்மாரும் வீட்டைப் பற்றிய நூற்களை எழுதியிரார். தேவ பிறப்பைப்பற்றி மட்டும் எழுதியிருப்பர். பிறமதத்தர் அவற்றை அழித்து இருப்பர்போலும்! இன்றுள்ள மணிமேகலை என்னும் நூலினுள் தவத்திறம் பூண்டு தருமம் கேட்ட காதையில் எழுதப்பட்டுள்ள திருப்புத்தமதச் சார்பான "தர்க்க சங்கிரகமே" அதற்குச் சான்றும். என்க.

நான்முகன் திருவந்தாதி 26-ஆம் பாவிற்கும் திருவாய்மொழி 85-ஆம் பாவிற்கும் கவிக்கருத்துக்கு மாறுகிய பொருள்களை எழுதிவைத்தபடியால் திவ்யார்த்த தீபிகை உரைகாரர் திரிபு உணர்ச்சியை உடையராயினர் எனத் தேறுக. (ரு)

## பன்னிரண்டாவது ஆய்வு உரை: கிளை—6.

''எந்தொண்டைவாய்ச் சிங்கம் வாவென்று எடுத்துக்கொண்டு
அந்தொண்டைவாய் அமுது ஆதரித்து ஆய்ச்சியர்
தந்தொண்டை வாயால் தருக்கிப் பருகும் இச்
செந்தொண்டைவாய் வந்து காணீரே
சேயிழையீர் வந்து காணீரே'' (பெரியாழ்- 1-2-14)

இத்திருப்பாவிற்கு எழுதப்பட்ட திவ்யார்த்த தீபிகை உரையுள்-குறிப்பு என்னும் பாத்தியில் இத்திருப்பாவில் அமைந்துள்ள ''சிங்கம்'' என்பதன் உவமைச் சிறப்பை விளக்குதல் பொருட்டுக் காட்டாக ''ஸம்ந்யாசிகளைக் குறிக்கும் சீயர் என்னும் சொல்லும் இத்திறத்ததே; சீயம்—சிங்கம்; அது போன்றவர்—சீயர். தலைவர் என்றபடி. ஜீயர் என்கை மரபுஎன்பர்;'' எனப் பொருத்தமற்ற குறிப்பை எழுதிவைத்தார் திவ்யார்த்த தீபிகை உரைகாரர். அப் பொருத்தமற்றதாகிய குறிப்பைத் தாங்குதற்கு ஒரு மதலையாக;

''எப்பொருள் எச்சொல்லின் எவ்வாறு உயர்ந்தோர் செப்பினர் அப்படிச் செப்புதல் மரபே'' என ஒரு விதியையும் எழுதிவைத்தார். அவ்விதி அவரது செயலைத் தாங்கவில்லை என்பதனை அவர் உணர்ந்திலர் போலும்! என்னை? மிகு அடக்கம்-ஸம்யமம்-உடைமையால் சாதுக்கள் ஆயினர் இயல்புக்குக் கொடுஞ் செயலால் அடக்கம் அற்றதாகிய விலங்கினுடைய இயல்பு எவ்வகையால் ஒப்பாகும்? ஒப்பாகாது ஆதலால். யதிகளைக் குறிக்கும் ஜீயர்-சீயர்-என்பதன் பொருள் மற்றுஎன்னை? இந்திரியங்களினுடைய குறும்பை வென்றவர்-ஸம்யமம் உடையவர்-என்னும் சிறப்புப் பொருளைச் சுட்டும் ''ஜிதேந்திரியர்'' என்னும் வடமொழித் தொடர், தமிழ் மொழியுள் மரூஉவின் பாத்தியாய்ச் சீயர்-ஜீயர் எனப் போந்துள்ளது என்க. ஜீயர்-சீயர் - என்பதன் பொருள் இந்திரியங்களை ஜயித்தவர் என்பதே. இப் பொருளே அறிவால் உயர்ந்தோர் செப்பிவரும் மரபு நெறி தவறாத பொருள் என்பதனைத் தீபிகை உரைகாரர் உணர்ந்திலர் போலும்!

மற்று "ஸிம்ஹம்" என்னும் வடமொழி செந்தமிழுள் "சிங்கம்" எனவும் "சீயம்" எனவும் வழங்கப்படுதல் அல்லாமல் அம்மொழி வடமொழியுள் "ஜீயம்" எனவும் "சீயம்" எனவும் வழங்கப்படுதல் வழக்கில் இல்லை என்பதனை அத்தீபிகை உரைகாரர் உணர்ந்திலர் போலும்! நல்ல அறிஞர் மாட்டுக் கேட்டு உணர்வாராக.

இவ்வுண்மைப் பொருளை உணர்ந்திலாமையால் தம்மால் காட்டப்பட்ட விதிக்கு மாறான பொருளை எழுதி வைத்தார் போலும்! அத்திவ்யார்த்த தீபிகை உரைகாரர்! "சீயர்" என்னும் சொல்லைக்கொண்டு அடக்கம் உடைய-ஸம்யமம்-உடைய-யதிகளை அடக்கம் அற்ற சிங்கத்தோடு ஒப்பென உவமை உரைத்த அவரது செயல், அவருடைய திரிபு உணர்ச்சியை விளக்குதலை அறிக. (௬௱)

## பன்னிரண்டாவது ஆய்வு உரை: கிளை—7

"மால் இருஞ் சோலை என்னும் மலையை உடைய மலையை
நால் இரு மூர்த்தி தன்னை நால் வேதங்கடல் அமுதை
மேல் இருங் கற்பகத்தை வேதாந்த விழுப் பொருளில்
மேல் இருந்த விளக்கை விட்டுசித்தன் விரித்தனவே"

(பெரியாழ். 4-3-4)

திவ்யார்த்த தீபிகை உரை எனும் நூலுள் இத்திருப்பாவிற்கு எழுதப்பட்ட உரையுள், குறிப்பு என்னும் பாத்தியுள் "இத்திருமொழி (பெரியாழ். 4-3-11.) கற்றார்க்குப் பலஞ்சொல்லித் தலைக்கட்டாதொழிந்தது" எனச் சிறப்புரை எழுதி வைத்தார், அத்திவ்யார்த்த தீபிகை உரைகாரர். அவர் எழுத்துப்படி அத்திருமொழியைக் கற்பார்க்குக் கற்பதால் ஆம் பயனை அத்திருப்பாவில் திரு ஆழ்வார் அருளவில்லை என்பதே அவரது கருத்துப் போலும்! என்னை? அத்திருமொழியில் கடைப்பாவாகிய இத்திருப்பாவில் "விட்டு சித்தன் விரித்தனவே" என்ற விதப்பால், முன் திருமொழியில் (4-2-11ல்) கடைப்பாவில் அருளியபடி (4-3-11ஐ) இத்திருமொழியைக் கருதி உரைப்பவர் "கண்ணன் கழலிணை காண்பர்கள்" என்பதன் பொருளைச் சொல் எச்சத்தின் பாத்தியாய்க் கொள்ளல் வேண்டும் ஆதலால். ஆரிஷப் பாக்களில் குறிப்பெச்சத்தின் பாத்தியாய்ப் பொருள் கொள்ளலும், சொல் எச்சத்தின் பாத்தியாய்ச் சொற்களைத் தந்துரைத்தலும் பெருவழக்கே. இப்பெற்றிய உண்மைப் பொருளை

உணராததன்றிச் சொல் எச்சம் என்னும் விதி ஒன்று செந்தமிழ் மொழிக்கண் இருத்தலையும் உணர்ந்திலர் போலும் அத்திவ்யார்த்த திபிகை உரைகாரர்! மற்றும்,

இத்திருப்பாவிற்கு எழுதப்பட்ட உரையுள் குறிப்பு என்ற பகுதியில் "இப்பாசுரங்களை அறிகையே இது கற்றார்க்குப் பயனும் என்று திரு உள்ளம் பற்றி என்க" (இத் திருமொழிக்குப் பல சுருதி பகரவில்லை) என்று எழுதிவைத்தார் அத்திவ்யார்த்த தீபிகை உரைகாரர். ('திருவுளம் பற்றி' என்பதன் பொருள் என்னை?) "திருவுளம் பற்றி" என்ற எச்சத்திற்கு வினை முடிபு என்னை? அத்தொடர் பொருளற்ற வெற்றுரைத் தொடரே. என்னை? (பெரியாழ்-4-2-11ல்) உரைக் குறிப்பில் "இத்திருமொழி கற்றார்க்குப் பலஞ்சொல்லித் தலைக் கட்டுகிறார் இப்பாட்டால்'' என்று எழுதிவைத்த பொருளுக்கும் இத்திருப்பாவில் (4-3-11ல்) உரைக் குறிப்பில் "இப்பாசுரங்களின் பொருளை அறிகையே இது கற்றார்க்குப் பயனுமென்று திருவுள்ளம் பற்றி என்க,'' என்று எழுதிவைத்த பொருளுக்கும் யாது ஒற்றுமையை அல்லது வேற்றுமையைக் கண்டுள்ளார்? கண்டிருப்பின், "இத்திருமொழி கற்றார்க்குப் பலஞ்சொல்லித் தலைக் கட்டாதொழிந்தது'' என்றதன் பொருள் என்னை? அக்குறிப்பாகிய பொருள்கள் அவருடைய திரிபு உணர்ச்சிச் செயலைத் தெள்ளிதின் விளக்குதலை அறிக. (எ)

## பன்னிரண்டாவது ஆய்வு உரை: கிளை—8.

"ஊருண் கேணி உண்துறைத் தொக்க
பாசி யற்றே பசலை காதலர்
தொடுவுழி தொடுவுழி நீங்கி
விடுவுழி விடுவுழிப் பரத்த லானே,, (குறுந்தொகை-399.)

இவ்வகவற்பாவைத் திருப்பாவையுள் பத்தொன்பதாம் பாவிற்கு எழுதிய உரையிடையே காட்டாகக் கொண்டு "இப்பாவிற்கு.'' ஊரிலுள்ள ஜனங்கள் உண்கைக்குரிய நீரையுடைய குளத்தினுள் தொக்கிக் கிடக்கின்ற பாசி போன்றது பசலை நிறம்; ஏனெனில், நீரைத் தொட்டவிடத்தில் பாசி நீங்கியும் (தொடாது) விட்டவிடத்தில் பாசி படர்ந்துமிருக்குமாறுபோலக் கணவன் தோடுமிடங்களில் பசலை நீங்கியும் தொடாது விடுமிடங்களில் பசலை பரவியும் இருத்தலாலென்க. கணவனுடைய கை ஒரு நொடிப்பொழுது நெகிழ்ந்தவளவிலும் காதலியின்

மேனி வைவர்ணியம் அடையும் என்பது தேர்ந்த தாத்பரியம்'' எனத் தம்மொழியால் பொருள் எழுதிவைத்தார் திவ்யார்த்த தீபிகை உரைகாரர். அப்பொருள், அவருடைய திரிபு உணர்ச்சியை—மரபறியா மாண்பை—விளக்குதல் அல்லாமல், அப்பாவின்கண் பொருந்தியுள்ள உண்மைக் கருத்தை விளக்க வில்லை என்பதனை அவர் உணர்ந்திலர் போலும்! என்னை?

அவர், 'உழி' என்பதற்கு இடம் எனப் பொருள் கொண்டு அப்பாவில் அமைந்துள்ள "தோடு உழி" என்பதற்குத் 'தோட்ட இடம்'' எனவும், "விடு உழி" என்பதற்கு "விட்ட இடம்' எனவும், பொருத்தமற்ற பொருளை எழுதிவைத்தார் ஆதலால், கணவன் தன் காதலியை நெற்றியைத் தொட்டால் அவளுடைய நெற்றியில் பரவி இருந்த பசலை மட்டும் நீங்கி அவளுடைய தோள் மார்பு முதலிய உறுப்புக்களில் பரந்து கிடந்த பசலை நீங்காது கிடக்கும் என்பதும், அவளுடைய தோளைத் தொட்டால் தோளில் பரந்து கிடந்த பசலை மட்டும் நீங்கி, நெற்றி மார்பு முதலிய உறுப்புக்களில் பரந்து கிடந்த பசலை நீங்காது கிடக்கும் என்பதும், அவளுடைய மார்பைத் தொட்டால் மார்பில் பரந்து கிடந்த பசலை மட்டும் நீங்கி, நெற்றி தோள் முதலிய உறுப்புக்களில் பரந்து கிடந்த பசலை நீங்காது கிடக்கும் என்பதும் அவரது கருத்து என்பது விளக்கமாகத் தோன்றுதலால்.

நூற்களைக் கசடறக் கற்று நல்ல அறிவைப் பெறாத தெருக்கூத்தர் நன்றாகக் கல்லாதாரால் கற்பிக்கப்பட்ட சில பொறுக்குப் பாக்களைக்கற்று இரவெல்லாம் கத்திக்கொண்டு குதித்து இரவைக் கழித்துச் செல்லுதல் போலக் கற்க வேண்டுவனவற்றை நல்ல ஆசிரியர் மாட்டுக் கசடறக் கல்லாமல் சில புராணங்களுள் சில பாக்களைப் பொறுக்கிக் கற்று அவற்றைப் புராணப் பிரசங்கம் எனவும் சொற்பொழிவு எனவும் கரைந்து காலத்தைக் கழித்துச் செல்லுதலே பெரிய புலமை என எண்ணிக்கொண்டு முறையாகக் கற்றவரைப் பழித்துப் பிதற்றும் புராணீகராய பேதைமைப் பண்பினர்க்கும் அரசியலாரால் பொறுக்குப் பாட்டுக்களைக் கற்பித்து ஆக்கப்படுகின்ற இளம் புலமை உடைய வித்துவான்களுக்கும் பேராசிரியர்கள் செந்தமிழ்ப் பாவில் அமைத்துவைத்த உண்மைப் பொருள் விளங்குமோ? விளங்காது. அப்பாவின்கண் பொருந்தியுள்ள உண்மைப் பொருள் மற்றென்னை?

மாதரைக் காதலர் பிரியப் பிரிய (பிரியுங் காலங்களில்)

அம்மாதர்தம் நெற்றி, தோள், மார்பு முதலிய உறுப்புக்களில் பசலை வண்ணம் தோன்றிப் பரவும் என்பதும், முன்னர் மாதரைப் பிரிந்த காதலர், பின்னர் அம்மாதரைக் கூடக் கூட (கூடி உறையும் காலங்களில்) அம்மாதருடைய உறுப்புக்களில் பரவிக் கிடந்த பசலை வண்ணம் முற்றும் எஞ்சாமல் மறையும்-தோன்றாது-என்பதும் உலக வழக்கு. நூல் வழக்கும் அஃதே. அவ்வழக்கைத் திவ்யார்த்த தீபிகை உரைகாரர் அறிந்திலர் போலும்! என்னை? காதலரைப் பிரிந்த மாதருடைய உறுப்புக்களில் தோன்றும் பசலை வண்ணம் தோன்றுதற்கும் கெடுதற்கும் நீரில் பரவிப் படிந்து கிடந்த பாசி; அந்நீரைத் தொட்ட இடத்தில் நீங்கியும், அந்நீரைத் தொடாத இடத்தில் கூடியும் இருக்கும் பண்பை உவமையாகக் கொண்டார் குறுந்தொகைப் (399) பாவின் ஆசிரியர் என்பது திவ்யார்த்த தீபிகை உரைகாரர்தம் கருத்துப் போலும்! அவரால் கருதப்பட்ட பொருள், அக்கவியின் கருத்து அன்று. நீரைத் தொட்ட இடத்தில் அதன் மீது பரவிக் கிடந்த பாசி நீங்கும் என்பதற்கும் அந்நீரைத் தொடாத இடத்தில் அதன்மீது பரவிக்கிடந்த பாசி நீங்காமல் அவ்விடத்தில் கூடியே கிடக்கும் என்பதற்கும் அப்பாவில் உவமை கூறப்படவில்லை. குளத்திலுள்ள நீரைத் தொட்ட காலத்தில் அந்நீர்மேல் படிந்து கிடந்த பாசி விரைந்து நீங்குதல் போலப் பிரிந்த காதலன் கூடிய காலத்தில் காதலிதன் உறுப்புக்களில் பரவிக்கிடந்த பசலை விரைந்து நீங்கும் எனவும், குளத்திலுள்ள நீரைத் தொட்டகையை அந்நீரினின்று எடுத்த காலத்தில் அந்நீரில் தொட்டவிடத்தில் நீங்கி நின்ற பாசி, விரைந்து கூடுதல் போலக் காதலன் காதலியைப் பிரிந்த காலத்தில் அக்காதலிதன் உறுப்புக்களில் பசலை வண்ணம் விரைந்து கூடும் எனவும் உவமை கூறிவைத்தார், அக்குறுந்தொகைப் பாவின் (399) ஆசிரியர். அவர், பாசியிடத்துள்ள பிரிதலும் கூடுதலும் ஆகிய விரைவுப் பண்பையே-கால அளவையே-மாதரைக் கூடுதலும் பிரிதலுமாகிய பசலை வண்ணத்தினுடைய பண்பிற்கு உவமையாகக் கொண்டார். இவ்வேதுவினால் அவ்வாசிரியர், ஒருவர் நீரைத் தொடுகின்ற காலத்தில் அந்நீரில் கிடந்த பாசி பிரிதற்கும் கூடுதற்கும் இடைப்பட்ட காலத்தையே உவமையாகக் கொண்டார் அல்லாமல் நீரைத் தொடும் இடத்தையும் தொடாத இடத்தையும் உவமையாகக் கொண்டிலர் என்பதனைத் திவ்யார்த்த தீபிகை உரைகாரர் உணர்ந்திலர். அவர் உணராமைக்கு ஏது என்னை? அவருடைய

திரிபு உணர்ச்சியே ஆம்.

இவண் காட்டப்பட்ட குறுந்தொகைப் (399 வது) பாவில் நான்கு இடங்களிலும் நின்றுள்ள 'உழி' என்னும் மொழி 'வழி' எனவே இருத்தற்பாலது. என்னை? தொல்காப்பியம் வினையியல் (32-ம்) பாவிற்கு எழுதப்பட்ட உரை இடையே ஆசிரியர் நச்சினார்க்கு இனியர்,

"விடுவழி விடுவழிச் சென்றாங்கு அவர் தொடுவழி
தொடுவழி நீங்கின்றால் பசப்பே"

என்ற நெய்தற்கலிப்பாவுள் (13-21 ல்) அமைந்துள்ள தொடர்களை வினைஎச்ச வாய்பாட்டிற்குக் காட்டாகக் கொண்டார் ஆகலால். அவர் அத்தொடர்களைக் காட்டாகக் கொண்டதன்றி அக்கலித்தொகை நூலுள் அத்தொடர்கட்குத் "தொடுவழி தொடுவழி நீங்கின்றால் பசலை" என்பதற்குத் "தீண்டத் தீண்டப் பசலை நீங்கிற்று" எனப் பொருளும் எழுதி வைத்தார். அப்பொருளை எழுதிய அவர் "விடுவழி தொடுவழி-என்பன செயவெனெச்சக் குறிப்புச் சொல்லாகிய "வழி என்னும் வினை எச்சம்" என்று குறிப்பும் எழுதி வைத்தார். ஆதலால், அவருடைய கருத்தை ஆழ்ந்து சூழ்ந்து தேறுக. திவ்யார்த்த தீபிகை உரைகாரர் குறுந்தொகைப்பாவுள் அமைந்துள்ள அத்தொடர்கட்குக் கவிக்கருத்துக்கு மாறாகிய உவமைப் பொருளைக் கொண்ட செயல் அவருடைய திரிபு உணர்ச்சியை விளக்குதலை அறிக.

(அ)

## பன்னிரண்டாவது ஆய்வு உரை: கிளை—9

"குற்றம் குறை கண்டு கூறும் குரவர்கட்கு
எற்றைக்கும் கைம்மாறும் என்தலையே-கற்றோர்கள்
கல்லா அடியேனைக் கண்ணுற்று இகழாரேல்
எல்லாம் எளிதாம் எனக்கு"

எனத் தாமே ஒரு வெண்பாவை அமைத்துத் தம்மால் எழுதப்பட்ட திவ்யார்த்த தீபிகை உரைநூலுள் முகவுரையில் வைத்துக்கொண்டார். அவர் அப்பாவைப் பலவாகப் பெருமையாகவும் எடுத்துப் பேசுகின்றார். (எழுதியும் வருகின்றார்) அப்பாவிற்குப் பொருள் என்னை? "குற்றம் குறை கண்டு கூறும் குரவர்கட்கு, எற்றைக்கும் கைம்மாறும் என்தலையே" எனக் கரைபவர் தம்மால் எழுதப்பட்ட நூற்களினுள் காணப்படும் பிழைகளை எடுத்துக் காட்டியவரைச் சீறி உரைத்தல்

நேரிய செயல் அன்று என்பதனை உணர்ந்திலர். 'அவர் உணராமைக்கு ஏது என்னை?' எனின், அவருடைய திரிபு உணர்ச்சியே ஆம். அப்பாவில் அமைந்துள்ள பின் இரண்டு அடிகளின் பொருள்: "கற்றவர்கள் என்னுடைய கற்பின் குறைவை எடுத்துக் கழறுவிடில் என்னினும் சிறந்த புலவர் இவ் வுலகில் எவரும் இரார்" என்பதே அன்றோ? இக்கருத்துக்குத் தொனிப் பொருள் என்னை? "கற்றவர்கள் என்னுடைய கற் பினைப் பற்றிய குறைவைக்கண்டு கழறின் என்னைக் காட்டி லும் இழிந்த புல்லியர் இவ்வுலகில் எவரும் இரார்" என்பதே ஆம் அன்றோ? மற்று,

அப்பாவிறகுப் பொருந்திய வேறு ஓர் உவமைப் பொரு ளையும் நினைக்க. அவ்வுவமையாவது: "என்மாட்டுப் பகை வைத்த ஏவல் இளைஞர்-வில்லாகிய படையை உடையை வீரர்-என் முன்னர்த் தோன்றுவிடில் என்னைக்காட்டிலும் கொற்றம் உடையவர் இவ்வுலகில் எவரும் இரார்" எனவும், "என்மாட்டுப் பகைவைத்துள்ள வீரர் தம் படையுடன் என் முன்னர்த் தோன்றிவிடில் என்னைக்காட்டிலும் ஓட்டம் உடையார் இவ்வுல கில் எவரும் இரார்" எனவும் தன்னுடைய எளிமைப் பண்பை வன்மைப் பண்பாகச் சொல்லிக்கொள்ளும் பேதையான் கொற் றக் கூற்றையும் ஒப்பாக உளது என்பதே. அதனை அத்திவ் யார்த்த தீபிகை உரைகாரர் உணர்ந்திலர். அவர் உணரா மைக்கு ஏது என்னை? அவருடைய திரிபு உணர்ச்சியே ஆம் என்க. பல வகைப் பொருள் குற்றங்கள் அமைய ஒரு பாவை அமைத்து வைத்துக்கொண்டு அப்பாவைப் பெருமையாக எடுத்துப் பேசுதலும் எழுதுதலும் ஆகிய அவரது செயல், அவருடைய திரிபு உணர்ச்சியை விளக்குதலை அறிக. (கூ)

## பன்னிரண்டாவது ஆய்வு உரை: கிளை-10.

தமக்கு எழுதப்பட்ட ஒரு கடிதத்தில் 'விஹிதம்' என எழுதிப் பின்னர் அம்மொழி இடையே அமைந்த 'ஹி'யை அடித்துத்-திருத்திக்-'கி'யை எழுதினராம். அதாவது 'விகிதம்' என எழுதினராம் செந்தமிழைச் செவ்வையாகப் பயின்ற வரும், செந்தமிழ் மொழியால் பல நூற்களை எழுதி வெளியிட்டு அவ்வெளியீட்டு வழியாகச் செந்தமிழ் மாணவர்க்குச் செந் தமிழ் நூற்களை ஆய்ந்து அறியும் நெறியை அளித்து வருப வரும், அதனால் செந்தமிழ் உலகில் பெரும்பேராசிரியராக

விளங்குபவரும், மஹாவித்துவான் என்னும் புகழ்ப் பெயரை உடையவரும் ஆகிய ஸ்ரீமான் மு. இராகவ ஐயங்கார் அவர்கள். அவ்வையங்கார் ஒரு மொழியுள்'ஹி'யைத் திருத்திக்'கி'யை எழுதியதனல் அவரை 'மதி இழந்தவர்' ஆயினர் என்று எழுதி வைத்தார் அத்திவ்யார்த்ததீபிகை உரைகாரர்.(தம்மால் எழுதப் பட்ட 'செந்தமிழ் ஆராய்ச்சி' என்னும் நூலுள்).

அவர் தம்மால் எழுதப்பட்ட 'திவ்யார்த்த தீபிகை உரை' என்னும் நூலின்முகவுரையில் ஔகாரம் ஆகிய உயிர் எழுத்தை முதலாக உடைய 'ஔசித்யம்' என்னும் வடமொழிக்கு முதலில் (வடமொழி லிபியாக வழங்கப்படும்) கிரந்தமொழி என்னும் எழுத்து வடிவில் உயிர்வர்க்கத்தில் ஐகாரத்தின்பொருட்டு ஏகாரத்தின் முதலில் எழுதப்படும் ஐகாரக் குறியாகிய (ெ) கொம்பு உறுப்பினை ஔகாரத்தின் முதலில் எழுதி "ெஔசித்யம்" என எழுதி அம்மொழியைத் தடித்த எழுத்தால் விளக்க மாகத் தெரியும்படி அச்சிட்டு வைத்துக்கொண்டார்.

"ஔசித்யம்" என்பதன் முதலில் (கிரந்த மொழியுள் ஐகார உறுப்பாகிய) கொம்பு உறுப்பைக் கூட்டி "ெஔசித்யம்" என எழுதியவர் அறிவை உடையவரா, அறிவை இழந்தவரா? முதலில் "லிஹிதம்" என எழுதிப் பின்னர் 'ஹி'யைத் திருத்திக் 'கி'யை எழுதியவர் 'லிகிதம்' என எழுதினவர் மதியை இழந்தவரா, மதியை உடையவரா? என்பனவற்றைச் செந் தமிழ் அறிஞர்தம் வாய்வழியாக அல்லது வடமொழி அறிஞர் வாய்வழியாகக் கேட்டு நல்ல அறிவை உடையார் ஒருவரை இன்றேனும் தேறுவாராக, அன்று தேர்ந்திலர் ஆதலால். இப் பெற்றிய சிறு தவறுகள் எவர்க்கும் உண்டாகும் என்பதனை அறிவுறுத்துவான் எண்ணியே தேவர் திருவள்ளுவரும்,

"அறிய கற்று ஆசற்றார் கண்ணும் தெரியுங்கால் இன்மை அரிதே வெளிறு" என அருளிவைத்தார் என்பதனைத் திவ்யார்த்த தீபிகை உரைகாரர் உணர்ந்திலர் போலும்! அவர் 'ஔசித்யம்' என எழுதற்பாலதை 'ெஔசித்யம்' என எழுதிவைத்த செயல் அவருடைய திரிபு உணர்ச்சியை விளக்குதலே அறிக. (ய)

## பன்னிரண்டாவது ஆய்வு உரை: கிளை—11

திவ்யப் பிரபந்த திவ்யார்த்த தீபிகை உரைகாரர் தம்மால் எழுதப்பட்ட 'செந்தமிழ் ஆராய்ச்சி' என்னும் நூலுள் செந் தமிழ் மொழியால் பெரும்பேராசிரியரான ஸ்ரீ. மு. இராகவ

ஐயங்கார் அவர்களைச் சுட்டி 'இவர் கள்ளன், பள்ளன், சொற்களைக்கொண்டு திவ்யப் பிரபந்தத்துக்குத் திருத்தங்கள் காட்டுகின்றார்' என அப்பெரும்பேராசிரியர்தம் புலமையைப் புறக்கணித்ததன்றிப் பண்டைய செந்தமிழராய பெரும்பேராசிரியர்களையும் 'கள்ளன், பள்ளன், புலையன்' எனவும் செந்தமிழ் மொழியைக் 'கள்ளன் தமிழ், பள்ளன்' தமிழ் எனவும் இழித்து உரைத்தும் எழுதிவைத்தார்.

செந்தமிழராய திரு ஆழ்வார்களால் அருளப்பட்ட திருப்பாக்களில் செறிந்து கிடக்கும் பிழைகளைக் களைதற்குப் பண்டைய செந்தமிழராய ஆசிரியர்கள் செந்தமிழ் மொழியுள் அருளிவைத்த கருத்துக்களை மேற்கோளாகக் கொள்ளக் கூடாது என்ற திவ்யார்த்த தீபிகை உரைகாரர் செயல் அவருடைய திரிபு உணர்ச்சியை விளக்குதலை அறிக. (யக)

## பன்னிரண்டாவது ஆய்வு உரை: கிளை—12

திவ்யார்த்த தீபிகை உரைகாரர் தம்மை 'மரபுநெறி அறியாதவர்' எனத் தாமே தம் உரை நூலுள் கல்வெட்டாக அமைத்து வைத்துக்கொண்டார். என்னை? செந்தமிழரும் செந்தமிழால் பெரும்பேராசிரியரும் திருச்சைவ சமயத்தவரும் ஆயினார் ஒருவரால் ஆக்கப்பட்ட திருச்சைவசமயச்சார்பான திருப்பதி(ஸ்தல) புராணம் ஒன்றில் அமைத்து வைத்த அவையடக்கப்பாட்டு ஒன்றனை எடுத்து அதனைப் பொன்னைப் போற்றுதல் போலப் போற்றி ஆசிரிய திருவாக்கெனத் தம்மால் எழுதப்பட்ட திவ்யப் பிரபந்த திவ்யார்த்த தீபிகை உரை என்னும் உரை நூலின் முகவுரையில் வைத்துக்கொண்டார் ஆதலால். அதனால் தம்முடைய திரிபு உணர்ச்சியைத் தெள்ளத் தெளிய விளங்க வைத்துக்கொண்டவரும் ஆயினர். என்னை? மரபறிந்தார் ஒருவர், நேரிய உணர்ச்சியை உடையார் ஒருவர், திரிபு உணர்ச்சியைச் சாராதார் ஒருவர், தம் மதத்தைப் பழித்து உரைக்கும் இயல்பினை உடைய பிறமதத்தாரால் பிறமதச் சார்பாக எழுதப்பட்ட ஒரு நூலினின்று ஒரு மொழியை, ஒரு தொடரை, ஒரு பாவை ஆசிரியத் திருவாக்கெனக் கொள்ளார்; திவ்யார்த்த தீபிகை உரைகாரர் கொண்டார் ஆதலால். கொண்டதனால், அவர் மரபறிந்த அறிஞர் ஆகார்; நேரிய உணர்ச்சியை உடைய அறிஞரும் ஆகார்; திரிபு உணர்ச்சியை உடையரே ஆவார்.

'அத்திவ்யார்த்த தீபிகை உரைகாரரால் ஆசிரியத் திருவாக்கு எனக் கொள்ளப்பட்ட பிற மதச் சார்பான அப்புராணம் யாது?' எனின், திருச்சைவ சமயச் சார்பான திருக்குற்றாலத்தல புராணம் என்பதே. அப்புராணத்தை அருளியவர் ஒருவகைச் செந்தமிழர் குடியில் பிறந்தவர். அவர் திருச்சிவ பெருமானர் ஒருவரையே முழுமுதல் இறைவர் எனக்கொண்டு ஒழுகினவர்; செந்தமிழ் மொழியால் பெரும்புலவர்; நாற்கவிராயர். அப் புராணத்துள் கூறப்பட்ட வரலாறு, திருச்சிவபெருமானுருடைய புகழ்ச்சிக்குறியே-திருமாலினுடைய இகழ்ச்சிக்குறியே. என்னே! திரு அகத்திய முனிவர் என்பவர் ஒருவர் பண்டு ஒருகாலத்தில் திருச்சிவபெருமானர் அருளிய திருக்கட்டளைப்படி செந்தமிழ்த் தேஎத்தில் உள்ள பொதிகை மலையில் வதிவான் வெள்ளிமலையி னின்று நாவலந்தீவில் செந்தமிழ் மொழி வழங்கும் தென் திசையை நோக்கிவந்த காலத்தில் திருக்குற்றாலம் என்னும் திருப் பதியில் வதிந்த திருமால் சமயத்தவராய ஒருவகைப் பார்ப்பனர் அத்திரு அகத்திய முனிவர்தம் திருச்சைவ வேடத்தைக் கண்டு இகழ்ந்தனர். தம்மைஇகழ்ந்ததன்பொருட்டு அம்முனிவரும் அவ் வைணவப் பார்ப்பனரை இகழ்ச்சி செய்வான் தாம் போற்றும் திருச்சைவத் தவ பலத்தால் அவ்வைணவப் பார்ப்பனர் திருக் கோவிலில் அமைத்துப் போற்றிவந்த திருமால் ஆகிய திருஅர்ச் சை உருவை உருக்கிக் குறுக்கி இலிங்க வடிவமாக்கி வைத்தார் என்பதே அப்புராணத்துள் புகலப்பட்ட வரலாறு ஆதலால்.

திவ்யார்த்த தீபிகை உரைகாரரால் ஆசிரியத் திருவாக்கு எனக் கொள்ளப்பட்ட பாவை உடைய புராணத்துள் உள்ள வரலாறுகளால் தம்மையும் தம் மதத்தையும் தம் இறைவரை யும் சாரும் இகழ்ச்சியை இன்றேனும் மரபறிந்த ஆசிரியன்மா ரிடத்தில் கேட்டு உணர்வாராக, அன்று உணர்ந்திலர் ஆத லால். அந்தோ! பாவம்! தம்முடைய திரிபு உணர்ச்சியால் தம்முடைய முன்உரைகாரர் சென்ற நெறியல்லாத நெறியே சென்றார் போலும்! அவருடைய முன் உரைகாரர் சென்ற நெறி யாது? அந்நெறி இழிநெறியோ? ஆம். இழி நெறியே.

திவ்யார்த்த தீபிகை உரைகாரரால் கள்ளன் எனவும் கள்ளன் தமிழ் எனவும் இழித்து உரைத்து எழுதப்பட்ட கள் ளன் தமிழ் மொழியராய கள்ளன் குடியில் பிறந்தருளிய திரு மங்கை மன்னர் என்னும் திரு ஆழ்வார், எட்டுத் திருக்கைகளை உடைய திருமால் என்னும் பொருளைச் சுட்டி அருளிய (பெரிய

திரு. 6-6-8ல்) "எண்தோள் ஈசன்" என்ற தொடர்க்கு அவருடைய முன் உரைகாரர் "எட்டுப் புஜங்களை உடைய ஈசன்—சிவபிரான்" எனப் பொருள் எழுதிவைத்தார். அப்பொருள் தம்மையும் தம்மதத்தையும் தம் ஆசிரியராய திரு ஆழ்வாரையும் இழிவுபடுத்தலை அம் முன் உரைகாரர் உணர்ந்திலர் போலும்! அச்சிறப்பற்ற பொருளையே திவ்யார்த்த தீபிகை உரைகாரரும் படி எடுத்து எழுதினர் ஆதலால், அச்சிறப்பற்ற பொருளைப் போற்றிய அகன்ற அறிவை உடையாரைத் தம்முடைய முன் உரைகாரராகக் கொண்ட பின் உரைகாரர் எத்தகைய பொருளைப் போற்றுவர்? தம்மையும் தம் மதத்தையும் சாரும் இழிவை உணர்குவரோ? உணரார். மற்று, அவருடைய முன் உரைகாரர் சென்ற இழி நெறியை விரிவாக இந்நூலுள் முதல் ஆய்வு உரையுள் ஐந்தாவது கிளையில் அறிக.

திருமாலின் பெருமைக்கு முரணை வரலாற்றை உடைய திருச்சைவ சமயத் திருப்பதி (ஸ்தல) புராணத்தினின்று "ஒரு பாவை" ஆசிரியத் திருவாக்கெனக் கொண்டு திருமால் சமயத்தவரால் செந்தமிழ் மொழியாலாய வேதம் எனப் போற்றப்படுகின்றதாகிய "திவ்யப் பிரபந்த திவ்யார்த்த தீபிகை உரை" என்னும் நூலில் முகவுரையுள் அவை அடக்கத்தின்பொருட்டுச் சேர்த்து வைத்துக்கொண்டவர் அறிவை இழந்தவரா அறிவை உடையவரா? (கால நீட்டிப்பால் இடைப்பட்ட காலத்தில்) திவ்யப் பிரபந்தத்துள் செறிந்துள்ள பிழைகளை அகற்றுவான் பண்டையசெந்தமிழ் நூற்களினின்றுமதச்சார்பற்ற நூற்களினின்று காட்டுக்களைக் காட்டி அப்பிழைகளை அறியாரைத் தெருட்டித் திருத்தம் சொல்பவர் மதியை இழந்தவரா, மதியை உடையவரா?:என்பனவற்றைத் தீபிகை உரைகாரர் செந்தமிழராய ஆசிரியன்மார்வாய்க் கேட்டு அறிவாராக. இவண் குறிப்பிடப்பட்ட இரு வகையாருள் எவர் திரிபு உணர்ச்சியை உடையவர் என்பதனையும் உணர்வாராக.

"புகழ்தரு மறைக்கு மேலோன் புடார்ச்சுன புரத்தின் சீர்மை
நிகழ்தர நிகழ்த்த வல்லே நீகோல் என்றனது நெஞ்சே
இகழ்தர வெழுந்த நாணும் இச்சையும் தினம் போராடி
அகழ்தர நாணம் தோற்றது ஆசையே வென்றது அம்மா"

என்ற இத்திருப்பாவே திருக்குற்றாலத்திருப்பதிப் புராணத்தினின்று திவ்யார்த்த தீபிகை உரைகாரரால் அவையடக்கத்தின்பொருட்டு ஆசிரியத் திருவாக்கெனக் கொள்ளப்பட்ட பா.

இப்பாவினுடைய ஈற்று அடியே இப்பாவில் முதல் அடியில் அமைந்துள்ள திருச்சிவபெருமானார்தம் புகழ்ச்சிப் பொருளைத்-திருமால்தம் இகழ்ச்சிப் பொருளை-மறைத்துத் திவ்யார்த்த தீபிகை உரைகாரருடைய அறிவைத் திரிபுறச் செய்தது-அகலச் செய்தது போலும்! அவர் மரபறிந்தார் மாட்டுச் செந்தமிழ் மொழியைக் கேட்டுக் கற்று இருப்பினும்-வடமொழியைக் கற்றிருப்பினும் அப்பாவை ஆசிரியத் திருவாக்கென-முது மொழி என-விரும்பி இரார். மற்று என்னை?

"அருந்தியுற்ற பின் நாணம் உண்டாகுமோ?" (ராமா-உலாவி-38.) என்ற பாப்போன்ற பாவையே ஆசிரியத் திரு வாக்கெனக் கொண்டிருப்பார். இத்தொடரை உடைய பாவை அருளியவர், திருமாலையே உலகுக்கு முழுமுதல் இறைவராகக் கொண்ட கருத்தினர். இத்தொடரை உடைய திருநூல் திருமால்தம் திருப்புகழைப் போற்றி உரைப்பது, திருச்சிவபிரானார்தம் இகழ்ச்சியை ஏற்றி உரைப்பது ஆதலால்.

இவ்வாய்வு உரையில் காட்டப்பட்ட பொருத்தமற்ற பொருளை எழுதிவைத்த (செந்தமிழையும் செந்தமிழராய ஆசிரியன்மாரையும் இழித்து உரைத்து எழுதிவைத்த) சிறுசெயலின்பொருட்டு 'அத்திவ்யார்த்த தீபிகை உரைகாரர்க்கு எதனைப் பாகுடமாக வழங்கலாம்? அவர்க்கு வழங்குதற்காம் பொருள் இன்னது ஆம் என்பது என்னெஞ்சில் விளையவில்லை. ஆதலால் அவர்க்குப் பாகுடமாக வழங்கும் இழிசெயலை அவர் போன்றூர்க்கே விட்டுவிடல் நன்றாம் என எண்ணி வழங்கற் செயலை யான் விட்டேன் என்க. என்னை?

அத்திவ்யார்த்த தீபிகை உரைகாரர், தினவடங்கச் சொல்லைச் சொரிந்து சுவைப்பதிலும், மகிழ்வதிலும், தினவடங்கக் கேட்டுச் சுவைப்பதிலும் மகிழ்வதிலும் தாம் வல்லவர் எனத் தம்மைத் தாமே சொல்லிக்கொள்பவர்; எழுதுபவரும் ஆவர். தினவடங்கச் சொல்லல் தினவடங்கக் கேட்டல் என்னும் தொடரை இழிதொழிலை உடைய குடிப்பிறப்பால் கீழாயினரும் தமக்குக் கீழாயினார்பொருட்டும் அறிஞர் முன்னர்த் தம் வாயால் சொல்ல அஞ்சுவர். தம் கையால் எழுதவும் அஞ்சுவர்; எழுதார். அத்தொடர் இக்காலத்தில் கேடிகள், வஞ்சகர், கள்ளர் எனவும் ரௌடிகள், வழிப்பறியர், கொள்ளையர், வம்பர் எனவும் சொல்லப்படும் கூட்டத்தாரால் வழங்கப்படும் இழிபொருள்

சுட்டிய குழூஉக்குறிச் சொல்லாம் என்பதனை அத்திவ்யார்த்த தீபிகை உரைகாரர் உணர்ந்திலர் போலும்!

'பல வேதங்களைப் பல முறை பயின்றுள்ளேன்' எனச் சொல்லிக்கொண்டு திரியும் அவர், இடக்கராய அக்குழூஉக் குறிச் சொல்லை,

"ஒழுக்க முடையாருக்கு ஒல்லாவே தீய
வழுக்கியும் வாயாற் சொலல்"

என்ற முதுமொழியைப் புறக்கணித்தவராய்ச் செந்தமிழின் திறனறிந்த பேராசிரியர் ஒருவர்பொருட்டு "அஞ்சுவது அஞ் சாமை பேதைமை" என்று ஆன்றோர் அருளிவைத்த திரு மொழிக்கு இலக்கியராய் அஞ்சாமல் எழுதிவைத்தார் ஆதலால்; தம்மால் எழுதப்பட்ட 'செந்தமிழ் ஆராய்ச்சி' என்னும் நூலுள், "தினவடங்கச் சொல்கிறேன்" எனவும் திரு நாச்சியார் திரு மொழியுள் (14–1ல்) உரை இடையே "தெளிவுடையார் பக்கல் தினவடங்கக் கேட்டறிக" எனவும் எழுதிவைத்தார் ஆதலால்.

அத்திவ்யார்த்த தீபிகை உரைகாரரைத் தினவை அடக் கிக் கேட்பித்தற்கு ஒருவர் வேண்டுமே! அச்சிறு செயலைச் செய்ய எவர் வருகுவர்? சிற்றினத்தாரைச் சார்ந்த அவர் போலும் ஒருவர் தாமே வருகுவர் ஆதலால், அச்சிறு செயலைச் செய்தலை அவர்போன்றார்க்கே விடல் நன்று என எண்ணி விட்டேன் என்க. தினவடங்கச் சொல்லுதலும் தினவடங்கக் கேட்பித்தலும் ஆகிய சிறு செயலைச் செய்யும் வழியை யான் அறிந்திலேன் ஆதலால் அத்திவ்யார்த்த தீபிகை உரைகாரரைத் தினவடங்கக் கேட்பிக்கும் சிறு செயலைச் செய்தலை யான் செய் திலேன் என்க.

அத்திவ்யார்த்த தீபிகை உரைகாரரைச் சொல்லைச் சொரிந்து சுணை உண்டாக்கினாரும் உளரோ? எனின், உளரே போலும்! என்னை? திருப்பாவையுள் பா மூன்றன் சிறப்புரை யின் இடையே(1915ம் ஆண்டு முதற்பதிப்புப் புத்தகத்தில்) தாம் எழுதிவைத்த "உலகு, லோகம் என்னும் வட சொல்லின் விகாரம்" என்பது முதலிய சில குறிப்புகளைத் தம் மூன்றும் பதிப்புப் புத்தகத்தில் கழித்துவிட்டார். அவர் கழித்துவிட்டதன் ஏது என்னை? அவர் போன்றாருள் எவரோ ஒருவர், அவ்வுலகம் என்னும் மொழி தமிழ் மொழியால் ஆயது என்பது உரை ஆசிரியர் நச்சினார்க்கு இனியர் கருத்து எனவும், தொல் காப்பியம் சொல் அதிகாரத்தில் கிளவி ஆக்க இயலில் பா 58ன்

உரையிடையே உள்ள "காலம், உலகம்" என்பன வடசொற்கள் அல்லன எனவும், தம்மால் செந்தமிழ் மொழிக்கு ஆக்கப்பட்ட இலக்கண நூலுள் வடமொழிகளை எடுத்து இலக்கணம் கூறியிரார் ஆசிரியர் எனவும் சொல்லி அவரைத் தினவடங்கச் சொல்லைச் சொரிந்து சுணை உண்டாக்கித் தெருட்டினர் போலும்!! அவர் தெருட்டப்பட்டதால்தான் தம்முடைய முதற்பதிப்புப் புத்தகத்துள் தாம் எழுதிவைத்த "உலகு, லோகம் என்னும் வடசொல்லின் விகாரம்" என்ற குறிப்பைத் தம்முடைய மூன்றும் பதிப்புப் புத்தகத்துள் தாமே கழித்துவிட்டார் போலும் என்பது உய்த்துணரற்பாலது.

அவர் செந்தமிழை அறிந்தார் மாட்டுக் கேட்டுக்கற்று இருப்பின் 'உலகு, லோகம் என்னும் வடசொல்லின் விகாரம்" என்று தம்முடைய முதற் பதிப்புப் புத்தகத்துள் தாம் எழுதிவைத்த குறிப்பை மூன்றும் பதிப்புப் புத்தகத்துள் கழித்திரார். அவர் செந்தமிழை அறிந்தார் மாட்டுக் கேட்டுக் கல்லாமையால்; ஆரியர் மாட்டுக்கொண்ட பொறாமையால் ஆரிய மொழிக்கு மிலேச்சராகிய வட மொழியைப் பழித்துக் கவிகளால் கருதப்படாத போலிப் பொருள்களைப் புகுத்தி உரை எழுதிய காஞ்சிப்புராணத்தின் குறிப்பு உரைகாரர் போலும் வழிப்போக்கர் சொல்லுக்கு அஞ்சித் தம்மால் எழுதப்பட்ட குறிப்பைக் கழித்துவிட்டார் போலும்! என்னை? அவரைத் தெருட்டுவான் கொண்ட உரைக்கு உரிய தொல்காப்பியம் சொல் அதிகாரத்தில் கிளவி ஆக்க இயல் 58-ஆம் பாவில் "தெய்வம் பூதம்" என்னும் பெயர்களும் உளவே! அப்பெயர்களின் பொருள்கள் என்னை? அப்பெயர்கள் எம்மொழியால் ஆய பெயர்கள்? வடமொழியால் ஆய பெயர்கள் என்னில், 'வடமொழியாலாய அப்பெயர்கட்கும் அப்பாவை அருளிய ஆசிரியர் இலக்கணம் எழுதி வைத்ததன் ஏது என்னை?' எனத் தம்மைத் தெருட்டியவரைக் கேட்டுத் தம்மைத் தெருட்டியவரின் வாயை அடக்கி அவரைத் தாம் தெருட்டிப் போக்காமல், தம்மால் எழுதப்பட்ட குறிப்பைக் கழித்துவிட்டார் ஆதலால். 'அப்படியானால் அத்தொல்காப்பியத்தில் (சொல்-கிளவி 58ல்) உரையாசிரியர், நச்சினார்க்கினியர் கருத்துத் தவறுடைத்தோ?' எனின், ஆம். "உலகம், லோகம் என்னும் வடசொல்லின் விகாரம்" என்றுள்ள அத்தொடரை, அவ்வுரை ஆசிரியர்தம் கருத்தாகக் கொள்ளின், அவருடைய கருத்துத் தவறுடைத்தே. தொல்காப்பியத்துள்

சொல் அதிகாரத்தில் (கிளவி-பா-58ல்.) எழுதப்பட்ட உரைக்கு அடியில் "உலகம் லோகம் என்பன வடசொல்லன்று" என்றுள்ள அத்தொடரை உரை ஆசிரியர் நச்சினர்க்கு இனியர் கருத்தென யான் கொள்ளவில்லை, மற்று என்னை? செந்தமிழையும் செந்தமிழ் ஆசிரியரையும் பழித்துப் பேசும் பண்பினை உடைய செந்தமிழின் மிலேச்சராய திருக்காஞ்சிப்புரம் திரு. அண்ணங்கராசார்ய சுவாமி என்பவர் போலும் ஆரிய மொழியையும் ஆரிய ஆசிரியரையும் பழித்துப் பேசும் இயல்பினை உடைய ஆரிய மொழியின் மிலேச்சர் ஒருவரால் செறிக்கப்பட்ட இடைச் செருகல் என்பதே என் நம்பிக்கை. இந்நம்பிக்கைக்குச் சான்றுகள் பல உள. ஆய்ந்தறிக. அல்லது செந்தமிழைத் தேர்ந்தார் வாய்க் கேட்டறிக காஞ்சிப் புராணத்தின் குறிப்பு உரைகாரர் வடமொழியின் பகைஞர் என்பதற்குச் சான்று, அக்குறிப்புரை நூலுள், மறை, வேதம்-என்னும் மொழிகட்குத் தமிழ் மொழியாலாய வேதம்என, என்றும் வழங்கப்படாத தமிழ்மொழியாலாய வேதம் என்னும் பெயரைக்கவிக் கருத்துக்கு மாருக அவர் விதந்து எழுதி வைத்து இருத்தலைக் கண்டு தேறுக.

திவ்யார்த்த தீபிகை உரைகாரர், தாம், முதற்பதிப்புப் புத்தகத்தில் எழுதிவைத்த "உலகு, லோகம் என்னும் வட சொல்லின் விகாரம்" என்ற குறிப்பைத் தம் இரண்டாம் பதிப்புப் புத்தகத்தில் கழித்தாற்போல இவண் காட்டப்பட்டனவும் அவரால் எழுதப்பட்டனவும் ஆகிய பிழைகளைச் சுட்டி 'இச்செயல்கள் நும்முடைய திரிபு உணர்ச்சியின் பாலனவாம் - நும்முடைய அறியாமைப் பண்பினவாம், என எவராவது ஒருவர் சொல்லைச் சொரிந்து அவரது தினவை அடக்குவராயின் சுணையை உடையராகி அடுத்த பதிப்பில் அப்பிழைகளைக் கழிப்பினும் கழிப்பர். என்னை?

ஔசித்யம் என்னும் மொழிக்கு முதலில் கிரந்தலிபியில் ஐகார உறுப்பாகிய கொம்பு (ெ)உறுப்பை வைத்து ஔசித்யம் எனப் பதிப்பித்தார். அவரால் எழுதப்பட்ட "திவ்யப் பிரபந்த திவ்யார்த்த தீபிகை உரை" நூலின் முகவுரையைப் பார்க்க. (1914-ஆம் ஆண்டின் பதிப்பு) அவர் ஔகாரத்தின் முதலில் ஐகாரக் குறியாகிய கொம்பு(ெ)உறுப்பைக் கூட்டி ஔசித்யம் எனப்பதிப்பித்த செயல், அவருடைய அறியாமையின் பாலதாம் எனச் சுட்டிச் சொல்லி எவரோ ஒருவர், அவருடைய

தினவு அடங்கச் சொல்லைச் சொரிந்து விளக்கும் வழியால் விளக்கியதால் சுணை உடையராகிப் பின்னர் ஔசித்யம் என எழுதாமல் கொம்பு(ெ)உறுப்பைக் கழித்து ஒளசித்யம் எனவே எழுதியும் பதிப்பித்தும் வருகின்றார் போலும்!

மற்று, அவரால் எழுதப்பட்ட திவ்யப்பிரபந்த திவ்யார்த்த தீபிகை என்னும் உரை நூலில் உள்ள நாலாயிரம் பாக்களினும் செறிந்து கிடக்கும் குற்றங்களுள் எண்ணாயிரம் குற்றங்கள் வரையிலும் ஒவ்வொன்றாக எடுத்துக் காட்டினாலும் அவர், தம் உரை நூலைத் தீயிட்டுச் சாம்பராக்கிக் கடலில் கரைத்து விட்டுத் தொகுவாய்க் கன்னல் ஒன்றனை முன்கையால் தூக்கிக் கொண்டும், கட்கம் ஒன்றனை இடையில் செருகிக்கொண்டும், காவுகோல் ஒன்றனைத் தோளில் சார்த்திக்கொண்டும் தங்கருமம் செய்தலை நாடி-தவம் செய்தலை விரும்பிக்-கங்கைக் கரையைத் தேடிச்செல்லார் என்பதிலும் என்கண் ஐயமில்லை. அவர் நாணம் என்பதனை இழந்தவர் ஆதலால். என்னை?

திருமால் சமயத்தவரால் செந்தமிழ் மொழியாலாய வேதம் எனப்போற்றப்படும் திவ்யப் பிரபந்தத்திற்குத் தாம் எழுதிய திவ்யார்த்த தீபிகை உரை என்னும் உரை நூலின் முகவுரையுள் "நாணம் தோற்றது; ஆசை வென்றது" என்றுள்ள திருக் குற்றாலத் திருப்பதியின் புராணத்தின் அவையடக்கப் பாட்டு ஒன்றனைக் காட்டாகக் கொண்டு (அதனை) ஆசிரியத் திருவாக்கெனக்கொண்டு-அதனால் தம்மை நாணம் அற்ற இயல்பினர் எனச் செந்தமிழராய அறிஞர் விளக்கமாக அறியும்படி தாமே கல்வெட்டாக எழுதிவைத்துக் கொண்டார்; அதனைப் பார்க்க. என்னை? அவர் ஆசிரியத் திருவாக்கெனக்கொண்ட பாவின் குறிப்பால் தாம் நாணத்தை இழந்தவர் என்பதனைத் தாமே ஒப்புக்கொண்டவராயினர் என்பதனை நினைக்க. நாணம் என்பது அவருடன் கூடி உறைதற்கு அஞ்சியதாய் அவரின் நீங்கிச் சென்றுவிட்டது போலும்! என்னை? நாணம் உடையார் தம்மால் எழுதப்பட்ட நூற்களிடையே - உரைகளிடையே தம்மால் செறிக்கப்பட்ட பிழைகளைச் சுட்டிக் காட்டினால், அப்பிழைகளை நேரிதில் மறுத்துத் தம் குற்றமற்ற நேரிய செயலை மெய்ப்பித்தல் ஒரு செயல். அல்லது தம் குற்றங்களை ஒப்புக்கொண்டு தாம் திருந்துதல் ஒரு செயல் என்பதனை அறியாதவராய்த் தம் நூலில் உள்ள குற்றங்களைக் காட்டினவரைப் பொய்க் குற்றம் சார்த்திப் பழித்து

உரைப்பரோ? உரையார். திவ்யார்த்த தீபிகை உரைகாரர் தம்மால் எழுதப்பட்ட உரைநூலுள் கிடக்கும் குற்றங்களைக் காட்டினரைப் பழித்து உரைத்தார் ஆதலால். எவரைப்பழித்து உரைத்தார்? செந்தமிழைக்கற்ற ஸ்ரீமான் மு. இராகவ ஐயங்கார் அவர்களை. அவர் மீது சார்த்தப்பட்ட பொய்க் குற்றம் என்னை? அவ்வையங்கார் அவர்கள் திரு ஆழ்வார்கள் அருளிய திவ்யப் பிரபந்த திருப்பாக்கட்குத் திருத்தங்களைச் சொல்லியதால் ஸ்ரீ வைணவக் கூட்டத்தார்க்கு மிக்க மனவருத்தத்தை உண்டுபண்ணிவிட்டார் என்பதே. ஸ்ரீ வைணவக் கூட்டத்தார்க்கு மிகப்பெருமனவருத்தத்தை உண்மையில் உண்டு பண்ணியவர் அத்திவ்யார்த்த தீபிகை உரைகாரராய திரு அண்ணங்கராசாரிய சுவாமிகளே அல்லாமல், ஸ்ரீ மு. இராகவ ஐயங்கார் சுவாமிகள் அல்லர். என்னை?

திருமாலையும் திருமால் சமயத்தையும் பழித்து எழுதப்பட்ட திருச் சைவசமயத்தவரது புராணத்தினின்று (திருக்குற்றாலத்தலபுராணத்தினின்று) அவையடக்கப்பா ஒன்றனை எடுத்து ஆசிரியத் திருவாக்கெனக் கொண்டு; வடமொழி வேதத்திற்கு ஒப்பாயது திரு ஆழ்வார்கள் அருளிய செந்தமிழ் மொழியாலாய திவ்யப் பிரபந்தம் என்று திருமால் சமயத்தவரால் போற்றப்படுகின்ற திவ்யப் பிரபந்தத்திற்குத் "திவ்யார்த்த தீபிகை உரை" எனத் தம்மால் எழுதப்பட்ட உரை நூலின் தலையில்-முகவுரையுள்-சேர்த்து வைத்து அதனால் ஸ்ரீ வைணவக் கோஷ்டியினர்க்குப் பழிப்பையும் மிகப்பெருமன வருத்தத்தையும் உண்மையாக உண்டு பண்ணியவர், திவ்யப் பிரபந்ததிவ்யார்த்த திபிகை உரைகாரராய திரு. அண்ணங்கராசாரிய சுவாமிகளே ஆவர் ஆதலால். (௰௨)

பன்னிரண்டாவது ஆய்வு உரை முற்றிற்று.

"ஆழ்வார்கள் வாழி! அருளிச் செயல் வாழி!
தாழ்வு யாதும் இல் குரவர் தாம் வாழி!—ஏழ்பாரும்
உய்ய அவர்கள் உரைத்தவைகள் தாம் வாழி!
செய்ய மறை தன்னுடனே சேர்ந்து"

திவ்யப் பிரபந்தமும் திவ்யார்த்த தீபிகை உரையும் (என)
வே. மு. ஸ்ரீநிவாச முதலியார் எழுதிய ஆய்வு உரை முற்றிற்று.

ஸ்ரீ

சுபமஸ்து.

# புறத்து உரை

**திருப்பேரருளாளப் பெருமாள்தம் திருவடிகட்கு வணக்கம்.**

யான் இந்த ஆய்வு உரை நூலை எழுதி அச்சிட்டு முடித்த பின்னர் இந்நூலைத் தமிழை அறிந்த பேரறிஞர் பலரிடம் செலுத்தி இந்நூலைப் பற்றிய அப்பேரறிஞர்தம் கருத்தை எழுதி அளிக்கும்படி கேட்டுக்கொண்டேன். அப்பேரறிஞர்களால் அளிக்கப்படும் கருத்துரைகளை (சிறப்புரைகளாக) அச்சிட்டு இந்நூலொடு சேர்த்து வைப்பதாகவும் விளம்பினேன். அப்பேரறிஞர்களுள் சிலர், அன்புவைத்து அருளிய கருத்துரைகளைச் "செந்தமிழை அறிந்த பேரறிஞர்கள் அருளிய சிறப்புரைகள்" என்னும் தலைக் குறிப்புடன் இந்நூலுள் சேர்த்து வைத்திருக்கிறேன். அப்பேரறிஞர்கள் மாட்டு நன்றறிகுறியாக யான் வணக்கம் செலுத்தினேன். யான் அப்பேரறிஞர்தம் நன்றியை என்றும் மறவாதிருக்கக் கடம்பட்டிருக்கிறேன் என்பதனையும் உணர்ந்திருக்கிறேன். அவ்வளவே அல்லாமல், அப்பேரறிஞர்கள், கைம்மாறு கருதாமல் செய்த உதவிக்கு யான் யாது ஈடு செய்ய வல்லவன்? யான் யாதொரு ஈடும் செய்ய வல்லவன் அல்லன். அப்பேரறிஞர்களும் என் மாட்டு எவ்விதப் பயனையும் எதிர்பாராத இயல்பினர். நிற்க,

மற்று, இவ்வாய்வு உரை நூலைச் சில பக்கங்கள் அச்சிடற்குள் அச்சகக்காரரால் என்கண் விளைக்கப்பட்ட துன்பம் பல. அத்துன்பத்தால் அச்சிடப்பட்ட சில பக்கங்களையும் பண்டம் மடிப்பவர்க்குக் கொடுத்துவிட்டு, இனி எழுத்து வேலையைச் செய்யக்கூடாது என்ற முடிவுடன் இருந்த காலத்தில் அன்பர், வித்துவான், திருவளர், மே. வீ. வேணுகோபாலப் பிள்ளை அவர்கள் தக்கதொரு அச்சகத்தில் அச்சிடுதற்கு உரிய ஏற்பாட்டைத் தாமேசெய்தருளினார்கள். அவர்கள் செயல் நீரின்றி வாடிய பயிரைத் தன்னால் நீரைச்சொரிந்து விளைவிக்கும் மேகத்தின் செயலை ஒக்கும். அவர்தம் செயலின் பெருமையைச்;

"செய்யாமற் செய்த உதவிக்கு வையகமும்
வானகமும் ஆற்றல் அரிது."
"காலத்தினாற்செய்த நன்றி சிறிதெனினும்
ஞாலத்தின் மாணப் பெரிது."
"பயன்தூக்கார் செய்த உதவி நயன்தூக்கின்
நன்மை கடலின் பெரிது."

என்று கூறி வைத்த பெரியாரே தக்கபடி புகழத்தக்கவர் அல்லாமல், யான், தக்கபடி புகழ்தற்கு ஆம் நெறியை அறியாதவனே யாகுவென். மற்று, திரு. பிள்ளை அவர்கள் இப்புத்தகத்தை அச்சிடுதற்குத் தக்கதோர் அச்சகத்தைத் தேடி அளித்ததல்லாமல், எவ்விதப் பயனும் கருதாமல் தாமே ஒரு முறை புரூப் பார்த்துப் பிழைகளைத் திருத்தியும் அருளினார்கள். அச்சகக்காரர் பலருடைய இன்னல்களால் அழிக்கப்படுநிலைமையிலிருந்த இப்புத்தகம் அன்பர், திரு. பிள்ளை அவர்களால் தக்கதோர் உருவில் புத்தகம் என வெளிவந்தபடியால், இப்புத்தகத்தால் தமிழ் உலகு ஏதேனும் ஒரு சிறு நலம் பெறினும் அந்நலத்தின்பொருட்டுப் பாராட்டத்தக்கவர் திரு. பிள்ளை அவர்களே ஆகுவர். நிற்க.

இப்புத்தகத்தைச் செவ்விதாக அச்சிட்டுத்தந்த காஞ்சி-முத்தமிழ் அச்சகக்காரர்தம் நேர்மையும் மறத்தற்பாலதொன்று அன்று.

என்னல் கருத்துரை-சிறப்புரை-வேண்டப்பட்டவருள், பிறரது அக்கரத்தைப்பொறுக்கும் இயல்பில்லாதவராய சிலர், பொறாமைப் பேயால் பீடிக்கப்பட்டவராய்த்-தம் அறிவு திரிபுற்றவராய்ப்-பலவகை இன்னல்களை என் மாட்டுச் செய்தனர். பலவகை இழிந்த சொற்களை அடுக்கி எழுதப்பட்ட கடிதங்களைத் தபால் வழிச் செலுத்திவைத்தனர் சிலர். இந்நூல் முற்றாக அச்சிடப்பட்டு முறையாக வெளிப்படா முன்னரே இந்நூலிற்கு ஒரு மறுப்புரை நூலைத் தயாரிக்க உதவி செய்தவரும், மறுப்புரை நூலைத் தயாரித்தவரும் சிலர். அம்மறுப்புரை நூலுள் இந்நூலுள் எழுதப்பட்டுள்ள திருத்தங்களையும் பொருள்களையும் மறுத்துரையாமல் "திவ்யப் பிரபந்தமும் திவ்யார்த்த தீபிகை உரையும் என்னும் ஆய்வு உரை நூல், வைணவ மதத்தின்மீது பொறாமையும் பகைமையும் கொண்ட சைவ சமயத்தவராய முதலியாரால் எழுதப்பட்டது அது ஒரு அபத்த நூல்" என்று எழுதிப் பிறர் பெயரால் ஒரு சிறு புத்தகமாக வெளியிட்டார் ஒருவர். என்னல் எழுதப்பட்ட திருத்தங்களையும் உண்மைப் பொருள்களையும் கண்டு பொறாமையால் மனமழுங்கியவர் வேறு என்னதான் செய்வர்!

இவ்வாய்வு உரை நூல் எம்மதத்திடத்தும் பொறாமையும் பகைமையும் கொள்ளாதவரும் (வைணவ மதத்தில் பொறாமை

யும் பகைமையும் கொள்ளாதவரும்) நடுவுநிலைமையின் நீங்காத வரும் ஆய ஒருவரால் எழுதப்பட்டது என்பதனை நன்னீர்மை குன்றாமையால் நேரியராய பேரறிஞர் அறிகுவர் என்பதனையும் தாம் பொறாமைப் பேயால் பிடிக்கப்பட்டனர் ஆதலால் (தம் அறிவு திரிபுற்றதால்) சிற்றின மாக்களாயினர் அறியார் என் பதனையும் யான் அறிகுவென். ஆதலால், பொய்க்குற்றம் சொல்லி இழித்துரைத்து எழுதும் சிற்றினமாக்கள்பொருட்டு யான் இவண் ஒன்றனையும் உரைத்து எழுத எண்ணிலேன். நிற்க,

மற்று, என்னிடத்தில் நேரில் நட்புநெறி திரிபுறாமல் பேசு பவர் போல நடித்து, யான் எவர் எவரிடம் மதிப்புரைகளைப் பெற முயன்றிருக்கிறேன் என்பதனை என்னைக் கேட்டு அறிந்து கொண்டு, என்னால் சொல்லப்பட்ட அறிஞரிடம் சென்று என் னூலுக்கு மதிப்புரை தாராதீர்! தாராதீர்! என்று சொல்லித் தடை செய்ய முயன்றவரும், தடை செய்தவரும் சிலர். அவர், கற்க வேண்டுவனவற்றை நேரிய நெறியில் செவ்விதாகக் கற்றிருப் பின், அத்தீய செயலைச் செய்ய முயன்றிரார். என் செய்வர் பாவம்! பொறாமைப்பேய் ஆட்டுவிக்கும் வழி ஆடினர் போலும்! (ஆட்டுவித்தால் ஆரொருவர் ஆடாதார்? காட்டுவித்தால் யா ரொருவர் காணாதார்?) அவர் கற்கத் தொடங்கிய நாள் முதலாக உண்மைக்கு மாறான போலிக் கருத்துக்களையே உண்மையான கருத்துக்கள் என்று கற்றவர்; உண்மைக் கருத்துக்கள் என எண்ணி இருப்பவர்; இயம்பி வருபவர். அவர் உண்மைக் கருத்துக்கள் என எண்ணியிருந்த போலிக்கருத்துக்களை மறுத் துரைத்து அவற்றுக்கு மாறாக வேறு உண்மைப் பொருள்களை இந்நூலுள் உரைத்திருத்தலைக் கண்ட அவரது மனம் மழுங்கி விட்டதுபோலும்! அதனால்தான் அவர் இந்நூலின்பொருட்டுத் தீய செயலைச் செய்ய முயன்றார்போலும்! அத்தீய செயலார்,

"பிறர்க்குஇன்னா முற்பகல் செய்யின் தமக்குஇன்னா
பிற்பகல் தாமே வரும்"

என்னும் மூதுரையின் பொருளை உணர்ந்திலர்போலும்! அந்தோ! அவர் உணர்ந்திருப்பின், பிறர்மாட்டுத் தீய செயலைச் செய்ய எண்ணியிரார் ஆதலால். நிற்க.

இந்நூல் முற்றாக அச்சிடப்பட்டு வெளி வாரா முன்னரே இதற்கு ஒரு மறுப்புரை நூலைத் தயாரிக்க உதவி செய்தவரும்

தயாரித்தவரும் சிலர் என்று முன்னர் எழுதி வைத்தேன். அச்சொல், நூல் முற்றாக அச்சிடப்பட்டு வெளிப்படா முன்னர் எப்படி அதற்கொரு மறுப்புரை எழுதக்கூடும் என்ற ஐயத்தை விளைவிக்கும். அவ்வரலாற்றினை மேல் வருமாற்றால் அறிக.

சென்னைச் சர்வகலாசாலையாரால் திருச்சமண சமயத்தவர்தம் "ஸ்ரீ புராணம்" என்னும் நூல் அச்சிடப்பட்டது. அந்நூல் வித்துவான் ஸ்ரீ. வே. வேங்கடராஜுலு ரெட்டியார் என்பவரால் ஆய்ந்து அச்சிடப்பட்டதாம். அந்நூலுள் (பக்கம். 64-ல்) "மஹாமதியும் ஸம்பிந்ந மதியும் தீவிரமித்யாத்வ பலத்தினால் நித்திய துஸ்ஸஹ துக்க பூமியாகிய நிகோதந்தினை அடைந்தனர்" என்று ஒரு தொடர் உள்ளது. சமண சமயத்தவர்க்கு நிகோதம் என ஒரு நரகம் இல்லை. அவர்களால் சொல்லப்படும் நரகங்கள் ஏழே. அந்நரகங்கள் ஏழனுள் ஒன்றனுக்கும் நிகோதம் என்னும் விகற்பப் பெயர் இல்லை. சர்வகலாசாலையாரால்-திரு. ரெட்டியாரால்—அச்சிடப்பட்ட "ஸ்ரீ புராணம்" என்னும் நூலொடு (பக்கம். 704-ல்) ஐந்தாம் அநுபந்தமாகச் சேர்க்கப்பட்டுள்ள "சாஸ்த்ர ஸார ஸமுச்சயம்" என்னும் நூலின் "கரணநுயோகம்" என்னும் பகுதியிலும் நரகங்கள் ஏழே சொல்லப்பட்டுள. நிகோதம் என ஒரு நரகம் சொல்லப்படவில்லை. சமண சமயத்தவர் நூலுள், பூமியின் அடியிடத்துக்கு-ஏழுநரகங்களின் கீழ் இடத்துக்கு-நிகோதபூமி எனச் சொல்லப்பட்ட பெயரைச் செந்தமிழ் மொழி வழங்கப்படும் தென்தேசத்தில் வாழும் சமண சமயத்தவரும், ஸ்ரீபுராணத்தை ஆய்ந்து அச்சிட்ட திரு ரெட்டியாரும், நிகோதம் என்னும் நரகம் என்பதன் பெயர் என்று திரிபாக உணர்ந்துளர் போலும்! கன்னட மொழியராய சமண சமயத்தவரும் பூமியின் அடிப்பாகத்தின் பெயராகிய நிகோதம் என்னும் பெயரை நிகோதம் என்னும் நரகம் என்று திரிபாக உணர்ந்துளர் போலும்! மற்று, நிகோத ஜீவன் என்பது ஏகேந்திரிய ஜீவன்களுள் காயத்தைப் பெறாத சூக்ஷ்ம ஏகேந்திரிய ஜீவனுக்கு ஒருபெயர் என்பதனை அறியாமையால், நிகோத ஜீவன் என்பதனை நிகோதம் என்னும் நரகத்துள் துன்பத்தை அநுபவிக்கும் ஜீவன் என்று திரிபாக உணர்ந்துளர் போலும்! (கற்க வேண்டுவனவற்றை முற்றாகக் கல்லாமுன்னர் கற்றாராகத் தம்மை நினைத்துக்கொண்டிருப்பவர் பண்டைய நூற்களுள் உரைக்கப்பட்ட உண்மைப்பொருள்களை

உள்ளபடி உணர்குவரோ? உணரார். அத்தகையாரிடம் கற்றவரும் கற்பவரும் உண்மைப் பொருள்களை உள்ளபடி உணர்குவரோ? உணரார்.)

மற்று, திருச்சமண சமயத்தவர்க்கு நிகோதம் என ஒரு நரகம் இல்லை என்பதனை,

"மீன்ஆணும் பெண்ணும் நாற்காலும் காலிலவும்
வான்மேல் வருவ தவழ்வ துறியிலவும்
மேன்மேல் ஏழ்நரகின் கீழ்ச்செல்லா மேற்செல்லும்
மேல்நான்கும் வீடுநவம் விரதம்விலங் காம்முறையே"

என்ற மேருமந்தரர் புராணச் செய்யுளும் (78) விளக்கமாகக் கூறுதலை நினைக்க.—"ஏழ்நரகின் கீழ்ச்செல்லா மேற்செல்லும்" என்ற குறிப்பும் இவண் மறத்தற்பாலதொன்று அன்று.

மற்று, மக்களெனும் பிறப்பினர் வீட்டை அடையா முன்னர், மக்கள் கதி, தேவகதி, நரககதி, திரியக்கதி ஆகிய நான்கு கதிகளில் அல்லாமல் வேறு கதியில்–வேறு இடத்தில்–செல்லார். வீட்டை அடைந்த பின்னர் எந்தக் கதியிலும் பிறவார் என்பது திருச்சமண சமயத்தவர்தம் நூல் கருத்து. அக்கருத்தை;

"மானு டம்பு விடாகதி நான்குஎய்தும்
ஈனமில் விலங்கினும் ஓர்நான்கு எய்தும்
வானின் வந்து விலங்கும் மனிதன்ஆம்
ஈனம் இல்லவை எய்திடும் நாரகன்"

என்ற மேருமந்தரர் புராணச் செய்யுளும் (72) மக்கள் பிறப்பினர் நான்கு கதிகளை அல்லாமல் வேறுகதியில் செல்லார் என்று விளக்கமாகக் கூறுதலை அறிக. (உடம்பைப் பெற்ற உயிர்கட்கு மக்கள், தேவ, நரக, திரியக் கதிகள் அல்லாமல் வேறு ஒரு கதி இல்லாமையால், ஐந்தாவதாக நிகோதம் என ஒரு கதி உண்டு என்று நூற்கள் கூறவில்லை என்பதனை உய்த்துணர்க.

மற்று, மித்தியாத்வ நம்பிக்கையால்-திருச்சமண மதம் அல்லாத பிறமதத்தைப் பெருமை பொருந்திய மதமாக நம்பினதால்-பாபிகளாயினருள் எவரும் ஏழு நரகங்களை அல்லாமல் வேறு ஒரு (நிகோதம் என்னும்) நரகத்தைச் சேரவில்லை. நிகோதம் என்னும் நரகத்தைச் சேர்ந்தார் என்று வேறு ஒருவரும் ஸ்ரீ புராணத்துள்ளும் சொல்லப்படவில்லை. பல வகைக் குற்றங்கட்காகப் பலர் பல வகை நரகங்கட்குச் சென்றனர் என்று ஸ்ரீ புராணத்துள் சொல்லப்பட்டுளது. அப்பல வகை நரகங்

களும் சமண சமயத்தவரால் சொல்லப்படும் ஏழு வகை நரகங்களே. ஸ்ரீபுராணம் பக்கம் 364ல் சகரராஜன் என்பவன் ஏழாம் நரகம் சென்றான் என்று ஒரு வரலாறு உள்ளது. அவனைப்பார்க்கிலும் கொடிய செயலை "மஹாமதியும் ஸம்பிந்நமதியும்" செய்திலர். அவர்கள் சாஸ்திரத்தில் சொல்லப்படாதநிகோதம் என்னும் நரகம் செல்ல வேண்டிய ஏது என்னை? மற்று, பக்கம் 326ல் மித்தியா திருஷ்டியாகிய (சமணம்அல்லாத வேறு மதத்தில் நம்பிக்கை உடைய) அரிசர்மா என்பவன் தாபசயோகியாகி ஜ்யோதிர்லோக தேவன் ஆயினான் என்னும் வரலாற்றையும் சிந்தித்து உண்மையை உணர்க. ஸ்ரீபுராணத்துள் 20வது ஸ்ரீமுனிஸுவ்ரதஸ்வாமி புராணத்தில் சொல்லப்பட்ட வரலாற்றில் இம்சாயாகத்தை உண்டாக்கியவருள் எவரும் ஏழாம் நரகம் அல்லாமல் சாஸ்திரத்தில் சொல்லப்படாத நிகோதம் என்னும் நரகத்தைச் சேரவில்லை என்பதும் நினைவில் இருத்தல் பாலது. 22வது ஸ்ரீநேமிஸ்வாமி புராணத்துள் "ருத்ரதத்தன் என்பவன் ஏழாம் நரகந் தொடங்கிப் பிரதம நரகத்தளவும் சென்று துக்கங்களை அனுபவித்தான்" என்றுள்ள குறிப்பையும் அவன் நிகோதம் என்னும் நரகத்தைச் சேர்ந்தான் என்று கூறப்படாமையையும் நினைக்க. மற்று, அப்புராணத்தின் ஈற்றில் பக்கம் 569ல் சொல்லப்பட்டுள்ள உருத்திரர் என்பவர் "பதினொருவரும் வித்தியாநுவாத பரமாகம ஸாமர்த்தியத்தால் வந்த வித்யைகள் எல்லாம் கண்டு தபஸ்ஸினைவிட்டு வித்யாஸாமர்த்தியத்தால் மஹா விபூதியினை ஜீவித்து மரணகாலத்தில் ஸம்யக்த்வத்தைக் கெடுத்துத் திருச்சமண சமய நம்பிக்கையைக் கெடுத்து-மரித்து, இருவர் ஏழாம் நரகத்திலும், ஐவர் ஆறாம் நரகத்திலும், ஒருவன் ஐந்தாம் நரகத்திலும், இருவர் நாலாம் நரகத்திலும், ஒருவன் மூன்றாம் நரகத்திலும் புக்கனர்" என்றுள்ள வரலாற்றை ஆழ்ந்து சூழ்ந்து உண்மையை உணர்க. அப்பதினொரு உருத்திரருள் ஒருவரும் (ஆகமங்களுள் சொல்லப்படாததும் திரு. ரெட்டியாரால் புதிதாகச் சொல்லப்பட்டதும் ஆகிய) நிகோதம் என்னும் நரகத்தை அடையவில்லை என்பதனையும் நினைக்க.

உண்மையில் நிகோதம் எனும் நரகம் திருச்சமண சமயத்தவர்க்கு இருப்பின், இவண் காட்டப்பட்ட உருத்திரர்பதினொருவருள் ஒருவராவது அந்நிகோதம் என்னும் நரகத்தைச் சேர்ந்திருப்பர். ஸ்ரீபுராணத்துள் வேறு எவ்விடத்தும் எவரையும்

நிகோதம் என்னும் நரகம் புகுந்தனர் என்று கூறுமையாலும் நிகோதம் என்னும் நரகம் சமண சமயத்தவர் சாஸ்திரங்களுள் சொல்லப்படாதது என்று துணிக.

மற்று, 24-வது ஸ்ரீ வர்த்தமானஸ்வாமி புராணத்துள் கூறப்பட்ட மித்யாத்வ பாபத்தினுல் நரகங்களைச் சேர்ந்தவர் பலர். அவருள் ஒருவரும் நிகோதம்எனும்நரகத்துள் சேர்ந்திலர் என்பதனையும் நினைக்க.

இவ்வேதுக்களினுல் திருச்சமண சமயத்தவர் ஆகமங்களுள் நிகோதம் என ஒரு நரகம் உண்டு எனச் சொல்லப்படவில்லை என்பதனை அறிக. சாஸ்திரங்களுள் சொல்லப்படாத நிகோதம் என்னும் நரகம் ஒன்று உண்டு என்ற நம்பிக்கை, செந்தமிழ்த் தேஎத்தில் வாழும் சமண சமயத்தவர்க்கு எப்படி உண்டாயிற்று என்பதனைச் சிந்தித்துத் தேறுக அதாவது, ஸ்ரீபுராணத்துக்கு மூலநூலாயதும், ஸ்ரீஜினஸேநாசாரியர் என்பவரால் அருளப்பட்டதும் ஆகிய ஸ்ரீமஹா புராணம் என்னும் புராணத்தில் 10 வது பர்வத்தில் சொல்லப்பட்ட 7 வது ஸ்லோகத்திற்குச் சாஸ்திரக் கருத்துக்கு முரணுகாதபடி "நிகோதமாகிய அடியை உடைய ஏழாம் நரகம் சென்றூர்கள்" என்று பொருள் கூறின் அப்பொருள்பொருத்தமாகும். ஸ்ரீ புராணம் பக்.64ல் உள்ள "நிகோதத்தினை அடைந்தார்கள்" என்ற தொடர் "நிகோதத்தின் மேலுள்ள நரகத்தினை-7-ம் நரகத்தினை-அடைந்தார்கள்" என்று இருப்பின் அப்பொருள் பொருத்தம் ஆகும். நல்ல அறிவை உடையார் ஆழ்ந்து சூழ்ந்து துணிவாராக.

"நாற்கதி யுள்ள நரகரை நாம்சொல்லின் மூன்றுவகைக்
காற்று வளையங்கள் ஏந்தும் நீரையக் கதிநிலம்தான்
ஏற்ற நிகோதத்தின் இம்பர் இருளின் இருள்இருள்மேல்
ஆற்றப் புகைஅளறு ஆர்மணல் கூர்ம்பரல் ஆய்மணியே"
(நீலகேசி-செய்யுள்-75.)

இப்பாவில் 'நிகோதத்தின் இம்பர்' என்பதன் பொருள், 'நிகோதம் என்னும் பூமியின்மேல் இடம்' என்பது. அம்மேல் இடத்தில் உள்ளது திருச்சமண சமயத்தவரால் சொல்லப்படுகிற இருள் இருள் வட்டம்-தமத்தமப்பிரபை-என்னும் ஏழாம் நரகம். அந்நரகத்தை இப்பாவுள் விதந்து கூறப்பட்டிருக்கும் நேர்மையையும் நினைக்க. இப்பாவின் கருத்துப்படியும் திருச்சமண சமயத்தவர்க்கு நிகோதம் என ஒரு நரகம் இல்லை என்பதனைத்

தேறுக. இப்பாவின்பொருளொடு ஸ்ரீமஹாபுராணம், 10-ஆம் பர்வம், ஏழாம் ஸ்லோகத்தில் கூறப்பட்ட பொருள் பொருந்தி இருத்தலையும் நினைக்க. நிற்க.

இப்பாவை உடைய நீலகேசி என்னும் நூலைப் பதிப்பித்தவர், ஸ்ரீ அ. சக்ரவர்த்தி நயினர், (M. A., I. E. S.) அவர்கள். அவர்கள், இப்பாவின் உண்மைப் பொருளை உணர்தற்கு உரிய செந்தமிழைக் கற்றிலாமையால், "நிகோதம் என்பது ஏழாம் நரகத்திற்கும் கீழே இருக்கும் நரகலோகம்" என்று (பக்-27ல்) எழுதிவைத்தார்கள். அதனால் அவர், ஜைன சமயத்தவர் குடியில் பிறந்தவரே அல்லாமல், ஜைன சமயத்தவர்தம் நூற்களுள் கூறப்பட்ட உண்மைத் தத்துவங்களை உணராதவரே ஆவர் என்பதனைத் தேறுக.

மற்று, அவரை நேரில் கண்டு நிகோதம் என ஒரு நரகம் சமண சமயத்தவர்க்கு உண்டா எனக் கேட்டு ஐயத்தினை நீக்கிக்கொள்வான் யான் அவரது வீட்டிற்குச் சென்றேன். சிறுபிள்ளை ஒருவர் அவர் சாப்பிடுகிறார் என்றார். அவருடைய வேலை ஆள் ஒருவர், அவர், க்ஷவரம் செய்துகொள்கிறார் என்றார். அரை மணி நேரம் அவர் வீட்டின் கடைவாயில் காத்திருந்தேன். அதன் பின்னர் அவர் வந்தார். யான் முன்னரே பல முறைகள் நேரில் கண்டு அவரொடு பேசிய பழக்கம் உடையேன். ஆயினும், யான் அவரைக் கண்டஉடனே நமஸ்காரம் சொல்லி யான் காஞ்சீபுரத்தில் இருப்பவன் என் பெயர் ..............என்று சொல்லினேன். சொல்லின உடனே என்னைப் பார்த்து ஒன்றும் விசாரியாமலே (தம்முடைய ஆடுகளைப் பாதுகாத்தல்பொருட்டு இடையர்களால் வளர்க்கப்படுகின்ற பெரிய நாய்கள், நரிகளை அல்லது அயலார்களைக் கண்டஉடனே அவர்களைக் கௌவிக்கொல்வான் குரைத்து மேல் விழுந்து சீறிப்பாய்தல் போல) என்னைச் சீறிக் கத்தி, 'வெளியில் போ! வெளியில் போ!' எனக்கூவினர். (அச்சமயத்தில் யான் நின்றிருந்த இடம் அவரது வீட்டின் வெளியில் கடைசி வாயில்தான்)

அயலாரைக் கண்டவுடன் நாய்கள் சீறுதல் போல அவர் என்னைப் பார்த்துச் சீறிக் கத்துதலின் காரணம் தெரியாமையால் யான் திகைத்து நின்றேன். பின்னர் அவர், பிழைக்க மாட்டாதவர்கள் பொழுது விடிந்தால் இது ஒரு வேலையாக

............என்றார். அச்சொல்லைக் கேட்டவுடனே யான், 'தம்மிடத்தில் யாதோ பொருள் வேண்டி யாசகம் செய்யவந்த வர்களுள் ஒருவனாக என்னையும் நினைத்துவிட்டார்போலும்!' என்ற எண்ணத்தை உடையனாய், 'ஐயா, யான் பணம் காசு வேண்டித் தங்களிடம் யாசகம் செய்ய வரவில்லை. ஒரு சந்தேகத்தைத் தெளிந்துகொண்டு செல்ல வந்தேன். அச்சந்தேகத்தைச் சொல்லலாம் ஆயின் சொல்கிறேன் என்று' பலமுறைகள் சொல்லினேன். அப்போதும், 'சந்தேகமா? சந்தேகம் என்ன? போ வெளியே! போ வெளியே!' என்று சொல்லிப் பழையபடியே சீறி விழுந்தார். அப்போது அவருடைய அறிவு பைத்தியத்தால் திரிபுற்று இருக்கலாம் என்ற எண்ணத்தை உடையனாய் அவர்மாட்டு இரக்கம் உடையனாய்ச் சென்றுவிட்டேன்.

சென்ற பின்னர்ச் சென்னை ஜீவரக்ஷா பிரசாரக சபையின் பிரசாரகர், திருவளர், தி. ஸ்ரீபால் நாயனார் அவர்களைக் கண்டு, 'அ. சக்ரவர்த்தி நாயனார் அவர்கட்கு அறிவு பைத்தியத்தால் திரிபுற்றுளதோ?' என்று கேட்டேன். அவர், 'நேற்றைய இரவு தான் நேரில் கண்டு பேசிவிட்டு வந்தேன். அவருடைய அறிவு நல்ல நிலைமையில் உள்ளது' என்றார். அதன் பின்னர், யான், நிகோதம் என்னும் நரகம் ஒன்று உண்டு என்று ஜைனசமயத்தவர்தம் நூற்களுள் சொல்லப்படவில்லை என்று சொல்லுகிறேன் என்பதனைத் திரு. வே. வேங்கடராஜுலு ரெட்டியார் வழியாக அறிந்திருப்பர் போலும்! அதனால், தாம் நிகோதம் என்பது ஏழாம் நரகத்தின் கீழாக இருக்கும் நரகம் என்று எழுதி இருத்தற்கு என்னென நேர்மை உரைப்பது என்ற கவலையால் அவரது நெஞ்சில் விளைந்த வெட்கம் சீற்றமாக மாறியது போலும்! அதனால் அவர், என்னைச் சீறி வைதார் போலும்! என்பனவற்றை யான் உய்த்துணர்ந்தேன். உணர்ந்தபின்னர், அவரால் செய்யப்பட்ட இன்னலை முற்செய் வினையின் பயனும் என எண்ணி அதனை இன்பமாகக் கொண்டேன். திரு. ரெட்டியார்தம் நட்பு, இத்தகைய இழிவுகளை இந் நூலின்பொருட்டுப் பலரிடைப் பெறச் செய்தது. நிற்க

ஸ்ரீபுராணத்தை ஆய்ந்து அச்சிடுவித்த ஸ்ரீ. வே. வேங்கடராஜுலு ரெட்டியார் திருச்சமண சமயத்தவர் சாஸ்திரக் கருத்துக்களை நன்றாக அறிந்திலாதவரே அல்லாமல் செந்

தமிழின் செவ்விய நெறியையும் செவ்விதாக உணர்ந்திலாத வரே போலும்! என்னே?

"உண்ணாமை உள்ளது உயிர்நிலை ஊன்உண்ண
அண்ணாத்தல் செய்யாது அளறு"

என்ற திருக்குறள் பாவைக் காட்டாகக் கொண்டு திருச்சமண சமயத்தவர்க்கு "நிகோதம்" என ஒரு நரகம் உண்டு என்று நாட்டுதற்கு முயன்றுள்ளார். என்னே? (அவரால் ஆய்ந்து அச்சிடப்பட்ட ஸ்ரீ புராணத்தின் நான்முகம் என்னும் பகுதியில் பக்கம் 30ல்) மேலே காட்டப்பட்ட திருக்குறள் பாவின் ஈற்றில் அமைந்துள்ள "அளறு" என்பதற்கு நிகோதம் என்னும் நரகம் என்று பொருள் கொண்டுள்ளார் ஆதலால். என்னே? "திருக்குறளில் 'உண்ணாமை உள்ளது உயிர்நிலை ஊனுண்ண, அண்ணாத்தல் செய்யாது அளறு' என்னும் செய்யுளில் கூறப்பட்டுள்ள நரகம் நிகோதம் என்று ஜைன மதத்தில் வழங்கப்படுவதாகும்" என்று எழுதி வைத்துள்ளார். அவ்விடத்தில்—அந்நான்முகத்தில்—நிகோதம் என்னும் நரகத்தைப் பற்றிய பேச்சு எழுதற்கே இடனில்லை. ஏதுவொன்றில்லாமையால். இல்லாதிருந்தும் திருச்சமண சமயத்தவர்தம் ஆகமக் கருத்துக்களுள் தமக்கும் சில தெரியும் என்பதனைத் தெரிவிப்பதற்கே எழுதி வைத்தார்போலும்! அந்தோ! "கல்லாத மேற்கொண்டு ஒழுகல் கசடற வல்லதூஉம் ஐயம் தரும்" என்ற மூதுரையின் பொருளை அறிந்திலர் போலும்!

திருக்குறளின் உரை ஆசிரியர் அளறு என்பதற்கு நிரயம் எனப் பொருள் எழுதிவைத்தார். நிரயம் என்பது நரகங்கட்குப் பொதுப் பெயர். அத்திருக்குறள் பாவில் அமைந்துள்ள "அளறு"என்பதற்குத் திருச்சமண சமயத்தவர்களால் சொல்லப்படும் ஏழுநரகங்களுள் ஒன்றான"பங்கப்பிரபை-சேற்றுவட்டம்" என்னும் நரகத்தையே பொருளாகக் கொள்ளவேண்டும். என்னே? அளறு: சேறு. அதற்கு வடமொழிப் பெயர், பங்கம். பிரபை: வட்டம். ரெட்டியார், இந்நெறியை அறியாமையால்' "அளறு" என்பதற்கு "நிகோதம்" எனப் பொருள் எழுதி வைத்தார். அவர். பொருத்தம் இல்லாவிடினும் ஏதாவது ஒன்றனைத் தாமாகக் கற்பிதமாகப் புதியதாக எழுத வேண்டும் என்ற எண்ணம் உடையவர் போலும்! என்னே? ஸ்ரீ புராணம் முதற்பதிப்பின் முன்னுரையுள் பக், xxல் "இப்பதிப்பில் (1946ஆம்) மேற்கொள்ளப்பட்டுள்ள வடவெழுத்தின் முறைகள்" என்று தடித்த எழுத்

தால் குறிப்பு எழுதிவைத்திருக்கிறார். "வடவெழுத்தின் முறைகள்" என்ற அக்குறிப்புக்கு என்னெனப் பொருள் கூறுவர்? அக்கூற்றுக்கு எந்த மொழியாலாய எந்த இலக்கண நூலைக் காட்டாகக் காட்டுவர்? திரு. ரெட்டியார் கற்ற தமிழ், செந்தமிழ் இலக்கணத்துக்கு மாறாய தென்கலைஞராய ஸ்ரீ வைணவர்தம் தமிழ் மொழி என்பர் போலும்! அன்றி, அதற்கு இலக்கணம் கன்னட மொழியால் உள்ளது என்று இயம்புவர் போலும்! என்னை? அவர், தம் குற்றத்தைக் காட்டுபவரை நன்னூலைக் கற்ற அறிஞர் எனப்பழித்து உரைப்பவர் ஆதலால்.

சீவக சிந்தாமணியுள் 2793ம் பாவின் ஈற்றடியில் "நண்ணு நரகத்தின் நான்காமடியன்றே" என்று குறிப்பிடப்பட்ட "நண்ணு நரகம்" என்பதற்கு (ஆசிரியர் நச்சினார்க்கினியரால் சொல்லப்படாத) "அந்நரகம்–நிகோதம்" என எழுதப்பட்டுள்ள இடைச்செருகல் குறிப்பையும், திரு. ஐயர் அவர்கள் எழுதி வைத்த அடிக்குறிப்பையும் திரு. ரெட்டியார், உரை ஆசிரியர் கருத்தென நம்பி ஜைன சமயத்தவர்க்கு "நிகோதம்" என ஒரு நரகம் உண்டு என எழுதி வைத்தார் போலும்! அவர்,

"உண்ணாமை உள்ளது உயிர்நிலை ஊன்உண்ண
அண்ணாத்தல் செய்யாது அளறு"

என்ற திருக்குறள் பாவின் ஈற்றில் அமைந்துள்ள "அளறு" என்பதற்கு "நிகோதம்" என்னும் நரகம் என்று எழுதிவைத்த பொருளை அறிஞர் உலகம் ஏற்றுக்கொள்ளாது என்பதனை அவர் அறிவாராக. அறிந்து அவரால் செய்யப்பட்ட பிழையைப் பிழைஎனக் காட்டுபவரை இன்னற்கு உட்படுத்த முயலாமல் நேரிய நெறியில் நடக்கப் பயில்வாராக. நிற்க.

மற்று,ஸ்ரீபுராணம் முன்னுரை பக்கம். 31ல்"யாழ்ப்பாணத்தில் வாழும் தமிழ் மக்கள் தூயவுணவினை 'ஆரதபோஜனம்' 'ஆரதம்' என்று இன்றும் வழங்குகின்றனர். 'ஆரதம்' என்பது "ஆர்ஹதம்" என்பதன் திரிபு. அதாவது, அர்ஹத் சமய சம்பந்தமானது என்பதாகும். ஆகலின், ஆரதபோஜனம் என்பது ஊனை விலக்கிய உணவிற்குப் பெயராயிற்று. இதனை இக்காலத்தவர் சைவவுணவு என்று வழங்கினும்' ஆரதம் என்பது பெருவழக்காய் உளது. யாழ்ப்பாணத் தமிழ் மக்கள் பலர் தமிழ் நாட்டில் திருநெல்வேலி முதலிய பல ஊர்களினின்று சென்று ஆண்டுக் குடிஏறியவர்களாகலின் அவர்கள் வழங்குஞ்

சொல்வழக்குப் பண்டைய தமிழ் நாட்டில் வழங்கிய வழக்கே ஆதற்கு ஐயமின்று'' என்று ஒப்பு உயர்வு அற்றதாகிய-பொருத்த மற்றதாகிய ஆராய்ச்சிக்குறிப்பு ஒன்றனை எழுதி வைத்திருக்கிறார்.

அவர், செந்தமிழர்தம் செந்நெறியைச் செவ்விதாகத் தெரிந்தவராக இருப்பின், அக்குறிப்பை எழுதி இரார். என்னை? செந்தமிழ் நாட்டில் வாழும் மக்களுள் புலால் உண்ணும் வகையார் அமாவாசை, கிருத்திகை முதலிய விரத நாட்களில் அவர்கள் வழக்கமாகப் புலால் கலந்து சமையல் செய்து உண்ட பாத்திரத்தில் சமையல் செய்யாமல், புலால் கலந்து சமையல் செய்யப்படாத வேறாய தூய பாத்திரத்தில் புலால் கலப்பு இல்லாத தூய உணவைச் சமையல் செய்து தம் தெய்வத்துக்கு ஆராதனையைச் செய்து உண்பதும், அவ்வுணவை ஆராதனை உணவு என்று சொல்வதும் செந் தமிழ்த்தேசத்தில் வழக்கமாக உள்ளன. ஆராதனை உணவு என்பதனையே யாழ்ப்பாணத்தில் வாழும் தமிழர்களுள் சிலர், ஆரதபோஜனம் எனவும் ஆரதம் எனவும் சொல்கிறார்கள் என்று துணிய வேண்டும். இப்பெற்றிய உண்மை ரெட்டியார்க்கு விளங்காதொழிந்ததில் வியப்பு ஒன்றுமில்லை. அவர் செந்தமிழின் மிலேச்சர் ஆதலால். இவண் 'குல வித்தை பாதி; கற்பு வித்தை பாதி' என நம் செந்தமிழ்த்தேசத்தில் வழங்கப்படும் மூதுரையை நினைக்க.

"சைவ உணவு" என்பது "அஹிம்சா உணவு" என்பதன் மரூஉ என்க. திருச்சிவபெருமானை முழுமுதல் இறைவராகக் கொண்டதால் சைவ சமயத்தவர் என்பவரது உணவு என்பது பொருள் அன்று என்பது நினைவில் இருத்தற்பாலது. பிறமதத்தர் உள்ளும்-ஸ்ரீ வைஷ்ணவ மதத்தர் உள்ளும்-அஹிம்சா உணவையே-புலால் கலவாத உணவையே-உண்பவர்களும் இருத்தலால்.

மற்று, மஹாமஹோபாத்தியாயர் பிரம்மஸ்ரீ உ. வே. சாமிநாத ஐயர் அவர்கள் தாம் பதிப்பித்த "நன்னூல் மூலமும் சங்கர நமச்சிவாயருரையும்" என்ற நூலின் முகவுரையுள் (பக்-6ல்) "இந்நூலின் குறிப்புரை எழுதிய காலத்து உடனிருந்து வேண்டியவற்றை ஆராய்ந்து எழுதி உதவிய சிதம்பரம் ஸ்ரீமீனாக்ஷி தமிழ்க்காலேஜ் தமிழ்ப் பண்டிதர் சமூகரங்கபுரம், சிரஞ்சிவி வே. வேங்கடராஜுலு ரெட்டியாரவர்

களுடைய அன்புடைமை மறக்கற்பாலதன்று" என்று எழுதி வைத்துள்ளார். திரு. ரெட்டியார் எழுதி உதவிய குறிப்புரையுள் (பக்-243ல் இடையியல் சூத்திரம் 21ல்) "வாழிய மாள வீயாழ முன்னிலையசை" என்ற அடியில் அமைந்துள்ள "வீ" என்ற மொழி முன்னிலை அசை என்று எழுதி உதவியுள்ளார். "வீ" என்னும் மொழி முன்னிலை அசை அன்று. அம்மொழியில் "வீ" வகரத்தின்மீது ஏறிய "ஈ"காரமே முன்னிலை அசை. அதனைத் திரு. ரெட்டியார் அறிந்திலர்.

மற்று, ஸ்ரீ புராணம் (பக் 380ல்) "கடக்கப் பாய்ந்திட இளைத்துக் கறுகினைக் கறித்து" என்ற தொடரில் அமைந்துள்ள கறுகு என்பது பிழை. அது, "சருகு" என இருத்தற்பாலது. சருகு; முதிர்ந்து உதிர்ந்து உலர்ந்த இலை. ஆதலால், "கறுகு" என்பது "சருகு" என்பதன் பிழை மொழி என்பதனை உணராமையால், "கறுகு" என்பதற்கு "அறுகு" எனப்பொருள் எழுதி வைத்துளார். அன்றி, (ஸ்ரீ-புரா-பக். 233ல் "மாதவீ யூதிகா நவமாலிகாதி விவித வநஸ்பதி லதா ஜாலங்களால்" என்ற தொடரிடை அமைந்த "வநஸ்பதி" என்பதற்குப் "பூவாது காய்க்கும் மரம்" என்று குறிப்புரை ஒன்று எழுதிவைத்திருக்கிறார்- வநஸ்பதி என்பது மரம் புல் பூண்டு முதலிய வற்றுக்குப் பொதுப்பெயர் என்பதனைத் திரு. ரெட்டியார் அறிந்திலர்.

மற்று, பக், 493ல் "திக்த, கடுக, கஷாய, ஆம்ல, லவண, மதுர, ரஸபேதத்தவாகிய ஷட்விதம்" என்ற தொடரில் அமைந்துள்ள "திக்தம்" என்பதற்குத் துவர்ப்பு எனவும் "கடுகம்" என்பதற்குக் "கசப்பு" எனவும் பொருள் எழுதிவைத்திருக்கிறார். "திக்தம்" என்பதன் உண்மைப் பொருள் "கசப்பு" என்பதே. "கடுகம்" என்பதன் உண்மைப் பொருள் (மிளகின் சுவை போலும்) "காரம்-உறைப்பு" என்பதே. இவைகள் வடமொழியாலாய பெயர்கள், பக்கம். 75ல் உள்ள "கடுவாகிய ஔஷத சேவை" என்ற தொடரில் அமைந்துள்ள "கடு" என்பதற்குக் "கசப்பு" எனப்பொருள் எழுதிவைத்தார். அவண் "கடு" என்பதன் பொருள் "துவர்ப்பு" என்பதே. கடு, தமிழ்ப்பெயர். கடுக்காய், கடுத்தின்றான் என்பனவற்றின் பொருளை நினைக்க. இக்குறிப்புக்களால் இவண் எடுத்துக்காட்டப்பட்ட திக்தம், கடுகம், கடு என்பவற்றின் உண்மைப் பொருள்களைத் திரு. ரெட்டியார் அறிந்திலர் என்பதனையும் நினைக்க. வடமொழியைக் கற்ற அவரது அறிவின் திறம் எத்தகையது என்பதனையும

உய்த்துணர்க. மற்று, அந்த ஸ்ரீ புராணத்தின் முகவுரைப் பக்கங்கள் மாறி இருத்தலைப்பற்றியும் ஒரு திருத்தம் எழுதிச் சேர்த்து வெளியிடாமல் புத்தகத்தை வெளியிட்ட திரு, ரெட்டியார்தம் சிறுசெயல் மன்னிக்கத்தக்கதாகுமா? அப்புராணத்துள் எழுத்துப்பிழைகள் மலிவாகக் கிடத்தல் அல்லாமல் ஜைன சமயத்தவரது சாஸ்திர–ஆகமக்–கருத்துக்கட்கு மாறுன கருத்துக்களும் மலிந்து கிடக்கின்றன. ஸ்ரீ புராணம் பக்கம் 509ல்-வரி-2ல் "தேவதாகமலிங்கி" என்று இருத்தற்குரிய தொடர் "தேவதாலிங்கி" என்று பிழையுற்று இருத்தலையும் திரு. ரெட்டியார் அறிந்திலர், என்னை! அத்தொடர் "ஆறுவகை அவிநயம்" என்னும் விதியைப் பற்றியது ஆதலால். போதியதிறமை இல்லாதவர்களைக் கொண்டு பிழைகளுடன் புத்தகங்களைப் பதிப்பிப்பது ஒரு சர்வகலாசாலைக்குப் பெருமையாகாது என்பதும் அச்சர்வகலா சாலையை உடைய மகாணத்தில் வாழும் அறிஞர்க்கும் இழிவாகும் என்பதும் சர்வகலாசாலையின் தலைமை உறுப்பினர்தம்–தலைமை ஆசிரியர்தம்–நினைவில் இருத்தற்பாலன.

இவண் குறிப்பிடப்பட்ட குற்றங்கள் இவ்வளவே அன்றி அப்புராணத்துள் திரு.ரெட்டியார்தம் அறியாமையால் செறியப்பட்ட குற்றங்கள் மற்றும் பல உள. திரு. ரெட்டியார்தம் பலமொழி கற்ற அறிவின் திறத்தினை யான் அறிந்திருந்தும், அவர் ஸ்ரீ வைணவ சமயத்தவராயினபடியால் "திவ்யப் பிரபந்தமும் திவ்யார்த்த தீபிகை உரையும்" என என்னால் எழுதப்பட்ட புத்தகத்திற்கு ஒரு மதிப்புரை பெறுவான் அவரிடம் சென்றேன். மதிப்புரை எழுதித்தருவதாக என் புத்தகத்தைப் பெற்றுக் கொண்டார். பெற்றுக்கொண்ட அவர், திருச்சமண சமயத்தவர்க்கு இல்லை என என்னால் சொல்லப்பட்ட "நிகோதம்" எனும் "நரகம்" அச்சமண சமயத்தவர்க்கு உண்டு எனச் சொல்லி நிறுவ முயன்றார். யான் மேருமந்தரர் புராணம் முதலிய நூல்களுள் அச்சமண சமயத்தவர்க்கு "நிகோதம்" என ஒரு "நரகம்" உண்டு எனச் சொல்லப்படவில்லை. தங்களால் பதிப்பிக்கப்பட்ட ஸ்ரீ புராணத்தில் அநுபந்தமாகச் சேர்க்கப்பட்ட" சாஸ்த்ர ஸார ஸமுச்சயம்" என்னும் நூலுள்ளும் அச்சமண சமயத்தவர்க்கு "நிகோதம்" என "நரகம்" ஒன்று உண்டு என்று சொல்லப்படவில்லை. ஆதலால், "நிகோதம்" என ஒரு நரகம் உண்டு என்பார் கொள்கை தவறுயதே என்றேன்.

அக்கருத்தை விடுத்து "உண்ணுமை உள்ளது உயிர்நிலை ஊன் உண்ண அண்ணாத்தல் செய்யாது அளறு" என்ற திருக்குறள் பாவில் அமைந்துள்ள "அளறு" என்பதற்கு நீர் சொல்லுகிறபடி நான்காவது நரகம் ஆகிய பங்கப் பிரபை—சேற்றுவட்டம்—என்னும் பொருள் பொருந்தும் ஆயினும், அப் பாவில், "அண்ணாத்தல் செய்யாது" என்ற தொடர் இருத்தலால் "அளறு" என்பதற்கு நிகோதம் என்னும் நரகம் என்பதே பொருள் என்றார். யான், "அண்ணாத்தல் செய்யாது" என்பதற்குப் பொருள் என்னை என்றேன். திரு. ரெட்டியார், "வாய்திறவாமை" என்றார், (அண்ணாத்தல் என்பது பிழைப்பாடம் என்பதனையும் அதற்கு வாய்திறவாமை என்பது உண்மைப் பொருள் அன்று என்பதனையும் "அண்ணாத்துச் செய்யாது" என்பதே நேரிய பாடம் என்பதனையும் அதற்கு "மேல்செலுத்தாது" என்பதே உண்மைப்பொருள் என்பதனையும் அவர் அறிந்திலர். அண்ணம்: மேல். அத்து, சாரியை. அண்ணாத்து விகாரம். அண்ணாத்தல், பிழைப்பாடம். தன்னில் விழுந்து அழுந்தினாரை எழுந்து மேலேசெல்ல விடாமல் தன் உள்ளே அடக்கிக் கொள்ளுதலே சேற்று நிலத்தின் இயல்பு ஆதலால்.)

யான் எதன் பொருட்டு வாய்திறவாது என்றேன் திரு. ரெட்டியார், தன்னால் விழுங்கப்பட்டான் வெளியில் செல்லும் பொருட்டு என்றார். "வாய் திறவாமை" என்ற பொருள் கொள்ளப் பாவில் இடம் இல்லை. வலிந்து பொருள் கொள்கின்றீர் ஊன் உண்டானைத் தன்னுள் செல்லுதற்கே வாய் திறவாது என்பதனையும் வலிந்து பொருள் கொள்ளலாமே என்றேன். திரு. ரெட்டியார், கருத்து என்னை என்றார். ஊனை உண்டானைத் தண்டிக்கத்தக்க வலிதாய கொடிய செயல் அளறு என்னும் அந் நரகத்தில் இல்லாமையால் தன்னிலும் வலிதாய கொடிய செயலைச் செய்யவல்ல வேறு நரகத்துக்குச் செல்லட்டும் என்ற எண்ணத்தால் சேற்றுவட்டம் ஆகிய அந்நரகம் வாய்திறக்கவில்லை என்னலாமே என்றேன். அதற்கு ஒன்றும் விடைஇறுக்க இயலாமல் விட்டார். என்னால் சொல்லப்பட்ட இப்பொருந்தாப் பொருளையும் பொருந்திய பொருளென நம்பினார் போலும்!

மற்று, "யாழ்ப்பாணத்து மக்கள் சைவ உணவு என்பதனை 'ஆரதபோஜனம், ஆரதம்'' என்றார்கள். அக்கருத்து "ஆருகத போஜனம் என்பதாகும்" என்று அவர் தம்மின் தனித்த ஆராய்ச்சியைச் சொல்லினர். அது உண்மைக்கருத்தன்று. "ஆரத போஜ

னம்'' என்பது ''ஆராதனு போஜனம்'' என்பதன் மரூஉ மொழி ஆகும் என்றேன். அவ்வளவில் அவர் அப்பேச்சைவிட்டார்.

பின்னர் ஒருநாள் மதிப்புரை பெறுவான் திரு. ரெட்டியார் தம் வீட்டிற்கு யான் சென்று அவரைப் பார்த்தேன். அவர், நீர் எம்மூர் வாசாரியன்மாரை, இழிவாக எழுதி இருக்கிறீர் அதனுல் உம்நூலிற்கு யான் மதிப்புரை தரமாட்டேன் என்ருர். யான் என்னென்று இழிவாக எழுதி இருக்கிறேன் என்றேன். திரு. ரெட்டியார், எம் ஆசிரியர்தம் அறியாமையை விளக்குவதாக எழுதியுள்ளீர் என்ருர். யான், 'அறியாமை என்பதன் பொருள் என்னே?' என்றேன். திரு. ரெட்டியார், 'ஞானம் இல்லாமை என்பது' என்ருர். யான், 'தெரிந்திலாமை என்பது பொருள் அன்ருே?'' என்றேன். அவர் அன்று என்ருர். அதனுல், ''அறிதொறும் அறியாமை கண்டற்ருல்'' என்ற தொடரில் அமைந்துள்ள ''அறியாமை'' என்பது ''அறிதல்'' என்னும் உடன்பாட்டுப் பெயர்க்கு எதிர்மறைப் பெயர் என்பதனேயும் திரு. ரெட்டியார், அறிந்திலாதவர் போலும் எனத்தேர்ந்தேன்.

இப்பெற்றிய என் உண்மைக் கருத்துக்கள் அவரது போலிக் கருத்துக்களே மறுத்துவிட்டபடியால் அவரது நெஞ்சில் பொருமைப்பேய் குடிகொண்டுவிட்டது போலும்! அதனுல் என்னே இகழ்ச்சி செய்வான் அவர் என் புத்தகத்தை ஸ்ரீபெரும்பூதூரில் வாழும் ஐயங்கார் ஒருவர் வழியாகக் காஞ்சிபுரம் திரு. அண்ணங்கராசாரியாரைச் சேரும்படி செய்து என் னூல் வெளி வாரா முன்னரே 'கற்கு ஒரு மறுப்புரை வருதற்கு உதவி செய்தார். திரு. அண்ணங்கராசாரியரும் ஒரு மறுப்புரையை எழுதிப் பிறர் ஒருவர் பெ ால் வெளியிட்டார். அதனுல் என்னூல் முற்றுக வெளிவாரா முன்னரே மறுப்புரை வெளிவர உதவி செய்தவரும் மறுப்புரை எழுதி வெளியிட்டவரும் சிலர் என்றேன் என்க.

யான் பல முறை கேட்டும் திரு. ரெட்டியார், என் நூலேத் திருப்பித் தாரமல் என்னே வஞ்சித்துவிட்டார். பிறர் பொருளேக் கொடாமல் வஞ்சித்தல்தான் பல மொழிகளேக் கற்ற அறிவிற்கு அழகு போலும்! நிற்க. அவரே என் புத்தகத்தைத் திரு. அண்ணங்கராசாரியாரைச் சேரச் செய்திருப்பர் என்பதனே அவரது வாய்வழி வந்த சொற்களேக்கொண்டே உய்த்துணர்ந்தேன்.

மற்று, அவர், ஒருவரை ஒருவர் தாக்கிப் பேசிக் கொள்ளலைக் கண்டும் கேட்டும் மகிழும் மாண்பினர் என்பதனையும் முன்னரே தெரிந்துள்ளேன். ஆதலால் உய்த்துணர்ந்தேன் என்னலும் ஆம். என்னை? 1943ம் ஆண்டில் என்னால் உரை எழுதப்பட்டு வெளியிடப்பட்ட "திருவாசகத்துள் சிவபுராணம் என்னும்" பாவின் உரைநூலை ஸ்ரீமான். மஹா வித்துவான். ஸ்ரீ. இராகவ ஐயங்கார் அவர்கட்குச் செலுத்திவைத்தேன்' அந்நூல் அவரைச் சேர்ந்த காலத்தில் திரு. ரெட்டியாரையும் என்னையும் அறிந்தவர் ஒருவர் அவ்விடத்தில் இருந்தாராம். அவர் இருந்த காலத்தில் திரு. ரெட்டியாரால் எழுதப்பட்ட கடிதம் ஒன்று தபால் வழியாக அங்குச் சென்றதாம். அதில் திரு. இராகவ ஐயங்காரை மறுத்துரைத்த ஒருவர்க்குத் தமக்குத் தெரிந்தார் ஒருவரைக்கொண்டு தாம் மறுப்புரை எழுதி வெளியிடலாமா எனக்கேட்டிருந்தாராம். அக்கேள்விக்கு விடையாகத் திரு. ஐயங்கார், என்னை மறுத்துரைத்தவரை யான் மறுத்துரைத்துக் கொள்வேன் நீர் உமக்குத் தெரிந்த ஒருவரைக் கொண்டு எனக்காக மறுப்புரை எழுதும்படித் தூண்டுதல் நேரிய செயலாகாது என ஒரு கடிதத்தைத் திரு. ரெட்டியார்க்குத் தபால் வழிச் செலுத்திவைத்தாராம். அதனை அவ்விடத்தில் நேரில் அறிந்தார் ஒருவர் (மேலே சொல்லப்பட்டவர்) சொல்லக் கேட்டிருக்கிறேன். அதனால் திரு. ரெட்டியார் ஒருவர்மீது மற்றொருவரைச் சொற்போர்செய்யும்படி. ஏவிக்களிப்பவர் என்பதனையும் தெரிந்துகொண்டுள்ளேன். அதனாலும், திரு. ரெட்டியார் என்னூலுக்கு ஒரு மறுப்புரை வெளிவர எண்ணி இருப்பர் என்பதனை உய்த்துணர்ந்தேன் என்க. அயலார் ஒருவரை ஒருவர் தாக்கிப் பேசிக்கொள்ளும் பேச்சைக்கேட்டு மகிழும் மாண்பினர் எத்தகைய அறிஞராக இருப்பர் என்பதனை அறிஞர் உய்த்துணர்வீராக. நிற்க.

புறத்து உரை முற்றுப் பெற்றது.

வே. மு. ஸ்ரீ.

## திருத்தங்கள்

இந்நூலுள் காணப்படும் சிறு பிழைகளைத் திருத்திக் கொள்வதல்லாமல்; பக்கம். 27ல் என்னால் காட்டாகக் கொள் ளப்பட்ட "வந்து இதனை" என்று திருக்காரைக்கால் அம்மை யார் அருளிய திரு அந்தாதிப் பாவில் அமைந்துள்ள "கண்டத் தீர்" என்பது "கந்தரத்தீர்" என்பதன் திரிபு என்பதே என் கருத்து. அக்கருத்தை விளக்குவான் "இருண்டனைய" என் பது "இருந்தனைய" என்றிருப்பின் சிறப்பாம் என்று எழுத எண்ணிய யான், என் எண்ணத்திற்கு மாறாக "இருண்டனைய" என்பது "இருந்தனைய" என்பதன் திரிபு மொழி என்று யானே பிழையாக எழுதி வைத்திருக்கிறேன். அப்பிழையைப் புறக்கணித்துத் தள்ளிவிட்டு நேரிய பொருளைக் கொள்க. அப்பாவில் அமைந்துள்ள "இருண்டனைய" என்ற தொடர் "இருந்தனைய" என்றிருப்பின் "வந்து" என்னும் வினை எச்சம் இருந்தனைய" என்பதன் இருத்தல் என்னும் வினை முதலைக் கொண்டு வினைமுடிபாம் என்பதனை நினைக்க. திரு. அம்மை யார்தம் திருஅந்தாதியினின்று இக் கருத்தை உடைய ஒரு பாவைக் காட்டாகவும் வைத்திருக்கிறேன். அதனையும் நினைக்க.

இந்நூலுள் பக்கம் 52ல் "கஞ்சன் புணர்ப்பின்" என்ற பாவின் ஈற்றில் அமைந்துள்ள "நீராடவாராய்" என்ற தொடர் "நேராட வார்ராய்" என்று இருத்தற்பாலது எனவும் "நேராட வாராய்" என்பதன் பொருள்: (நீராடலைக் குறிப்பிடாமல்) "அழகு செய்தற்கு வாராய்" என்பதே கவிக்கருத்தாகும் என் பது என் நம்பிக்கை எனவும் எழுதிவைத்திருக்கிறேன். "நீராட வாராய்" என்ற தொடரை "நேராட வாராய்" எனத் திருத்தா மல் அந் "நீராடவாராய்" என்ற தொடருக்கே "அழகு செய்ய வாராய்-ஒப்பனை செய்ய வாராய்-எனப் பொருள் கொள்ளலும் ஆம்" என்பதனைத் திருத்தமாகக்கொள்க. நீர்மை, நேர்மை.

மற்று, பக்கம் 58ல் வரி 36ல்-"சென்றேதோம்" என்ற தொடரை "யன்றேதோம்" எனத் திருத்திக்கொள்க. அன்று, அசை.

மற்று, பக்கம் 67ல் வரி 27ல் "சாவேன்" என்பதனைச் "சாவர்" எனத் திருத்திக்கொண்டு; "களை அறக்கற்ற மாந்தர்புலை அறமாகிய புத்த சமணர்தம் அறங்களைக் காணுர்,

கல்லார், கேளார்; காணவும் கேட்கவும் நேரிடுமாயின் தம் தலையை அறுத்துக்கொண்டும் சாவர். இது சத்தியம்'' எனப் பொருள் கொள்க. அப்பாவில் "காண்மின்'' என்பதனை முன்னிலை ஏவல் பொருட்டு எனவும், "ஐயா" என்பதனைக் கேட்பிக்கும் பொருட்டு முன்னிலை விளி எனவும் கொள்க.

மற்று, பக்கம் 73ல்-வரி 18ல்-பெரிய திருமொழி, 10-9-2. என்பதனைத் திருவாய் மொழி, 10. 10. 7. எனத் திருத்திக் கொள்க.

மற்று, பக்கம் 121ல்-வரி 14ல்-"சித்தம்" என்பதனை "முத்தம்'' எனத் திருத்திக்கொள்க.

மற்று, பக்கம்-148ல்-வரி 25ல்-"இவை போன" என் பதனை "இவைபோன்றன" எனத் திருத்திக்கொள்க்.

இந்நூலுள் (பக்கம் 44ல் வரி 23ல்) "அட்டபுயகரத்து எம்மான் ஏற்றை" என்ற தொடரில் அமைந்துள்ள "புயகரம்" என்பது இரு பெயர் ஒட்டுப் பண்புத் தொகைத் தொடர் எனவும், பொருள் : புஜம்—கை—என்பதே எனவும், "கரம்" என்பது தீபிகை உரைகாரர் கருத்துப்படி "க்ருஹம்" என்னும் வட மொழியின் திரிபு மொழி அன்று எனவும் எழுதிவைத்திருக் கிறேன். செந்தமிழின் மிலேச்ச மொழிகளைக் கற்றதால் செந் தமிழின் செந்நெறியை முற்றும் அறிந்துவிட்டதாக எண்ணிக் கொண்டிருக்கும் (செந்தமிழின் மிலேச்ச மொழியைக்கற்றோருள்) ஒருவர், யான் என்னூற்கு மதிப்புரை வேண்டிக்கொடுத்த என் னூலைப் படித்த பின்னர்ப் பொறாமையால் மனம் மழுங்கிய வராய்க் 'கபாலீச்சுரத்து அமர்ந்தான்' என்ற தொடரில் 'கபாலீச்சுரம்' என்பது கோயிலுக்குப் பெயராக வழங்கப் பட்டிருத்தலால் 'அட்டபுஜக்ருஹம்' என்பதும் கோயிலுக்குப் பெயராக வழங்கப்பட்டது எனக் கொள்ளலாம் என்று எழுதப் பட்டகடிதத்தை என்மாட்டு விடுத்தார். அதில் மற்றும் பல இழி மொழிகளையும் எழுதிவைத்தார். சிற்றின மாக்கள் நேரிய வினவும் விடையும் இறுக்க இயலாவிடில் வசை மொழிகளைத் தான் வழங்குவார்கள். (தம் வசைமொழிகளைத், தம்மைக்கண்டு குரைக்கும் நாய்களின் குரைப்புக்களைப் பொருட்படுத்தாமல் செல்லும் நரிக்குறவரைப் போல அறிஞர், பொருட்படுத்தார் என்பதனை அவர்கள் அறியாதவர்கள் போலும்!) அத்தகையார் கருத்துத் திரிபுடையது எனப் புறக்கணித்தற்பாலதே. என்னை?

"கபாலீச்சுரர்" அமர்ந்த கோயில் ஆகுபெயரால் "கபாலீச்சுரம்" என்னும் பெயரைப் பெறலாம். 'அக்கோயிலுள் "அமர்ந்தான்" என்ற தொடரை நோக்கி அக்கோயிலுள் அமர்ந்தவன் யாவன்?' என ஒருவர் வினவுவார் ஆயின் வினவியவர்க்கு "எவன்" என விடை இறுப்பது? "கபாலீச்சுரத்துள் அமர்ந்த கபாலீ" என்றன்றோ விடை இறுத்தல் வேண்டும்? ஆகு பெயர் இலக்கணம் அறிந்தார் இப்பெற்றிய விடையை விடுத்தற்குத் துணிகுவரோ? துணியார். வேறு வகையாக நேரிய விடையை விடுத்தற்கு நல்ல அறிவை உடைய எவரும் துணியார். அது போல "அட்டபுயக்கருஹத்தில் அமர்ந்த அஷ்டபுஜன்" என்பதும் நேரிய விடையாகாது ஆதலால்.

திருச்சைவ சமயாசிரியராகிய திருஞான சம்பந்த சுவாமிகள் அருளிய "மட்டிட்ட புன்னையங் கானல்" என்னும் திருமயிலைத் தேவாரத் திருப்பதிகத்துள் அப்பதிகம் முற்றும் செய்யுள் தோறும் அமைந்துள்ள "கபாலீச்சுரம் அமர்ந்தான்" என்ற தொடர், பிழையுற்ற தொடர். அத்தொடர், "கபாலக் கரத்தம்மான்" என இருத்தற்பாலது. அப்பதிகத்துள்; பா, மூன்றனுள் அமைந்துள்ள "கபாலீச் சுரத்தான்" என்ற தொடர், "கபாலக் கரத்தான்" என இருத்தற்பாலது எனத் தேறுக. ஆகு பெயர்க்கு உரிய இலக்கணத்தை ஆழ்ந்து சூழ்ந்து துணிக. நிற்க.

மற்று, இந்நூலுள் ஆறுவது ஆய்வு உரை உள்ளும் பிறவிடத்தும் என்னல் எழுதப்பட்ட "இன எதுகை" என்னும் பெயரை இரண்டாம் எழுத்தின்மீது உயிர் ஒன்றிய எதுகை "உயிர் எதுகை" என்னல் வேண்டும் என்று மறுத்து உரைத்தார்கள் அன்பர். திருவளர் வித்துவான். மே. வீ. வேணுகோபாலப் பிள்ளை அவர்க்ள். அவர்கள் கருதிஇருத்தல் போலவே கருதி இருப்பவர், மற்றும் பலர் இருத்தல் கூடும். ஆதலால், என் கருத்தைப் பற்றிய குறிப்பை இவண் விளக்கமாகக் குறித்தலை விரும்பினேன். என் கருத்து மேல் வருமாறு:

பண்டைய உரை ஆசிரியர்கள் பாக்களுக்கு உரிய எதுகை இலக்கணம் எழுதி வைத்த இடங்களில் அவ்வாசிரியர்களால் காட்டாகக் காட்டப்பட்ட பாக்களை நன்றாக ஊன்றிக் கவனித்தால் "இன எதுகை" என என்னல் எழுதப்பட்ட பெயரே உண்மையாகிய பெயர் என்பது புலப்படும், என்னை?

"துளியோடு மயங்கிய தூங்குஇருள் நடுநாள்
அணிகிளர் தாரோய் அருஞ்சுரம் நீந்தி
வடிவமை எஃகம் வலவயின் ஏந்தித்
தனியே வருதி நீஎனின்
மையிருங் கூந்தல் உய்தலோ அரிதே" (யா-கல-சூ. 36. உரை)

இப்பாவின் அடிகளின் தலைச்சீர்களில் இரண்டாம் எழுத்தின் மேல்ஏறிய உயிரைநோக்கி உயிர்ஒன்றிய எதுகை-உயிர் எதுகை என்றார் உரை ஆசிரியன் மாருள் ஒருசார் ஆசிரியர். என்னை? இப்பாவின் அடிகளின் தலைச்சீர்களில் அமைந்துள்ள இரண்டாம் எழுத்துக்கள் (உயிர் ஏறிய மெய்யெழுத்துக்கள்) ஒருவகை வர்க்கமாக, அன்றி, ஓர் இனமாக இல்லாமல் அடிதோறும் தலைச்சீரின் இரண்டாம் எழுத்தாக அமைந்த அம்மெய்கள் வெவ்வேறு இனமாக இருத்தலால் போலும்! (அம்மெய்கள் வெவ்வேறு இனமாக இருத்தலாலேதான் அம்மெய்களின் மீது ஏறிய உயிரை அளவாகக்கொண்டு) இரண்டாம் எழுத்துக்களாகிய மெய்எழுத்துக்களின் மேலேறிய உயிர் எழுத்தை அளவாகக்கொண்டு-(பிரமாணமாகக் கொண்டு) உயிர் ஒன்றிய எதுகை—உயிர் எதுகை – என்றார்கள் உரையாசிரியர்கள் என்பது உய்த்துணரற் பாலது. மற்று, அவ்வுரையாசிரியர்களால் காட்டாகக் காட்டப்பட்ட ;

"பவழமும் பொன்னும் துவைஇய முத்தின்
திகழநும் பீன்றதுபுன் ஊ" (யா-கல-சூத். 36. உரை.)
"பொய்மையும் வாய்மை இடத்த புரைதீர்ந்த
நன்மை பயக்கும் எனின்" ( ,, ,, )

என்னும் இப்பாக்களுள்ளும் அடிகளின் தலைச்சீர்களில் அமைந்த இரண்டாம் எழுத்துக்கள் ஒருவர்க்கம் அல்லது ஓர் இனமாக இல்லாமல் வெவ்வேறு இனமாகிய எழுத்துக்கள் அமைந்திருத்தலால் மூன்றாவதாக ஒன்றிய எழுத்துக்களையே எதுகையாகக் கொண்டார்கள் உரை ஆசிரியர்கள். (உயிர் மெய்எழுத்தில் உயிர்எழுத்தை எதுகையாகக் கொண்டனரா மெய்எழுத்தை எதுகையாகக் கொண்டனரா எனின், உயிர் மெய்எழுத்தையே எதுகையாகக் கொண்டனர்எனத் துணிக.) ஒரு வர்க்கம் அல்லது ஓர் இனமாக இல்லாமல் வெவ்வேறு இனமாகிய எழுத்துக்கள் அமைந்திருத்தலால், மூன்றும்

எழுத்து ஒன்றிய எதுகை என்றூர்கள் உரை ஆசிரியர்கள் என்பது உய்த்துணரற்பாலது. (மூன்ரும் எழுத்து ஒன்றிய உயிர்மெய் எதுகை என்கிலர் என்பது நினைவில் இருத்தல் பாலது.) என்னை? இப்பாக்களுள் முதற்பாவின் அடிகளில் தலைச்சீர்களில் அமைந்துள்ள இரண்டாம் எழுத்தாகிய (இடையின உயிர்மெய்எழுத்தாகிய) "வகர" எழுத்துக்கு இரண்டாம் அடியில் வல்லின உயிர்மெய்யெழுத்தாகிய "ககரம்" எதுகை எழுத்தாக அமைந்திருத்தலையும், இரண்டாம் பாவில் முதல் அடியில் தலைச்சீரில் அமைந்துள்ள இரண்டாம் எழுத்தாகிய (இடையின மெய்யெழுத்தாகிய) "யகர" மெய் எழுத்திற்கு இரண்டாம் அடியில் தலைச்சீரில் எதுகை எழுத்தாக (மெல்லின மெய்யாகிய) "னகரம்" அமைந்திருத்தலையும் நோக்குக. மற்று,

"அவிழ்ந்த துணிஅசைக்தும் அம்பலமும் சீக்தும்
மகிழ்ந்திடுவார் முன்னர் மலரும்—கவிழ்ந்து
நிழல்துழா யானை நெடுமான்தேர்க் கிள்ளி
கழல்தொழா மன்னவர்தம் கை" (யா-கல-சூத்-36-உரை)

என உரை ஆசிரியர்களால் காட்டாகக் காட்டப்பட்ட இப்பாவிலும், முதல் இரண்டு அடிகளிலும் தலைச்சீர்களில் எதுகை எழுத்துக்களாக அமைந்துள்ள இரண்டாவதாகிய உயிர்மெய் எழுத்துக்கள்ஒருவகை வர்க்க எழுத்துக்களாக-அல்லதுஒருவகை இன எழுத்துக்களாக-இல்லாமல் முதல் அடியில் இரண்டாம் எழுத்து இடையின உயிர்மெய் எழுத்தும் இரண்டாம் அடியில் இரண்டாம் எழுத்து வல்லின உயிர்மெய் எழுத்தும் நின்று எதுகை ஒன்ருநிருத்தலால் மெய் எழுத்துக்களாகிய மூன்ரும் எழுத்துக்களை நோக்கி மூன்ரும் எழுத்து ஒன்றிய மெய் எதுகை என்ரூர்கள் ஒருசார் உரை ஆசிரியர்கள் என்பதனை நினைக்க. இப்பாவில் முதல் இரண்டு அடிகளில் தனி மெய்யெழுத்தையே உரை ஆசிரியன்மார் எதுகையாகக் கொண்டனர் என்பதனை மறவற்க. மற்று,

"மனைக்குப்பாழ் வாணுதல் இன்மை தான்செல்லும்
திசைக்குப்பாழ் நட்டோரை இன்மை இருந்த
அவைக்குப்பாழ் மூத்தோரை இன்மை தனக்குப்பாழ்
கற்றறிவு இல்லா உடம்பு" (யா-கல-சூத்-36-உரை)

என உரை ஆசிரியர்களால் காட்டாகக் காட்டப்பட்ட இப்பாவி லும் முதல் மூன்று அடிகளிலும் தலைச்சீர்களில் எதுகை எழுத் துக்களாக அமைந்துள்ள இரண்டாவது ஆகிய உயிர்மெய் எழுத் துக்கள் ஒருவகை வர்க்கஎழுத்துக்களாக-அல்லதுஒருவகை இன எழுத்துக்களாக-இல்லாமல் வெவ்வேறு இன உயிர்மெய் எழுத் துக்களாக நிற்றலால் மூன்றும் எழுத்துக்களை நோக்கி மூன் றும் எழுத்து ஒன்றிய மெய் எதுகை என்றார் ஒருசார் உரை ஆசிரியன்மார். இரண்டாம் மெய் எழுத்தின்மீது ஏறிய உயிர் எழுத்தை நோக்கி (உயிர் ஒன்றிய) உயிர் எதுகை என்றார்கள் மற்றொருசார் உரையாசிரியன்மார். உரையாசிரியன்மார் யாவ ரும் அடிகளின் தலைச்சீர்களில் அமைந்த இரண்டாம் எழுத்துக் களின் வேற்றுமைகளையும் இனங்களையும் கருதியே எதுகை கொண்டார்கள் என்பது நினைவில் இருத்தற்பாலது இவண் கூறப்பட்ட ஏதுக்களால் பாக்களின் அடிகளில் தலைச்சீர்களில் இரண்டாம் எழுத்தாக அமைந்த மெய் எழுத்துக்களின் மீது ஒன்றிய உயிர் எழுத்துக்கள் ஒரே உருவினவாக இருக்க அவ் வுயிர்கள் ஒன்றிய மெய்யெழுத்துக்கள் ஓர் இனமாக இருப் பின் உயிர் மெய் இன எதுகை எனப்பெயர் கூறல் வேண்டும் என்பது தம் கருத்து என்பதனை உய்த்துணர வைத்தார்கள் உரையாசிரியன்மார் எனத்தேறுக. மற்று,

"தக்கார் தகவிலர் என்பது அவரவர்
எச்சத்தால் காணப் படும்"
"அன்பீனும் ஆர்வம் உடைமை அதுவீனும்
நண்பென்னும் நாடாச் சிறப்பு"
"எல்லா விளக்கும் விளக்கல்ல சான்றோர்க்குப்
பொய்யா விளக்கே விளக்கு"

இன எதுகைக்கு உரையாசிரியர்களால் காட்டாகக் காட்டப் பட்ட இப்பாக்களின் அடிகளில் தலைச்சீர்களில் எதுகை எழுத் துக்கள் ஒருவர்க்க எழுத்துக்களாக இல்லாமல் ஓரின எழுத் துக்களாகக் கலந்து நிற்றலால் அவற்றை அளவாகக்கொண்டு (தனிமெய் யெழுத்துக்கள் ஒன்றிய) இனஎதுகைகள் என்றார்கள் உரையாசிரியர்கள் என்பதும் நினைவில் இருத்தற்பாலது.

"கற்பகக் காவன நற்பல தோளற்துப்
பொற்சுடர் குன்றன்ன பூந்தண் முடியற்து

நற்பல் தாமரை நாண்மலர்க் கையற்துஎன்
விற்புரு வக்கோடி தோற்றது மெய்யே' (திருவாய்-6. 6. 6.)

இத் திருப்பாவின் அடிகளில் இரண்டாம் எழுத்து ஒருவர்க்க மெய்யெழுத்துக்களே நிற்றலால் அம்மெய்யெழுத்துக்களை அளவாகக்கொண்டு எதுகையைத் தனி மெய்யெதுகை என்னல் போலவும்,

"குன்றனைய குற்றம் செயினும் *குணம்கோள்ளும்
இன்று முதலாக என்நெஞ்சே—என்றும்
புறனுரையே யாயினும் போன்ஆழிக் கையான்
திறனுரையே சிந்தித் திரு." (முதற்திரு 41.)

(இப்பாவின் முதலடி "குன்றனைய குற்றம் செய்யினும்* குணம் கொள்ளும்" என்பது முன்பாடம். அப்பாடம் பிழைப் பாடம். வெண்பாவிற்குரிய வெண்தளை தட்டாமையால், இப் பிழையைத் திவ்யார்த்த தீபிகை உரைகாரர் உணர்ந்திலர்.)

இத்திருப்பாவின் முதல் இரண்டு அடிகளிலும் தலைச்சீர்களில் அமைந்துள்ள மெய்யெழுத்துக்கள் ஒரே வர்க்க மெய்யெழுத்துக்களாக நிற்றலால் அவற்றை அளவாகக்கொண்டு-பிரமாணமாகக் கொண்டு-தனி மெய்யெதுகை என்னல் போலவும், பின் இரண்டு அடிகளிலும் தலைச்சீர்க்ளில் அமைந்துள்ள, உயிர் மெய் எழுத்துக்கள் ஒரே வர்கக உயிர் மெய் எழுத்துக்களாக நிற்றலால் அவ்வுயிர் மெய் எழுத்துக்களை அளவாகக் கொண்டு தனி உயிர் மெய் எதுகை என்னல் போலவும்,

"பீடுடை நான்முக னைப்படைத் தானுக்கு
மாடுடை வையம் அளந்த மணாளற்கு
நாடுடை மன்னர்க்குத் தூதுசெல் நம்பிக்குஎன்
பாடுடை அல்குல் இழந்தது பண்பே" (திருவாய்-6. 6. 4)

இத்திருப்பாவின் அடிகளில் இரண்டாம் எழுத்து ஒரு வர்க்க உயிர்மெய் எழுத்துக்களே நிற்றலால், அவ்வுயிர்மெய்யெழுத்துக்களை அளவாகக்கொண்டு எதுகையைத் தனி உயிர்மெய்யெதுகை என்னல் போலவும்,

"மனமாசு தீரும் அருவினையும் சாரா
தனமாய் தாமேகை கூடும்—புனமேய
பூந்துழா யான்அடிக்கே போதொடு நீரேந்தித்
தாந்தொழா நிற்பார் தமர் *" (முதற்திரு-43.)

(இப்பாவின் ஈற்றுச்சீர் "தமக்கு"*என்று இருப்பின்வினைமுடிப்பு சிறக்கும். இச்சிறப்பை உணர்ந்திலர் தீபிகை உரைகாரர்–தமர் என்ற பாடம் பிழையுற்ற பாடமே.)

இத்திருப்பாவில் முதல் இரண்டு அடிகளிலும் தலைச்சீர் களில் அமைந்துள்ள உயிர்மெய்யெழுத்துக்கள் ஒரே வர்க்க உயிர்மெய் எழுத்துக்களாக நிற்றலால் அவற்றை அளவாகக் கொண்டு தனி உயிர்மெய்யெதுகை என்னல் போலவும்,

"ஆலத் திலையான் அரவின் அணைமேலான்
நீளக் கடலுள் நெடுங்காலம் கண்வளர்ந்தான்
பாலப் பிராயத்தே பார்த்தற் கருள்செய்த
கோலப் பிரானுக்கோர் கோல்கொண்டுவா
குடந்தைக் கிடந்தாற்கோர் கோல்கொண்டுவா" (பெரி. 2-6-6)

இத்திருப்பாவின் முதல் இரண்டு அடிகளிலும் அமைந்துள்ள லகர ளகரங்களை அளவாகக் கொண்டு அவற்றை ஓரின உயிர் மெய் எதுகை என்னல் வேண்டும் எனத் துணிக. மற்று,

"கோல மலர்ப்பாவைக்கு அன்பாகிய என் அன்பேயோ
நீலவரை இரண்டு பிறைகவ்வி நிமிர்ந்தது ஒப்பக்
கோலவராகம் ஒன்றாய் நிலம் கோட்டிடைக் கொண்ட எந்தாய்
நீளக்கடல் கடைந்தாய் உன்னைப் பெற்று இனிப் போக்குவனோ"
(திருவாய். 10-10-7.)

இத் திருப்பாவிலும் பின் இரண்டு அடிகளின் எதுகையும் ஓரின உயிர்மெய்யெதுகை என்னற்பாலதே.

இவ்வேதுக்களால் பாக்களின் தலைச்சீர்களில் இரண்டாம் எழுத்துக்கள் உயிர்மெய்யெழுத்துக்களாக இருப்பின் அவ் வுயிர்கள் ஒரே உருவினவாக இருக்க அவை ஏறிய மெய் யெழுத்துக்கள் ஒரு வர்க்கம் அல்லது ஓரின மெய்யெழுத்துக் களாக இல்லாமல் வேறு வேறு இனமாக அதாவது வல்லினத் துக்கு இடையினமும் மெல்லினமும், இடையினத்துக்கு மெல் லினமும் வல்லினமும் ஆகக் கலந்திருந்தால் அம்மெய்கள்மீது ஏறிய உயிரை அளவாகக் கொண்டு உயிர் ஒன்றிய உயிர் எதுகை எனவும், பாக்களின் அடிகளின் தலைச்சீர்களில் இரண் டாம் எழுத்துக்கள் ஓரின மெய்யெழுத்துக்களாக அதாவது லக ரத்துக்கு ளகரமும், ளகரத்துக்கு லகரமும் ஆகமாறி நிற்க, (அம்மெய்களின் மீது ஏறிய உயிர் எழுத்துக்கள் ஒரே உரு

வினவாக இருப்பின்) அவ்வுயிர்மெய்யெழுத்தை அளவாகக் கொண்டு அவ்வெதுகை உயிர் மெய் இன எதுகை என்னற் பாலது எனத் துணிக. இப்பெயரை உரை ஆசிரியர்கள் உய்த் துணர வைத்திருத்தலே அவர்களால் காட்டப்பட்ட காட்டுக் களைக் கண்டு தெளிக. நிற்க,

மற்று,பண்டைய உரை ஆசிரியன்மார் யாவரும் ஒருவர்க்க-ஒருவகை—மெய்யெழுத்துக்களால் ஆம் எதுகைகட்கு உதார ணங்களைக் காட்டி வைத்தார்கள் அல்லாமல், அவர்கள், ஒருவர்க்க—ஒருவகை—உயிர் மெய்யெழுத்துக்களால் ஆம் எதுகைகட்கு உதாரணங்களைக் காட்டி வைத்திலர். அவர்கள், ஒருவர்க்க உயிர்மெய் எழுத்துக்களால் ஆய எதுகை உயிர் மெய் எதுகை என்னற்பாலது என்பதனை உய்ளதுணர வைள தார்கள். உரை ஆசிரியன் மாரால் அடி எதுகைகட்குக் காட்டப் பட்ட காட்டுக்களை நினைக்க. (அவர்களால் உய்த்துணர வைக்கப்பட்ட பெயரையே அவர்களின் பிற்கால ஆசிரியன் மார் யாவரும் நேரியபெயராகக் கொண்டு வழங்கி வருகிறார்கள் என்பதனை நினைக்க.) அதுபோலவே இன மெய்யெழுத்துக் களால் ஆம் எதுகைகட்குக் காட்டுக்களைக் காட்டிவைத்து ஓர் இன உயிர்மெய்யெழுத்துக்களால் ஆம் எதுகை உயிர் மெய் இன எதுகை என்னற்பாலது என்பதனையும் உய்த்துணர வைத்தார்கள் பண்டைய உரையாசிரியர்கள் எனத்தேறுக. இவ்வேதுக்களால் ஆறுவது ஆய்வு உரை உள்ளும் பிறஇடத்தும் என்றால் இனஎதுகை என்று சொல்லப்பட்ட பெயரே பண் டைய உரையாசிரியன்மாரால் கொள்ளப்பட்ட நேரிய பெயர் என்பது என் நம்பிக்கை என்க. தனிமெய் இன எதுகை, உயிர்மெய் இன எதுகை, என்றுமல் (வகையைப் பிரிக்காமல்) இன எதுகை என்னல் குறுக்கப் பெயர் கூறுதல் பொருட்டு எனத் தேறுக. நிற்க.

திருத்தங்கள் முற்றுப் பெற்றன.

வே. மு. ஸ்ரீ.



## அறிக்கை.

1. திருஞானசம்பந்தர் சுவாமிகள் அருளிய திருஒத்தூர்த் தேவாரப் பதிகத்தின் உரை நூல் (1940-ம் ௵ பதிப்பு) புத்தகம் 1-க்கு விலை ரூபா. ... 0—8—0

   தபால் கூலி ரூபா. ... 0—6—0

2. திருவாதவூர் அடிகள் அருளிய திருவாசகத்துள் "சிவபுராணம்" என்னும் முதல் பாவின் உரை நூல் (1943-ம் ௵ பதிப்பு) புத்தகம் 1-க்கு விலை ரூபா. ... 1—8—0

   தபால் கூலி ரூபா. ... 0—6—0

3. திவ்யப் பிரபந்தமும் திவ்யார்த்த தீபிகை உரையும் என்னும் ஆய்வு உரை நூல் (1949-ம் ௵ பதிப்பு) புத்தகம் 1-க்கு விலை ரூபா. ... 4—0—0

   தபால் கூலி ... 0—8—0

இந்நூற்கள் வே. மு. ஸ்ரீநிவாஸ முதலியாரால் எழுதப்பட்டன.

இவை வி. பி. பி. வழி வாரா. இவற்றைப்பெற விரும்புபவர் மணியார்டர் செலுத்திப் பெறலாம். இவற்றைப் பற்றிய விடைகளை விரும்புபவர், ரிப்ளை கார்டுகள் செலுத்துக

இந்நூல்கள் கிடைக்கும் இடங்கள்;—

வே. மு. ஸ்ரீநிவாச முதலியார்,
நெ. 1. எண்ணெய்க்காரத் தெரு, காஞ்சீபுரம்.

திருவளர் மே. சக்கரவர்த்தி நாயனார் அவர்கள்
முத்தமிழ் நிலயம்
நெ, 77. வரதா முத்தியப்பன் தெரு, சென்னை 1.

இந்நூற்கள் மூன்றும் செட்டாக 1949-ம் ௵ டிசம்பர் ௴ 30௳ வரையில் பொதுக்கழகங்கட்குப் பாதி விலைக்கு விற்கப்படும். மேல்படி மூன்று புத்தகங்கட்கும் தபால் கூலி 0–10–0 வேறாகச் சேர்க்கப்படும்.